உ

கணபதி துணை

கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர்

இயற்றிய

# தக்கயாகப்பரணி

## மூலமும் உரையும்

இவை

சென்னை

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

**டாக்டர், உ. வே. சாமிநாதையரவர்கள்**

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து நூதனமாக

எழுதிய பலவகைக் குறிப்புக்களுடன்

அவர்கள் குமாரர்

**S. கலியாணசுந்தர ஐயரால்**

சென்னை

கபீர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றன

**இரண்டாம் பதிப்பு**

பார்த்திவ௵ மார்கழி௴

 1945 [விலை ரூ. 6-0-0

# இப்புத்தகத்திலடங்கியவை

# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி

திருவரங்கத்—திருவரங்கத்தந்தாதி
திருவா—திருவாசகம் [ணம்
திருவாதவூரர்—திருவாதவூரர் புரா
திருவாரூர்ப்—திருவாரூர்ப்புராணம்
திருவால — திருவாலவாயுடையார்
திருவிளையாடற்புராணம்
திருவானைக்காப்—திருவானைக்காப்
புராணம்
திருவிடை—திருவிடைமருதூர்
திருவிரட்டை — திருவிரட்டைமணி
மாலை [ணம்
திருவிளை—திருவிளையாடற்புரா
திருவுசாத்—திருவுசாத்தானம்
திருவெண்காட்டுப் — திருவெண்கா
ட்டுப் புராணம்
திவ்—திவ்யப்பிரபந்தம்
திவா—திவாகரம்
தே—தேவாரம்
தொல்—தொல்காப்பியம்
ந—நச்சினார்க்கினியம், நச்சினார்க்
நம்பி—நம்பியகப்பொருள் [கினியர்
நள—நளவெண்பா
நற்—நற்றிணை
நன்—நன்னூல்
நாலடி—நாலடியார்
நான்மணி—நான்மணிக்கடிகை,
நான்மணிமாலை
நீதிநெறி—நீதிநெறிவிளக்கம்
நீல—நீலகேசித்திரட்டு
நெடுநல்—நெடுநல்வாடை
நேமி—நேமிநாதம்
நைட, நைடத—நைடதம்
பட், பட்டினப்—பட்டினப்பாலை
பதிற்—பதிற்றுப்பத்து
பதினோராந்—பதினோராந் திருமுறை
பரி—பரிபாடல்
பரிமேல்—பரிமேலழகர்
பழ—பழமொழி
பழமலை—பழமலையந்தாதி
பாசவதை—பாசவதைப்பரணி

பி - ம்—பிரதிபேதம்
பிரபு—பிரபுலிங்கலீலை
பிள்ளை, பிள்ளைத்—பிள்ளைத்தமிழ்
பு. வெ—புறப்பொருள்வெண்பா
புறநா—புறநானூறு [மாலை
பெரிய—பெரிய புராணம்
பெரிய திரு—பெரிய திருமொழி
பெரியாழ் — பெரியாழ்வார் திரு
பெருங்—பெருங்கதை [மொழி
பெருந்—பெருந்தேவனார் பாரதம்
பெரும்பாண் — பெரும்பாணாற்றுப்
படை
பெருமாள்—பெருமாள் திருமொழி
பேர்—பேராசிரியருரை
பொருந—பொருநராற்றுப்படை
பொன்வண்ணத்—பொன்வண்ணத்
மணி—மணிமேகலை [தந்தாதி
மதுரை, மதுரைக்—மதுரைக்காஞ்சி
மதுரைக்கலம்—மதுரைக்கலம்பகம்
மயிலை—மயிலைநாதருரை
மலைபடு—மலைபடுகடாம்
மாயூரப்—மாயூரப் புராணம்
மு—முற்றும்
முத்—முத்தொள்ளாயிரம்
மும்—மும்மணிக்கோவை
முருகு—திருமுருகாற்றுப்படை
மூ—மூலம்
மூத்த—மூத்ததிருப்பதிகம்
மேருமந்தர—மேருமந்தரபுராணம்
மேற்—மேற்கோள் [பரணி
மோக, மோகவதை—மோகவதைப்
யா - கா—யாப்பருங்கலக்காரிகை
யா - வி—யாப்பருங்கல விருத்தி
வளை—வளையாபதி
வி. கு—விசேடக் குறிப்பு
வி - பா, வி - பாரதம்—வில்லிபுத்தூ
ராழ்வார் பாரதம் [சோழனுலா
விக்கிரம, விக்கிரம. உலா—விக்கிரம
விநாயக—விநாயக புராணம்
விறலி—விறலிவிடு தூது

உ

கணபதி துணை

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

## தேவாரம்

திருச்சிற்றம்பலம்

தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழற்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்றதாகிய நம்பன்றானே.

இந்நூலை உரையுடனும், விசேடக்குறிப்பு அரும்பத அகராதி முதலியவற்றுடனும் என் தந்தையாரவர்கள் முதன் முறையாக 1930ஆம் வருடம் ஜனவரி மாதத்தில் பதிப்பித்து வெளியிட்டார்கள். இப்போது இரண்டாம் பதிப்பு வெளியாகின்றது. என் தந்தையாரவர்களுடைய கைப்புத்தகத்திலிருந்த குறிப்புக்களும் விசேஷச் செய்திகளும் உரிய இடங்களில் ஆங்காங்கு இதில் சேர்க்கப் பெற்றுள்ளன. தாழிசை, பழையவுரை, விசேடக் குறிப்பு, பிரதிபேதம் என்ற முறையாக இப்பதிப்பு அமைந்துள்ளது. படிப்பவர்களுக்கு உபயோகமாக இருக்கும் என்று கருதி இம்முறையை மேற்கொள்ளலானேன். முதற் பதிப்பிற் காணப் படும் அடிக்குறிப்புக்கள் விசேடக் குறிப்பிலேயே தக்க இடத்தில் சேர்க்கப்பெற்றுள்ளன. அகராதியிற் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் தாழிசை எண்களே.

308-ஆம் பக்கத்திலுள்ள 'சீர்குரோதன' என்ற பாடலால் இந்நூல் மூலமும் உரையும் அடங்கிய ஏட்டுப் பிரதியை எழுதியவர் பெரியதம்பி யென்பவரென்று தெரிகிறது.

இந்நூலைப்பற்றிய பிற செய்திகள் எல்லாம் என் தந்தையார் அவர்களது முகவுரையால் நன்கு விளங்கும்.

இப்பதிப்பு ஆரம்பித்தது முதல் பூர்த்தியாகும் வரை உடனிருந்து பல வகையாக உதவியவர் திருவல்லிக்கேணி தேசீய உயர்தர பெண்கள் கலாசாலை, தலைமைத் தமிழாசிரியர் ஸ்ரீ. H. வைத்தியநாத ஐயர் அவர்கள். ஓழிந்த நேரங்களில் இப்பதிப்பு விஷயமான ஆலோசனைகளைக் கூறி உபகரித்தவர் அடையாற்றிலுள்ள என் தந்தையார் அவர்கள் நூல் நிலையத்தின் நூற்பரிசோதகராகவுள்ள ஸ்ரீ ச. கு. கணபதி ஐயர் அவர்களாவர். இந்த அன்பர்கள் இருவரிடத்தும் நான் மிக்க நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் இயற்றியருளிய மூவருலா உரைகளுடன் இதன் அடுத்தபடியாக வெளிவரும் என்பதை அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பதிப்பை மிகவும் திருத்தமுற அச்சிட்டுக் கொடுத்த திருவல்லிக்கேணி கபீர் அச்சுக்கூடத்தாருடைய திறத்தை மிகவும் பாராட்டுகிறேன்.

தியாகராச விலாசம்
திருவேட்டீசுவரன்பேட்டை
30—12—45

இங்ஙனம்
S. கலியாணசுந்தரையர்

உ
கணபதி துணை

# முதற்பதிப்பின் முகவுரை

## தேவாரம்

### கீழ்வேளூர்த் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

சொற்பாவும் பொருடெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை யறியாத நாயி னேனை
நன்னெறிக்கே செல்லும்வண நல்கி னானைப்
பற்பாவும் வாயாரப் பாடி யாடிப்
பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே.

### சகலகலாவல்லிமாலை

அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாப மயிலே சகல கலாவல்லியே.

### தமிழ்த் தெய்வ வணக்கம்

" இருந்தமிழே யுன்னா லிருந்தே னிமையோர்
விருந்தமிழ்த மென்றாலும் வேண்டேன் "—திருந்த
உதிப்பித்த பன்னூ லொளிர வடியேன்
பதிப்பிக்க வேகடைக்கண் பார்.

புதிய புதிய செயல்களும் பொருள்களும் பற்பல இடங்களி லும் ஒவ்வொரு தினத்தும் தோன்றித்தோன்றி யாவருக்கும் விம் மிதத்தை விளைவித்துவரும் இக்காலத்தில் வழக்கமற்றுப் போயி னவும் பாராட்டப்படாதனவுமான ஒரு நூலையும் உரையையும் வெளியிடுதலாலுண்டாகும் பயன் என்னவென்று சிலர் நினைத்தல்

கூடும்; சொல்லவுங்கூடும்; அதனை நினைந்து சில அபிப்பிராயங் களை இங்கே தெரிவிக்கிறேன்.

ஒரு தேசத்தின் ஏற்றத்திற்கு அத்தேசபாஷையிலுள்ள பழைய காப்பியங்களைப் படித்தறிதலும் ஒரு முக்கியமான சாதன மாகுமென்பது ஆன்றோர் கொள்கை. ஒரு பழைய நூலால் அதனை இயற்றிய கவியின் பாஷாஞான நிலையும், அம்மொழியினிடத் துள்ள அன்பினால் இயல்பாகவே அவர் அதனை வளர்த்துவந்த விதமும், அவரால் மதிப்புற்ற புலவர்கள் பிரபுக்கள் அரசர்கள் முதலியோருடைய இயல்பும், அவர்களை நல்வழிப்படுத்தி அவர் களால் அப்பெரியோர் அடைந்த நன்மதிப்பும், அவர்களுடைய காலப்போக்கும், அக்காலத்திலிருந்த தெய்வபக்தி இராசபக்தி முதலியனவும், ஒழுக்கவழக்கங்களும், தேச இயற்கையும் படிப் பவர்களுக்குப் புலனாகும்; அந்த நூலைப் படித்து அறிந்து அனுபவிப்பவர்களுக்கு அவற்றுட் சில சில நேரிற் கண்டாற் போலத் தோன்றியும் இன்புறுத்தும்; அதனால் சிலர் திருத்த மடைந்து ஒழுகவுங்கூடும். அதன் உரையினால் அவ்வுரையாசிரிய ருடைய கல்விப்பரப்பும், நூலாசிரியருடைய உண்மைக் கருத்துக் களும், பல ஆசிரியர்கள் பெயர்களும், இக்காலத்து வழங்காத அரிய விஷயங்களும், பல நூற்பெயர்களும், அக்காலத்து வழங்கிய சொற்பிரயோகங்களும், இவைபோல்வனபிறவும் விளங்கும். சரித்திர ஆராய்ச்சியாளர்கள் முதலியவர்களுள் ஒவ்வொரு வகுப் பினரும் யாதொரு வருத்தமுமின்றி அவற்றிலிருந்து தத்தமக்குரிய வற்றை எளிதிற்பெற்றுப் பயனடையவும் கூடும். நிற்க,

பரணி யென்பது தமிழ்மொழியிலுள்ள 96-வகைப் பிரபந்தங் களுள் ஒன்று; போர்முகத்தில் ஆயிரம் யானைகளைவென்ற வீரன் மேற் கடவுள்வாழ்த்து, கடைதிறப்பு முதலிய உறுப்புக்களை அமைத்து அவனுடைய பலவகைச் சிறப்புக்களையும் பலமுகமாகப் புறப்பொருளமைதி தோன்ற ஆங்காங்கு விளக்கிக் கலித்தாழிசை யாற் பாடப்படுவதென்பர்; பெரும்போர் புரிந்து வெற்றிபெற்ற வீரனைச் சிறப்பித்துப் பாடுவதையும் பரணியென்று கூறுவர். இவை முறையே பன்னிருபாட்டியல் முதலிய பிரபந்த இலக்கண நூல்களாலும், கலிங்கத்துப்பரணி முதலிய பரணிகளிலும் விக்கிரம சோழனுலா முதலிய உலாக்களிலும் குலோத்துங்கன் பிள்ளைத் தமிழிலு முள்ள பிரயோக அமைப்பாலும், "பதாதி யோடமரி லேவரும்பட மலைந்தி டப்பரணி பாடவே" (வி.பா. கிருட்டினன் தூதுச் சருக்கம், 134) என்பதனாலும் விளங்குகின்றன. இப்பிரபந்தமானது தொல் காப்பியச் செய்யுளியலில் தொடர்நிலைச் செய்யுட்களின் இலக்கண

மாகக் கூறப்படுகின்ற அம்மை முதலிய வனப்புக்கள் எட்டினுள் விருந்து என்பதன்பாற்படும்.

அரசர் முதலியோர்மேற் செய்யப்படுவதன்றி இது தெய்வங்களின்மேலும் தத்தம் ஆசிரியர்மேலும் அறிஞர்களால் இயற்றப் பெற்று வழங்கும்; கலிங்கத்துப்பரணி, தக்கயாகப்பரணி, இரணியவதைப்பரணி, கஞ்சவதைப்பரணி, அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, திருச்செந்திற்பரணி, பாசவதைப்பரணி யென்பன இவற்றிற்கு உதாரணங்கள்.

சிவபெருமானுடைய வீரச்செயல்களைப் புலப்படுத்தும் சில தாழிசைகளின் தொகுதி பரணியென்னும் பெயருடன் பலதலங்களில் திருவந்திக்காப்புக்காலத்தில் உரியவர்களால் தொன்று தொட்டு ஓதப்படுவதுண்டு.

ஏனைப்பிரபந்தங்கள்போலப் பாட்டுடைத்தலைவன் பெயருடன் வழங்காமல் தோல்வியுற்றோருடைய பெயருடன் சார்ந்தே இப்பிரபந்தம் வழங்கும்.

பரணியென்னும் பெயர்க்காரணம் பலவாறாகக் கூறப்படினும் காளியையும் யமனையும் தன் தெய்வமாகப்பெற்ற பரணி யென்னும் நாண்மீனால் வந்த பெயரென்பதே பொருத்தமுடையதாகத் தோற்றுகின்றது. இது, *" காடு கிழவோள் பூத மடுப்பே, தாழி பெருஞ் சோறு தருமனாள் போதமெனப், பாகு பட்டது பரணி நாட் பெயரே " என்னும் திவாகர முதலியவற்றால் விளங்கும். மேலே கூறப்பட்டதற்கேற்பப் பரணிகளிற் காளியின் சிறப்பும் பகைவருடைய உயிர்நீக்கமும் கூறப்படுதல் காண்க.

பரணிநாளிற் கூழ்சமைத்துக் கூளிகள் காளிக்குப் படைப்பது மரபென்பர்; இது, " களப்பரணிக்கூழ் ", " பண்டுமிகுமோர் பரணிக்கூழ் பாரதத்திலறியோமோ ", " மணலூரிற் கீழ்நாளட்ட பரணிக்கூழ் " (கலிங்க.), 'காடுகெழுசெல்விக்குப் பரணிநாளிற் கூழும்துணங்கையுங் கொடுத்து வழிபடுவதோர் வழக்கு' (தொல். செய். சூ. கசசு - பேர்.),

" காடமர் செல்வி கடிப்பசி களைய
ஓடுகைக் கொண்டுநின் றூட்டுநள் போல " (மணி. 18 : 115-6)

என்பவற்றாலும் விளங்கும்.

'பரணிபிறந்தான் தரணியாள்வான்' என்னும் பழமொழியும், 'பரணியான் பாரவன்' (நன். சூ. கருO, மயிலை.) என்னும் மேற்கோளும், " பரணிநாட்பிறந்தான் " (சீவக. 1813) என்பதற்கு,

*பரணிநூலுட் கூறப்படும் பொருள்களின் பெயர்கள் பரணிநாளின் பெயர்களாக அமைந்திருத்தல் இங்கே ஆராய்தற்பாலது.

'பரணி யானைபிறந்த நாளாதலின் அதுபோலப் பகையை இவன் மதியான்' என்று நச்சினார்க்கினியர் எழுதிய விசேடவுரையும் பரணி நாள் வெற்றியின் சம்பந்தமுடையதென்பதைத் தெரிவிக்கின்றன.

தக்கயாகப்பரணி யென்பது தக்கன் சிவபெருமானை அவமதித்துச் செய்யப்புகுந்த யாகத்தை ஸ்ரீ வீரபத்திரக்கடவுள் அழித்து அவனுக்கு உதவிபுரியவந்த தேவர்களையெல்லாம் வென்று அவனுடைய தலையையும் தடிந்த வரலாற்றைப் பொருளாக அமைத்துக் கவிச்சக்கரவர்த்தியான ஒட்டக்கூத்தரென்னும் புலவர் பெருமானால் இயற்றப்பட்டது. விக்கிரமசோழன் முதலிய மூவருடைய அவைக்களத்தை அலங்கரித்து விளங்கியவராயினும் இக்கவிஞர் பெருமான் அம்மூவருள் மூன்றுமவனாகிய இரண்டாம் இராசராச சோழனுடைய வீரச்செயல் முதலியவற்றை உவமை முகத்தாலும் வேறு வகையாலும் ஆங்காங்குப் பலபடப் பாராட்டிச் செல்லுதலால் இந்நூல் அவன் விருப்பத்தின்படியே செய்யப்பட்டிருத்தல் வேண்டுமென்று தோற்றுகின்றது. இந்நூலை இவர் இயற்றியதற்குக் காரணமாக வீரசிங்காதனபுராண முதலியவற்றிற் கூறப்படும் வரலாறு இந்நூலிலிருந்தேனும் உரையாசிரியருடைய வாக்காலேனும் வேறு பழைய தக்க ஆதாரத்தாலேனும் விளங்கவில்லை.

இதில் * வைரவக்கடவுள் காப்பும் உமாபாகர் வாழ்த்தும் ஆளுடையபிள்ளையார் வாழ்த்தும் அவர் சமணரை வாதில்வென்ற வரலாறும் கூறப்பெற்றிருத்தலின், சீகாழியில் இந்நூலாசிரியர் சில காலம் இருந்தனரென்றும் அப்பொழுது இந்நூலைச் செய்திருக்க வேண்டுமென்றும் ஊகித்தற்கு இடமுண்டு. "கம்பனென்றும்" என்ற தனிப்பாடலில் "கம்பனென்றுந் தாதனென்றுங்†காழியொட்டக் கூத்தனென்றும்" என்று ஏட்டிற்கண்ட பழைய பாடம் ஒட்டக்கூத்தர் காழியிலிருந்தமையைப் புலப்படுத்துகின்றது.

காலத்தால் முந்திய கலிங்கத்துப் பரணியினின்றும் வேறுபட்டுள்ள இதன் அமைப்பைப் பார்க்கையில் அப்பரணிக்கு முன்னரே சில பரணிகள் இருந்திருக்க வேண்டுமென்றும் அவற்றின் வழியையும், "பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி" என்பதையும் பின்பற்றி இந்நூல் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டுமென்றும் தோற்றுகின்றன.

---

* வைரவமூர்த்தியாகிய சட்டைநாதருடைய திருக்கோயிலும் தோணியப்பராகிய உமாபாகர் சந்நிதியும் சீகாழிப் பிரமபுரேசர் திருத்தளியில் தனித்தனியே மிக்கசிறப்புடன் அமைந்திருந்தல் யாவருக்கும் தெரிந்ததே.

† இதிலுள்ள எண்ணிடைச் சொல்லும் எண்ணும்மையும் காளியென்ற பாடத்தினும் காழியென்ற பாடம் சிறந்ததென்பதை விளக்குகின்றன.

இந்நூல் வைரவக்கடவுள் காப்பை முதலிற் பெற்றுக் கடவுள் வாழ்த்து முதல் வாழ்த்து ஈருகவுள்ள பதினோருறுப்புக் களால் முடிகின்றது; அவற்றுள்,

(1) **கடவுள் வாழ்த்தில்** நூலாசிரியர் முதலில் உமாபாகரை யும் பின்பு முறையே விநாயகக்கடவுள் முருகக்கடவுள் ஆளு டைய பிள்ளையாரென்பவர்களையும் சோழனுக்கு வெற்றி யுண்டாக வேண்டுமென்று வாழ்த்தி ஒன்பதாந்தாழிசையிற் பொதுவியல் வாழ்த்துக் கூறியிருக்கிறார்.

(2) **கடைதிறப்பில்** வீரபத்திரதேவருடைய வெற்றியைப் பாடுதற்குப் பலவகை மகளிரைக் கதவு திறக்கும்படி விளித்தல் கூறப்படுகின்றது; அம்மகளிராவார் தேவியின் அடியார்களாகிய பெண்கள், தேவமங்கையர், உருத்திரகணிகையர், இராசராச புரத்து வீதிமாதர், அங்கேவந்து குடிபுகுந்த மகளிர், வித்தியா தர மகளிர், நீரரமகளிர், நாககன்னியர், சக்கரவாளம் பொதியில் மேரு இமயம் உதயகிரி யென்பவற்றிலுள்ள அரமகளிரென்பவர் கள். இப்பகுதியால் தேவி, இராசராசபுரீசர், அகத்தியர், தெய்வ மகளிர், சோழவரசன் முதலியவர்களுடைய பெருமையும், நதிகள் மேரு முதலியவற்றின் உயர்வும் புலப்படுகின்றன. இதன் ஈற்றிலுள்ள நான்கு தாழிசைகளால் தக்கயாக சங்காரத்தில் தேவர்கள் தோற்ற செய்தியைப் பாடுவதற்காகக் கடைதிறமி னென்று கூறுமுகத்தால் கடைதிறப்பு இத்தன்மையதென்பதை ஆசிரியர் விளக்கியிருக்கிறார்.

(3) **காடுபாடியதில்** தேவி கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கும் பாலைவனத்தின் வெம்மை, வாமமார்க்கத்தாருடைய செயல்கள், காளியின் கோயிலைச் சூழ்ந்த சோலைகளின் பெருமை, யோகினிகள் முதலியோருடைய பெருமை, பைரவர்களின் செயல்கள் முதலியன கூறப்படுகின்றன.

(4) **தேவியைப் பாடியதில்** காளியின் பெருமையும், பூசைக்குரிய திரவியங்களும் விரித்துச் சொல்லப்படுகின்றன.

(5) **பேய்களைப் பாடியதில்** பேய்களின் உருவவருணனையும், அவற்றின் பசிமிகுதியும் விளங்கக் கூறப்படுகின்றன.

(6) **கோயிலைப் பாடியதில்** காளிக்குரியனவாகிய கோயில், ஆலமரம், ஆதிசேடன், பஞ்சாயுதங்கள் முதலியவற்றின் பெருமை கள் முதலிற் பாராட்டப்படுகின்றன. பின்பு காளி நாமகளை விளித்து முருகக்கடவுள் ஆளுடையபிள்ளையாராகி வந்து சமணரை வாதில் வென்ற கதையைக் கூறும்படி கட்டளையிட அவ்வாறே கலைமகள் கூறுவதாக ஆளுடையபிள்ளையாருடைய

சரித்திரப்பகுதி கூறப்படுகின்றது. ஆசிரியர் இங்கே கூறியுள்ள கதையின் சுருக்கம் வருமாறு :—

ஆளுடையபிள்ளையார் மதுரையையடைந்து மதிற்புறத்தே ஒருமடத்தில் எழுந்தருளியிருந்தார். அதனையறிந்த சமணர்கள் அம்மடத்தில் தீவைப்ப, அவர் பாண்டியனை வெதுப்புமாறு அத்தீயை ஏவினர். அக்கனல் வெப்புநோயாகப் பாண்டியனைச் சார்ந்து வருத்தியது; சமணர்கள் தங்கள் மந்திர யந்திரங்களைக் கொண்டு நீக்க மிகமுயன்றும் தணியாமல் அது மிகுவதாயிற்று; அதனைக்கண்டு அஞ்சிய மங்கையர்க்கரசியார் மந்திரியாரை அனுப்ப, அவர் பிள்ளையார்பாற்சென்று அரசன் படுந்துன்பத்தை விண்ணப்பித்தலும் அவர் உடனே அரண்மனைக்கு எழுந்தருளக் கண்ட மங்கையர்க்கரசியார் வணங்கி முறையிட அவர் அஞ்சற்க வென்று கூறிப் பாண்டியனுக்கு அருகிலிடப்பட்ட பீடத்தில் வீற்றிருந்தனர். அதுகண்டு பொறாமைகொண்ட சமணர், "விரோதியாகிய சோழனது நாட்டிலுள்ள ஓர் அந்தணச்சிறுவன் இங்கேவந்து எங்கள் பாண்டியனைத் தொடலாமோ? எங்களால் நீக்கமுடியாத வெப்பு நோயை இவன் நீக்குவானோ!" என்று இகழ்ந்துபேசினர்; குலச்சிறையார் சமணரைச் சும்மா இருக்கச் செய்துவிட்டுத் திருநீறிட்டுப் பாண்டியனது வெப்பை நீக்கியருளும்படி வேண்டினர்; பிள்ளையார் அவ்வாறே செய்தருள வெப்பு நீங்கிய பாண்டியன் எழுந்து வியந்து அவரை வணங்கினன். அந்நிகழ்ச்சியைக் கண்ட சமணர் சினந்து, "எங்களால் நீக்கப் படாத வெப்புநோயை இச்சிறுவன்றான் நீக்கினனோ? நாங்கள் ஒன்றும் செய்யவில்லையோ? எதுபற்றி இவனைப் பணிந்து அரசன் நீறணிந்தனன்?" என்று கூறப் பாண்டியன், "இவர் எளியரோ? உங்கள் கோபத்தை விடுமின்; நீங்கள் தொடத்தொட வெப்பு மிகுந்த என்னுடல் இவர் தொடத் தொடக் குளிர்ந்தது" என்றான். உடனே சமணரெண்ணாயிரவரும், "அரச, நீ ஒரு பிரமசாரியின் நீற்றால் உய்ந்ததாகக் கூறுவாயேல் இனி இருவேமுடைய மந்திர யந்திரங்களின் ஆற்றல்களையும் நீராலும் நெருப்பாலும் அறியலாம்; மந்திரங்க ளெழுதப்பெற்ற ஏடுகளைத் தீயிலிடும்போதும் வைகைநீரிலிடும்போதும் முறையே எரிந்துபோகாதனவும் எதிரோடுவனவுமாகியவற்றை உடையாரே வென்றவராவர்; தோற்பவரைக் கழுவில் ஏற்றுக" என்று சொல்லி வஞ்சினமுங் கூறினர். அவர்களுடைய கூற்றைக் கேட்ட மங்கையர்க்கரசியார் மிக அஞ்சிப் பிள்ளையாரைநோக்கி, "ஸ்வாமீ! இவர்கள் மந்திரவாத சக்தியாற் பல பெருங்காரியங்களை முன்பு செய்திருக்கின்றனர்;

இவர்களோடு வாதஞ்செய்யாமல் சீகாழிக்கு எழுந்தருள்க" என்று வேண்டித் தடுக்கவே பிள்ளையார், "கவலாதொழிக; திருவருளால் வெற்றி யுண்டாகும்" என்றனர்; சமணர்கள் வீரம்பேசினர்; பின்னர் அவ்விருதிறத்தாரும் ஏடுகளை நெருப்பிலும் வைகைநீரிலு மிட்டனர்; சமணர் நெருப்பிலிட்ட ஏடுகள் எரிந்து கரிந்து போயின; வைகைநீரிலிட்டவை கடலிற் புகுந்தன; பிள்ளையார் அவற்றிலிட்ட ஏடுகள் முறையே வேவாமற் பசுமையுற்றும் ஆற்றை எதிர்த்துச் சென்றும் விளங்கின. இந் நிகழ்ச்சியைக் கண்ட யாவரும் மகிழ்ந்து ஆரவாரித்தனர். அப்பாற் பிள்ளையார் பாண்டியனுடைய உடம்பில் திருக்கையை வைத்தவுடன் அவ னுக்கு இருந்த கூன்நீங்கி உடம்பு பொன்னிறம் பெற்றது. பின்பு சமணர்களை அரசன் கழுவேற்றப்புகுகையில், "ஈது ஆகாது" என்று பிள்ளையார் விலக்கியருளச் சமணர் தாம் கூறிய சபதம் தவறலாகாதென்றுசொல்லித் தாமே வலிந்து கழுவிலேறினர்; பிறகு பிள்ளையார் சீகாழிக்கு எழுந்தருளினர்.

இக்கதையைக் கூறிய நாமகளைத் தன்முன் இருக்கும்படி துர்க்காபரமேசுவரி அருளினளென்னும் முகத்தால் நாமகளின் பெருமையையும் தமக்கு நாமகள்பாலுள்ள அன்பையும் ஆசிரியர் புலப்படுத்தியிருக்கிறார்.

(7) * பேய்முறைப்பாட்டில் நாமகளுக்கு அருள்கூர்ந்து உவகை யுடன் காளி இருத்தலைக்கண்ட பேய்கள் தம்முடைய குறைகளைக் கூறி முறையிடுதற்கு அதுதான் நல்ல சமயமென்றெண்ணிப் புகுந்து நின்று, "அம்மே, உணவளிப்ப வாய்த்த சமயங்களிலெல் லாம் உன்னுடைய கணவர் எங்களை ஏமாற்றிவிட்டனர்; நீ வேண்டிய பொருள்களை உன்பிள்ளைகளுக்குமட்டும் தடையின்றி அவ்வப்பொழுது அருளுகின்றாய். பண்டைக்காலத்தில் நடந்த பெரும் போரில் யாங்கள் பசிதீரவுண்டு வாழ்ந்தோம்; பின்னர்ப் பசியால் வருந்திப் புலர்ந்தோம்" என்று முறையிட்டுத் தாம்கண்ட கனுக்களைக் கூறிக்கொண்டிருக்கையில், தக்கன் யாகத்தை அழித் தற்குப் படைபோன பூதகணங்களோடு முன்பு சென்றிருந்த

* "வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற, பைம்பூட் சேஎய் பயந் தமா மோட்டுத், துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்கு" (பெரும்பாண். 457-9) என்பதனாலும், "பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் கொடுத்தாங்கு" (கலி. 89 : 24) என்பதனாலும், 'காடுகெழுசெல்விக்குப் பேய் கூறும் அல்லல்போல வழக்கினுள்ளார் கூறுவன' (தொல். மெய். சூ. 12, பேர்.) என்பதனாலும் பேய்கள் காளியிடத்து முறையிடும் வழக்குண்மை அறியலாகும்.

பேயொன்று ஓடிவந்து, "பசி மிக்க பேய்கள் என்பின் விரைந்து வருக" என்றுரைத்துவிட்டு மீண்டு உணவின் நசையால் யாக சாலைக்கு மிக விரைந்தோடக் காளி அதனைப் பிடித்துவரச்செய்து தேவர்கள் தக்கன்யாகத்தில் அழிந்த வரலாற்றைக் கூறும்படி கட்டளையிட அவ்வாறே அது சொல்லத் தொடங்கியதென்பது கூறப்படுகின்றது.

(8) **காளிக்குக் கூளிகூறியதில்** தக்கன் சிவபெருமானை மதியாமல் வேதவிதிக்கு மாறாக யாகஞ் செய்யத் தொடங்கியதும், அதற்குவந்த தாக்ஷாயணி தக்கன் முதலியோரால் அவமதிக்கப் பெற்றதும் தேவி சினந்துசென்றதும் அது தெரிந்த சிவபெருமான் வீரபத்திரக்கடவுளை வருவித்து அவ்வேள்வியை அழிக்கும்படி அனுப்பியதும், அவர் அங்ஙனமே பூதகணங்களுடன் சென்று தக்கனுக்கு உதவிசெய்வதற்கு வந்த தேவர்களுடன் போர்செய்து கொன்று யாகத்தைச் சிதைத்ததும், இறந்த தேவர்கள் பேயானதும் மிக விரிவாகக் கூறப்படுகின்றன.

(9) **கூழடுதலும் இடுதலும்** :—இப்பகுதியில் கதையைக்கேட்ட காளி யாகசாலைசென்று கூழடும்படி பேய்களுக்குக் கட்டளையிடுதலும், அவ்வாறே பேய்கள் அக்களத்தில் இறந்தவர்களுடைய தசை முதலியவற்றைக் கொண்டு கூழ்சமைத்துக் காளிக்குப் படைத்துப் பிறபேய்களுக்கு இட்டுத் தாமும் உண்ணுதலும், பின்பு களித்து இரண்டாம் இராசராசனுடைய முன்னோர்களையும் அவனையும் வாழ்த்துதலும் கூறப்படுகின்றன.

(10) **களங்காட்டலில்** சிவபெருமான் அம்பிகையோடுமெழுந்தருளிப் போர்க்களத்திலிருந்த பேய்களைச் சுட்டிக்காட்டி இவற்றுள் இறந்த இன்ன தேவர் இன்னபேயாக ஆயினரென்று புலப்படுத்தத் தேவி அவர்கள்பால் தான்கொண்டிருந்த முனிவு ஆறிய தன்றிச் சினம் தணிந்தருள வேண்டுமென்று சிவபெருமானை வேண்டுதலும், அவர் இரங்கித் தம்மை இகழ்ந்த தக்கனுக்கு ஆட்டுக்கிடாய்த் தலையையும் உயிரையும் ஏனை வானவர்களுக்கு உயிரையும் உரிய பதவிகளையும் அளித்தருளுதலும், அவர்கள் அவற்றைப்பெற்று வலம் வந்து வணங்கி வீரபத்திரதேவரை வாழ்த்தித் தத்தம் இடஞ் செல்லுதலும் கூறப்படுகின்றன.

(11) **வாழ்த்து** :—இதில் நூலாசிரியர் தம்மை ஆதரித்தவர்களுள் ஒருவனும் இந்நூலைச் செய்வித்தோனுமாகிய இராசராச சோழனையும் பிறரையும் வாழ்த்துதல் காணப்படுகின்றது. இப்பகுதியின் ஈற்றிலுள்ள மூன்று தாழிசைகளால் உறையூரையும்

காவிரியையும் திருமகள் கலைமகள் முதலியோரையும் தமிழையும் ஆசிரியர் வாழ்த்துகின்றார்.

மகாபுராணங்களிலும் வேறு நூல்களிலும் கூறப்பட்டிருக்கும் தக்கயாகசங்காரக் கதையினின்றும் இதிலுள்ள கதைப்போக்கு வேறுபட்டிருத்தலின் இந்த முறைக்கு ஆதாரமாக உள்ள முதல் நூல் இன்னதென்று இப்பொழுது விளங்கவில்லை.

ஆளுடையபிள்ளையார் சமணரை வாதில்வென்ற வரலாற்றிற் காணப்படுவனவாக இதன்பாலுள்ள சில செய்திகள் பெரிய புராணத்திற் காணப்படவில்லை; இஃது ஆராய்ச்சி செய்யற்பாலது.

இப்பரணியிலுள்ள தாழிசைகள் 815; இவை உரைப்பிரதியில் உள்ளவை; மூலமட்டுமுள்ள சுவடிகளில் அதிகமாக அங்கங்கே காணப்பட்ட 4-தாழிசைகள் உரைப்பிரதியிற் காணப்படாமையாலும் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமின்றியும் பிழைமலிந்தும் இருந்தமையாலும் அவை இப்புத்தகத்தினிறுதியிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இதனுரையாசிரியர் பெயர் தெரியவில்லை. ஆயினும் உரையானது மிகவும் பழையதாகக் காணப்படுவதன்றி இக்காலத்து வழங்காத அரிய சொற்களையும் சொற்றொடர்களையும் பல அரிய கருத்துக்களையும் மேற்கோள்களையும் தன்பாற் கொண்டு பொருள்களை அங்கங்கே நன்கு விளக்கிச் செல்லுதலின், இவ்வுரையாசிரியர் ஒட்டக்கூத்தருடைய மாணாக்கரோ அன்றி அவர்பால் இந்நூற் பொருளை முறையே நன்கு அறிந்து கொண்டவரோ வேறு யாரோவென்று நினைக்கப்படுகிறார். இக்காலத்துக் காணப்படாத தமிழ்நூல்களிலிருந்தும் பல வடநூல்களிலிருந்தும் மேற்கோள்களை எடுத்துக்காட்டுதலால் இவர் ஒட்டக்கூத்தரைப்போலவே தமிழிலும் வடமொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவரென்று தெரிகின்றது; தமிழில் இவருக்கு அபிமானம் அதிகமென்று உரையிலுள்ள சில குறிப்புக்கள் தெரிவிக்கின்றன.

> "அறுவர்தம் நூலு மறிந்துணர்வு பற்றி
> மறுவரவு மாறுன நீக்கி—மறுவரவின்
> மாசா ரியனை மறுதலைச்சொன் மாற்றுதலே
> ஆசா ரியன தமைவு" (புராதி. 76)

என்பதிற் கூறப்படும் உரையாசிரியருக்குரிய இலக்கணங்கள் இவர்பால் நன்கமைந்துள்ளன. பல இயல்பினால் அடியார்க்குநல்லாரையொத்தும் சிலவகையால் அவருக்கு மேற்பட்டும் இவர் விளங்குகிறார். இவரைப்பற்றிய வேறு வரலாறுகளை இப்புத்தகத்தில் உரையாசிரியர் வரலாறு என்னும் பகுதியிற் கண்டுகொள்க.

இவ்வுரை ஓரே படித்தாக இராமற் சில இடங்களிற் சுருங்கியும் சில இடங்களில் விரிந்தும் சில இடங்களில் தொடர்ச்சியின்றியு மிருத்தலைப் பார்க்கையில், இது பின்பு விரிவாக எழுதக் கருதி முற்பட உரையாசிரியர் குறித்த குறிப்போவென்று எண்ணும்படிக்கும் செய்தது.

கிடைத்த பிரதியில் ஓரிடத்திலிருக்கவேண்டிய சொற்களும் வாக்கியங்களும் வேறிடத்திலெழுதப்பட்டும் அறிந்து கொள்ளக் கூடாத நிலையில் மிகப் பிழைபட்டும் பூர்த்தியாக வாக்கியங்கள் எழுதப்படாமலும் சில சொற்களும் வாக்கியங்களும் கிரந்தலிபியிற் பிழையாக எழுதப்பட்டும் எழுத்துக்கள் மாறியுமிருந்தமையாலும் சுவடியிலுள்ள ஏடுகள் சிலவிடங்களில் தேய்வுற்றும் முறிந்தும் எழுத்துக்களின் உருவங்கள் புலப்படாமலும் இராமபாணங்கள் ஊடுருவிச் செல்லப்பட்டும் இருந்தமையாலும் இந்நூலைப் பரிசோதனை செய்வது மிக்க வருத்தத்தை விளைவித்தது. ஆனாலும் இந்தப் பிரதி இல்லையேல் இப்பரணியின் ஒழுங்கான பொருளையும் பிற விசேடங்களையும் காணுதல் அருமையிலும் அருமையாகும்.

இற்றைக்கு நாற்பத்துநான்கு வருடங்களுக்குமுன் பத்துப்பாட்டுப் பிரதியைத் தேடுதற்கு யான் சென்றபோது திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனமடத்துப் புத்தகசாலையிலுள்ள பல புத்தகங்களுள் இவ்வுரைப்பிரதியைப் பார்த்துவிட்டு வந்தேன். அப்பாற் சில மாதங்களுக்குப் பின்பு என் வேண்டுகோளுக்கிணங்கி அப்போது ஷை ஆதீனத்தின் தலைவர்களாக விளங்கிய ஸ்ரீ மாணிக்கவாசக தேசிகரவர்கள் என் நண்பர்கள் முகமாக ஷை பிரதியைக் கொடுத்தனுப்பி உதவினார்கள். அவர்கள் செய்த இப் பேருதவிக்குச் செய்தற்குரிய கைம்மாறு யாதுளது?

பின்பு சென்னைத் தங்கசாலைத் தெருவிலிருந்த திருத்தணிகைச் சரவணப் பெருமாளையருடைய பரம்பரையினராகிய குருசாமி ஐயரென்பவருடைய வீட்டிலிருந்த சுவடிகளில் இவ்வுரைப் பிரதியின் சில பகுதிகள் காணப்பட்டன. அவற்றைப் பார்த்து ஒப்புநோக்கிக் கொண்டேன். அதுவும் பிழைமலிந்த பிரதியே. அவ்வுரைப் பிரதியின் எஞ்சிய பகுதிகளைப்பற்றி அவரை விசாரிக்கையில் ஒருவரிடம் கொடுத்ததாகச் சொல்ல அவரைத் தேடிப் பிடித்துக் கேட்குங்கால் அவர் மற்றொருவரைச் சுட்ட அன்னவரும் அவ்வாறே செய்ய இவ்வாறே பலரிடம் சென்று கேட்டும் அம் முயற்சி பயனிலதாயிற்று.

சென்னைக்கு நான் வந்தபிறகு ஒருநாள் பிற்பகலிற் சில அன்

பர்களுடன் கடற்கரைக்குச் சென்ற பொழுது ஓரன்பர் பக்கிங் ஹாம்கால்வாய் ஓரத்திற் கிடந்தனவென்று எழுதப்பட்ட பல ஓற்றையேடுகளைக் கொணர்ந்து கொடுத்தனர். அவற்றை வாங்கி வந்து சோதித்தபோது இந்நூலின் இரண்டு ஓற்றையேடுகளே கிடைத்தன. படித்துப் பார்க்கையில் கோயில் பாடியதில் ஆளுடைய பிள்ளையார் கதையைக் கூறும்பகுதியிற் சில தாழிசைகளும் அவற்றினுரையுமே பிழைகளுடன் காணப்பட்டன. அவற்றையும் வைத்து ஒப்புநோக்கிக் கொண்டேன்.

பின்பு கிடைத்த சில மூலப்பிரதிகளும் ஒப்பு நோக்கப் பட்டன. உரைப்பிரதியிற் சில இடங்களில் உரைக்குமாறாக மூலங்கள் இருந்தன; சில இடங்களில் உரைக்குரிய தாழிசைகள் காணப்படவில்லை. இவ்விருவகைக் குறைகளையும் மூலமட்டு முள்ள பிரதிகள் நீக்கியுதவின.

இந்நூற்றாழிசைகள் குறட்டாழிசை யென்றும் இந்நூலின் பெயர் வீரபத்திரப்பரணி யென்றும் சில மூலப்பிரதிகளிற் காணப் பட்டன.

இந்த உரைப்பிரதி கிடைத்ததுமுதல் இதுகாறும் செல்லு மிடங்களிலெல்லாம் தேடிப் பார்த்தும் உரையுள்ள பிரதியாக வேறொன்றும் கிடைக்கவில்லை. சொன்னால் என் மனங்கனியு மென்று பல உரைப்பிரதிகளை வருவித்துக் கொடுப்பதாகக் கூறித் தங்கள் காரியத்தைமட்டும் நிறைவேற்றிக் கொண்டு சென்ற புண்ணியவான்கள் சிலர்.

## கிடைத்த பூர்த்தியான கையெழுத்துப் பிரதிகள் :

### (உரைப்பிரதி)

| | |
|---|---|
| தருமபுர ஆதீனத்துப்பிரதி | 1 |

### (மூலப்பிரதிகள்)

| | |
|---|---|
| காஞ்சீபுரம் ஸ்ரீ கங்காதர முதலியார் தந்த பிரதி | 1 |
| சீகாழி ஸ்ரீ சிதம்பர வாத்தியார் தந்த பிரதி | 1 |
| சிதம்பரம் ஸ்ரீ தில்லைநாயக முதலியார் தந்த பிரதி | 1 |
| சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி | 1 |

இந்நூலும் உரையும் மிகப் பிழைபட்டுக் காணப்பட்டமை யாலும் வேறு நல்ல பிரதிகள் அகப்படாமையாலும் எழுது வோரால் நேர்ந்த பிழைகள் இன்னவையென்று நிச்சயமாகத் தெரிந்தவற்றைமட்டும் திருத்தியமைத்தும் அங்ஙனம் நிச்சயிக்கு

முடியாதவற்றை வேறு பிரதி கிடைத்தால் செப்பஞ்செய்து கொள்ளலாமென வெண்ணி அங்ஙனமே அமைத்தும் பதிப்பிக்கப் பெற்றன. விளங்காத மேற்கோள்களின் ஆகரங்களை விளக்கியும் கடினமான விஷயங்களை அடிக்குறிப்பாற் புலப்படுத்தியும் மூலத்திலும் உரையிலும் கடினமாகவுள்ள பகுதிகளை இயன்றவரையில் விளக்கிப் பழைய நூல்களிலும் பிற்காலத்து நூல்களிலும் இந்நூலோடு ஒத்துள்ள பகுதிகளை எடுத்துக்காட்டி எழுதுவித்த விசேடக்குறிப்பையும் அரும்பத முதலியவற்றின் அகராதியையும் பாடபேதத்தையும் உரையிற்கண்ட இலக்கண விசேடங்களையும் விளங்கா மேற்கோளகராதியையும் பிறவற்றையும் வழக்கம்போலவே சேர்த்தும் இப்புத்தகத்தை வெளியிடலானேன். இவை வித்தியாவிநோதர்களுக்கு மிகப் பயன்படுமென்று எண்ணுகிறேன்.

இதனால் தெரியவருவனவும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்தனவுமாகிய முதல் இராசராசன் முதற்குலோத்துங்கன் விக்கிரமசோழன் முதலிய மூவர் நம்பிப்பிள்ளை முதலியோர்களின் சரித்திரப் பகுதிகளும், அவர்கள் பகைவரை வென்று நாடுகாத்தமையும், ஸ்ரீ சிதம்பரம் முதலிய ஸ்தலங்களில் திருப்பணி செய்தமையும், பிறதருமங்கள் புரிந்தமையும், அவர் காலத்து நிகழ்ந்த பிற நிகழ்ச்சிகளும், சில சொற்பிரயோகங்களும், பிறவும் சிலா சாஸனங்களின் உதவியால் தெளியப்பெற்று வலியுறுவனவாயின.

இந்நூல் ஆராயப்பெற்று வந்தகாலத்தும் பதிப்பிக்கப்பெற்று வந்தகாலத்தும் சென்னைச் சிலாசாஸன ஆபீஸிலுள்ள சில அறிக்கைகளும் புத்தகங்களும், சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலையிலும் சென்னை ஸர்வகலாசாலைப் புத்தகசாலையிலும் உள்ள சில புத்தகங்களும் மிக்க உதவியாக இருந்தன.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகளாக விளங்கும் கும்பகோணம் ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளவர்களை யான் தரிசிக்குங் காலங்களிற் பழந்தமிழ் நூலாராய்ச்சியைப்பற்றிப் பெருங் கருணையுடன் விசாரிப்பதுண்டு. அது மிக்க ஊக்கத்தையும் தைரியத்தையும் எனக்கு அளித்து வருகின்றது.

அவ்வப்போது நிகழ்ந்த ஐயங்களை நீக்கிய மைஸூர் ஸர்வ கலாசாலை, திராவிட பாஷா ஸபைத்தலைவரான ஸ்ரீமான் பிரகடன விமர்ச விசக்ஷண கர்ணாடகாசார்ய வித்யாவைபவ ராவ்பகதூர், ஆர். நரசிம்மாசாரியரவர்களையும், பங்களூர்த் தண்டிலுள்ள தேவி உபாஸகராகிய பண்டிதர் பிரம்மஸ்ரீ ராமதாஸ சாஸ்திரிகளவர்களை

யும், சென்னையிலிருக்கும் ஸ்ரீனிவாஸநல்லூர் பிரம்மஸ்ரீ ராமசந்திர சாஸ்திரிகளவர்களையும் ஒருபொழுதும் மறவேன்.

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துத் தலைவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ வைத்தியலிங்க தேசிகரவர்களும், திருப்பனந்தாட் காசி மடத்துத் தலைவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சொக்கலிங்கஸ்வாமிகளவர்களும், மதுரை அட்வோகேட் ஸ்ரீமான் டி. ஸி. ஸ்ரீனிவாஸையங்கார் M. L. C அவர்களும், பெரும்பன்றியூர் ஸ்ரீமான் ஏ. எம். பெரியசாமி முத்தையா உடையாரவர்களும், கொழும்பு நகரத்துள்ள ஸ்ரீமான் டாக்டர் கு. ஸ்ரீகாந்த முதலியாரவர்களும் தமிழ்ப் பாஷையின்கண் உள்ள பேரபிமானத்தினால் நூற்பதிப்பு விஷயத்தில் இயன்ற உதவிகளை அவ்வப்போது செய்து தமிழை அன்புடன் ஆதரித்து வருவதை இது முகமாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த நூலை ஆக்குவித்தோனாகிய இராசராசனுடைய செயல்களையும் ஒட்டக்கூத்தர் முதலிய தமிழ்ப் புலவர்களை அவன் ஆதரித்து விளங்கியதையும் நினைக்கும்பொழுதெல்லாம் ஸ்ரீ ஸேது ஸமஸ்தானாதிபதிகளும் தமிழ்ச்சுவையை நன்கறிந்து தமிழ்ப்புலவர்களை மிக்க அன்போடு ஆதரித்துவந்தவர்களுமான காலஞ்சென்ற மகாராஜராஜஸ்ரீ பா. இராஜராஜேசுவர ஸேதுபதி மகாராஜா அவர்களுடைய ஞாபகம் உண்டாகி மேன்மேலும் வருத்தியது. அவர்களுடைய செல்வப் புதல்வர்களும் இப்பொழுது ஸேது ஸமஸ்தானாதிபதிகளாக விளங்குபவர்களும் தந்தையாரவர்களைப் போலவே தமிழ்ச்சுவையை யறிந்து இன்புறுபவர்களும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வருபவர்களும், "மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை, என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்" என்னும் பெரியார் வாக்கிற்கு இலக்கியமாக உள்ளவர்களுமாகிய கௌரவம் பொருந்திய மகாராஜராஜஸ்ரீ ஷண்முக ராஜேஸ்வர நாகநாத ஸேதுபதி மகாராஜா அவர்கள், நூற்பரிசோதனைக் காலத்தில் உடனிருந்து உதவி செய்து வருபவர்கள் விஷயத்தில் நான் பொருட்கவலை யடையாதபடி வழக்கம்போலவே கவனித்து உதவி செய்து வருதல் மிகவும் போற்றற்பாலது.

என்னுடைய பதிப்புக்கள் வெளி வருவதை மிக்க ஆவலுடன் எதிர்நோக்கி அடிக்கடி உண்மை அன்பர்கள் கடிதம் எழுதி வருவது எனக்கு மிக்க ஊக்கத்தை விளைவிக்கின்றது.

இந்நூலைப் பரிசோதித்துப் பதிப்பித்துவருங் காலங்களில் உடனிருந்து எழுதுதல், ஆராய்தல், ஒப்பு நோக்குதல் முதலிய உதவிகளை அன்புடன் செய்தவர்கள் என் இளைய சகோதரர் சிரஞ்சீவி, வே. சுந்தரேச ஐயரும், சென்னை விமன்ஸ் கிறிஸ்டியன்

காலேஜ் தமிழ்ப் பண்டிதர் வித்வான், சிரஞ்சீவி, சு. கோதண்டராம ஐயரும், சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் வித்வான், சிரஞ்சீவி, வி. மு. சுப்பிரமணிய ஐயரும், மோகனூர், தமிழ்ப் பண்டிதர், சிரஞ்சீவி, கி. வா. ஜகந்நாத ஐயரும் ஆவர். இவர்களுள் ஜகந்நாதையர் எடுத்துக்கொண்ட உழைப்பு பாராட்டத்தக்கது.

இப்புத்தகத்தில் எதிர்பாராத பிழைகள் பல காரணங்களால் அங்கங்கே நேர்ந்திருத்தல் கூடும். அவற்றைப் பொறுத்துக்கொள்ளும்படி இதனைப்படிக்கும் அறிஞர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என்னை இம்முயற்சியிற் புகுத்தி நடத்திப் பாதுகாத்தருளும் தோன்றாத் துணையை அனவரதமும் சிந்தித்து வந்திக்கின்றேன்.

## திருவாசகம்

" அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே."

' தியாகராஜ விலாஸம் '
திருவேட்டீசுவரன் பேட்டை
20—1—1930.

இங்ஙனம்
வே. சாமிநாதையர்.

# நூலாசிரியர் வரலாறு

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கன்றுடுங் கரதலத்துச் சிவகாமி யம்மை
கண்டுகளித் திடத்தில்லைக் கடிநகரிற் கனக
மன்றுடுங் கூத்தனைப்போ லிருமொழிக்குந் தலைமை
வாய்ந்துவிறற் புலவர்சிகா மணியாகி விளங்கி
என்றுடுங் குலத்தேவர் மூவர்வழி படவைந்
தியற்றியிணை யிலியாகிச் சருவஞ்ஞ ணுகி
நின்றுடும் புகழ்க்கூத்தன் கவிச்சக்ர வர்த்தி
நேர்மையினை யெடுத்துரைக்கு நீர்மையன்கொல் யானே.
எண்ணுமிரு வேறுலகத் தியற்கையெனுங் குறளை
யெதிர்மறுத்தே யிருபொருளு மொருங்குபெறுங் கூத்தன்
கண்ணுபல குணக்குன்றும் வரராச ராசன்
கரசிரகம் பிதஞ்செய்யக் கவிஞர்குழாங் களிப்பப்
பண்ணுமிரு மொழிச்சுவைக ணண்ணுதக்க யாகப்
பரணியினைப் புகழ்ந்திடுகோ முரணிலதன் கண்ணே
அண்ணுசுவை பலவிளங்க வரியவுரை செய்த
வாசிரியன் பெரும்புலமை பேசிடுகோ யானே.

இந்நூலாசிரியராகிய **ஒட்டக்கூத்தருடைய** இயற்பெயர் கூத்தரென்பது ; இவர் கூத்தமுதலியாரென்றும் வழங்கப்படுவார். கூத்தரென்பது **ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய** திருநாமம். இவர் பிறந்த ஊர் மலரியென்பர் ; "மலரி வருங்கூத்தன்" (**தண்டி. மேற்.**)

இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் வடமொழி நூல்களிலும் மிகுந்த பயிற்சி வாய்ந்தவர். செய்யுள் இயற்றுமாற்றல் இவர்பால் மிகச் செவ்வனே அமைந்திருந்தது. வடமொழியிலுள்ள பலவகையான சொற்களையும் தொடர்மொழிகளையும் தாம் இயற்றும் செய்யுட்களில் உரிய இடங்களில் அமைத்துப்பாடுபவர். அவ்வாறமைப்பதில் இவருக்கு மிகுந்த ஊக்கமும் பிரீதியுமுண்டு. பல மாறுக்கர்கட்குப் பாடஞ்சொல்லும் இயல்பினர். சிவபக்திச் செல்வம் வாய்ந்தவர் ; கலைமகளையும் வழிபட்டுப் பேறு பெற்றவர். இவர் இன்னராதல் இவரியற்றிய நூல்களாலும் இந்நூலுரையாலும் விளங்கும்.

இவர் விக்கிரமசோழன் காலத்தில் அவனுடைய ஆஸ்தான பண்டிதராகவும், குலோத்துங்கனுக்கு வித்தியாகுருவாகவும், அவனுக்கும் அவன் குமாரன் இரண்டாம் இராசராசனுக்கும் ஆஸ்தான பண்டிதராகவும் இருந்து அவர்களுடைய அவைக்களத்தை அலங்கரித்துப் பல புலவர்களை

ஆதரித்தும் பல நூல்களை இயற்றியும் இயற்றுவித்தும் விளங்கியவர். அக்காலத்தில் அம்மூவருள் ஒவ்வொருவர்மீதும் ஒவ்வோருலாவும் குலோத்துங்கசோழன்மீது ஒரு பிள்ளைத்தமிழும் இயற்றினர். இவரிடத்துப் பேரன்புற்ற அம்மூவருளொருவன் இவருக்கு அரிசிலாற்றங்கரைக்கண்ணதாகிய ஓரூரை அளித்தனன்; இவர் பெயரால் அது * கூத்தனூர் என்று இக்காலத்து வழங்கப்படுகிறது. இவர் கலைமகளுடைய திருவருள் பெற்றவராதலின், அவ்வூரில் அத்தேவியின் திருவுருவத்தைப் பிரதிஷ்டிப்பித்துக் கோயிலெடுப்பித்து வழிபட்டு வந்தனர். இஃது, "ஆற்றங்கரைச் சொற்கிழத்தி வாழியே" (தக்க. 813) என்பதனாலும் விளங்கும்; இத்திருக்கோயில் இன்றும் நல்ல நிலையில் உள்ளது.

தன்மீது இவர்செய்த உலாவிலுள்ள ஒரு கண்ணியை ஒட்டி ஒரு செய்யுள் இயற்றும்படி விக்கிரமசோழன் சொல்ல அவ்வாறே விரைந்து பாடினமையால் இவர் ஒட்டக்கூத்தரென்னும் பெயர்பெற்றாரென்பர். இப்பெயருக்கு வேறு காரணங் கூறுவாருமுளர்.

விக்கிரமசோழன் இவருக்கு யானை காளம் முதலிய வரிசைகளை அளிக்க இவர், "இவ்விருதுகளைப் பெறுதற்கு யான் உரியேனல்லேன்" என்று, "பெருக்கத்து வேண்டும் பணிவு" என்பதற்கிணங்கத் தம்முடைய பணிவைத் தெரிவித்தனர்; இவை பின்னுள்ள செய்யுட்களால் விளங்கும்:

† "இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களம்
திடுக்குற் றஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்
றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன
படுக்கக் கம்பளம் பரக்கக் குங்குமம்
பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்
கடுக்கக் குண்டலங் கலிக்கச் சங்கினங்
கவிக்குப் பஞ்சரங் கவிக்கத் தொங்கலே"

† "பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானு பரனு
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேல்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்குந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழுக்கேன் கொடியுங்கா ளமுமே."

இராசராசனுலாவைப் பாடி அரங்கேற்றியபொழுது இவருக்கு அவ்வரசன் ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் விழுக்காடு வழங்கினன்.

---

* இது தஞ்சாவூர் ஜில்லாவில் பூந்தோட்டம் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் உள்ளது. † தமிழ்நா. 118, 119.

இது, "தெள்ளிதம், மூன்று பகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும், பொன்று பிரஞ்சொரிந்த பூபதியும்" (**சங்கரசோழனுலா**), "கூட, னபாதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக், கொராயிரம்பொ னீந்த வுலாவும்" (**தமிழ்விடுதூது**) என்பவற்றால் தெரிகின்றது.

இவரை ஆதரித்தவர்கள் மேற்கூறிய மூவரேயன்றி, திருச்சிற்றம்பல முடையான் பெருமாள்நம்பி, காவிரிப்பூம்பட்டினத்திருந்த உபகாரிகளாகிய வீரர் சிலர், புதுவைக்காங்கேயன், திரிபுவனச்சோமனென்னும் செல்வர்களுமென்று இந்நூலாலும் இதனுரையாலும் பிறவற்றாலும் விளங்குகின்றது.

இந்நூலின் இறுதியில், "ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே" என்று திருமகளை வாழ்த்தியிருத்தல் சோழர் முதலியோரால் நன்கு ஆதரிக்கப்பட்டு மேன்மேலும் செல்வம், புகழ், மதிப்பு இவற்றை மிகுதியாக அடைந்து யாதுங்கவலையின்றி இவர் வாழ்ந்து வந்தனரென்பதைப் புலப்படுத்துகின்றது.

இராசராச சோழன் (II) காலத்தில் முதுமைப் பிராயம் அடைந்திருந்த இவர் உடற்றளர்ச்சியுற்றிருந்தாரேனும் அறிவில் தளர்ச்சியுறவில்லை. இவர் இயற்றிய **மூவருலா**வில் இராசராச சோழனுலா ஏனைய இரண்டிலும் அளவாலும் சுவையாலும் மிக்கிருத்தலும் இந்நூலமைப்பும் இதனை அறிவிக்கும்; "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி னுரைமூதாளன்" என்னும் **மணிமேகலை**யடிகள் இங்கே ஞாபகத்திற்கு வருகின்றன.

இவர் காலத்திலிருந்த புலவர்கள் **நம்பிகாளியார்**, **நெற்குன்றவாண முதலியார்** முதலியோர். கம்பரும் புகழேந்தியும் இவர்காலத்தில் இருந்தவரென்பது சிலர் கொள்கை; அதற்குத் தக்க ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

இவர், "பாடற் பெரும்பரணி தேடற் கருங்கவி கவிச்சக்ரவர்த்தி பரவச் செஞ்சேவகஞ் செய்த சோழன்றிருப்பெயர" (**குலோத். பிள்ளை.**) என்பதில் முதற்குலோத்துங்கன்மீது **சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணி** இயற்றியதையெடுத்துக் கூறுதலால் பிறபுலவர்களைப் பாராட்டும் இவருடைய அரியகுணமும், சயங்கொண்டார்பால் இவர் கொண்ட மதிப்பும் விளங்கும்.

இவர் உலக இயல்பைக் கடந்து வருணனைகளை அமைப்பதாற் கௌடப்புலவரெனப்படுவார். அவ்வாறமைப்பதை இந்நூலுள் 29, 37, 85-ஆம் தாழிசைகளாலும் பூதகணங்களின் செயல்களை விரித்துக் கூறும் பகுதி முதலியவற்றாலும் உணரலாம். செய்யுள் செய்யும் ஆற்றலில் அக்காலத்துள்ள கவிகளுட் சிறந்து விளங்கினமையால் * கவிராக்ஷசனென்றும் † கவிச்சக்கரவர்த்திகளென்றும் ‡ சக்கரவர்த்திகளென்றும்,

---

* **சோழமண்டல சதகம்**, கக, **மேற்**. திருவாவடுதுறை ஆதீன வித்துவான் **ஸ்ரீ கச்சியப்ப முனிவர்** கவிராக்ஷஸனென்ற சிறப்புப்பெயர் வாய்ந்திருந்தவரென்பது கர்ணபரம்பரைச் செய்தி.

† **தக்க.** 813 - 4; 536, 776, உரைகள். ‡ **தக்க.** 457, உரை.

அபசஞற் காளம் என்ற விருதுபெற்றமையால் * காளக்கவியென்றும் இரு மொழி நூல்களுள்ளும் இன்றியமையாதனவற்றைச் செவ்வனே அறிந்து அறிந்தவற்றை நன்கு புலப்படுத்திச் செய்யுள் செய்யும் திறம் வாய்ந்திருந்தமையின் † சருவஞ்ஞகவி யென்றும் இவர் வழங்கப்படுவர்.

இவர் தேவியைப்பற்றிக் கூறுவனவெல்லாம் பெரும்பாலும் யாமள சாஸ்திரக் கருத்துக்களைப் பின்பற்றியனவென்று தெரிவதால் இவருக்கு அந்நூல்களிற் பயிற்சியுண்டென்றும் சைன முதலிய பிற சமயங்களைப்பற்றிய செய்திகளையும் பரிபாஷைகளையும் எடுத்தாளுதலின் அச்சமயநூல்களை யறிந்தவரென்றும் சொல்லலாம்.

இவர் செய்த வேறு நூல்கள் :—**காங்கேயன்நாலாயிரக்கோவை, அரும்பைத் தொள்ளாயிரம், மூவருலா, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், ஈட்டியெழுபது** முதலியன. அன்றியும் இவர் அவ்வப்பொழுது செய்தனவாகச் சில செய்யுட்கள் **தமிழ்நாவலர் சரிதை** முதலியவற்றிற் காணப்படுகின்றன. இந்நூலில் 776-ஆம் தாழிசை உரையினுல், விக்கிரமசோழன்மீது கலிங்கவெற்றியைக் குறித்து ஒரு பரணி இவராற் பாடப்பட்டதென்று தெரிகின்றது ; இந்நூல் 13-ஆம் தாழிசை உரையில் உரையாசிரியர், "என்ருர் தாமே" என்று குறிப்பித்துக் காட்டிய, "முத்தின் கனங்குழையை யுங்குமிழை யுங்கதுவி முட்டுங் கருங்கயல்க ளின்கடை யடங்குவன" என்பதும், **சிலப்பதிகார** வுரையில் **அடியார்க்குநல்லார்** காட்டிய மேற்கோள்களுள் பரணித்தாழிசைகளாகக் காணப்படும், "மோடிமுன் றலையை வைப்ப ரேமுடி குலைந்தகுஞ்சியை முடிப்பரே, ஆடிநின்று குருதிப்பு துத்திலத மம்முகத்தினி லமைப்பரே", "மண்ணி ளைற வறுத்ததங்கடலை வைத்தபீடிகை வலங்கொள, விண்ணி யைகிதன் யாக சாலைதொறு மீளவுஞ்சிலர் மிறைப்பரே" என்பவைகளும் அப்பரணியிலுள்ளன போலும்.

"சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே, நின் றளவி லின்ப நிறைப்பவற்றுள் - ஒன்று, மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று, மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" என்ற **தண்டியலங்கார** மேற் கோட்செய்யுளால் இவர் வாக்குநயத்தை அக்காலத்தார் நன்குமதித்திருந்தா ரென்பதும் இவரால் ஆதரிக்கப்பெற்ற புலவர்களுள் தண்டியலங்கார மேற் கோளாசிரியரும் ஒருவரென்பதும் விளங்குகின்றன.

இந்நூலிலும் இவரியற்றிய வேறு நூல்களிலும் அமைந்துள்ள பிரயோகங்களை உற்று நோக்குகையில் இவர் சைவத்தில் மிக்க பற்றுடையவரென்பது தெளிவாகும்.

துர்க்காபரமேசுவரி கலைமகளை நோக்கி ஆளுடையபிள்ளையார் கதையைச் சொல்லும்படி கட்டளையிட்டு, அங்ஙனமே சொல்லிய கலைமகளை மனமுவந்து தன் அருகில் வீற்றிருக்கும்படி அருளிச்செய்ததாகக் கூறியிருப்பதும், தக்கயாக சங்காரத்தைக் கூறும் ஏனைய நூல்களில் வீரபத்திரதேவர் கலைமகளுடைய நாசியை அரிந்ததாகக் காணப்படும் செய்தியைக் கூறு

* **தக்க.** 70, உரை. † **தக்க.** 433, உரை.

தொழிந்ததும், வாழ்த்தில், "ஆற்றங் கரைச்சொற் கிழத்தி வாழியே" என்று பாராட்டியிருப்பதும் இவருக்குக் கலைகள் பாலுள்ள பேரன்பைப் புலப்படுத்துகின்றன. இவர் தமிழ்ப்பரமாசாரியராகிய **அகத்தியரிடத்து** மிக்க பக்தி உடையவர் : 40, 233, 624-ஆம் தாழிசைகளைப் பார்க்க. இருமொழியிலும் நல்ல பயிற்சியுடையவராயிருப்பினும் வீரபத்திரதேவர் போர்க்கோலங்கொண்டெழுந்த காலத்தில் தும்பைமாலையை அணிந்துகொண்டதாகக் கூறப்புகுந்த இவர், "பொதியில் வாழ்முனி புங்கவன்றிரு வாய் மலர்ந்த புராணநூல், விதியினல்வரு தும்பைமாலை விசும்புதூர மிலைச்சியே" என்று கூறியதாலும், அகத்தியமுனிவரை, "ஒருதமிழ் முனிவரன்" என்றும், பொதியின்மலையை, "தமிழ்க்குன்று", "தமிழ்ப் பொதியில்" என்றும் சொல்லியதாலும், "கோக்குந் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே", "வாழி தமிழ்ச்சொற் றெரிந்த நூற்றுறை, வாழி தமிழ்க்கொத் தனைத்து மார்க்கமும், வாழி திசைக்கப் புறத்து நாற்கவி" என்று வாழ்த்தியதாலும் தமிழ்மொழியிலும் அதன் வளர்ச்சியிலும் இவர் அதிக அபிமானம் உடையவரென்பது விளங்கும்.

கடவுள் வாழ்த்தில் **திருஞானசம்பந்தமூர்த்தியை** வாழ்த்தியிருத்தலாலும் அவர் கதையைக் கோயில் பாடியதிற் புகுத்தி விளங்கப் பாராட்டியிருத்தலாலும் பிறவற்றாலும் இவருக்கு அவரிடத்திருந்த சிறந்த பக்தி வெளியாகின்றது.

இவர் நன்றியறிவிற் சிறந்தவர் ; இந்நூலில், பொதுவாகச் சோழர்களைச் சிறப்பிக்கும் சிறப்பாகத் தம்மை ஆதரித்த சோழர்களைப் பலபடப் பாராட்டியும் காவிரிப்பூம்பட்டினத்திருந்த உபகாரிகளையும் பல்லவராயனென்று பட்டம் பெற்ற நம்பிப்பிள்ளையையும் நல்ல சந்தர்ப்பத்திலெடுத்துச் சிறப்பித்துமிருப்பதால் இது தெளிவாகும்.

போர்செய்யச்சென்ற வீரபத்திரதேவர் காஞ்சியில் சிவபெருமானுக்கு நீழல்செய்யும் மாமரத்தின் பல்லவத்தை (தளிரை) அணிந்தனரென்று கூறியிருத்தலால் காஞ்சீபுரத்தில் இவருக்கிருந்த பேரன்பு விளங்கும்.

இவருடைய வரலாறுகளைத் தனிப்புத்தக ரூபமாகவும் வேறு வேறாகவும் பலர் வெளியிட்டிருத்தலால் அவற்றை விரித்தெழுதாமல் இன்றியமையாத சில வரலாறுகளும் இந்நூலாலறியப்பட்ட செய்திகளுமே இங்குத் தெரிவிக்கப்பட்டன.

---

# நூலாராய்ச்சி

## I. மற்றப் பரணிகளுக்கும் இதற்கும் உள்ள வேறுபாடுகள் :

(க) மற்றப் பரணிகளைப்போலப் பாட்டுடைத்தலைவனுக்கு நன்மை உண்டாக வேண்டுமென்று வாழ்த்தாமல் ஆக்குவித்தோனுக்கு நன்மை உண்டாகும்படி தெய்வங்களை வாழ்த்தியிருத்தல் ;

(உ) உமாபாகர், விநாயகர், முருகக்கடவுள் திருஞானசம்பந்தரென்னும் இவர்களை மட்டும் வாழ்த்தியிருத்தல் ;

(ங) நாலுறுப்புக்களின் பிறழ்ச்சி ;

(ச) காடுபாடியது முதலியவற்றில் யாமளநூலின் முறைப்படி வருணித்திருத்தல் ;

(ரு) சைவத்தின் ஏற்றம் புலப்படும்படி திருஞானசம்பந்தர் சைனரை வென்ற கதையைத் தேவிக்கு நாமகள் கூறியது மூகமாகப் புதிதாக விளங்கக் கூறியிருத்தல் ;

(சா) கூழடுதலென்னும் உறுப்பிற் பேய்கள் கூழையாக்கிக் குடித்துப் பாட்டுடைத் தலைவனை வாழ்த்தாமல் இந்நூலை ஆக்குவித்த இராசராச சோழனையும் அவன் முன்னோர்களையும் அவர்களுடைய நற்செய்கைகளையும் வாழ்த்துதலைக் கூறியிருத்தல் ;

(எ) களங்காட்டுதலிற் காளி பேய்களுக்குக் களங்காட்டியதாகக் கூறியது போலன்றிக் கதைத்தொடர்பு புலப்படத் தேவிக்குச் சிவபெருமான் காட்டியதாகக் கூறியிருத்தல் ;

(அ) ஆக்குவித்தோனிடத்துள்ள பேரன்பால் அவனைத் தனியே இறுதியில் வாழ்த்தியிருத்தல்.

## II. சரித்திர சம்பந்தமான விஷயங்கள் :

இராசகம்பீரன் (இரண்டாம் இராசராசன்) பிரட்டனைவென்றுஇரட்டனுக்குப் பட்டங்கட்டியது, இராசராசபுரி பல அரசர்களாற் காக்கப்படுதல், இராசராசன் (II) தில்லைத்தலத்தில் தேர் அமைத்தது, அவன் பாண்டியனை வெல்லப் படைவிடுத்தது, அவன் மலையை வெட்டிப் பொன்னிக்கு வழிகண்டது, அவன் வஞ்சியில் வாகை புனைந்தது, ஒரு பாண்டியன்கை பொன்னனது, காவிரிப்பூம்பட்டினத்தார் கட்டரணம் வல்லவனை நடைகொண்டது, குலோத்துங்கன் (II) (தில்லையில்) ஏழ்நிலைக் கோபுரம் வகுத்தது, அவன் கோயிலுக்கு ஆனிரையையும் யானைகளையும் வழங்கியது, அவன் தில்லை மன்றில் இடங்கண்டது, அவன் தில்லையில் மண்டபங்களமைத்தது, அவன் தில்லையிற் கற்பகம் வைத்தது, அவன் மகோதைமேற் சென்றது, அவன் மதுரைமேற் சென்றது, அவன் (தில்லையில்) மறுகு வகுத்தது, சோழர் கருநடர் ஒளித்த விந்தவனத்தில் எரியிட்டது, சோழர் மலைகளிற் புலிவடிவம் பொறித்தது, தண்டகாபதியாகிய பல்லவராயன் (நம்பிப்பிள்ளை) சேரனைத்

திறைகொண்டது, தெய்வப்பெருமாள் (முதல் இராசராசன்) இராசராசேசுவரம் சமைத்தது, பெரியபெருமாள் (குலோத்துங்கன் II) தில்லை வனத்திற் பீடிகை யமைத்தது, முதற்குலோத்துங்கன் வேதத்தழிவு மாற்றிச் சுங்கம் தவிர்த்தது, விக்கிரமசோழன் கலிங்கரை வென்று தெய்வப்பரணி கொண்டது முதலியன.

## III. இந்நூலாலறியப்படும் இந்நூலாசிரியர் கொள்கைகளிற் சில :

ஆளுடையபிள்ளையார் முருகக்கடவுளின் திருவவதாரம், சில வென்பதை இரண்டென்னும் பொருளில் வழங்குதல், சிவபெருமானுக்குத் திருமஞ்சனம் அக்கினி, சூரியன் ஏழுகுதிரைகளை யுடையான், தேவியே திருமால்.

## IV. அரிய விஷயங்களிற் சில :

அகத்தியர் யாழ் வாசித்தலில் வல்லவர், ஆளுடையபிள்ளையார் பாண்டியனுடைய இருவகைக் கூனையும் நீக்கினர், இந்திரர்கள் விமானம் முப்பத்து நான்கு, இரத்தமழை பெய்யும் மேகமுண்மை, இருதயம் தாமரை மொட்டைப்போல் இருத்தல், ஈசானனது எருது மூப்புடையது, உலகத்தார் சூரியனை வணங்குதல், ஒருவகை நாகங்கள் யானைகளை யுண்ணல், ஒருவகைப் பாம்பின் கண்ணில் விஷமுண்மை, கருடலோகமென ஒன்றுண்மை, கருடன் இரண்டுருவங்களை ஒருங்கே உடைமை, காலன் வேறு யமன் வேறு, காவிரி வற்றாமை, காளியினடியவர்களும் அவர்கள் செயலும், கின்னர மிதுனங்கள் பாடும் வன்மையையுடையன, குபேரனுக்கு நரனென்னும் யட்சன் வாகனம், குலச்சிறை நாயனார் அதிகாரி பெருநம்பியென்னும் பட்டங்களுடைமை, கைலைமலை இமயமலையின் ஒரு குவடென்பது, கோலோகத்தின் இலக்கணம், சக்கரவாளகிரி பொன்னிறத்தது, சமணர் தாமே கழுவேறியது, சமணர் மந்திரவாத வித்தையிற்றேர்ந்தவர், சமணருடைய இலக்கணங்களுஞ் செயல்களும், சிவபெருமான் அண்டங்களைத் தாராக அணிந்தது, சிவபெருமானுடைய கங்கணமாகிய பாம்பு திருஷ்டிவிஷமென்பது, சூரன் ஒளித்திருந்த மலையையும் அவன் மார்பையும் ஒரே காலத்தில் ஊடுருவிச் செல்ல முருகக் கடவுள் வேல் விட்டது, தட்சகன் திருஷ்டிவிஷமென்பது, திருமால் புனலையே உடம்பாக உடையவர், திருமாலின் சார்ங்கம் மூங்கில், திருமாலின் வடிவு ஐந்து, துர்க்காபரமேசுவரி கோயில் வாயிலின் இருபுறத்தும் சங்கநிதி பதுமநிதி உண்மை, துர்க்காபரமேசுவரி முல்லை மாதவி கற்பகக் கொடிகளை வளர்த்தல், தெய்வஸ்திரீகள் பூங்கொடியைப் பிடித்து வருதல், தேவி இறைவன் மார்பிலிருத்தல், நட்சத்திரங்கள் இருபத்தெட்டு, பாசம் காலனுக்கும் தண்டு யமனுக்கும் ஆயுதங்கள், பிரமா அவதரித்தது திருமாலின் உந்திச் செந்தாமரையில், பின்பு அவர் தங்கியது வெண்டாமரையில், அவர் குறளை கூறிய நால் தண்டலை யடைந்தது, புத்தன் வாளெறிந்த வாயிலொடு பால் சுரந்தது, பூமியணுவினுல் மணல் வந்தது, பேய்கள் யுத்தகளத்தில் உணவு

பெறுதல், பைரவமதத்தினர் வெப்புநோயை நீக்குதற்குச் சக்கரபூசை செய்தல், மந்தரம் மேருவின் வடபாற் சிகரமென்பது, மயில் பாம்பை உண்ணுதல், மரத்திற்கு உயிருண்மை, மலைகளுக்குச் சிறகிருந்தமை, மாகேசுவரத்தொண்டர்கள் நாற்பத்தெண்ணாயிரவர், மாடப்புறு கல்லை யுண்ணுதல், முருகக்கடவுளுக்கு மயில் கொடியுமாதல், வருணன் நாகபாச முடையான், வானவிற்கள் இரண்டுண்மை, வீரபத்திரர் போர்மேற் செல்லுகையில் மாந்தளிரை யணிந்தது, வேதங்கள் மூன்று.

## V. புறப்பொருளமைதிகள் :

கற்புமுல்லை, தும்பை சூடுதல், பகைவருடைய அரணங்களில் எரியிடுதல் (உழுபுலவஞ்சி), படைவழக்கு, வஞ்சி சூடுதல், வாகை சூடுதல், வென்று களங் கொள்ளுதல் (பேராண்முல்லை.)

## VI. பொருளணிகளிற் சில :

அபூதவுவமை, ஆதிதீபகம், உவமை, எதிர்நிரனிறை, சிலேடை, சொற்பின் வருநிலை, சொற்பொருட் பின் வருநிலை, நிதரிசனம், நிந்தாத்துதி, நிரனிறை, விபரீதாலங்காரம்.

தொனி : 12, 561.

## VII. சொல்லணிகள் :

திரிபு, 3, 5, 16, 27, 34-5, 73-4, 167, 228, 230, 277, 292, 357, 363, 391, 394, 524, 560, 619, 649, 682.

சந்தம்.

## VIII. தெய்வங்கள் :

அட்டகணநாதர், அரமங்கையர்களிற் பலவகையினர், இந்திரன் முதலியோர், உபேந்திரன், உமாபாகர், உரோணி, கந்தருவர், கலைமகள், காமன், குமரியரெழுவர், சன்மினிகள், சாகினிகள், சாத்தன், டாகினிகள், திருமகள், திருமால், துர்க்காபரமேசுவரி, பத்துப்பிரமர், பரசுராமர், பலதேவர், பிரமர், புராதனர்கள் (தேவியடியார்களில் ஆடவர்), முப்பத்து முக்கோடி தேவர், முப்பத்து மூன்று தேவர், முருகக்கடவுள், மோகினிகள், யஞ்ஞதேவன், யோகினிகள், வள்ளி, விசயை, வித்தியாதரர், விநாயகர், வீரபத்திர தேவர், வையமகள், வைரவர்.

## IX. சிவபெருமானுக்கு இந்நூலுள் வழங்கும் திருநாம வகைகள் :

அடிப்பெருங் கடவுள், அந்திப்போதணையான், அரன், அற்புதத்துயிர்க்கிழத்தி புக்குழி, அனலன், ஆதிவானவன், ஆலமுது செய்யுமையன், ஆலாலமயிலுநாதன், இருவர்கட்கரியராமெங்கணநாயகர், இருவரே தெரியவரியர், இறை, இறைமலைவில்லி, இறைவர், ஈசன் உமைவாழ்வதொருபாகர், ஐயன், கண்ணுதற் கடவுள், கண்ணுதன் முதற் கடவுள், கபாலநிலைப் பேராரமார்புடைய வீரர், குன்றவில்லி, கொன்றையார், சடாடவி

முடித்தேவர், சிங்கமுங் கற்கியும் பன்றியுஞ் செற்றவர், சிவன், சூலபாணி, சேயோன், தலைவர், தனிமூல முதல்வர், தாராகவண்டந் தொடுத்தணிந்தோர், திரிபுரம் பொடிபடப்பொரும் பொருநர், தேவர் தேவர், தொல்லை நாயகர், நக்கர், நாதர், நாயனார், நிசிந்தர், பணிமதாணியோர், பரசுபாணி, பரம்பரன், பரமன், பரன், பலிமேவுநாயகன், பிரான், புராரி, பெருமான், பெருமானடி, பொலஞ்செக்கர்ச் சடையான், மதியமூர் சடாமோலி மகிணர், மழுவார், மழுவாளியார், முக்கணெம்மாதி, முத்தர், முப்பத்து முத்தேவராயவர் (தேவர் ஆயும் அவர்), முப்புரஞ்சுட்ட வீரர், மூவராயவரின் முதல்வர், மேருதரர், மேருவரையிற் கடவுள், ரசதக்குன்றவர், ராசராசபுரேசர், வல்லவன், வெள்ளிமலைப் பெருமான்.

## X. தேவியின் திருநாம வகைகள் :

அகிலலோகநாயகி, அகில லோகமாதா, அகிலாண்ட நாயகி, அந்திப் போதனையானுடனுடுந்திரு, அமலை, அன்னை, ஆரணகாரி, இகன் மகள், இமவான் மகள், இரணியருரம் பிளவுபட நடுமுகிரி, இறைமகள், இறையாள், இறைவி, உடையாள், உமை, உயிர்க்கிழத்தி, உலகினன்னை, உலகுடைய செல்வி, உவணவூர்தியூர்வாள், ஐயை, ஒப்பரிய நாயகி, கடவுணீலி, கலையுகைப்பாள், கஞகனுகமிரு கூறுபடுகூரேக நகநாயகி, கானநாடி, கௌரி, த்ரிபுரபயிரவி, தலைவி, தொல்லைநாயகி, நாயகி, நிலாவீசுசடிலமோலி, நூபுராதாரசரணி, பங்கனகலத்திறைவி, பச்சை விளக்கு, பணிமதாணி மார்பாள், பத்ரகாளி, பரம்பரன்றேவி, பாகனகங் குழைவித்த பவித்ரபயோதரி, பிரமற்குமம்மனை, பிரமனைப் பண்டுபெற்ற பெருந்திரு, புணரியிற்றுயில்வல்லி, புவனநாயகி, மங்கலமகள், மலைமகள், மாகாளி, மாதேவி, மாயோள், மூலநாயகி, மோகினி, மோடி, யோக முதலிறைவி, யோக யாமளத்தினள், வன்மானுகைத்தகொடி, வேதங்கவர் கிளவித்திருமின், வேதநாயகி.

## XI. திருஞான சம்பந்தருக்கு வழங்கும் திருநாம வகைகள் :

அமண்மூகர் கருமாள வருமீளி, இமவான் மகளார்மகன், ஐயைகளிறு, கொச்சைப் பெருமான், நான்மறையோரேறு, பரசமய கோளரி, பிள்ளை, பிள்ளையார், புகலிக்கிறை, புகலிப்பெருந்தகை, மலையாண் முலையாரமுதுண்டவர், மலைவில்லி புதல்வர், வெள்ளிமலைப் பெருமான்மகனார், வைதிகராச சிங்கம், வைதிகவாரணம்.

## XII. நாடுகள் :

கலிங்கநாடு, சேரநாடு, சோழநாடு, தண்டகநாடு, பாண்டியநாடு.

## XIII. ஊர்கள் :

இராசராசபுரி, உறையூர், காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம், சீகாழி, தில்லை, மகோதை, மதுரை, வஞ்சி.

## XIV. மலைகள் :

இமயம், உதயகிரி, ஏமகூடம், ஏழுமலைகள், ஓமகூடம், கயிலை, கனக கூடம், கிரவுஞ்சம், சக்கரவாளம், சித்திரகூடம், நேரி, பொதியில், மேரு, வித்தியாதரர் வெள்ளி வெற்பு, விந்தமலை.

## XV. நதிகள் :

அரிசில், கங்கை, காவிரி, குமரி, கோதாவரி, யமுனை, வைகை.

## XVI. கொடிகள் :

**தேவர்களுடைய கொடிகள் :**—அன்னம் (பிரமா, விசுவதேவர்), ஆடு (அக்கினி), இடபம், (யமன்), கருடன், கோழி, தூமகேது (அக்கினி), மயில் (முருகன்), மேகம் (இந்திரன்.)

**அரசர்களுடைய கொடிகள் :**—எருது (பல்லவன்), கயல், கலை (கபிலேசுவரன்), சிலை, புலி, மலை (பாண்டியன்), யானை (ஆதித்தன.)

## XVII. சமணர் கொள்கைகள் :

இந்திரர் பலர், இருபத்துநாலு தீர்த்தங்கரர், கற்பக விருட்சம் பத்து, தென்சேடி வடசேடியுள்ள வெள்ளிமலை, பொன்னெயில் வட்டம்.

## XVIII. வடமொழிப் பிரயோகங்கள் :

1. **இணைந்தியலும் மெய்களை வழங்கல் :**—ஆதபத்ரம், இந்த்ரர், சக்ர பாணி, சந்த்ரன், திவ்யசாமரை, பத்ரகாளி, பவித்ரபயோதரி, மந்த்ரம், யந்த்ரம், வச்ரகாயம், வச்ரமாலை, வர்க்கம், விக்ரமம்.

2. **மெய்ம்முதல் மொழிகள் :** த்ரிசூலம், த்வனி, ந்ருபதீபன், ப்ரத்தம், ப்ரதானர், ப்ரபை.

3. **தமிழில் மொழிக்கு முதலாகா எழுத்தை முதலாக்கி வழங்கல் :** டாகினி, ரகுமரபு, ரசதமலை, ரத்னவிதம், ரவி, ராசராசபுரி, லோகபாலர்.

4. **தொடர் மொழிகள் :** ஆரணகாரி, இந்த்ரசாபம், சக்ரபாணி, சகத்ரயம், சத்ரசாயை, சூடிகாகோடி, த்ரிதண்டு, த்ரிபுரபயிரவி, த்ரிவேதபோத காரணன், திவ்யபானம், நூபுராதாரசரணி, பத்மயோகினி, புரத்ரயம், புருப்பங்கம், யந்த்ரசாபம், வச்ரபாணி, வர்க்கத்வாதசாதிபர், வீரபத்ர கணம்.

5. **திரித்து வழங்கல் :** அத்ரசாலம், அமராபதி, அயிராபதம், ஆவுதி, உகம், கன்னம், கோதம், துல்லபம், தெக்கணம், தெக்கிணம், பயணம், பாகை, மிர்கமதம், மிர்கமதனன், யஞ்ஞன், விம்பம்.

6. **தமிழ் முடிவுள்ள வடசொற்றொடர் ;** சுரரீசன், பஞ்சவாயுதம்.

7. **தமிழும் வடமொழியும் கூடிய தொடர் :** தசநூறு.

## XIX. ஆக்கச் சொற்கள் :

அண்டர் பொன்னெயில் வட்டம்—சுவர்க்கலோகம், இரதநேமி-சந்திராதித்தர், உலகக் கவிப்பு-பரமாகாசம், சேயோன்—சிவபெருமான், தண் கதிர்க்கோள்-சந்திரன், தாமரை மொட்டு-இருதயம், நடை-கால், பகற்சுடர்-சூரியன், பூகண்டகர்-அசுரர், பொன்னொளிவட்டம்-சந்திராதித்தர், வெங்கண் மண்டிலம்-சூரியன்.

## XX. அரும்பதங்கள் :

அ-பிரமா ; அகைதல்-மலர்தல் ; அட்டம்-பக்கம் ; அருகுதல்-பெருகுதல் ; அழுக்கு-உடம்பு ; அறைகூறல் - பொர அழைத்தல் ; இரைப்பு - மோகம் ; இறை-கூட்டம், பெருமை ; ஈடு-எளிவரவு ; உயிர்த்தல்-புறப்படவிடுதல் ; உழறுதல்-உருக்காட்டுதல் ; உழைத்தல்-வியசனப்படுதல் ; உளைதல்-ஒதுங்குதல் ; எழும்-கெடும் ; ஏ-இசை ; ஏறு-எறியுந்தொழில் ; ஒருக்கல்-அழித்தல் ; கச்சை-யானைக்கழுத்திலிடும் மெத்தை ; கடுமை-புதுமை ; கதம்-வலி ; கதழ்-வலி ; கலகம்-கேடு, நரகம் ; கழி-கயிறு ; கறடு-சிறுகுன்று ; கான்-செவி, புகழ் ; கிடக்கை-மாறுபடுதல் ; கிற்றல்-சம்மதித்தல்; குடலை-கிணற்றிற்கமைக்கும் உட்கூடு ; குதை-நாணி ; குந்தம்-பலவகை ஆயுதப் பொதுப்பெயர் ; குமுதம்-ஆரவாரம் ; குறங்கு-மலையடிவாரம் ; கொந்து-பூந்தாது ; சளம்பம்-குளிர்ச்சட்டை ; சிலைத்தல்-பொருதல், பொருந்தல் ; சாமனூர்-முருகக் கடவுள் ; சூழல்-செய்தல் ; ஞாண்-யுத்தம் ; தகடு - மின்னும் பொன் ; தகனம்-அனு ; தாழி-வைகுண்டம் ; திணுங்கல்-உறைதல் : துளப்பு-வயிறு ; தூக்கல்-செய்தல் ; தொட்டி-அம்பாரி ; தொப்பை ; நாள்-மலர் ; நெற்றி-ஆகாசம், நடு; நேராதல்-அழிதல் ; ப்ரத்தம்-தவறு ; பரிகை-காவல் ; பாரம்-உடம்பு ; பாலை-உட்டினம் ; பாழி-யுத்தம், வட்டம் ; புரை-இரேகை ; புற்கிடல்-ஒளி மழுங்கல் ; புனலன்-நாராயணன் ; புனைதல்-குளித்தல் ; பைத்தல்-சோபித்தல் ; பொக்கம்-செறிவு ; மக்கட்டு-கலையிற் கட்டிய கட்டு, மணிக்கட்டு ; மலை மருப்பு-மலைச்சிகரம் ; மாயிரம்-புறமானமுகம் ; மாண-நாண ; முக்கல்-முழுகச்செய்தல் ; முகடுபடுதல்-பாழாதல் ; முகரம்-ஆரவாரம் ; முளரி-பிரமலோகம் ; மூகை-படைக் கூட்டம் ; மேல்-வித்தை ; யாளி-படையின் சுகாசனவாகனம் ; வடவு-மெலிவு ; மர்க்கம்-பசாசு ; வாள்-வார்த்தை, கீர்த்தி ; விதைத்தல்-எய்தல் ; விலகுதல்-எறிதல் ; வேதல்-கோபித்தல்.

## XXI. சொற்பிரயோகங்களிற் சில :

காவு, கிணிலம், நாலு, மகிணர், மார்வு, வில்லு.

## XXII. அடுக்கு :

கொடுக்கொடுத்து, புத்தப்புது, பொருபொரியும்.

## XXIII. ஒருவகை வாக்கியப் பிரயோகங்களிற் சில :

உரைத்ததோ வதுவுமில்லையோ, 242 ; உளதோ வில்லையோ, 402 ; வாழ்னோர் பெருமிதம் வாழியே, 562.

## XXIV. அதிகமாக உபயோகிக்கும் சொற்கள் :

அடைய, வெறும்.

## XXV. சுவையுள்ள பகுதிகளிற் சில :

கடை திறப்பு முற்றும், ஆளுடைய பிள்ளையார் சரித்திரப்பகுதி, பேய் முறைப்பாடு, 276-86, 324-32, 389-95, 448-54, 537-59, 604-12, 621-34, 644-50, 652-62, 671-81, 703-5, 713-4, 762-8, 772-7, 780-93.

# உரையாசிரியர் வரலாறு

## கட்டளைக் கலித்துறை

*பாரும் விசும்பும் புகழ்தக்க யாகப் பரணியின்பால்*
*ஆருஞ் சுவைபல வாருந் தெளிய வணியுரைசெய்*
*சீருஞ் சிறப்பு முடையோ னிருமொழிச் செல்வனின்றன்*
*பேருந் தெரிந்தில னென்செய்கு வேனிந்தப் பேதையனே.*

இந்நூலின் உரையாசிரியருடைய பெயர் தெரியவில்லை. ஆயினும் இவருடைய உரையினால் இவர் இருமொழியினும் வல்லுநரென்பதும், தமிழில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தகடூர்யாத்திரை, இரும்பல் காஞ்சி, மாடலம், ஐம்பெருங் காப்பியம், சூளாமணி, உதயணன் கதை முதலிய பழைய நூல்களிலும், தொல்காப்பியம், அவிநயம், வயிர மேகவிருத்தி முதலிய இலக்கணங்களிலும், வடமொழியில் வேதம், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள், காவியங்கள், வியாகரணங் கள், யோகம், சோதிடம், வைத்தியம் முதலியவற்றிற்குரிய நூல்களிலும், பலசமய நூல்களிலும் தக்க பயற்சி உடையாரென்பதும், நூலாசிரியர் கருத்தறிந்து உரையெழுதுபவரென்பதும் விளங்கும். இதுவரையிற் கேட்கப்படாத சில நூல்களும், அவற்றின் இயல்பும், இப்பொழுது குறையாகக் கிடக்கும் **உதயணன் கதை**யில் முன்னும் பின்னுமுள்ள பகுதிகளின் சில அடிகளும், சில சரித்திரங்களும், அரியபதங்களும், செய்திகளும், பழைய வழக்கங்களும், பழமொழிகளும் இவ்வுரையால் தெரியவருகின்றன. அன்றியும் அக்காலத்துப் பல சமய நூல்கள் இருந் தனவென்பதும் பின்பு வழக்கற்றமையால் இக்காலத்துக் காணப்படாமற் போயினவென்பதும் விளங்கும். இவருடைய உரைநடை பெரும்பாலும் வடசொற் பிரயோகங்கள் பயின்று எளியநடையாக அமைந்திருக்கின்றது. இவருடைய உரையினால் வேறு நூல்களிலுள்ள சில பிரயோகங்களுக்குப் பொருள்கள் விளங்கின; சில ஐயங்கள் நீங்கின. இவர் சிவபெருமானிடத் துப் பேரன்பு வாய்ந்தவர்; சோழகுலத்தில் மிக்க அன்புடையவர்; தமிழில் மிகுதியான அபிமானமுடையவர்; சொற்களை ஆராய்ந்தெழுதுபவர். இவருடைய இயல்புகளும் கல்விப்பயிற்சியும் பிறவும் பின் காட்டப்படும் பகுதிகளாலறியலாகும்:

### 1. உரைவகை:

இவருடைய உரை ஒரே முறையாக அமையவில்லை. சில தாழிசை களுக்கு, "இதன் பொருளறிக" என்று கூறிப் பொருளெழுதாது விடுப்பர்; சிலவற்றிற்குப் பொழிப்புரையும், அதனோடு விசேடவுரையும், பாடபேதமும்,

இலக்கணக்குறிப்பும் எழுதுவதுண்டு. சிலவற்றிற்குக் கருத்தும், சில வற்றிற் சில அரும்பதங்களுக்குமட்டும் உரையும், சிலவற்றில் முடிபும் வரைந்துசெல்வர். சில தாழிசைகளில் சில சொற்களுக்கு ஒன்றுக்கு மேற் பட்ட பொருளும் எழுதுவர்.

## 2. பொருளை விளக்கும் முறை :

இதற்குக்காரணம் இதுவென்றும் இதன்கருத்து இதுவென்றும் இதனாற் பயன் இஃதென்றும் இது பொருளரிதென்றும் இது விசேடமென் றும் கூறியும், கடாவிடைகளாலும் பொருள்களை விளங்கவைப்பர். இன்னது கூறினர் இனி இது கூறுவாரென்பதும், இனி வருவது இன்னார் கூற்றென்பதும், முன் பாட்டிற்கூறியதை அனுவதித்துப் பொருளெழுது வதும், மூலத்தில் இல்லாத விஷயங்களைப் பொழிப்புரையிற் கூட்டி உரைப் பதும், முன்கூறியவற்றோடு சம்பந்தங்காட்டுவதும், முன் சொன்னோமென்று நினைவுறுத்துவதும், பிற இடங்களில் உள்ள தாழிசை விஷயங்களை நினைத்து வேறோரிடத்துப் பொருளெழுதுவதும், இவ்வாறு கூறியது இத்தாழிசை யைக்கொண்டு என்று ஆதாரங் காட்டுவதும், இன்னதல்லது இதுவென மொழிதலும், இதனால் இச்செய்கையை உணர்க என்பதும், "பொருணய முணர்க, அருமைபெருமையை யுணர்க, பொருளெழுதிய குறிப்புணர்க" என்று நயங்களை விளக்குவதும், இஃது ஆட்சேபமென்னலும், இடையிலே ஒருவர் கேட்க விடை கூறியது இஃது எனப்புகுத்தி யெழுதுவதும் (391, 745) இவருக்கு இயல்பு.

ஒரு சொல்லிற்குரிய இரண்டு பொருள்களையும் சேர்த்து எழுதுவர்: அலகில் - குற்றமும் கணக்குமில்லாத (38); தனித்துரகம் - தனியே ஒன் ருகிச் சமானமின்றி இருக்கும் குதிரை (475); பள்ளிவேலை - கோயிலும் படுக்கையுமான சமுத்திரம் (54); மாயோள் - மாயா சக்தியாய்க் கரு நிறத்தை யுடையாள் (104.)

ஒருமொழிக்குரிய பல பொருளையும் கூறி இங்கே இது நல்ல பொரு ளென்பர்; 181. ஒரு பொருளுக்குரிய பல பெயர்களைக் கூறுவர்; 384, 534, 593, 610, 665. உவமை நயங்களை விரித்துச் சொல்வர்.

இச்செய்கை இதுபோன்றதென அரியனவும் உலகவழக்கிலுள்ளனவு மாகிய உதாரணங்களைக்காட்டி விஷயங்களை விளக்குவர்; அவ்வாறு காட் டும் உதாரணங்களிற் சில வருமாறு: அரசனல்லாதோர் முடியைத் தம் தலையில் வைத்துக்கொள்ளவும் சிங்காதனத்தில் ஏறவும் பெறாததுபோல; ஆடு குளகு மேய்ந்தாற்போல; எளியோர்க்கு ஈசுவரன்போல; கான வேட்டுவர் இசைபாடி மிருகங்களை அழைத்துக் கொன்றதுபோல; கிடா யைச் சுடுவதுபோல; கிடாயை வெட்டுவதுபோல; கிராதர் வேட்டைபோய் விடாய்த்து ஏரியில் தண்ணீர் குடிக்கும் தகுதிபோல; தாய்வந்த வரவுபோல; நன்னீரால் உப்புப் பொருளைக் கழுவினதுபோல; நெல்லைப்பெருக்கி யென் றாற்போல; பஞ்சமகாசத்தத்தில் நொடியடக்கம்போல; பட்சிகட்கு ஆகாசம் போல; பித்ததோஷத்திற்குப் பால் கைத்தாற்போல; மச்சியத்துக்குச் சலமு

போல; மண்ணுங்கட்டிக்கு உள்ளங்காலே ஏவினதுபோல; மத்தியான்ன ஆதித்தன் எல்லாப் பிராணிகட்கும் ஒக்கநிற்குமாப்போல; மனுஷ்யலோகத்துள்ளாரெல்லாரும் சோழனைப்போலிருப்பதுபோல; மாம்பூ பனிக்குக் கருகுகின்றதுபோல; யானைமேல்கொண்டாரென்பதுபோல; ராசாவில்லாத தன்னரசு நாட்டிற் கோட்டிபோல; வல்லிநிமிர்ந்த யானையைப்போல; வலையுள் அகப்பட்ட மச்சியசாதிபோல; வாமிகள் சுவையைப் பிறர் முகந்தோறும் உமிழ்ந்தவகைபோல.

## 3. முடிபு காட்டல் :

சில இடங்களிற் பொருண்முடிபும் வாக்கிய முடிபும் காட்டுவர் : வழக்கு முடிபு இது செய்யுண்முடிபு இது என்பர் ; 156; 494. இது தமிழ் முடிபு, இஃது ஆரியமுடிபு என்று வேறுபடுத்திக் காட்டுவர் ; 153, 655. சில வடமொழி முடிபைத் தமிழாகக் காட்டுவதுமுண்டு ; 124, 193, 611

## 4. பிறர்கொள்கை :

பிறர் கொள்கையைத் தக்க காரணங்கூறி மறுப்பதும், பிறர் கூறும் பொருளுக்கு இஃது இடமன்றென்பதும் (457), பிறர்கொள்கை பலவாயினும் இதுதான் பொருளென்பதும், இரண்டில் நல்லது கொள்கவென்பதும், பிறர் இவ்வாறும் கூறுவரென உடம்படுவதும், பலர் கூறுவதையும் வாளா கூறிவிடுவதும் இவருக்கியல்பு.

## 5. பாடபேதம் :

பாடபேதங்களைக் காரணங்கூறி மறுப்பதும், பிறர் பாடத்தை வாளா கூறிச் செல்வதும் பாடபேதங்களுக்கு உரை கூறுவதும், தாம் மேற்கொள்ளாமலே இந்தப்பாடம் அழகிதென்றலும் (95, 164) இவர் உரையிற் காணலாம்.

## 6. இலக்கணக் கூற்று :

இவர் பெரும்பாலும் தொல்காப்பியத்தினின்றும், சிறுபான்மை அவிநயத்தினின்றும் இலக்கணச் சூத்திரங்களை மேற்கோள் காட்டுவர். வடமொழி இலக்கணங்களைக் கூறுவதன்றிச் சில இடங்களில் அவற்றிற்கு மேற்கோளாக வடமொழிச் சூத்திரங்களையே காட்டுவார். தொகைநிலைகளை விரித்துக்காட்டியும், இலக்கணங்கூறி அஃதமைந்த வேறு உதாரணங்களைக்காட்டியும், இன்னதற்கு இலக்கணம் இதனால் விளங்குமென்றும், இலக்கணச் சூத்திரத்தைக்காட்டி இதனால் இவ்வாறு வருவதையுங்கொள்கவென உரையிற் கோடலென்னுமுத்தியால் இலக்கணங்களைப் புலப்படுத்தியும் (577) செல்வர். "உங்கள், உன் என்பன தமிழல்ல" (186, 604, என்பர். எவை, எப்படி என வருவனவெல்லாம் தமிழ் முடிபல்லவென்பதும் ஆரிய முடிபென்பதும் இவர்கொள்கை; 153, 398, 521. சிதைந்த தமிழைப் பிராகிருதமென்பதும் (323), விகுதியை அடைசொல்லென்பதும் (463), அவாய் நிலையை வேண்டப்பாடென்பதும் (704) இவர்

இலக்கண பரிபாஷைகளிற் சில; பிறவற்றை 'இலக்கண விசேடங்கள்' என்ற பகுதியிற் கண்டுகொள்க.

## 7. மேற்கோளாட்சி:

சில சொற்களுக்கும், பிரயோகங்களுக்கும், கருத்துக்களுக்கும் மேற்கோள் காட்டுவர். ஒரு விஷயத்தைப் புதிதாகக் கூறி அதற்கு ஆதாரமாக மேற்கோள் காட்டுவர். இந்நூலில் இச்செய்தியைக் காண்கவென்பர். சில இடங்களில் விஷயத்தை விளக்காமல் மேற்கோளைமட்டும் காட்டி உய்த்துணரவைப்பதையும் (33, 221, 273, 345, 540, 562, 623, 641, 662, 748), மேற்கோள்களின் பொருள்களை விளக்குதலையும் (10, 21, 77, 83, 553) இவருரையிற் காணலாம். வடமொழி மேற்கோள் இவ்வாறு பல காட்டப்படுகின்றன; 31, 35, 40, 45, 334, 345, 380, 457, 475, 546, 553, 623, 630. இன்னநூலென்று தெரியாத இலக்கிய மேற்கோள்கள் சில; அவற்றுள் இலக்கணச் சூத்திரங்களும் உள; 388, 394, 577, 579. சில மேற்கோள்களுக்குப் பழைய உரையாசிரியர்கள் கொண்ட பாடத்தினும் வேறுபாடங் கொள்வனவும் (340 - பரி.; 386, 540 - புறநா.), பழைய உரையாசிரியர்களுக்கு மாறுகப் பொருள் கூறுவனவும் (37-தொல். 334 - கலி. 467 - பொருந.) ஆராய்ச்சிக்குரியன. ஓரிடத்தில், 'சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப்படை' என்று கூறுவதால் இவருக்கு அந்நூலின்பாலிருந்த மதிப்பு விளங்கும். இவர் காட்டும் மேற்கோள்களுட் பெரும்பான்மை உதயணன் கதையாக இருப்பதால், இவர் அந்நூலை முற்றும் அறிந்திருந்தனரென்பதும் அக்காலத்து அந்நூல் முழுவதும் வழங்கி வந்ததென்பதும் அது தக்க மேற்கோள் நூலாகக் கருதப்பட்டதென்பதும் அறியப்படும். திவ்யப்பிரபந்தத்துள் திருவாய்மொழியை மட்டும் இவர் மேற்கோளாக எடுத்தாளுவார். புராண கதைகளையும் வேதகதை யென்பர்; 38, 40, 63, 131. குறுந்தொகை யென்றும் (54), சிந்தாமணி (380) யென்றும் இவரால் இரண்டிடங்களிற் காட்டப்பெற்ற மேற்கோள்கள் அந்நூல்களிற் காணப்படவில்லை.

சில மேற்கோள் நூல்களின் பெயர்களை இவர் வேறுவிதமாக வழங்குவர். அவற்றிற் சிலவருமாறு: இறைவனார் பொருள் - இறையனாரகப் பொருள்; காரிகை-யாப்பருங்கலக் காரிகை; சிறுபாணாறு; திருக்கோவை; திருப்பாட்டு - தேவாரம்; திருமந்திரமாலை; திருவள்ளுவப்பயன் - குறள்; புறம், புறம்பு நானூறு - புறநானூறு; பெரும்பாணாறு, பாணாறு - பெரும்பாணாற்றுப்படை; பொருநாற்றுப்படை - பொருநராற்றுப்படை; முல்லை - முல்லைப்பாட்டு; வெண்பாமாலை - புறப்பொருள் வெண்பாமாலை; ஸ்ரீ கீதை - பகவத்கீதை.

இவர் மேற்கோளாகவும் வேறு வகையாகவும் எடுத்துக் காட்டிய நூற் பெயர்கள் வருமாறு: அசிதாகமம் (வட), அனந்தாகமம் (வட), அரிவம்சம் (வட), அவிநயம், ஆதித்தியம் (வட), இராமாயணம் (வட), இரும்பல் காஞ்சி, இறைவனார் பொருள், உதயணன்கதை, ஏகபாதம் (தேவாரம்), கலித்தொகை, கவிராச ராசன் வாக்கு, காதம்பரி (வட), காரிகை, குண்டல

கேசி, குறுந்தொகை, கூர்மாண்டபுராணம் (வட), கௌமார வியாகரணம் (வட), சாமவேதம் (வட), சாலிகோத்திரம் (வட), சித்தர்களுடைய சாத்திரம், சிந்தாமணி, சிலப்பதிகாரம், சிறுபஞ்சமூலம், சிறுபாணாற்றுப் படை, சூரியசதகம் (வட), தகடூர் யாத்திரை, திருக்கோவை, திருப்பாட்டு (தேவாரம்), திருமந்திரமாலை, திருமாலைமாற்று, திருமுருகாற்றுப்படை, திருவள்ளுவப்பயன் (குறள்), திருவாய்மொழி, தொல்காப்பியம், நக்கீரர் வாக்கு (கைலைபாதி காளத்திபாதியந்தாதி), நம்பிகாளியார் நூல், நவயாமளம் (வட), நற்றிணை, நாலடியார், நான்மணிக்கடிகை, நிகண்டு (வட), நெடுநல்வாடை, பதினெண்புராணம் (வட), பரிபாடல், பாணாறு (பெரும்பாணாற்றுப்படை), பிரமயாமளம் (வட), பிரமாண்டபுராணம் (வட), புறநானூறு, பைரவம், பொருநராற்றுப்படை, மகாகாளஸ்தவம் (வட), மகாசாத்திரப்பிராகிருத மாகதம் (வட), மகாப்பிரதமாகேசுரம் (வட), மகாபாரதம், மாகதம் (வட), மாடலம், முல்லைப்பாட்டு, யாமளம், யாமளருபதேசம், யோகமணிமாலை (வட), ரூபாவதாரம் (வட), வயிரமேக விருத்தி, வளையாபதி, வாகடம் (வட), வாதுளாகமம் (வட), விட்டுணுபுராணம் (வட), வெண்பாமாலை, வேதம் (வட), வைத்திய சாத்திரம் (வட), ஸ்ரீகீதை (வட), ஹர்ஷசரிதம் (வட), ஹலாயுதம் (வட.)

இவர் மேற்கோளாகக் காட்டிய உலகவழக்குகள் : அடிசிற்பானையைத் தொட்டோமாவோம்; அடுப்பிலே மாட்டாது அழலிலே மாட்டாய்; அமஞ்சிவட்டிக்கு ஆளிடுக; அருச்சுனர் வருக, பீமசேனர் வருக, தருமபுத்திரர் வருக; இராமனைல் வடக்குநோக்கிப் போகவிட்ட குரங்கு இன்னும் மீளத் தொடங்கிற்றில்லை; ஒருகைபறந்தபடி; சிறியவன் தோல்வி பெரியவனுடன் பொருதல், மதுராபுரி வாது; தேராட்கள்; நின்பிராணனைக் கொள்கிறேன்; நெல்லைப் பெருக்கி; மாய்காலமானது; விளக்கவி தொழில்.

**8.** இவர் நூலாசிரியர் கருத்தையறிந்து எழுதுவர் : " பொழிலேழென்பதற்கு ஏழு சோலை யெனச் சொல்லுவாருமுளர். இப்பொருள் காளக் கவிக்குப் பொருந்தாது " (70), " எங்ஙனம் அங்ஙன மென்னும் சொற்கள் எங்ஙனே அங்ஙனே யென்று வந்தன. இவர் வளையாபதியை நினைத்தார் கவியழகுவேண்டி " (425), " உலகக் கவிப்பென்னும் பெயர் சக்கரவர்த்திகள் தாம்படைத்த திரிசொல்லென வுணர்க " (457), (அகத்தியரை) " குகைப்புக விட்டென்றது மெத்தெனக் கொண்டு போய் விட்டா ரென்றவாறு; அடைத்தது, ராட்சதர் அநியாயம் செய்யாமைப் பொருட்டு " (489) என்பவற்றால் இது விளங்கும்.

## 9. சொல்லாராய்ச்சி :

இவர், இஃது இன்னபாஷைச் சொல்; இவ்வாறு திரிந்து வந்த தென்பதும் (37, 410, 448, 466, 521), இஃது இந்நாட்டுச் சொல் என்பதும் (212, 684), சில சொற்களின் வரலாற்றை விளக்குவதும் (112, 147, 457) அறிந்து இன்புறற்பாலன. சில சொற்கிடக்கைகளால் ஐயமுறுதிருக்க

வேண்டி அவற்றை, 'இந்து ஒரு சொல்' எனக் குறிப்பிடுவர் : பாமடிகள், 47 ; அங்காத்தல், 676. வட சொற்களையும் சொற்றொடரையும் பிரித்துப் பொருள் விளங்குவர் ; 40, 67, 88, 104, 154, 183, 194, 257, 262, 458, 693. * வச்ரபாணி என்பது யுத்தப் பெயர் என்று பொருள் கூறியிருப்பது இவர் சொல்லாராய்ச்சித்திறனை நன்கு விளக்கும். சொற்கள், சொற்றொடர்கள் இவற்றின் ஓசை நயத்தை எடுத்துக் காட்டுதலும் இவ்வாறு சொல்க வென்றலும் இவர் இயல்பு ; 'வெம் பகல் என்று பாடஞ்சொல்லின் அழகிது ; ஓசையுமுண்டு'; 'ஒரு தோகையென்று படுத்துச் சொல்லுக மெல்லிதாக'; 'அளபெடையிட்டு ஓசை கூட்டிக்கொள்க' என்பவற்றால் இவற்றை அறியலாம்.

## 10. உரைநடை :

சிதைந்த வடசொற் பிரயோகம் : பெரும்பாலும் மூலத்திலுள்ள தமிழ்ச் சொற்களுக்கு வடசொற்களாலேயே உரை எழுதுதலும் அவ்வாறெழுதுங்கால் அவ்வடசொற்களைத் தமிழுருவாக்கி வழங்குதலும் இவர் உரை நடையிற் காணப்படும். அவற்றிற் சில வருமாறு : அக்கினியோத்திரம், அங்கிசம் (ஹம்சம், அம்சம்), அஞ்சம் (ஹம்ஸம்), அரி, அவத்தை, ஆக்கினை சக்கிரம், ஆக்கினை, ஆக்வானம், ஆத்தானம், இட்சு, உச்சாகம், உட்டினம், கலைக்கியானம், கெர்ப்பம், கெறுவம் (கர்வம்), சங்காரம், சங்கிருத சத்தம் (ஸம்ஸ்க்ருத சப்தம்), சங்கிருதம், சத்த (ஸப்த), சத்திரிய லாஞ்சனை, சதுசட்டி (சதுஷ்ஷஷ்டி), சமிஞ்ஞை, சூரபன்மா, சேத்திரங்கள், தமிட்டிரம், திரி (ஸ்த்ரீ), நமக்கரிக்க, பராரட்டிரம், பருப்பதம், பிரதட்சிணம், பிரமா, பிறச்சுவலித்தது, புட்பம், மச்சியம், மயானவாசினி, மாங்கிசம், மிருதித்த, மீமாங்கிசம், யக்கிஞமூர்த்தி, யக்கியவிநாசம், யஞ்ஞன், வங்கிசம், வத்துக்கள், வருடம், விட்டுணு, விருட்டி.

ஒரு பொருள் தரும் இரண்டு சொற்களைச் சேர்த்து வழங்குவர் : அளகமான பனிச்சை, இராத்திரியான அந்தகாரம், கடகவளையல், குமுதமான அரக்காம்பல், நூபுரமான சிலம்பு, நெருப்புக்கட்டியான கந்துள், பணைக்கவடுகள், பவிஷ்யமான எதிர்காலம், மதாணியான பேரணிகலப் பதக்கம், மதுச்சமுத்திரமான கட்கடல், மெய்யுடம்பு, ரேகைக்கீற்று, வயிர பருவதமான வச்சிரபருவதம், வெதுப்புஷ்ணம், வெப்பான உஷ்ணவியாதி, வெளியாகாசம், வேலான சூலம்.

---

* ब्रह्मास्वयंभूश्चतुराननोवा रुद्रस्त्रिनेत्रस्त्रिपुरान्तकोवा ।
इन्द्रोमहेन्द्रस्सुरनायकोवा त्रातुंनशक्तायुधिरामवध्यम् ॥

(ஸுந்தரகாண்டம், ஸர்க்கம், 51, சுலோகம், 45) என்னும் வான்மீக சுலோகத்தில் இந்திரன் முதலிய ஒவ்வொருவருக்கும் உரியபெயர்கள் மும்மூன்றனுள் இன்னது இன்ன சமயத்தில் வழங்கற்பாலதென்று பரம்பரையாகக்கூறப் பெற்றுவரும் வைஷ்ணவ ஸம்பிரதாயம் இங்கே ஞாபகத்திற்கு வருகிறது.

கட்டுரைச் சுவைபட எழுதுவர்; இந்திரன் முடிமேலினை வளைதகர்த்தும்; உருமேறுஞ் செவ்விகெடின் வெறுமேறும்; கோத்துக்கொண்டு காத்துக்கொள்வது; தாகமோகங்கள்; திரைமலிகடல்; பொறைசூழ்ந்த மலை தோறும் புலியெழுதுஞ் சோழன்; முகிழ்விரி சிறுகுழை; வேலையை வேல் கொண்டெறிந்தது.

பழைய இலக்கியங்களிலுள்ள செய்யுளையும் சுலோகத்தையும் பொழிப்புரையில் இடையிட்டுச் சில இடங்களில் எழுதுவர்; 40, 71.

பழைய இலக்கண இலக்கியங்களிலுள்ள சூத்திரங்களையும் செய்யுட்களையும் அவற்றின் பகுதிகளையும் உரை நடையாக எழுதுவர்; அதிரப் பொருதும்பை, அம்மகேட்பிக்கும், ஐ ஒடு கு இன் அது கண்ணென்னும் இவ்வாறென்னு மாறுருபும், ஒன்றல்லவை பலவென்பது தமிழ்நடை, கொட்டாட்டுப் பாட்டு, கொல்லேஐயம், நெட்டெழுத்தும்ப ரொற்றுமிகத்தோன்றிற்று, புரையுயர்பாகும், மாயோன் மார்பிலாரம்போல, மிகற்கைமருங்கினியற்கை தோன்றல், வாராமரபினவரக்கூறுதல், வேற்றுமை மருங்கிற் போற்றல்வேண்டும்.

நகைச்சுவை தோன்றச் சில விடங்களிற் பொருளெழுதுவர்: "ஈசுவரனல்லாத எல்லாரும் தகப்பனும் தாயுமுடையர் நாம கோத்திரங்களையுமுடையர். மகாதேவர்க்கோ அக்கினிகோத்திரந்தான் சொல்லலாவது" (300); "இவைகளில் ஒருபூதமும் ஒருபேயுமே தனித்தனி எல்லாமாக வல்லன; அழிந்தனவென அஞ்சவேண்டாமென்பதுபொருள்" (405); "ஆடியென்றது கூத்தல்ல; (உண்டபின்பு) விக்கினதற்குப் பரிகாரமாக உடம்பை அசக்கிக் கொடுத்தது" (410): "திரைத்து அவனை நிலத்து அரைக்கை சந்திரன் நெடியனுதலின் அவனை மடித்துக்கொள்ளவேண்டியிருந்தது" (487.)

## 11. உரையிற்பயின்றுவரும் சில வகையான சொற்களும், தொடர் மொழிகளும்:

அகத்திடு, அசங்காதே, அத்தனையே, ஆய்த்து - ஆயிற்று, இப்படிக் கொத்த, இராமாறு, இருக்கச்செய்தே, ஈடாக, உருக்கவற்றுன, எங்குத்து, கர்ப்பக்கிரகம் - கருப்பை, காய்த்த, காலந்தான், கூறிற்று (வினை.யாலணையும் பெயர்), சுழற்றி, சொல்லச்செய்தே, சொல்லிற்றுச்செய்யும், சொல்லு, தொப்புள், நாலு, நிதானம், நிற்கச்செய்தே, நீருக்கித்து, பருந்துதான், புகலிகள், புள்ளீடு, பொன்றக்கெடுதல், மிகுத்துச் சொல்லியது, மொட்டிப்ப, வரவு, வஞ்சிப்பான்பொருட்டு, வரப்பெற்றிலோமாகாதே - வரப்பெற்றிலோமன்றே, விடாய்த்து, வினைசெய்யவற்றாய், வேண்டற்பாடு, வேண்டாவினைக்கேடு, வேறும், வைத்துக்கொண்டு.

## 12. உரையிற் பலவிடங்களிற் காணப்படும் சொற்கள்:

ஆறே - உடனே, உணர்க, ஒக்க, கேளாய், கொண்டு, தான், தானும், போலும்.

## 13. கடவுள், அடியார், அரசர் முதலியோர்களின் பெயர்களை வழங்கும் மரபிற் சில வருமாறு:

*அருகபரமேஷ்டி; ஆளுடைய பிள்ளையார், பிள்ளையார்-ஞானசம்பந்தர்; கருடபகவான், கருடாழ்வான்; குலச்சிறையாண்டார்; சேனைபதியாழ்வார்; திருவாலவாய்ச் சொக்கனார்; தேவசேனாபதி, பிள்ளையார், சுப்பிரமணியப் பிள்ளையார்; பாண்டியன்குலபதி; பாண்டியன்குலமகாதேவியார்; மகாதேவர்; மகாவிட்டுணு, விட்டுணுபகவான், விஷ்ணுக்கள்; மயித்திரியாழ்வார்; மாகேசுவரர்-சைவர்; வைசிரவணன்; ஸ்ரீகிருஷ்ணபகவான்.*

**14.** *தெய்வம், பெரியோர் முதலியோர் சம்பந்தமானபெயர்களுக்கு முன் திரு (க), ஸ்ரீ (உ) என்பவற்றைக் கூட்டியும் அவர்கள் செயல்களுக்குப் பின் அருளல் (ங) என்பதைக் கூட்டியும் வழங்குவர்:*

(க) *திருக்கோயில், திருச்செஞ்சடை, திருநிழல், திருமகனார், திருவடி, திருவடிமலர்கள், திருவுள்ளம், திருவெள்ளிமலைப் பெருமான், திருவேடுவர் முதலியன.*

(உ) *ஸ்ரீபாதங்கள், ஸ்ரீவராகரூபம் முதலியன.*

(ங) *ஆடியருளல், எழுந்தருளல், சென்றுவிட்டருளல், பிரசாதித்தருளல் முதலியன.*

## 15. சில கொள்கைகள்:

*அமணர்குணங்களைச் சிறப்பித்தல்*; 170, 190, 203; *அமணர் தாமே கழுவேறியது: அமுதம் லவணசமுத்திரத்திற் பிறந்தது; சோழ நாட்டையும் சோழனையும் சிறப்பித்தல்*; 19, 246, 275; *தெய்வ விஷயத்தில் அபசாரப் படாமற் காத்தல்*: 3, 492, 538, 650; *தேவி எல்லாமாதல்; தேவி திருமால்.*

## 16. உரையாலறிந்த பாஷைகள்:

*கௌடபாஷை, பிராகிருதம், மாகதம், வடமொழி.*

## 17. மதக்கொள்கைகள்:

*இவர் சில இடங்களில் இஃது இன்ன இன்ன மதத்தினர் கொள்கையென்றும், இஃது இன்னமதத்தார் நூல்களிலுண்டென்றும், இக்கொள்கை இம்மதத்தினர்க்கும் ஒக்குமென்றும் எழுதுவதுண்டு; அவ்வாறு இவர் காட்டிய மதங்களிற் சில: ஆசீவகமதம், உலோகாயதம், கர்மமீமாங்கிசம், சைவம், சைனம், ஞானமீமாம்ஸம், நிரீசுவரசாங்கியம், நையாயிகசித்தி, பைரவமதம், பௌத்தம், மகேசுவரசாங்கியம், மகேசுவர வைசேஷிகம், வரசைவம், வாமமதம், விஷ்ணுசமயம் முதலியன.*

## 18. தெய்வபக்தி:

*சிவபெருமான் லட்சணத்தை நன்கு தெரிவிப்பதாலும்* (408), *அபசாரம் வராமற் காத்தலாலும், "இதன் கருத்து; உயிர்பெய்து கூத்தாட்டுக் காண்டல், என்னைப்போன்றவர்களும் விஷ்ணுவாதிகளும் ஒப்பர், பூதகணநாதர்க்கெனவறிக"* (511) *என்பதனாலும், "எளியோர்க்கு ஈசுவரன் போலவும்"* (474) *என்பதனாலும் இவருடைய தெய்வபக்தி விளங்கும்.*

## 19. தமிழபிமானம் :

ஆரியமுடிபுகளைத் தமிழ்முடிபாகச் சிலவிடத்துக் காட்டுவதும், 'தமிழ் முறை இது, இது தமிழல்ல' என்றுகூறித் தமிழ்முறையை நிறுத்துவதும், * வடசொற்களில்உள்ள ரகரத்தைத் தமிழில் வல்லினறகரமாக வழங்குவது பசுந்தமிழென்று கூறி அவ்வாறே சிலசொற்களை வழங்கிவருதலும் (35, 537, 637), வேதத்திலிருந்தும் பிறவற்றிலிருந்தும் மேற்கோள்காட்டி, 'இஃது, உதயணன் கதையிலுமுண்டு, இது தமிழிலுமுண்டு' எனக் காட்டுவதும் இவருடைய தமிழபிமான மிகுதியை அறிவிக்கும்.

## 20. உரையிற் கூறப்படும் நூலாசிரியர்கள்.

கவிராசராசன், தொல்காப்பியர், நக்கீரர், நம்பிகாளியார்.

## 21. இதுகாறும் அறியப்படாத நூல்கள் :

**தமிழ் :** ஒட்டக்கூத்தர் இயற்றிய மற்றொருபரணி, கவிராசராசன் இயற்றியநூல், நம்பிகாளியார்நூல், பைரவம், மாடலம், வயிரமேகவிருத்தி.

**வடமொழி :** ஆதித்தியம், கூச்மாண்டபுராணம், கௌமாரவியாகரணம், சாலிகோத்திரம், பிரமயாமளம், மகாசாத்திரப்பிராகிருதமாகதம், மகாப்பிரதமாகேசுவரம், யோகமணிமாலை.

**விளங்காதன :** மாகதம், யாமளருபதேசம்.

## 22. உரையினால் தெரிந்த அரும்பதங்கள் சில :

அட்டம் - குறுக்கு ; அனுவிஷம் - ஒருவகைமீன் ; ஆவடதர் (?); இதழ் - பனையேடு ; இலகடவிசி - அம்பாரி ; இருஞ்சுதல் ; உடன்கள்ளர் ; கட்டணம் ; கையர் - கள்ளர் ; கோமாளம் ; கோஷவதி - நாகலோகம், வீணை ; சகத்திரவேதி - நகில் ; சகளபஞ்சகம் ; சம்பிரமித்தல் ; சித்தார்த்தம் - ஆல்; தாரகாம்யம் - ஒரு மகாயுத்தம் ; தெறசி(?) ; தொந்தம் - ஒருவகை ஆயுதம் ; தோரணமாலை ; பகவன் - பகனென்னுமாதித்தன் ; பகவான் - பகன் ; பிவாயம் - சோறு சமைத்த பாத்திரங்களில் இடும் குறி ; பெருநிலைநிற்போர் ; மழு - கடல் ; மோங்கில் - ஒருவகை மீன் ; யட்சம் - நாய், மந்திரம் ; யாவனம் - ஒருவகைக்குதிரை ; விற்பிடி மாணிக்கம்.

## 23. உரையால் தெரிந்த சில அரிய விஷயங்கள் :

அக்கினி வகைகள், இராசராசனுக்கு (II) சொக்கப் பெருமாளென்னும் பெயருண்மை, ஈசானனுக்குக் காரெருதுவாகனம், ஈசுவரன் குழையில் இயலிசை நாடகச் சங்கம் இருத்தல், உருவசி முதலாயினோர் மக்களின்னாரென்பது, ஊழித்தீ ஏழு, ஏமகூடம் இந்திரன் விடாயாற்றிமலை, கண்டனென்றது இராசராசன் (II) சிறப்புப்பெயர், கருடன் ஐந்து வர்ணங்களையுடையன், காளை பதினாறு பிராயத்தான், குலச்சிறையார் அதிகாரி பெருநம்பியென்னும் பட்டங்கள் பெற்றவர், கொடிகளின் விளக்கம்,

* 'இதனைப் பசுந்தமிழாற் சொல்லின், "எளிவராமிறுத மதனனுள் படை யிறைவர் சீறினு மினியெனுத், தெளிவராமிறுத மதனனுள்வரு தெரிவைமீர்கடை திறமினோ" என்க (தக்க. 35, உரை.)

கொப்புளித்தலால் ஆயுளையறிதல், சக்கரவாளங்கள் பல, சகசிரதாரை யென்னு முத்தக்கோவை, சசிசுவாகா வென்னுந் தெய்வப்பெண்களுக்குப் பித்தளையாலே மேகலாபாரம், சசிதேவிமக்கள் இன்னாரென்பது, சந்திரன் யாகத்திற் பிறந்தது, சித்திரகூடம் இந்திரன் ஓலக்கமலை, சிம்புள் பிராண வதம் பண்ணுவதொரு பட்சி, சிவபெருமான் திருமுடியில் ஆமையோ டுண்மை, சோழன் கடகப்பக்கக்கற்றைக்காரன் என்னும் விருதுடையவன், சோழன் மனுஷ்யருடைய வரம்பழியாமற் காப்பவன், சோழனுக்கு நரபதி யென்னும் பெயருண்மை, தருமரூபம் வெளுத்திருத்தல், தாரகாம்யமென் னும் யுத்தம் தேவாசுரத்திற்கு முந்தியது, தூசிப்படைக்கு இலக்கணம், தூம கேதுக்களின் இயல்பு, தேவேந்திரன் ஆயுதம் வச்சிரபருவதம், நவகுண்டப் பிரயோகாக்கினிகளின் வகை, நாகலோகத்தில் இருப்புச் சுவருண்மை, நிரை உலகத்திற்கு ரட்சையாவது, பாதாழ்வான் முதலாகச் சுங்கம் வந்த தென்பது, பாண்டியனுக்கு இரண்டு கூன் இருந்தமை, பாலை வன்பாலை மென்பாலையென இரண்டு வகைப்படுதல், பெண்பிறந்தார் தாய்மாராற் சினேகிக்கப்படுதல், போசராச வம்சத்தாருடைய இலக்கணம், மகாசத்தம் ஐந்து, மகாதேவர் வாகனமாகிய விடை இளமை நீங்காதது, வச்சிரகாய மென்பதொரு மருந்துண்மை, வாதுசெய்த வாரணமென்னும் ஊர் மதுரை யின் பக்கத்துண்மை, வாம மதத்தினர் இயல்புகள், விசுவதேவர் அன்னக் கொடியுடையார், விற்பிடி மாணிக்கமென்பதொன்றுண்மை, விற்பிடி மாணிக்கம் மகளிர் இடைக்கு உவமை, வீரபுருஷர் பட்டால் அவர் வயிற்றிலுள்ள உதிரத்தை வீரர்கள் நெற்றியிலிடுதல்.

## 24. விளங்காத விஷயங்கள் :

சில தொகைகளுக்கு மேற்கோள் விளங்கவில்லை; சூரியனோடு யுத்தம் செய்யும் அசுரர் மூன்று நூறாயிரத்தறுபதினாயிரவர், 124; பசாசகணம் நாற்பத்தெண்ணாயிரந்திறம், 336; நரகபாலரிற் பிரதானர் எழுபதிற்றேழு நூற்றுத்தொண்ணூற்றாறு வெள்ளத்தார், 463; இந்திரன் மக்கள் நாற்பத் தொன்பதின்மர், 470; அசுரர் பதின்மூன்று திறத்தினர், 477; தளம் ஏழு, 485.

சாங்கியம், வேதாந்தம் முதலிய மத விஷயங்களைப்பற்றிக் கூறுவன வற்றிற் பெரும்பாலன விளங்கவில்லை; 183, 245-6.

## 25. உரை விசேடங்கள் :

இவர் அங்கங்கே எழுதிய பதசாரங்களும் உரை நயங்களும் ஆராய்ந் தறிந்து இன்புறத்தக்கன. அவ்வாறெழுதிய இடங்களிற் சிலவற்றிற்குரிய மூலங்கள் கீழே காட்டப்படுகின்றன :

சோழிய வைதிகன், 190; இவன், 191; நாணீர், 193; வருநீர் 201; பாட்டறிவே, 226; அறந்தவா......அகத்தியன், 233; முன்னைமேரு, 276; காதலனை விட்டு, 293; நீயும், 297; எனக்கும், 301; விழிவழிகருணை, 308; நம்பதிநெருதேவர், 443; வறுநிழல், 451; தனி, 460; விழுக்குன்று, 537; கையடங்கிய தீ, 576; வெறும்பொடி, 654.

இந்நூலை ஆக்குவித்தோனாகிய

# இரண்டாம் இராசராசசோழன் வரலாறு

**வெண்பா**

தெங்கா ருறந்தைபுகார் தென்பழசை வீறுதஞ்சை
கங்கா புரம்புரந்த காவலவன்—மங்காப்பேர்
வாய்ந்தவிறற் கண்டன் வரராச ராசன்சீர்
ஆய்ந்துரைக்க வல்லே னலன்.

இந்நூலை ஆக்குவித்தோனாகிய **இராசராசசோழன்** (II) என்பவன் அநபாயனென்று சிறப்பிக்கப்படுபவனும் ஸ்ரீபீடங்கண்ட பெருமாளென இந்நூலின் உரையாசிரியராற் சுட்டப்படுபவனும் தில்லையம்பலம் பொன் வேய்ந்து அங்கே பல திருப்பணிகளைச் செய்வித்தவனுமாகிய இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய திருக்குமாரனாவான்; பரகேசரி வர்மன், திரிபுவன சக்கரவர்த்திகள், கோ நேரின்மைகொண்டான் என்னும் பட்டங்களையுடையவன்; ஒட்டக்கூத்தர் பாடிய உலாவைப் பெற்ற பெருமை வாய்ந்தவன்; அவரால் வரராசராசனென்று சிறப்பிக்கப் பெற்றவன்.

இவன் கி-பி. 1146-ஆம் வருஷத்திற் சிங்காதனமேறினான். *" **பூமருவிய புவிமாதும்**", "**பூமருவிய பொழிலேழும்**" எனத் தொடங்கும் இரண்டு மெய்க்கீர்த்திகள் இவனுக்குண்டு.

இவனுக்குப் புவனமுழுதுடையாள், தரணிமுழுதுடையாள், உலகுடைமுக்கோக்கிழானடிகள், அவனிமுழுதுடையாள், தென்னவன்கிழானடிகளென ஐவர் மனைவியர் இருந்தனரென்பதும் அவர்களுள் புவனமுழுதுடையாள் இவன் பட்டத்துத் தேவியென்பதும் அவற்றால் விளங்குகின்றன. இவன் காலத்தில் காவிரிப்பூம்பட்டினம், தஞ்சை, †பழையாறை, கங்கைகொண்ட சோழபுரம், உறையூரென்பன இராசதானிகளாக இருந்தன. இராசராசனுலாவில் அரசன் புகார் வீதியில் உலாப்போந்தானெனக் குறிப்பிடப்படுவதாலும் வேறு சில ஆதாரங்களாலும் பெரும்பான்மையும் காவிரிப்பூம்பட்டினமே இவனுடைய தலைநகராகச் சிறந்திருந்ததென்று தெரிகிறது.

தன்னுடைய குலதெய்வமான ஸ்ரீநடராசப் பெருமானிடம் விசேஷ பக்திகொண்டவன்; "தொல்லைத் திருமரபிற் கெல்லாந் தொழுகுலமாம், தில்லைத் திருநடனஞ் சிந்தித்து" (**இராச.**) இவனுடைய முன்னோர் சிலரால் அநாதரவு செய்யப்பட்டுவந்த வைணவ சமயத்தை மீண்டும் தன்னிலைபுறச் செய்தனன்; "விழுந்த வரிசமயத்தையு மீளவெடுத்து" (**இராச. மெய்க்.**)

---

*இவை திருவாரூர் ஸ்ரீ **சோமசுந்தர தேசிகரவர்களால் செந்தமிழ்ப்** பத்திரிகை, 20-ஆந் தொகுதி, 10-ஆம் பகுதியில் 471-4-ஆம் பக்கங்களில் வெளியிடப்பட்டிருக்கின்றன.

†இது தஞ்சாவூர் ஜில்லாவில் தாராசுரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் உள்ளது.

இவன் காலத்து ஒருவகைப் போரும் நிகழவில்லையாதலின் நாடு மிகவும் அமைதியாக இருந்தது. இவனுடைய அரசாட்சியின் தன்மையும் இவன் குடிகளைக் காத்துவந்த இயல்பும் கீழ்க்கண்டவாறு இவன் மெய்க்கீர்த்தியிற் பாராட்டப் பெற்றுள்ளன :

"ஆதியுகம், கொழுந்துவிட்டுத் தழைத்தோங்கக் கோடாதறங் குளிர் வாரிவாய்த்து வளஞ்சுரக்கத் தாரணியோர் பிணிநீங்க [தூங்க
நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் தொழில்வளர
எல்லோருந் தனித்தனியே வாழ்ந்தனமெண மனமகிழ்ந்து
ஒருவருட னொருவர்க்கு மொன்றினுட னொன்றுக்கும்
வெருவருபகை மனத்தின்றி விழைந்துகாத லுடன்சேர
இந்திரன்முதற் றிசாபால ரெண்மருமொரு வடிவாகி
வந்தபடி தரைநின்று மனுவாணை தனிநடாத்தி............
தந்தையிலோர்க்குத் தந்தையாகியுந் தாயிலோர்க்குத் தாயாகியு
மைந்தரிலோர்க்கு மைந்தராகியு மன்னுயிர்கட் குயிராகியும்
............அரசியற்கை முறை நிறுத்தி."

சிலாசாஸனங்களினால் இவன்காலத்தில் சிற்சில தலங்களில் இலகுளீசபாசுபதர், வாம மதத்தார், சைவர், வைணவர் முதலிய பல சமயத்தினரும் கவலையின்றி வாழ்ந்திருந்தனரென்பது அறியப்படும். இன்னும் பல தலங்களில் பல திருப்பணிகள் இவனால் இயற்றப்பட்டன. அவற்றுள் திருப்பனந்தாளிலிருந்து ஸ்ரீ நாடகேச்சுரத்து நாயகர் தீர்த்தங் கொடுக்கக் கொள்ளிடத்துக்கு எழுந்தருளுவதற்காக ஒரு சாலை அமைக்கப்பெற்று இவன்பேரால் *'**ராஜகம்பீரன் திருவீதி**' என்று வழங்கப்பட்டதென்பதும், †திருப்பாலைத்துறையுடைய மகாதேவருக்குச் சில நிலங்கள் வழங்கப் பட்டனவென்பதும் அந்நிலங்கள் உள்ள இடத்திற்கு **ராஜகம்பீர நல்லூரென்**னும் பெயர் வைக்கப்பட்டதென்பதும் குறிப்பிடத்தக்கவை.

இவன் ஒருசமயம் துலாபுருடதானம் செய்தனன். அப்போது அக்காட்சியைக் கண்டு களித்த ஒட்டக்கூத்தர், "தொழுகின்ற மன்னர்" என்ற தொடக்கத்தையுடைய செய்யுளை (**தமிழ்நா. 124**)ப் பாடினர்.

இவன் தமிழில் மிக்க அபிமானமுடையவனாதலால் பல புலவர்களை ஆதரித்து வந்ததோடு கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தரை மிக்க மரியாதையோடு உபசரித்து வேண்டியவற்றையெல்லாம் உதவிப் பாதுகாத்து வந்தான். இவன் காலத்தில் ஒட்டக்கூத்தர் முதுமையுடையவராக இருந்தனரென்று தெரிகிறது. ஒரு சமயத்தில் ஆதனத்திலிருந்து எழும் பொழுதோ நடக்கும்பொழுதோ அவர் தளர்ச்சியுறுவது கண்டு இம்மன்னர் மன்னன் ‡"நாத்தொலை வில்லை யாயினுந் தளர்ந்து, மூத்ததிவ் யாக்கை வாழ்கபல் லாண்டு" என்று கூறிக் கைகொடுத்துதவினன். அப்போது அப்புலவர் சிகாமணி மிக மகிழ்ந்து,

---

*Annual Report of South Indian Epigraphy, No. 44 of 1914.
†A. R. No. 440 of 1912; இத்தலம் பாபநாசம் ரெயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ளது. ‡ **மணிமேகலை.**

" கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்றோ
தலையைத் தடவி நடக்குங்கொல் யானைச் சயதுங்கனே "

என்று இவன் கையைச் சிறப்பித்துப் பாடினார். இவ்வரிய செயலால் இவ்வரசன் அப்புலவரிடத்தில் வைத்திருந்த பேரன்பும், எளியனாக இருத்தலும் புலப்படுகின்றன. அவர் தன்மீது பாடிய உலாவை அரங்கேற்றுகையில் ஒவ்வொரு கண்ணிக்கும் ஒவ்வோராயிரம் பொன் வழங்கினான். இந்நூலில் கடவுள் வாழ்த்திலும், வாழ்த்திலும், இடையிலும் அவரால் பலபடப் பாராட்டப் பெற்றனன்.

தனது சபையிற் பல புலவர்கள்கூடித் தமிழ்ச்சுவையை எடுத்துப் பாராட்ட அவற்றை விரும்பிக்கேட்டு மகிழ்ந்து வீற்றிருக்கு மியல்பினனாத லின், " செய்ய தமிழ் முழங்கத் தெய்வப் பொதியிலாய் " (இராச.) என்று செந்தமிழ்ப் பரமாசாரியராகிய அகத்திய முனிவரும் தமிழ்க் சங்கமும் இருந்த பொதியின்மலையாக உருவகிக்கப்பட்டிருத்தலும், இயலிசை நாடகமாகிய முத்தமிழும் செழித்தோங்க அவற்றில் வல்ல புலவர்களைப் பாதுகாத்து வந்தமையால், " முத்தமிழ்க்குத் தலைவன் " (**இராச-மெய்க்.**) என்று பாராட்டப்படுதலும் இவனுக்குத் தமிழின்பாலுள்ள பேரன்பைத் தெரிவிக்கின்றன.

இவனுடைய காலத்தில் மகாசாமந்தனாக இருந்தவன் ஒட்டக்கூத்தரால் இந்நூலிற் பாராட்டப்பட்ட **திருச்சிற்றம்பலமுடையான் பெருமாள் நம்பியென்** பவன். *திருமந்திரவோலைக்காரனாக இருந்தவன் **இராஜாசிரயப்பல்லவராய னென்**பவன்.

இவன்காலத்திற் சில நாடுகளின் பெயரும் ஊர்களின் பெயரும் மாற்றப்பட்டு வழங்கலாயின ; அவற்றுட் சில : ராஜகம்பீர வளநாடு, உலகுடைமுக்கோக்கிழானடி வளநாடு, ராஜகம்பீரநல்லூர் முதலியன. ராஜகம்பீரன்மலையெனப் பெயரிய மலையும் ஒன்றுண்டு.

இவனுக்கு வழங்கிய ஏனைப் பெயர்கள் ; இராச கம்பீரன், இராசபுரந்தரன், கண்டன், குலதீபன், சனநாதன், சொக்கப்பெருமாள், தெய்வப் பெருமாள், வரராசராசன்.

இம்மன்னர்பிரான் கி. பி. 1162-ஆம் வருஷம் வரையில் இருந்தானென்று தெரிகிறது. இவனுக்கு இரண்டு குமாரர்களுண்டென்றும், அவ்விருவருள் ஒருவன் மூன்றாங் குலோத்துங்கனென்றுங் கூறுவர்.

குணமழியா தென்பர்தமிழ் கோதாட்டி நின்றன்
குணமெங் கொளித்துவைத்தாய் கொல்லோ—குணமலையே
மன்னர் வழுத்தும் வரராச ராசவகை
தின்னவிட மென்றெறற் கியம்பு.

---

* A. R. 530 of 1912.

இப்பதிப்பின் விசேடக் குறிப்பில் நூதனமாக எடுத்தாண்ட

## நூற்பெயர்கள் முதலியவற்றின் அகராதி

அகத்தியம், அகநானூறு, அஞ்ஞவதைப்பரணி, அதிராவடிகள் மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, அம்பிகாபதி பாடல், அரிகேசரிதேவன் பராக்கிரமபாண்டியன் மெய்க்கீர்த்தி, அரிச்சந்திர புராணம், அருணசல புராணம், அருணைக்கலம்பகம், அழகர்கலம்பகம், ஆத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயிரம், ஆதியுலா அல்லது திருக்கைலாய ஞானவுலா, ஆதிராசேந்திரதேவன் மெய்க்கீர்த்தி, ஆநந்தலகரி லக்ஷ்மீதரர் வியாக்கியானம் (வட), ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, இயற்பா, இரங்கேச வெண்பா, இரண்டாம் இராஜராஜன் மெய்க்கீர்த்தி, இரணியவதைப்பரணி, இராசராச சோழனுலா, இறையனாரகப் பொருளுரை, ஈட்டியெழுபது, உண்மை விளக்கம், உத்தரகாண்டம் அல்லது உத்தர ராமாயணம், உத்திரமேரூர்ச் சாஸனம், உதயணன் கதை அல்லது பெருங்கதை, உபதேச காண்டம், உபமன்னிபு பக்தவிலாஸம் (வட), ஏகாம்பரநாதருலா, ஏரெழுபது, ஐங்குறுநூறு, ஐந்திணையைம்பது, ஒட்டக்கூத்தர் பாடல், கஞ்சவதைப்பரணி, கடம்பவன புராணம், கந்த புராணம், கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கம்பராமாயணம், கருவூர்த்தேவர் திருவிசைப்பா, கல்லாடம், கலிங்கத்துப்பரணி, கலித்தொகை, களந்தை இரட்டை மணிமாலை, களவழிநாற்பது, காசிகாண்டம், காஞ்சிப்புராணம், காரைக்காலம்மையார் கோயின் மூத்த திருப்பதிகம், காரைக்காலம்மையார் திருவிரட்டைமணிமாலை, காளமேகத்தின் பாடல், குணநாற்பது, குணவாகடத்திரட்டு, குலோத்துங்க சோழனுலா, குலோத்துங்க சோழனுலா உரை, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், குறிஞ்சிப்பாட்டு, குறுந்தொகை, கூர்ம புராணம், கைலைபாதி காளத்தி பாதியந்தாதி, கோதாவரி மாகாத்மியம் (வட), கோபப்பிரசாதம், கோயிற்புராணம், சகலகலாவல்லிமாலை, சாக்தப் பிரமோதம் (வட), சாகுந்தலம் (வட), சித்தராரூடம், சித்திரச் சத்திரப் புகழ்ச்சிமாலை, சிதம்பரச் செய்யுட் கோவை, சிதம்பர புராணம், சிதம்பரம் சாஸனம், சிலப்பதிகாரம், சிவஞானசித்தியார், சிவஞான பாலையர் பிள்ளைத்தமிழ், சிவதருமோத்திரம், சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவஸஹஸ்ர நாமம் (வட), சிறுபாணாற்றுப்படை, சீகாளத்திப் புராணம், சீவக சிந்தாமணி, சுசீந்திரம் சாஸனம், சுத்தானந்தப் பிரகாசம், சூடாமணி நிகண்டு, சூளாமணி, செவ்வந்திப் புராணம், சேக்கிழார் புராணம், சைவ சமயநெறி, சொக்கநாதருலா, தகடூர் யாத்திரை, தஞ்சைச் சிலாசாஸனம், தஞ்சைவாணன் கோவை, தண்டியலங்காரம், தணிகைப் புராணம், தந்திர சாரம் (வட), தமிழ்நாவலர் சரிதை, தமிழ்விடு தூது, தனிப்பாடல், தாயுமானவர் பாடல், தியாகராச லீலை, திரிகடுகம், திருக்களிற்றுப்படியார், திருக்காளத்திநாதருலா, திருக்காளத்திப் புராணம், திருக்குற்றாலக் குறவஞ்சி, திருக்குற்றாலப் புராணம், திருச்சண்பைத் திருவிருத்தம், திருச்சிற்றம்பலக் கோவையார் அல்லது திருக்கோவையார், திருச்செந்தூர்ப் புராணம், திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, திருநாகைக் காரோணப் புராணம், திருநாவுக்கரசர் திருவேகாதச

மாலை, திருப்பல்லாண்டு, திருப்பாவை, திருப்புகழ், திருப்பூவணநாதருலா, திருப்பெருந்துறைப் புராணம், திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா, திருமுருகாற்றுப்படை, திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, திருவல்லத்துச் சாஸனம், திருவாங்கூர்ச் சிலா சாஸனங்கள், திருவாசகம், திருவாதவூரர் புராணம், திருவாய்மொழி, திருவாரூர்க்கோவை, திருவாரூர்ப் புராணம், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், திருவானைக்காப் புராணம், திருவானைக்காவுலா, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருவிடைமருதூருலா, திருவிளையாடற் புராணம், திருவுசாத்தான நான்மணிமாலை, திருவெங்கைக்கோவை, திருவெண்காட்டுப் புராணம், திருவேங்கடமாலை, திவ்யப் பிரபந்த வியாக்கியானங்கள், திவாகரம், தூடி நூல், துரியோதனன் கலம்பகம், தென்காசிச் சாஸனம், தென்னிந்திய சிலா சாஸனங்கள், தென்னிந்திய சிலா சாஸனங்களின் வருஷாந்த அறிக்கைகள், தேரையர் வெண்பா, தேவாரம், தேவீ புராணம், தொண்டை மண்டல சதகம், தொல்காப்பிய இளம்பூரணம், தொல்காப்பியச் சேனாவரையம், தொல்காப்பிய நச்சினார்க்கினியம், தொல்காப்பியப் பொருள் பேராசிரியர் உரை, நக்கீரதேவ நாயனார் போற்றிக் கலிவெண்பா, நக்கீரர் திருவெழு கூற்றிருக்கை, நம்பியகப் பொருள், நல்வழி, நளவெண்பா, நற்றிணை, நன்னூல் சங்கர நமச்சிவாயருரை, நன்னூல் மயிலைநாதருரை, நன்னெறி, நாலடியார், நீதிநெறி விளக்கம், நீலகேசி, நீலகேசி விருத்தி சமய திவாகரம்; நெடுநல்வாடை, நைடதம், பஞ்சாக்கரதேசிகரந்தாதி, பட்டினத்துப் பிள்ளையார் பாடல், பட்டினப்பாலை, படிக்காசுப் புலவர் பாடல், பதிற்றுப்பத்து, பதினோராந் திருமுறை, பரகேசரி ராசேந்திர சோழதேவன் மெய்க்கீர்த்தி, பரிபாடல், பழமலையந்தாதி, பழமொழி, பழைய செய்யுட்கள், பாகவதம், பாசவதைப்பரணி, பாரதம் (வட), பிங்கலந்தை, பிரபுலிங்க லீலை, புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, பெரிய திருமொழி, பெரியநாட்டு மடத்துத் தாம்பிரப்பட்டயம் (காஞ்சீபுரம்), பெரியபுராணம், பெரியாழ்வார் திருமொழி, பெருந்தேவபாணி, பெருந்தேவனார் பாரதம், பெரும்பாணாற்றுப் படை, பெருமாள் திருமொழி, பொருநராற்றுப்படை, பொன்வண்ணத் தந்தாதி, போஜ ராஜீயம், (வட), மணிமேகலை, மதுரைக்கலம்பகம், மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம், மறைசையந்தாதி, மனுஸ்மிருதி (வட), மாடலம், மாயூரப் புராணம், மாளவிகாக்கினிமித்திரம் (வட), மிருச்சகடிகம், மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்தொள்ளாயிரம், முதற் குலோத்துங்க சோழதேவன் மெய்க் கீர்த்தி, மேருமந்தர புராணம், மோகவதைப்பரணி, யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலவிருத்தி, லலிதா ஸஹஸ்ரநாமம் (வட), லலிதா ஸஹஸ்ரநாமம் பாஸ்கரராயர் வியாக்கியானம் (வட), வடமொழி வைத்திய நூல், வளையாபதி, வாச்சியாயன சூத்திரம் (வட), விக்கிரம சோழதேவன் மெய்க்கீர்த்தி, விக்கிரம சோழனுலா, விசுவசார தந்திரம் (வட), விநாயகபுராணம், வில்லிபுத்தூராழ்வார் பாரதம், விறலி விடுதூது, விஷ்ணு ஸஹஸ்ரநாமம் (வட), வீரராசேந்திரதேவன் மெய்க்கீர்த்தி, ஸ்ரீபுராணம், ஸ்தேயசாஸ்திரம்

உ

கணபதி துணை

# தக்கயாகப்பரணி

## மூலமும் உரையும்

### காப்பு

### *வைரவக் கடவுள்

உரககங்கணந் தருவனபணமணி
யுலகடங்கலுந் துயிலெழவெயிலெழ
உடைதவிர்ந்ததன் றிருவரையுடைமணி
யுலவியொன்றொடொன் றலமரவிலகிய
கரதலந்தருந் தமருகசதிபொதி
கழல்புனைந்த[1]செம் பரிபுரவொலியொடு
[2]கலகலன்கலன் கலனெனவருமொரு
கரியகஞ்சுகன் கழலிணைகருதுவாம்.

(விசேடக் குறிப்பு.) உரக கங்கணம் - பாம்பாலாகிய கங்கணம். பணம் - படம்; மணி - மாணிக்கம்; இது கங்கணத்திலுள்ளது. உலகடங்கலும் துயி லெழும்படி மணியால் வெயிலெழ. உடை தவிர்ந்த தன் திருவரை: "அரவ வெற்றரையி னுமழூன்றிலைப் படையுடைப் பிள்ளை" (பெரிய. திருக்குறிப்பு. 81), "சீராடையற்ற வயிரவன்" (தனிப்.) உடைமணி - பலமணிகள் கோக்கப் பெற்ற ஓர் அரையணி: "உடைமணி கட்டி" (திருச்சிற். 385), "மருங்கின் மேல், ஆணிப்பொன் னாற்செய்த வாய்பொன் னுடைமணி", "உடைமணி கணகணென" (பெரியாழ்வார் திருமொழி), "ஒருவரைப் பங்கி னுடையாள் குமார னுடைமணிசேர், திருவரை" (கந்தரலங். 13), "உடைமணியி னோசைக் கொதுங்கி" (திருவிடை. மும். 11.) தமருகம் – உடுக்கை: "துடியு மேந்திய பொற் றோளும்" (கந்த. ததீசி. 165.) சதி - தாளவொத்து: "சதகோடி விததாள சதிபாய" (தக்க. 3), "மிழலையு ளீர்நடஞ் சதிவழி வருவதொர் சதிரே" (தே.) தமருகசதி: "தமரு கங்கடரு கின்றசதி யின்கண் வருவார்" (கலிங். 101.) கரிய கஞ்சுகன் - கரிய சட்டையை யுடையவர்: "வெஞ் சினப் பரியழன் மீது போர்த்திடும், அஞ்சனப் புகையென வால மாமெனச், செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக், கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்" (கந்த. கடவுள். 10.)

வீரபத்திரர் வைரவக்கடவுளின்கூறென்பது ஒருசாரார் கொள்கை யாதலின் வீரபத்திரர் வெற்றியைக்கூறும் இந்நூலிற் காப்பாக வைரவக் கடவுளின் துதி கூறப்பட்டதுபோலும்.

(பி-ம்.) 1 'பைம்பரிபுர' 2 'கலின் கலின்கலின் கலினென'

---

* பைரவகற்பமென்று ஒரு நூலுண்டு

## க. கடவுள் வாழ்த்து

### உமாபாகர்

வேறு

1. [1]புயல்வாழ நெடிதூழி புவிவாழ முதலீறு புகல்வேதநூல்
[2]இயல்வாழ [3]வுமைவாழ்வ தொருபாக ரிருதாளி னிசைபாடுவாம்.

இதன் பொருளறிக.

(வி - ரு.) இதன்பொருள் 2-ஆம் தாழிசையிலுள்ள வினுவிடையால் விளங்கும்.

புயல்முதலியன வாழ்வதற்கு உமாதேவியார் சிவபெருமான்பாகத்து வாழ்தல் காரணமென்பது ஆனந்தலகரியிலுள்ள, "சிவமெனும்பொருளும்" என்பதுமுதலிய பாடல்களால் விளங்கும். நெடிது வாழவென்க. (க)

(பி-ம்.) 1 'புயல்வழி' 1 'இயல்வாழி' 3 'உமையாளை யொரு பாகர்', 'உடன் வாழ்வதொருபாகர்'

2. குலநேமி ரவிபோல வலநேமி தனிகோலு [1]குலதீபனே
நிலநேமி பொலனேமி யளவாக [2]வுககோடி நெடிதாளவே.

இரவிகோலுகையாவது உலகத்திற்கு வலமாக ஓராழித்தேரை நடாத்துகை. வலநேமி - இராசசக்கரம். அது தனிகோலுகையாவது பூசக்கரம் பொதுக்கடிதல். குலதீபன் - குலத்தை விளங்கப் பண்ணும் தீபம் போல்வான்; ஈறுதிரிந்தது; வில்லி, வாளி, தொல்காப்பியனென்பன போல. 'குலதீபனே' என்றதில் ஏகாரம் பிரிநிலை; இதன் இரண்டாமடியிற் புலனேமியைப் பொலனேமியென்று பாடங் கொள்ளவேண்டிற்று, சக்கர வாளகிரி பொன்னிறத்ததாதலின்; பொன்னென்னும் சொல்லுத்தான் பொலனென்ருவது, செய்யுளிடத்து வன்கணமும் பிறகணங்களும் வரு மொழிமுதலாக வந்தாலென வுணர்க; "போதொடு விரிகூந்தற் பொல னறுங் கொடியன்னர்" (1 : 60) என்னுஞ் சிலப்பதிகாரப் பாட்டும், "பூநறுந் தேறல் பொலன்வள்ளத் தேந்தி" (1. 35 : 177) என்னும் உதயணன் கதையு மறிவார் பொலனே வேண்டுவரெனவுணர்க. புலனென்பது ஐம்புலத்தை யும் விளைபுலத்தையுமுணர்த்தும். நெடிதாளவே: ஏகாரம் ஈற்றசை.

நெடிதாள (1) இசைபாடுவாமென முன்னதனோடும் இயைக்க.

இனி, இப்பாட்டு வேண்டா; முன்பு புயலும் புவியும்வாழவே ஈசுவர னைப் புகழ்வாமென, "புயல்வாழ" (1) என்ற பாட்டில் அற்றது பொரு ளென்னின், அன்று; புயலும்புவியும் வாழவேண்டிப் பரமேசுவரிவாழ அவளுடனே வாழ்கின்றனர், திருமேனியில் ஒருபாகரான மகேசுரரென வுணர்க.

(வி - ரு.) மு. குலதீபனென்பது இப்பாட்டுடைத் தலைவனுகிய இரண்டாம் இராசராசனுக்கும் பெயராக வழங்கும்; "குலதீப னெழுதீவு முடனாளவே", "குலதீப நிருபதீப னருள்கூரவே" (தக்க. 4, 6) என்பர் பின்னும்; "எழு கின்ற ஞாயிறெனத் தான்குல தீப னெதிர்த்தட்டிலே" (தமிழ்நா. 124), "கோவுறங்கு கடைத்தலைக்குல தீப" (தனிப். 'மாவுறங்கின.') வலநேமி தனி கோலு குலதீபன்: "அடலாழி தனியேவு குலதீபன்" (தக்க. 6.) நேமி தனி கோலு: "நேமி யுய்த்த" (புறநா. 3 : 4.) நிலநேமி - நிலவட்டம்; "தரை யாழி", "பூமிவட்டமும்" (தக்க. 6,615.)

**உரை.** பொதுக்கடிதல் - பூமி பிறர்க்கும் உரியதென்பதை நீக்கித் தன தாகவே ஆக்கிக்கொள்ளுதல்; "பொதுச்சொற் பொறுஅதிடஞ்சிறிதென்னு மூக்கந் துரப்ப" (**புறநா.** 8) என்பதன் அடிக்குறிப்பால் இதனை உணர லாம்; "மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தி னீடு, மென்னெறி நன்ருல்" (**பெரிய** மனுநீதி. 33.) வில்லி - வில்லையுடையவன்; "இறைமலை **வில்லி**", "மேரு **வில்லி**", "குன்ற **வில்லி**", "நின்ற **வில்லி**" (**தக்க.** 170,379,511,704.) வாளி - வாளையுடையவன்: "மழு**வாளியார்**" (**தக்க.** 548.) சக்கரவாளகிரி பொன்னிறத்ததென்பது, "செம்பொ னறுவைவ குன்ற வேதிகை" (**தக்க.** 700) என்பதனாலும் விளங்கும்; "பார்சூழ்ந்த செம்பொற் றிகிரி" என்பது **குலோத்துங்க சோழனுலா.** பொன்னென்னும் சொல் பொல னென்ருவது: "பொன்னென்கிளவி" (**தொல்.** புள்ளி. சூ. 61) என்பதன் உரையால் விளங்கும். வன்கணம் - வல்லெழுத்து; பிறகணம் - மெல் லெழுத்து முதலியன. விளைபுலம் - தானியம் விளையும் பூமி. (உ)

(**பி-ம்.**) 1 * 'குலதீபனேழ்' 2 'யுககோடி'

## விநாயகக் கடவுள்

3\. சதகோடி விததாள சதிபாய முகபாகை குதிபாய்கடா
மதகோடி யுலகேழு மணநாற வரும்யானை வலிபாடுவாம்.

**என்பது:** நூறுகோடிவிதமான தாளச்சதி பரக்கத் திருமுகப் பக்கக் கடத்தினின்றும் குதிபாய்வதுபோல விழுகின்ற மதம் சக்கரவாள வெற்பைக் கடந்தோடி உலகமேழினும் நறுநாற்றம் புறப்பட நடந்தருளும் யானையி னுடைய பலத்தைப்பாடுவாம் எ - று.

இதிற் சதமென்றது நூற்றினும் பலவினுஞ்செல்லும். 'சதிபாய வரும் யானை' என்பதற்குச் சதிபாய்ந்து வரும்யானையென, "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" (**தொல்.** எச்ச. சூ. 61) என்பதனாற் பொருள் கொள்வாருமுளர். அதனாற் செவ்வைகுன்றும்; தெய்வத்தன்மையா ரெனவே கூத்தாடுதல் விநாயகர்க்கு இயல்பன்றெனவுணர்க; பாய்தல் - பரத்தல்; "பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்" (36); இது **கலித்தொகை.** மதகென்றது சக்கரவாளத்திற்குப் பெயராம்; இதற்குக் காரணம் மற்றை உலகங்களிலும் சென்று மணநாறுதலிற் கொண்ட பொருளென வுணர்க. யானையின் வலியாவது **அசுரகுஞ்சர**மென்னும் யானையைவென்று கொன்று மற்றதன் கொம்பை முறித்துக்கொண்டதும், திரிபுரதகனத்தில் இடையூறு தீர்த்ததும் பிறவுமாம். 'மதகோடி' என்பதில் உம்மையைத் தொக்க தாக்கி உலகமேழினுமோடி மணநாறச் செல்லுமென்னும் பொருளும் கோடற்குரியது.

(**வி - கு.**) மூ. சதி: "தமருகசதி" (**தக்க.** காப்பு.) பாகை - பாகமென்ற சொல்லின் சிதைவென்பர். குதிபாய்கடாம்: "குதிக்கு மதச்சுவடு கோப்ப", "நின்று குதிக்கு மதத்தி னிலநெகிழ்த்தே" (**இராசராச.**) மதம் நறுநாற்றம் கமழுமென்பதை, "கடுஞ்சினத்த **கமழ்கடாஅத்து......யானை**" (**மதுரை.** 44-7), "**கமழ்கடாஅத்** தொல்கிய வெழில்வேழம்", "ஈர்**நறுங் கமழ்கடாஅத்** தினம் பிரி யொருத்தல்" (**கலி.** 8 : 4, 21 : 2), "துன்னருந்திறற் **கமழ்கடாஅத்து**", "மிஞிறார்க்குங் **கமழ்கடாஅத்து**" (**புறநா.** 3 : 8, 22 : 6), "யானையின் புயல் கொண் **மும்மதம்**, மணமகள் கதுப்பென **நாறும்**", "பகட்டரசன், செய்த **மும்மதம்** போற்றிசை திசைதொறுங் **கமழும்**" (**சீவக.** 1621, 2365), "நீல யானை......**பூநாறு கடாம்**" (**மணி.** 19 : 20 - 22), "மத்தநல் யானை மதமு நானமும், வாசப் பொடியொடு காயத்துக் கமழ" (**பெருங்.** 1. 42 : 75 - 6),

"விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ", "கமழ்ந்தின் றென்பரால்...... கைம்மலை வார்கட மல்லது" (கம்ப.), "நாகாதிபன் விடுமும்மத நாறுந் திசை புக்கான்" (வி. பாரதம், அருச். தீர்த்த. 10), "பொழிமதநீர் விரை யேற்றி" (காஞ்சிப். கடவுள். 5) என்பவற்றாலறிக. உரை. 'சதமென்பது அநந்தவாசி' என்பர் பின்; தக்க. 73, உரை. திரிபுரதகனத்தில் இடையூறு தீர்த்ததனை, கக - ஆம் திருமுறை, அதிராவடிகள் மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவை, 9-ஆவது செய்யுளாலுமறியலாகும். (௩)

4. நககோடி பலகோடி புலியேறு தனியேற நளினாலயன்
உககோடி பலகோடி குலதீப [1]னெழுதீவு முடையானவே.

எ - து அநந்தகோடி மலைகளின் சிகரகோடிகளிற் சோழ சக்கர வர்த்தியுடைய புலிப்போத்துக்கொடி தனியே சென்று ஏறப் பிரமாவி னுடைய வாணாளான சதுர்யுககோடிகள் குலதீபன் ஏழுதீவுகளையும் உடையான எ - று.

நளினாலயன் - பிரமா. 'புலியேறு தனியேற' என்றதனால், பராராட்டி ரத்து இராசாக்களுடைய அநேககொடிகள் சேவிக்குமுறையில் அயற் கண்ணே தாழவரையப்பட்டிருப்பச் சோழசக்கரவர்த்தியின் புலிக்கொடி மேலே தனியே வரையப்பட்டிருக்குமெனவுணர்க. நாகம் நகமாயிற்று; குறுக்கும்வழிக் குறுக்கலென்னும் விகாரம்.

உடையான (3)|யானைவலிபாடுவாமென்க.

(வி - கு.) மூ. நககோடி......தனியேற: "கன்மலை மார்புங் கடவுள் வடமேருப், பொன்மலை மார்பும் புலிபொறித்தோன்". (இராசராச.) உரை. ஏனையரசர்களின் கொடி தாழச் சோழசக்கரவர்த்தியின் கொடி மேலேவிளங்குமென்பது, "கேழன் மேழிகளி றாளி வீணைசிலை கெண்டை யென்றினைய பல்கொடி, தாழ மேருவி லுயர்ந்த செம்பியர் தனிப்புலிக்கொடி தழைக்கவே" (கலிங்க. 18) என்பதனாலும் விளங்கும். புலிக்கொடி......வரையப்பட்டிருக்கும்: "பொறைசூழ் வரையிற் புலியே றெழுதும் பொன்மே ருவரைப் பெருமான்" (தக்க. 185.) மலைகளில் தங்கள்கொடிகளை அரசர் எழுதுவது இயல்பு; "பருப்பதத்திற் கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்" (பெரியாழ்வார் திருமொழி.) குறுக்கும் வழிக் குறுக்கலென்னும் விகாரம்: தொல். எச்ச. சூ. 7. "கயலெழுதிய இமயநெற்றியின், அயலெழுதிய புலியும்வில்லும்" (சிலப். 17 : 1 - 2) என் பதும் அதனுரையும், "இடிக்கும் வானுருமேறு" (திருவிளை. திருமணப். 110) என்னும் செய்யுளும் இவ்வழக்கமுண்மையைத் தெரிவிக்கும்.

(பி-ம்.) 1 'னேழ்தீவும்' (ச)

## முருகக் கடவுள்

5. ஒருதோகை மிசையேறி யுழல்சூரு மலைமார்பு [1]முடனூடுறப்
பொருதோகை சுரராச புரமேற விடுகாளை புகழ்பாடுவாம்.

எ - து ஒரு மயிலின்மேல் ஏறியருளித் தனக்குப் பகைவனான சூரபன் மாவுக்கு மறைவாய் ஓடிவரலான மலையினுடைய மார்பும் சூரபன்மாத் தானும் ஒக்க ஒரேகாலத்திலே ஊடுருவும்படி வேலேறுபடப் பொருதருளிச் சமுத்திர ஆரவாரத்தைச் சுவர்க்கத்தேறப்போகவிட்ட இளையோனுடைய புகழைப்பாடுவாம் எ - று.

ஒருதோகையென்றது இங்கே சினைப்பொருளுக்காகாதென வுணர்க. ஒருதோகையென்றது படுத்துச்சொல்லுக, மெல்லிதாக. உடனென்றது மலையுருவிப் பின்னை அவன்மேற் பட்டதன்றென்று அதன்கடுமையை உணர்த்திற்று. சுரராசபுரமென்றது தேவேந்திரனது கோயிற்பட்டணத்துள்ள அந்தப்புரத்தை. காளை - 16 பிராயத்தான்.

(வி - கு.) மு. மலைமார்பு - மலையின் நடுவிடம்: "குன்றி னெஞ்சுபக வெறிந்த" (குறுந். கடவுள்: 3 - 4), "விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து" (பெருங். 1. 51 : 8.) உழல்சூரு......பொழுது: புரண்டதொரு குன்றமுஞ் சென்றதானவ னுடம்புமப்படி நிறந்திறக்கவொரு செங்கைவேலெறிந்த" (குலோத். பிள்ளைத்.) உரை. சூரனுக்கு ஒருமலை அரணாகி அவனுடன் ஓடிவந்ததென்பதும் அவனையும் அம்மலையின் நெஞ்சையும் ஒரே காலத்தில் ஊடுருவும்படி முருகக்கடவுள் வேலேயுய்த்தனரென்பதுமாகிய இவ்வரியசெய்தி, "ஏழுமலை கொல்லுமசனி" (தக்க. 170) என்பதன் உரையாலும், "கிரியுரும்பர்நீடுகிரிபிளந்துசூரர் செருவடங்கவேலை விடுவோனே" (திருப்புகழ்), "கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியும், துளைபட் டொழியத் தொடுவே லவனே" (கந்தரநு.), "கார்வந், துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ருரப்பொருப்பும் பிளப்ப......வேலெடுத்த குமரவேள்" (திருவிளை.) என்பவற்றாலும் விளங்கும்.

ஓராயுதம் ஒரேகாலத்திற் பலஇலக்குக்களை ஊடுருவிச்செல்லுமென்பது, "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி" (புறநா. 152) என்பதாலும் "செல்வப்போர்க் கதக்கண்ணன்" என்னும் சூளாமணிச் செய்யுளாலும், "தாடகைதன் னுரமுருவி, மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி", "ஏழு மாமர முருவியே மூலகமென் றிசைக்கு, மேழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற, வேழி லாமையின் மீண்டதவ் விராகவன் பகழி" என்னும் கம்பராமாயணத்தாலும், பாரதத்திற் கூறப்படும் அருச்சுனன்செயலாலும் பெருங்கதையிற் கூறப்படும் உதயணன் போராலும் அறியப்படும். கலாவத்தின் பெயராகிய தோகையென்பது மயிலுக்காயிற்றாகலின், 'சினைப்பொருளுக்காகாது' என்றார். அந்தப்புரத்தைப் புரமென்றது நாமைகதேசமென்னும் இலக்கணத்தின் பாற்படும், பீமசேனனைப் பீமனென்பதுபோல.

(பி-ம்.) 1 * 'முடனூடற' (ரு)

6. கடலாழி வரையாழி தரையாழி [1]கதிராழி களிகூர்வதோர்
அடலாழி தனியேவு குலதீப நிருபதீப னருள்கூரவே.

எ - து கடல்வட்டமும் சக்கரவாளமும் பூசக்கரமும் சந்திராதித்த சக்கரமும் மனமகிழ்ச்சிமிகுவதாய் ஒன்றாய் வலிதாயிருக்கும் இராசாக்கினை சக்கரத்தைச் சத்துருக்களின்றித் தனியே செலுத்தும் குலதீபனை இராசாதிபன் திருவுள்ளத்து அருள்சுரந்துவாழ எ - று.

வரையாழி, பருவதமெனினுமமையும். இதில், கடலும் மலையும் நிலனுமாகிய சக்கரங்களிற் கதிராழியான ஆதித்தன் களிகூருவதற்குக் காரணமான தனிச்சக்கரத்தை நடத்தும் குலதீபனெனத் தோன்றும் ஒரு பொருணயமு முண்டு.

அருள்கூரக் (5) காளைபுகழ்பாடுவா மென்க.

(வி - கு.) மு. கடலாழி வரையாழி தரையாழி கதிராழி: "ஞால நேமி திரை நேமிவரை நேமி........கால நேமிரத நேமி" (தக்க. 707); "நீராழி யேழு நிலவாழி யேழுந்தன், போராழி யொன்றாற் பொதுநீங்கி" (விக்கிரம.)

**உரை :** ஆக்கினைசக்கரத்தை ஆழியென்றலும் அதனையுடையவேந்தனைச் சக்கரவர்த்தி ஆழியானென்றலும் மரபு: "ஆழிப் பெருமா ளபயன்" (**குலோத். உலா.** 159); "இலங்க லாழியினன்" (சீவக. 32); "சினவேற் செம்பியன், ஒருதனி யாழி யுருட்டுவோன்" (**சிலப்.** 1 : 67 - 8.) இராசாதி பன் - இராசராசன். ஆதித்தன் - சூரியன்; பாட்டுடைத்தலைவன் குல முதல்வனாதலின் அவன் களிகூர்வானென்று கூறினர்.

(**பி-ம்.**) 'நிரையாழி' (சு)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

7\. வழுவேறு குடகூடல் வடவாறு வழிமாற மணலாலொலாரோர்
கழுவேறு மமண்மூகர் கருமாள வருமீளி கழல்பாடுவாம்.

**எ - து** வேதமார்க்க முதலாகிய மகாமார்க்கங்களைத் தவிர்ந்து நிர்வாணமார்க்கமாகிய மிக்க குற்றமேறின மேற்றிசை மதுரைக்கு வடக்கிலாறுன வைகையாறு வழிபோவார்க்குப் போகவொண்ணாதபடி துர்க்கந்திக்கும்வண்ணம் மணற்குன்றுதோறுமுள்ள ஒவ்வொரு கழு வேறின அமணரென்னப்பட்ட அறியாதார் வங்கிசம் மாண்டுகெடும்படி அவதரித்தருளிய மகாபலபராக்கிரமனுடைய ஸ்ரீபாதங்களை நமக்கரிப்பாம் எ - று.

வழு, ஒன்று உண்டென்றும் இல்லையென்றும் ஒன்றென்றும் பல வென்றும் நித்தியமென்றும் அநித்தியமென்றும் தம்பொருளைத் தாமே கெடுத்துச் சுவவசன விரோதமென்னும் பிரமாணுபாசஞ் சொல்லுதலாகிய குற்றமாம். மணலென்றது மணற்குன்றுகளை; என்னை? சினையிற் கூறு முதலறி கிளவியான ஆகுபெயர். இத்தாற்பயன்: பிள்ளையார் தோற்றி யருளினபின்பு அமண்சமயங்கெட்டதென்பது.

(**வி - கு.**) மூ. குடகூடல் - குடக்கின்கண் உள்ளதாகிய கூடல்; மதுரை; இப்பரணிபாடுவித்தோனுன இராசராசசோழனுடைய இராசதானிகளுள் ஒன்ருகிய காவிரிப்பூம்பட்டினத்திற்கும் கூடலென்னும்பெயர் நூல்களிற் காணப்படுதலின், அதன் தென்மேற்றிசைக் கண்ணதாகிய மதுரையைக் குடகூடலென்றுரெனினும் பொருந்தும். சமணர்கள் தம்முடைய சூளுறவு பிழையாமல் தாமேசென்று கழுவேறினரென்பது முன்னோர்கள் கொள்கை. அதனைப்பின்பற்றியே இந்நூலாசிரியரும், கழுவேறு மமண் மூகரென்றுர். இதனை, "அமணர் கழுமிசை கொள்வதிது" (170) என்ற தாழிசையாலும் அதன் உரையாலும் அறியலாகும்; "அமணுன வன்குண்டர் **கழுவேற** முன்கண்ட செறிமாட வண்சண்பை நகராளி", "அருகந்தர் குல மொன்றி முழுதுங் **கழுவிலேற**" (**ஆளுடையபிள்ளை. கலம்.** 8, 9), "வெய்ய நீள்**கழு வேறினர்**" (**திருவால. கழுவேறின** திருவிளையாடல், 45), "தங்கள் கரந் தருமே டாழிசெலக் காழியா ரேடெதிரேற வெதிரேறினார் சழுவாய் மீது" (**கடம்பவன. லீலா.** 38), "கதியில் லமணர் **கழுவேறியதும்**" (**திருவுசாத். நான் மணி.** 28 : 32), "மாறனும்பிணி தீர வஞ்சகா பீறுவெங்**கழு வேறவென்றி**டு முருகோனே", "புற்பாய் சுற்றிகள் கழுவேறப், பொருத சமர்த்தா" (**திருப்புகழ்**) என்பவைகளும் வலியுறுத்தல் காண்க. அமண்**மூகர்** : "சமண் **மூகர்**", "எண்ணாயிர மூ**கரும்**", "என்னுஞ் சமண்**மூகரும்**" (**தக்க.** 189, 204, 211), "**அமண் மூகர்** நெஞ்சிடை பீதிகொண்டிட வாதுகொண்டருள்......... முருகோனே" (**திருப்புகழ்.**) **உரை.** தம்முடைய முத்திமார்க்கத்தை நிர்வாண மார்க்கமென்பர் சைனர். வைகையாறு......துர்க்கந்திக்கும் வண்ணம்: "குருகும் பணிலமுங் கூனந்துஞ் சேலும், பெருகும் வயற்காழிப் பிள்ளை -

அருகந்தர், முன்கலங்க நட்ட முடைகெழுமு மாலின்னம், புன்கலங்கல் வைகைப் புனல்'' (**ஆளுடைய பிள்ளை**, மும். 26.) ஆகுபெயர் - சினையாகு பெயர். பிள்ளையார் - **திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்**. பிள்ளையார் தோற்றி யருளினபின்பு அமண் சமயங்கெட்டதென்பதை, ''அருகாசனி'', ''அம ணர்க்குக் காலன்'' என்பவைமுதலிய **நம்பியாண்டார்நம்பி** திருவாக்காலும் உணரலாகும். ஒன்று உண்டென்றும் இல்லையென்றும் கூறுதல்முதலிய வற்றை, ''செய்தா னிருவினையின் பயத்தை'' (**சீவக**. 1418) என்னும் செய்யுள் முதலிய மூன்றாலும் அவற்றின்உரையாலும், ''உண்டு மில்லையு மெனத் தடுமாற்றநூலுரைத்த, பிண்டி யானுரை கொண்டுழல் பேயமண் குண்டர்'' (**திருவிளை**. மாயப்பசுவை. 5) என்பதனாலும் அறியலாகும். (எ)

8. எருதோடு [1]கலையோடு சிலையோட மலையோட விபமோடநேர்
விருதோடு பொருதேறு புலிநேமி கிரிசூழ விளையாடவே.

**எ - து** எருத்துக்கொடியான பல்லவராசன் இலாஞ்சனையும், மானினத் திற் கலைமான் கொடியான கபிலேசுரன் கசபதி இலாஞ்சனையும், விற் கொடியான கேரளேசுரன் சேரமானிலாஞ்சனையும், பருவதத்தை எழுதிய கொடியான பாண்டியன் இலாஞ்சனையும் ஒக்க ஓடப் பின்பு தங்கள் குலோற்பவனை ஆதித்தனது சத்திரியலாஞ்சனையான யானை ஓடத் தாந் தாம் பிடித்த பிடித்த விருதுகள் ஓடிப்போகப் பொருது வென்றேறிய புலிப் போத்துச் சக்கரவாளகிரிக்கு உள்ளும்புறமும் எங்கும் தானேயாகி விளை யாடும்பொருட்டு எ - று.

விளையாடப் (7) பரசமயகோளரியின் கழல்பாடுவாமென்க.

மலயத்துவசனென்பானொரு பாண்டியனுளனாகவும் அவனுக்கு மல யவதியென்பாளொருத்தி உளளாகவும் அவளைச் **சீமூதவாகன**னென்னும் **உபகாரவித்தியாதரன்** கலியாணம்பண்ணினானாகவும் மகாகவி யொருவர் ஒரு காவியத்திலிட்டனர். மலையைக்கொடியாகவுடையார், பாஞ்சாலரிற் பங்கு பெற்ற பிரமச்சத்திரிய ரென்பாருமுளர். இரண்டில் நல்லதுகொள்க.

இனி, எருதும் கலையும் வில்லுமான சலப்பொருளுடனே அசலமான பருவதமோடுகை பயன்; இவையன்றி எருது கலை இவற்றுடன் யானை யோடலும் பயன். இவ்விவர் பிடித்தவிருதுகள், சோழன் கடகப்பக்கக் கற்றைக்காரன் முதலான பலவிருதுகளுமெனவுணர்க. இவ்வடையாளஞ் சொல்லவே இராசாக்களின் பெயர்கள் விளங்கும்.

இனிப் பொதுவியல் வாழ்த்துரைக்கப் புகுகின்றார். அதற்குமுன்பு சருவேசுவரனையும் அவன்புத்திரரான மூவரையும் புகழ்ந்து மற்று இந்த நால்வரும் சோழசக்கரவர்த்தியை ரட்சிப்பாராக வென்றாரெனவுணர்க.

(**வி - கு**.) மூ. விருது - வெற்றிச் சின்னங்கள். புலி விளையாட.

**உரை**. இலாஞ்சனை - அடையாளப் பொறி; **புறநா**. 99, உரை. பல் லவனுக்கு எருத்துக்கொடி உண்டென்பது, ''வெண்குடை நீழல் செங்கோ னடப்ப விடைவெல் கொடிவேற் படைமுன் னுயர்த்த, பண்புடைப் பல்லவர் கோன்பணிந்த பரமேச் சுரவிண் ணகர மதுவே'' (**பெரியதிரு மொழி**. 2. 9 : 5), ''ஏறடர்த்து வின்முருக்கி'' (**தண்டி**. மேற்.) என்பவற் றாலும் அறியலாம். கசபதிகள் உத்கல (ஒரிஸ்ஸா) தேசத்தை ஆண்டவர்க ளென்று **சிலாசாஸனங்களால்** தெரியவருகின்றது. கேரளேசுவரன் - சேர வரசன்; பருவதத்தை எழுதியகொடி: ''மலைக்கொடி மன்னன், பொன்னி னுட்டிலடைப் போயினி தமர்ந்துவீற் றிருப்ப'' (**திருவால**. 4 : 1.) தங்கள்

குலோற்பவனென்றது சூரியகுலத்திலுதித்தவனென்றபடி. இங்குக் கூறப்பட்ட ஆதித்தனென்பவன் சோழர் குலத்திற்பிறந்து அக்காலத்திருந்த தாயத்தார்களாகிய சோழர்களால் வெல்லப்பட்டுக் கோனாட்டிலுள்ள **கொடும்பாளூரின்கண்** சிற்றரசர்கட்குரிய அரசாட்சியைச் செய்துவந்தவனென்று தெரிகின்றது (**பெரிய.** இடங்கழி. 3.) சோழகுலத்திற்பிறந்த அரசர்களுட்சிலர் தம்முட் பகைமைகொண்டிருந்தமை **புறநானூற்றாலும்** விளங்கும். சத்திரிய லாஞ்சனை - க்ஷத்திரியச்சின்னம். புலிப்போத்தென்றது கொடியிலுள்ள ஆண்புலி உருவத்தை. பரசமயகோளரி - **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்**; "பரமகுரு நாதன்மிகு **பரசமய கோளரியே**" (**ஆளுடையபிள்ளை. கலம்.** 24), "**பரசமய கோளரி** வந்தானென்றூத" (**பெரிய. திருஞான.** 904.) மகாகவியென்றது **ஸ்ரீஹர்ஷகவியை**; ஒருகாவியமென்றது வடமொழியிலுள்ள **நாகானந்த**மென்னும் நூலை. சலப்பொருள் - இயங்கியற் பொருள். அசலம் - நிலையியற்பொருள். பயனென்றது இங்கே நயத்தை. பொதுவியல் வாழ்த்து - பொதுவாகக் கூறப்படும் வாழ்த்து. சர்வேசுவரன் - சிவபெருமான். புத்திரரான மூவர் - விநாயகக்கடவுள், முருகக்கடவுள், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். **உரை.** கடகப்பக்கம் - ஒருவிருது; கடப்பகம்: **தூளா. கலி**யாணச். 44.

(பி-ம்.) 1 * 'கயலோடு' (அ)

9. இறைவாழி [1]தரைவாழி நிரைவாழி யியல்வாழி யிசைவாழியே
மறைவாழி [2]மனுவாழி மதிவாழி ரவிவாழி மழைவாழியே.

இறைவாழி - ஈசுரன்வாழ்க, தரைவாழி - பூமிவாழ்க, நிரைவாழி - மூந்நிரைவாழ்க, இயல்வாழி - ஒழுக்கம்வாழ்க, இசைவாழி - கீர்த்திவாழ்க, மறைவாழி - வேதம்வாழ்க, மனுவாழி - மனுவான சோழசக்கரவர்த்தி வாழ்க, மதிவாழி ரவிவாழி - சந்திராதித்தர்வாழ்க, மழைவாழி - காலவருஷம் வாழ்க.

இதில், இறையென்பதனை இராசாவென்பாருமுளர்; "இறைவனடி சேராதார்" (**குறள்.** 10) எனவும், "இறைவனார் பொருள்" (**இறையனாரகப்பொருள்**) எனவும் வருவனவற்றால் அது பொருளன்மையுணர்க; ஈசுரனென்னும் பொருளே உண்மை. தரையென நிலத்துள்ளனவெல்லாம் கொள்ளப்படும். நிரை, உலகத்துள்ளவற்றுக்கு ரட்சை. இயலென்பதனைச் சொல்லுமியலென்பாருமுளர்; அதன்பொருள், தன்மார்த்தகாமமோட்சங்களாதலால் அப்பொருளும் இப்பொருளும் வேறல்லவெனவுணர்க. இசையை இன்பவிசை (ஸங்கீதம்) யென்பாரறியார்; ஓசையேயாதலால் அஃது இயலெனவடங்கும். அன்றியே இன்பவிசையை நோக்கினுமயின், நாடகத்தையும் புகழவேண்டும். மனுவென்றதற்கு நீதியைநினைக்கின் முன்பு மறையென்றதுவேயமையும்; மறையின்பொருளும் மனுநீதியே. மனுவென்பதனை மனுஷ சாதியென்றாலு மிழுக்காது; நரபதியென்பது சோழன்பெயராதலாற் சிறப்புடைத்து. மதியை முதலில் வாழ்த்தியது சந்திராதித்தரென்னு முறைமைகொண்டு; இவை அட்டமூர்த்தத்தைச் சார்ந்தவையெனவுணர்க. காலவருஷத்தை வாழ்த்தியது, முன்சொன்னவையெல்லாம் நிலைநிற்பது மழையாலாதலின்; "மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும், நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோல், மேனின்று தான்சுரத்த லான்" (1 : 7 - 9); இது **சிலப்பதிகாரம்.** அன்றியும் **திருவள்ளுவப்பயனில்,** வான்சிறப்பென்னும் அதிகாரத்துள்ளுங் கண்டுகொள்க. இப்பாட்டு ஒன்பதிலே கடவுள்வாழ்த்தான முதற்பாட்டில், "புயல்வாழ" என்றதையுமுணர்க. புளிமாங்காயான சந்திர கணம் ஐந்தும் ஏழும் விருத்தி.

(வி - கு.) மு. 'இறைவாழி...' சிலப். மங்கலவாழ்த்துப் பாடலிலுள்ள 'திங்களைப் போற்றுதும்' என்பது முதலிய மூன்றையும் இத்தொடர் பின் பற்றி நிற்கின்றது. உரை. மும்நிரை - பசு, எருமை, ஆடு என்பன ; "சால நன்று முந்நிரையு முடையேன் குழ்விங் கெனக்கில்லை" (பெரிய. சிறுத் தொண்ட. 49), "இனமூன்றுந் துன்றப், போற்றிக் குடிமல்கிய பொற்பின பாடியெல்லாம்" (தணிகைப். நாடு. 69.) இறையென்பது சிவபெருமானென் னும் பொருளில், "இறைமலைவில்லி", "இறைகண் ணின்மதன் கையம் பென வெந்தன" (170, 212) என இந்நூலுள்ளும் வருதல் காண்க. சொல்லு மியல் - இயற்றமிழ். இன்பவிசை - இசைத்தமிழ். நாடகம் - நாடகத்தமிழ். 'இயலென்பதனை' என்பது முதலிய வாக்கியங்களால் இயற்றமிழ் முதலி யன மூன்றும் முத்தமிழெனப் பண்டைக்காலத்தில் வழங்கிவந்தமை விளங்கும். நரபதியென்பது சோழபரம்பரையினர்க்குரிய பெயரென்பது இந்நூல், 246, 275-ஆம் தாழிசைகளின் உரைகளாலும், "நரபதி, மைம் முகில் வண்ணத்து வானவன் மீனவன், கைம்மலை மேல்வரக் கண்டதற் பின்" (குலோத். உலா), "சனபதிதன், தோளுங் கவசமும்......நாளுமாம்...... கஞ்சைத் திருமறையோன் கண்ணனும்" (விக்கிரம. உலா), "திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்றிகழ் செம்பியர்கோன், நரபதி நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே" (சுந்தர. தே.) என்பவற்றாலும் விளங்கும். சந்திராதித்தர் : ஆதித்தனுக்குமுன் சந்திரன் கூறப்படுதலை, "பழைய சந்த்ர சூரியரும்", "எறிக்கு மதியும் பருதியும்", "சந்த்ரா தவரும்", "சங்கு திகிரி சந்த்ர சூரியர்" (தக்க. 18,158,183,700) என்பவற்றாலும், "பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணுக" (நற். கடவுள்.), "திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்......ஞாயிறு போற்றது ஞாயிறு போற்றுதும்" (சிலப். 1 : 1 - 4), "மதியமும் ஞாயிறும்", "மதியமும் ஞாயிறு மெழுதலும் படுதலும்" (பெருங். 1. 32 : 22, 2. 9 : 184 - 5), "திங்களொடு ஞாயிறன்ன வாய்மையும்" (ஆத்திரையன்.) என்பவற்றாலும், அருகதேவனுடைய முக் குடைகளில் முதற்குடைக்கு 'சந்திராதித்தியம்' என்ற பெயரமைதியானும் அறிக. அட்டமூர்த்தங்கள் இன்னவென்பது இந்நூல் 452-ஆம் தாழிசை யுரையால் அறியப்படும்.

(பி-ம்.) 1 'திரைவாழி தரைவாழி' 2 'மதிவாழி மனுவாழி' (கூ)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

## உ. கடைதிறப்பு

10. தார்மார்பமு [1]முகவிம்பமு நுமகாதலர் தரநீர்
சேர்தாமரை யிறையாளடி [2]பணிவீர்கடை திறமின்.

ஸ்ரீதேவியும் சரசுவதியும் அடியாராக விட்டுணுவாலும் பிரமாவாலும் உமாபரமேசுவரிக்கு ஸ்திரீதனமாகக் கொடுக்கப்பட்டாரென்னும் புராண கதையை உட்கொண்டுகூறியது இக்கடைதிறப்பு.

தார்மார்பமாவது விட்டுணுவினுடைய திருத்துழாய்த் திருமார்பு. முக விம்பமாவது பிரமாவினுடைய முகமண்டலம்.

எ - து இவை யிரண்டையும் உம்முடைய புருஷரான இருவரும் உமக்கே தர நீங்களிருவருமிருக்கும் தாமரைகளை உமாபரமேசுவரியுடைய ஸ்ரீ பாதங்களிலே ஒப்பிப்பீர், உம்முடைய கோயிற்றிருவாயிற் கதவுகளைத் திறமின் எ - று.

எனவே தார்மார்பமான மகாவிட்டுணுவின் திருமார்பு பூமிதேவிக்கும் உரித்தாய்ப் பொதுவாயிருத்தலைத் தவிர்ந்து ஸ்ரீதேவி தானேபெறுதற்கும், பிரமாவினது திருமுகமண்டலமானது சாவித்திரிக்குமுரித்தாய்ப் பொதுவாயிருத்தலைத் தவிர்ந்து சரசுவதி தானேபெறுதற்கும் வேண்டிச் சௌபாக்கிய கர்த்தரி பரமேசுவரியாவதறிந்து அவளுடைய ஸ்ரீபாதங்களிலே ஸ்ரீதேவி தன்செந்தாமரையும் சரசுவதி தன்வெண்டாமரையுமான இரண்டுபுட்பங்களையுமிட்டு அர்ச்சிக்கவே பரமேசுவரி அனுக்கிரகித்தருளித் தாங்களிருக்குமிடங்களை நமக்குத் தந்தாளென அவர் நினைத்த சிறப்பைப் பிரசாதித்தருளுவளென்பது பொருள்.

இப்பாட்டுக் குறிப்பாற் பொருளுணர்த்தும் அருமையையும் பெருமையையு முணர்க ; இது, "குறிப்பினறிநவும்" என்னுமிலக்கணத்தின்பாற் பட்டது ; "காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன் றன்முன்" (238 - 9) என்பது, வீமசேனற்குப் பெயராயிற்றெனவுணர்க ; இது சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப்படை.

கடை திறப்பு - வாயிற் கதவுகளைத் திறத்தல்.

(வி - கு.) 'மூ. 'முகவிம்பமும்' என்றதில் முகமென்றது வாயிலை ; "கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்" (நீதிநெறி.) பணிப்பீரெனற்பாலது சந்தவின்பத்தைநோக்கிப் பணிவீரென நின்றதுபோலும். உரை. சாவித்திரி - பிரமாவின்தேவிமாருள் ஒருத்தி : "நரப்பிசைவாணி சாவித் திரியெனு நங்கை வேத, வரப்பிசை மனுவாங் காயத் திரியெனு மடவா ரோடும்......படரு வான்" (திருவிளை. சங்கப்பலகை. 3.) கா-காண்டாவனம். புகழோன் - அருச்சுனன் ; தன்முன் - வீமசேனன்.

(பி-ம்.) 1 'முகவின்பநுங்காதலர்' 2 'தருவீர்கடை' (க)

11. கைவைக்கவு மடிதோயவு முடனின்று கவிக்கும்
தெய்வக்கொடி திசைதைவர நிற்பீர்கடை திறமின்.

இனிவருவன சுவர்க்கவாசிகளுடைய தேவிமாராகிய தேவஸ்திரீகளை நோக்கிய கடைதிறப்பு.

தேவஸ்திரீகள் வரும்பொழுது கற்பகவல்லிசாதியைத் தமக்கு வெயின் மறையாகத் தம்முடைய பாங்கிமார் பிடித்துவரத் தாம்வருதல் பண்பு.

இ - ள் கையாற் பிடிக்கவும் காலால் தீண்டவும் தெய்வக்கொடிகள் தாம் கெறுவமடதம்பெற்றுத் திக்குக்களின் முடிவளவுஞ்சென்று வளரவும் தாம் தமது பெருந்தன்மையால் அதனை அறியாது நிற்பீர், கடைதிறமின் எ - று.

(வி - கு.) உரை. வெயின்மறை - குடை : "வெயின்மறைக் கொண் டன்றோ வன்றே" (புறநா. 35 : 20.) (உ)

12. வெல்லும்பொரு ளதிகார மலங்காரம் விளங்கச்
சொல்லும்பொருள் பகருங்குழன் மடவீர்கடை திறமின்.

இதன் பொருளுணர்க.

(வி - கு) மூ. இத்தாழிசையில் ஐந்திலக்கணங்களுள் பொருளதிகாரம் அலங்காரமென்றவற்றின்பெயர்கள் தொனிக்கின்றன. இதனால், பேசுவோர் பொருளிலக்கணமும் அலங்கார இலக்கணமும் நன்கு தெரிந்திருக்கவேண்டுமென்பது விளங்குகின்றது. (ங)

13. உருகுஞ்சுர [1]ருயிருண்டன வுணர்வுண்டன வொழுகத்
திருகுங்குழ லரமங்கையர் திறமின்கடை திறமின்.

எ - து இளையராய்க் காமுகராய் ஸ்திரீகளைக் கண்டால் உருகும் தேவர்களுடைய பிராணன்களும் அவர்களுடைய ஞானங்களுமான அவை ஒழுகத் திருகப்படுகின்ற குழல்களையுடைய தேவஸ்திரீகாள், கடைதிறமின் எ - று.

இது பொருளரிது. உருகுஞ் சுரருயிர்கள் உண்ணப்பட்டன, உணர்வுகள் உண்ணப்பட்டன ; அவை தலைமயிர்களினுள்ளே புக்குக் கிடந்தன ; அவ்வுயிர்களும் உணர்வுகளும் புறப்பட்டு ஒழுகிவிடும்படி முறுக்கிமுடியும் கொண்டையையுடையீரென்பது பொருள்.

இனி, நீராடி நனைந்தகுழல்களை முறுக்கிப் பிழிகின்றபோது அவை தம்மாலுண்ணப்பட்ட தேவர்களுயிரும் உணர்வும் குழலில் நில்லாதொழுகி விழ முறுக்குவது போன்றன வென்பாரும், மற்றும் இப்பெற்றியன பல பொருள் சொல்லுவாருமுளர். இவை யெல்லாம் பொருளாயினுமாகுக, ஆகாதொழியினுமொழிக. மேலதே பொருளாவது.

இனி ஒரு சாரார் கூறுவது வருமாறு :—

உயிருண்டன உணர்வுண்டன வென்பன கண்களின் தொழிற்பெயர். ஒழுக - அவை உலகத்தோடு ஒத்த ஒழுக்கத்தையுடையனவாக. அவை முகத்துக்குள் அடங்கி மூக்குக்கும் செவிக்கும் நடுவே அகப்பட்டுநிற்க வேண்டுமென்று நினைத்து வரம்புகோலுவாரைப்போலக் குழல்களைச் சுருளத் திருகி முறுக்கிவிட்ட தொழிலையுடையீர், திறமினென்பது. மூக்குக்கு இடைவெளியின்மையின் முட்டிக்கிடந்தது, மற்றதற்கு ஒழுக்கமும் அதுவேயாதலால் ; இப்பாற் காதளவு வருவன கடப்பனவாகலாகாதென இட்ட வரம்பாவது பொருளெனவறிக ; இதற்கு, " முத்தின் கனங்குழையை யுங்கு மிழை யுங்கதுவி முட்டுங் கருங்கயல்க ளின்கடை யடங்குவன " என்றார் தாமேயெனவுணர்க. மங்கையரென்னுஞ்சொல் மங்கையரேயென விளியேற்றுச் செய்யுளாதலின் விகாரப்பட்டது.

(வி - கு.) மூ. உண்ணப்பட்டனவாகிய உயிர்களும் உண்ணப்பட்டனவாகிய உணர்வுகளுமென்க. " முருகிற் சிவந்த கழுநீரு முதிரா விளைஞ ராருயிரும், திருகிச் செருகுங் குழன்மடவீர் செம்பொற் கபாடந் திறமினோ", " செக்கச் சிவந்த கழுநீருஞ் செகத்தி லிளைஞ ராருயிரும், ஒக்கச் செருகுங் குழன்மடவீ ருயர்பொற் கபாடந் திறமினோ " என்னும் **கலிங்கத்துப்பரணித்** தாழிசைகள் இதனோடு ஒப்பிடற்பாலன. உரை. 'என்றார்தாமே' என்றது இந்நூலாசிரியரை. அவருடைய பாடலாக எடுத்துக்காட்டிய, " முத்தின் கனங்குழையை " என்றபாடல் அவர் இயற்றியவற்றுள் இன்னநூலிலுள்ளதென்று விளங்கவில்லை.

(பி-ம்.) 1 'ருயிருண்டென வுணர்வுண்டென' (௬)

14. வேல்போனிறை பொருதுண்பது மெய்யேயுயிர் பொய்யே
சேல்போற்கடை பிறழுஞ்சில கண்ணீர்கடை திறமின்.

எ - து கண்டாருடைய அறிவு நிறைவு ஓர்ப்புக் கடைப்பிடிகளைப் பொருது உட்கிடந்த உயிரையுண்ணும்பொழுது மெய்யே வேல்போன்று பின்னைப் பார்த்தார்க்குப் புடைபெயர்ச்சி பிறழ்ச்சி இனையசெயலாற் சேல்போற் பொய்யே தோன்றிக் கடைபிறழுஞ்சில கண்ணையுடையீர், கடை திறமின் எ - று.

இது கள்ளர்க்கு இலக்கணம் ; அது பொய்யும் மெய்யும் கலந்துதிரிதல்.

(வி - ரூ.) மூ. சில - இரண்டு ; " சில கெண்டை ", " சிலநூபுராரவம்", " சில குவடசையவும் " (தக்க. 24, 33, 42) என்பர் பின்னும் ; ' ஓரெழுத் தொரு மொழியுந் தொடர் மொழியு மென்றது ஈரெழுத் தொரு மொழியும் ஒதினர், சிலபலவென்னுந் தமிழ்வழக்கு நோக்கி ' (தொல். மொழி. சூ. 12-ந.) என்பர். உரை. நிறைவு - பலகுணங்களாலும் நிறைந்திருத்தல் ; அது சால் பெனப்படும். ஓர்ப்பு - அளவைகளானும் பொருந்துமாற்றானும் தெளிய ஆராய்தல் ; கலி. 133, ந. கடைப்பிடி - அறிந்தபொருளை மறவாமை அல்லது தேற்றம் ; இறை. சூ. 2, உரையைப்பார்க்க. " அறிவு நிறை ஓர்ப்புக்கடைப்பிடி " : சிலப். கூ : 72-5, உரை. (ரு)

15. வெங்கோல்வர [1]நீர்பெற்ற தலைக்கோல்வர விறல்வேள்
செங்கோல்வர வருவீருயர் செம்பொற்கடை திறமின்.

முன்னெல்லாஞ் சொன்னது தெய்வப்பெண்களான தேவரடியாரை. இப்பாட்டு உருத்திரகணிகையரான தளியிலாரை.

எ - து லோகத்துக்குச் சாந்தியாக நீங்கள் ஆடுகின்ற நூற்றெட்டுக் கரணமுடைய சௌபாக்கியமான சொக்கநிருத்தக் கூத்துக்கு முன்னே நின்ற சயந்தனை இந்திரபுத்திரன் வடிவிற் றலைக்கோற்கு வெங்கோலென் னும் நாமம்வரப் பின்னை வலியனாகிய வரிஷ்டத்தையுடையனை காம தேவன் செங்கோலான காமாக்கினை முன்னும்பின்னும் அருகும்வர வருவீர், உயர்ந்த செம்பொற் கதவுகளைத் திறமின் எ - று.

விறல்வேளென்றது இங்கே காமனை ; வேளென்பது தேவசேனாபதிக் கும் பெயராம்.

இனிச் சொல்லத்தக்க கடைத்திறப்புக்களெலலாம் எல்லாரையும் கலந்து சொல்லுவனவெனவுணர்க.

(வி - ரூ.) மூ. தலைக்கோல் - நாடகஅரங்கில் நாடகமகளிரை ஆட்டுவித்தற் குரிய கோல். அதன் இலக்கண முதலியவற்றைச் சிலப்பதிகாரம், அரங்கேற்று காதையாலும், அதன் இருவகை உரைகளாலும் உணர்க. அதனை யுடைய கணிகையர் தலைக்கோற்பட்டத்தினரென்று கூறப்படுவார். வரவிறல் வேளென்பதனை வரம் விறல் வேளெனப் பகுத்துக்கொள்க. உரை. உருத் திரகணிகையர் - சிவாலயப்பணி செய்யும் தாசிகள் : " உருத்திர கணிகை யாராம் பதியிலார் குலத்திற் றோன்றி " (பெரிய. தடுத்தாட். 132.) தளி யிலார் - கோயிற்றாசிகள் ; இவர் தளிப் பெண்டுகளென்றும் கூறப்படு வார் : " பொறுத்தகசம் - அட்டதிக்குஞ் சூழ்கோயி லாலவாய்ச் சொக்க ருக்குத், தட்ட தெடுக்குந் தளியிலாள் " (விறலி. 151.) சாந்தி - துன்பத்தை நீக்கும் பரிகாரம். கரணம் - கிரியை. சொக்க நிருத்தம் - சுத்தநிருத்தம் ; இது சாந்திக்கூத்து வகையினுள் ஒன்று ; இறைவன் சாந்தமாக ஆடியது ; நூற்றெட்டுக்கரணமுடையதென்பர் ; இந்த நூற்றெட்டுக் கரணங் களையும் விளக்கும் சிற்ப உருவங்களும், அவற்றின் விதியாகவுள்ள சுலோகங்களும் சிதம்பரம் கீழைக்கோபுரத்துள்ள தூண்களிலுள்ளன வென்று தெரிகிறது (Annual Report of South Indian Epigraphy, 1914) ; " வீழி மிழலையார், சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரு, நக்கர் ", " சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக் கம்பயின்றீர் " (தே.) உலகத்துக்குச் சாந்தியாக ஆடப்படுவதாதலின் இக்கூத்து, சோழர்

**கள்** காலத்தில் சிவாலயங்களில் நடத்தப் பெற்றுவந்ததென்று **சிலாசாஸனங்கள்** தெரிவிக்கின்றன. சயந்தனை இந்திரபுத்திரன் வடிவிற்றலைக்கோல்: இந்திரனுடைய அவைக்களத்திற் செய்த ஒருபிழையினால் அகத்தியமுனிவரால் மூங்கிலாகுமாறு சபிக்கப்பட்ட சயந்தன் அம்முனிவரைவேண்டத் தலைக்கோலாகும்பொழுது அவ்வடிவம் நீங்குமென்று பிரதிசாபமளித்தாரென்பதும், அதுமுதல் தலைக்கோல் சயந்தன்வடிவாக நினைத்துப் பூசிக்கப்பட்டு வருமென்பதும் நாடக நூல்களிற் கண்ட செய்திகள். இவற்றை, "தெய்வ மால்வரைத் திருமுனி யருள, எய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றானத்துச் சாபம் நீங்கிய.........மாதவி" (**சிலப்.** 3 ; 1 - 7) என்பதனாலும் அதன் உரைகளாலும், "வானவர் கோமான் வானிடையிருந்து" (**சுந்தரானந்தப் பிரகாசம்**) என்னும் ஆசிரியப்பாவாலும் உணரலாகும்.

(**பி-ம்.**) 1 'நிறை பெற்ற' (சு)

## வேறு

16. மூவராயவரின் முதல்வராயதிதி புதல்வராயமுப் பத்துமுத்
தேவராயவர்தம் ராசராசபுரி வீதிமாதர்கடை திறமினோ.

**எ - து** பிரமா விட்டுணு ருத்திரரென்னும் தேவர்மூவராவாரும் தாமேயாகி அவர் மூவரினும் வைத்துக்கொண்டு முதல்வராய், பின்னை அதிதி புதல்வரான முப்பத்துமூன்றுதேவர்கள் ஆராயும் அவருடைய இராசராசபுரித் திருவீதியிற் பெண்காள், கதவுதிறமின் எ - று.

அதிதிபுதல்வர் - காசியபருக்கு அதிதிவயிற்றிற் பிறந்தார்; அவர் துவாதசாதித்தரும் ஏகாதசருத்திரரும் அட்டவசுக்களும் அசுவினிகள் இருவருமாவார். தேவராயவர்தம் என்பதில், தேவர் ஆயும் அவரெனச் செய்யுமென்னும் பெயரெச்சத்தின் உகரமும் மகரவொற்றும் கெட்டனவெனவுணர்க; இது **வயிரமேக விருத்தியுள்** விளங்கும். ராசராசன்புரி ராசராசபுரியென னகரங்கெட்டது; "உயிரீ றாகிய வுயர்திணைப் பெயரும்" (**தொல்.** தொகை. 11) என்னும் சூத்திரத்துள்ள விகற்பாற்கொள்க.

(**வி - ரை.**) மூ. அதிதி - காசியபமுனிவர் மனைவியருளொருத்தி. ராசராசபுரி - முதல் இராசராசனால் அமைக்கப்பெற்ற தஞ்சையென்றும், இரண்டாம் இராசராசன் காலத்தில் வேறுசிலநகரங்களுக்கும் இப்பெயர் அமைக்திருந்ததென்றும் தெரிகிறது. இப்பெயர் இந்நூலுள், 17-20, 246, 778 என்னும் எண்ணுள்ள தாழிசைகளிலும் காணப்படுகின்றது. **உரை.** தேவர்கள் ஆராயும் அவரென்றது இராசராசபுரேசரை. **வயிரமேகவிருத்தி**யென்பது ஓர் இலக்கணநூலோ அல்லது ஒருநூலின்விரிவுரையோ தெரியவில்லை. வயிரமேகனென்பது பல்லவ அரசர்களுள் ஒருவன் பெயரென்று தெரிவதால் அவன்காலத்து இது செய்யப்பட்டிருத்தல் கூடும்; "மன்னவன் தொண்டையர்கோன் வணங்கு நீண் முடிமாலை **வயிரமேகன்**, தன்வலி தன் புகழ் சூழ்ந்த கச்சி யட்ட புயகரத் தாதி தன்னைக், கன்னிநன் மாமதிள் மங்கை வேந்தன் காமரு சீர்க்கலி கன்றிகுன்றா, இன்னிசை யாற்சொன்ன செஞ்சொன் மாலை யேத்தவல்லார்க்கிடம் வைகுந்தமே" (**பெரியதிரு.** 2. 8 : 10) ; உய்யக்கொண்டான் திருமலைக்கருகிலுள்ள ஒரு கால்வாய்க்கு '**வயிரமேகன் வாய்க்கால்**' என்ற பெயருண்டு. (எ)

17. [1]உம்பராளுமம ராபுரந்தவிர லோகபாலரெயில் காவல்கூர்
செம்பொன்மாடநிரை ராசராசபுரி வீதிமாதர்கடை திறமினோ.

**ஏ - து** தேவர்களால் ஆளப்படாநின்ற அமராபுரந்தவிர, உலோக பாலர்கள் மதிற்காவல்கள் சிறக்கச்செய்யும் செம்பொன் மாடநிரைகளை யுடைய இராசராசபுரித் திருவீதியிற் பெண்காள், கதவுதிறமின் எ - று.

எனவே, உம்பராளும் அமராபுரந்தவிர்ந்து இராசராசபுரி வீதியிற் புகுந்த தெய்வப்பெண்காளென்க. உலோகபாலரென்பதற்கு இந்திரன் முதலான திக்கிற்றேவரெண்மரையுங்கொள்ளாதே பூமியிலுள்ள இராசாக்க ளெனக்கொள்க. சோழனேவலின் அவர்கள் இராசராசபுரம் காக்கவந்தா ரென வுணர்க.

**(வி - கு.)** மூ. அமராபுரம் : நீட்டல் விகாரம். **உரை.** 'உம்பராளும் ......தெய்வப்பெண்காள்' என்றது இந்திரனுடைய வேண்டுகோளால் சுவர்க்கத்திற்குச் சென்று அவன் பகைவரோடு பொருது அவனுக்கு வெற்றியளித்த முசுகுந்த சக்கரவர்த்தி மீண்டகாலத்தில் அவனோடு வந்த தெய்வப் பெண்களை ; இது "விண்ணாடு காத்து முசுகுந்தன் மீண்டநாள், மண்ணாடு கண்ட மடந்தையரும்" (**இராசராச.**) என்பதனாலும் தெரிகிறது.

**(பி-ம்.)** 1 'உம்பராலுயர் புரந்தராதி யிகலோக பாலர்' (அ)

18. யாவரும்பரவு மிந்த்ரரும்பழைய சந்த்ரசூரியரு மெண்டிசைத்
[1]தேவரும்புகுதும் ராசராசபுரி வீதிமாதர்கடை திறமினோ.

**ஏ - து** எல்லாரும் வாழ்த்தும் தேவேந்திரரும் பழையராகிய சந்திர சூரியரும் அட்டதிக்குத்தேவரும் புகுதும் இராசராசபுரி வீதிமாதர் கடை திறமின் எ - று.

இந்திரரென்று பன்மைபடச் சொல்லலாயிற்று, பலருண்டாதலால். பழைய் சந்திரசூரிய ரென்றது அவர்களுடைய பழமைசொல்லியவாறு ; "தவலருந்தொல் கேள்வி" (**நாலடி.** 137) என்றதுபோல.

**(வி - கு.)** **உரை.** இந்திரர் பலரென்பதும் அவர்களுக்குரிய உலகங்கள் சௌதர்மம், ஈசானம், சனற்குமாரம், மாகேந்திரம், பிரமம், பிரமோத்தரம், இலாந்தவம், காபிஷ்டம், சுக்கிரம், மகாசுக்கிரம், சதாரம், ஸஹஸ்ராரம், ஆநதம், பிராணதம், ஆரணம், அச்சுதமெனப் பதினறுவகைப்படுமென்ப தும் சைனர்களுடைய கொள்கை ; இதனை **ஸ்ரீபுராணத்**தாலும் **மேருமந்தரபுரா ணத்**தாலும், "விட்டகார்முகில்" (**தக்க.** 258) என்னும் தாழிசையாலும் அறியலாம்.

**(பி-ம்.)** 'தேவரும் பரவும்' (க)

19. பாடியும்பணிந் தும்பராவியும் பண்டைநுங்கள்வட சேடிதென்
[1]சேடியுந்தவிர ராசராசபுரி புகுதுமாதர்கடை திறமினோ.

இது வித்தியாதர மகளிரைநோக்கிய கடைதிறப்பு.

**ஏ - து** கானம்பண்ணியும் வணங்கியும் பிரார்த்தித்தும் வந்து பண்டு நீங்களிருக்கும் வித்தியாதரலோகத்து வடசேடி தென்சேடியென்னும் வெள் ளியம்பெருமலையைவிட்டு இராசராசபுரியிற்புகுதும் வித்தியாதரப்பெண் காள், கதவுதிறமின் எ - று.

புகுதற்குக் காரணம், இது வித்தியாவினோதமுள்ள தேசமென்றும் ஈசுவரப் பிரத்தியட்ச தேசமென்றும் பிரார்த்திக்கும் பிரார்த்தனைகள் கிடைக்குமிடமென்றும் செம்பொன்மலைபோலு மாடங்களிருக்குமிடமென் றும் வித்தியாதர ஒழுக்கந்தவிர மனுநீதியால் ஒழுகலாமென்றுமே.

(வி - கு.) மூ. வடசேடி தென்சேடியென்பன வித்தியாதரர்களுடைய மலையாகிய வெள்ளியம்பெருமலையிலுள்ள பெரும்பிரிவுகளின் பெயர்கள்; இதனை, "விஞ்சை மன்னர்பாழ் வெள்ளிவெற்பு", "பாழ் வெள்ளிக்குன்று", "மேலாழி யார்வெள்ளி வேதண்ட லோகம்" (தக்க. 371,536,545) என்பவற்றாலும், அவற்றினுரையாலும், "வானுறை வெள்ளிவெற்பு", "மேகமே மிடைந்து தாழ விருள்கொண்ட வெள்ளிக் குன்றம், மாகத்து விளங்கித் தோன்றும் வனப்பு", "வெள்ளிவே தண்டத் தங்கண் வீவிறென் சேடிப் பாலிற்.........வெள்ளிவேற் கலுழ வேகன் வேதண்ட வேந்தர் வேந்தன்", "துளங்கு வெண்மதி யுகுத்தவெண் கதிர்தொகுத் ததுபோல், விளங்கு வெள்ளியம் பெருமலை யொழியவந் தெழிலார், வளங்கொண் மாநகர் மழகதிர் குழீஇயின போலக், களங்கொண் டண்டினர் கதிர்முடி விஞ்சையர் பொலிந்தே" (சீவக. 395, 526, 546, 2361), "விழைவுறு வெள்ளி வெற்பின் விஞ்சையர்க் கிறைவர் தாமே" (நைடத. சுயம்வரப். 128) என்பவற்றாலும், மேருமந்தர. 571 - ஆம் செய்யுள் முதலியவற்றாலும் உணர்க; "போய்த்தளியே, கோதண்டங் கொண்டிரு சேடியுடன்கொண்ட, வேதண்ட லோக விமலையரும்" என்பது இராசராச சோழனுலா. உரை. இதுவென்றது இராசராசபுரியை.

(பி-ம்.) 1 'சேடியுந்தவிரும் ராசராசபுரி வீதி மாதர்' (கo)

20. யாவர்தேவரிவர் தாமெனப்பெரிய [1]விருவர்தேவரிவ ரெளிவரும்
தேவர்தேவர்தமி ராசராசபுரி வீதிமாதர்கடை திறமினோ.

எ - து யாவர் தேவர்? இவர்தாமென்னலாம்படி சொல்லுகின்ற பெரிய இருவர் தேவராவார் பிரமா விட்டுணுக்கள். எளிவருந் தேவரென்றதும் இவர் தம்மையே. இவர்கட்குத் தேவராயவர்தம் இராசராசபுரிவீதிமாதர், கடைதிறமின் எ - று.

எளிவருந்தேவரென்பது, இவர்கள் கர்ப்பவேதனையும் மரணவேதனையும் பற்றுதலால். இவர்கட்குத் தேவரென்று மிகுத்துச்சொல்லியது இவர்களுக்குச் சநநமரணமில்லாத பதத்தைக் கொடுத்தலின்.

(பி-ம்.) 1 * 'விருவர் தேடரிய வொரு பெருந்தேவர்' (கக)

21. ஈருமதியமென முதியமதிவெருவி [1]
ராசராசநா யகர்முடிச்
சேருமதியமென விளையமதியொடுற
வுடையமகளிர்கடை திறமினோ.

எ - து ஒருதலைக் காமிகளுடைய புத்திகளையீருஞ் சந்திரனெனப் பூரணசந்திரனைப் பயப்பட்டுத் தாங்கள் காதலித்தபொருள் இராசராசபுரியில் இராசராசனுடைய நாயகனான ஈசுவரனுடைய திருமுடியிற் சேர்ந்திருக்கும் பாலசந்திரனென நினைத்து இளம்பிறையுடனளைந்து அளவளாவியிருக்கும் புத்தியையுடைய பெண்காள், கதவுதிறமின் எ - று.

மாலையம்பொழுதும் இளம்பிறையுமே மயக்குவது காமிகளையென வுணர்க. இதற்கு உதாரணம், "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருமிந் நோய்" (குறள். 1227) என்பது. நோயென்றது காமநோயை. திருமுடியிற் சேர்தலால், இளம்பிறை திருக்கொன்றைமாலையை ஒத்ததெனவுணர்க. இது விபரீதாலங்காரம்.

(வி - கு.) உரை. 'மாலையம்பொழுதும் இளம்பிறையுமே' என்றதில் உள்ள இளம்பிறை யென்றது ஈசுவரன் திருமுடியிற் சேராத பிறையை; சேர்ந்த பிறை இன்பத்தை யளிக்குமென்பது இவர் கருத்து; இஃது, "ஆர்த்தி கண்டுமென் மேனின் றழற்கதிர், தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர், நீர்த்த ரங்க நெடுங்கங்கை நீண்முடிச், சார்த்தும் வெண்மதி போன்றிலை தண்மதி" (பெரிய. தடுத்தாட்.) என்பதனாலும் விளங்கும். பிறை மாலையாகவும் கூறப்படும்; "உச்சி யிற்பனி வீசு கன்னியின் வெண்ணிலாவை யொதுக்கவே" (தக்க. 625) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி-ம்.) 1 'வெருவ' (௨௨)

22. [1]போயபேரொளி யடைத்துவைத்த[2]பல
புண்டரீகமிரு பொற்குழைச்
[3]சேயபேரொளி மணிப்பெரும்பரை
திறக்கவந்துகடை திறமினோ.

எ - து அத்தமன பருவதத்திற் சென்ற ஆதித்தியனால் அடைக்கப் பட்ட அநந்தம் புண்டரீகங்களை நும்முடைய முகங்களின் பக்கங்களிலுள்ள இரண்டு பொற்குழைகளிலும் சிவந்த பெரிய சோதியையுடைய மாணிக்கப் பெரும்பிரபையான சோதிமணிமண்டலம் திறப்பிக்க எழுந்தருளிக் கதவு களைத் திறமின் எ - று.

பேரொளி: பண்புத்தொகை; இஃது ஆதித்தியனுக்குப் பேரானது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. போயவென்னும் சொல்லால் இராத்திரியினஞ்சொன்னதுவுமாம். ஆதித்தியனால் அடைக்கப் பட்ட நும்மனைகளை நுங்கள் செவிகளிலுள்ள ஆபரணச்சோதிகளால் திறப் பிப்பீரென்பது பொருளாம். புண்டரீகமென்பது செந்தாமரைக்கும் பெயர்; புண்டரீகாட்சனென்ப; இது செந்தாமரைக்குப் பெயரன்றாயின், தந்திர வுத்தியாலும் தொடர்நிலைச் செய்யுளாலுமுணர்க.

(வி - கு.) மூ. குழைச் சேயபேரொளி மணிப்பெரும்பரை: "இரு குழையுமிள வெயில்விட", "குழைசுடச்சுட வெறிக்கும் வெயிலார்" (தக்க. 36,431.) உரை. புண்டரீகம்: இச்சொல் வெண்டாமரை யென்னும் பொருளில் வழங்குவது பெரும்பான்மையாயினும் செந்தாமரை யென்னும் பொருளில் இங்கே எடுத்தாளப்பட்டுள்ளது; "புண்டரிக மலரினுஞ் செய்ய வாய்" (தக்க. 24) என்பர் பின்னும். புண்டரீகாட்சனென்பது விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் 112 - ஆவது திருநாமம்.

(பி-ம்.) 1 'பொய்ய' 2 'சில' 3 'செய்ய' (௨௩)

23. தாம[1]வில்லுவெறு மொன்றுமுன்னமிவை
[2]சாமனார்கொடிகள் காமனார்
சேமவில்லென விசும்புவில்வெருவு
தெய்வமாதர்கடை திறமினோ.

எ - து பூந்தாமமாலை நாற்றின வில்லொன்றுமே பண்டுள்ளது காம தேவர்க்கு. இவை தேவசேனாபதியுடைய கொடிகளாகிய மயில்களாயிருந் தன; இவையிற்றிற் காமனாருடைய சேமவில்லொன்றுக்கு இரண்டுள்ளன வென நினைந்து ஆகாசத்திற் சோதிசக்கிரமுங்கூடப் பயப்படும்படியான தெய்விகத்தையுடைய மாதரீர், கதவுதிறமின் எ - று.

முருகக்கடவுளின் கொடி கோழிக்கொடியன்றோவெனின், அவர் மயிற் கொடியையுமுடையார்; "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ" (திருமுருகாற்றுப்படை, 122.) மற்றும் புராணங்களிற் கண்டுகொள்க.

(வி - ரு.) மூ. வெறுமொன்று: "வெறுமொருவன்" (தக்க. 25.) இவையென்று சுட்டியது மகளிர் உருவங்களை. சேமம் - க்ஷேமமென்பதன் சிதைவென்பர். விசும்பு வில் - விசும்பிலுள்ள ஒளி; இங்கே சோதிச்சக்கரத் திற்காயிற்று. உரை. தாமமென்பதற்கு மலரென்றும் ஒருபொருளுண்மை யால், மலர் வில்லெனலுமாம். ஒன்றுக்கு இரண்டென்றது புருவங்களை; "உருவிலாள னொருபெருங் கருப்புவில், இருகரும் புருவ மாக வீக்க" (சிலப். 2 : 44 - 5), "இரண்டில்லை யநங்கசாபம்" (கம்ப. கிட்கிந்தா. 10 : 55) என்பன இங்கே அறிதற்பாலன. முருகக்கடவுளுக்கு வாகனமும் கொடியும் மயிலென்பதை, 114-ஆம் தாழிசையுரையாலும், "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப், பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ" (பரி. 17 : 48 - 9), "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, ஒடியா விழவி னெடியோன்" (அகநா. 149 : 15 - 6), "மணிமயி லுயரிய மாறா வென்றிப், பிணிமுகவூர்தி யொண்செய் யோனுமென" (புறநா. 56 : 7 - 8) என்பவற்று ளும் உணர்க.

(பி-ம்.) 1 'வில்லுமிறு மென்று முன்னமிவைதாமனர் செல்கொடி' 2 'சாமனர் கொடு செல்காமனர்' (கச)

24. மையவாயருகு வெளியவாயசில
கெண்டைபுண்டரிக மலரினும்
செய்யவா[1]யுலக முறவுகோளழிய
நறவுகொண்மகளிர் திறமினோ.

எ - து கரியவாய் அருகு வெள்ளென்றிருப்பன சில கெண்டையினம் தாமரைப்பூவினும் மிகச்சிவக்கும்படி, இவை சிவத்தலால் உலகந் தாம் தம் மிற் சேர்வுசார்வழியும்படி காமபானம் பருகும் வாமமார்க்கப் பெண்காள், கதவு திறமின் எ - று.

உறவுகோளழிதல்: கரணம்வேறுபட இவர்தாமும் வேறுபட்டு நம்மு டையவரல்லரெனலன்றியே உலகத்திற் கண்டாரெல்லாரும் தம்மில் உறவு கலங்கி முறைமை மயங்கவும் படுதல்.

(வி - ரு.) மூ. கெண்டையென்றது கண்களை. உரை. பானத்திற் காம பானமென்றும் வீரபானமென்றும் இரண்டு வகையுண்டென்பர்; "காம வருத்திய பயிர்க்கு நீர்போ லருநற வருந்துவாரை" (கம்ப. ஊர்தேடு. 107); மதுரைக். 780 - ந. பார்க்க.

(பி-ம்.) 1 *'யுலகுதுறவு' (கரு)

25. கலகமாரன்வெறு மொருவனுலகு களவுபோகவிரு காலமும்
[1]திலகமாருநுத லளகபாரவிரு ளருளுமாதர்கடை திறமினோ.

எ - து காமவியசன கலகஞ்செய்யும் காமதேவனொருவனால், உலகத்து உணர்வும் ஒழுக்கமும் களவுபோகப் பகலுமிரவுமான இரண்டுபொழுதிலும் திருமுகங்களில் திலகமார்ந்த நெற்றியிற் பனிச்சையான அளகபாரத்தால் அந்தகாரத்தைக் கொடுத்தருளுமாதரீர், கதவுதிறமின் எ - று.

மாரனொருவனலென்றது, உலகத்துக்களவுகாண்பார்க்கு உடன்கள்ள ரும் ஒற்றிக்கொடுப்போரும் பெருநிலைநிற்போரும் கரவடசாத்திரமும்

வேண்டும். அன்றியே ஓரகத்துக்கு ஒருகள்ளனேயாகக் காமதேவன் இந்தச் சதுர்த்தசபுவனத்திலுமுள்ளாரறிவுகளை வாங்க, இராத்திரியல்லாத பகலும் அந்தகாரம்படப் பண்ணுவரென்பதுபொருள்.

(வி - கு.) மூ. இவர்களுடைய அளகத்தால் பகலிலும் இரவிலும் உலகத்தில் இருளுண்டாகின்றதென்பது இதன்பொருள். அளகபாரவிருள்; "அளிவளர்த்தன வெறிக்குழலெறிக்கு மிருளார்" (தக்க. 431) என்பர் பின்னும்; நுதலளகபாரம்: "அளக நன்னுதல்" (கம்ப.) மாரன் வெறுமொருவனுலகு களவுபோக: "அநங்கக் கள்வன்" (கம்ப. ஆரணிய. 9:7.) உரை. 'உணர்வு மொழுக்கமுங் களவுபோக' என்பதனோடு, "அளகமுமுகிலல வொருகூன, விழியின் வழிகெட விருள்வதொ ரிருளென" (திருப்.) என்பது ஒப்பிடற்பாலது. அளகம், பனிச்சையென்பன நுதலைச் சார்ந்த முன்னுச்சிமயிரின்பெயர்கள். ஒற்றிக்கொடுப்போர் - அங்கங்குச் சென்று ஒன்றிநின்று செய்திகளையறிந்துசொல்லுவோர்; ஒற்றர். பெருநிலை - பெரியவாயில்நிலை: "நிலைசெறி கபாடம்" (தக்க. 27.) கரவட சாத்திரம் - களவு நூல்; இது தந்திரகரணமென்றும் ஸ்தேயசாஸ்திர மென்றும் வழங்கப்படும். இந்நூலைச்செய்தவர் கசர் என்பவரின் ஆசிரியராகிய கர்ணீசுதரென்றும், களவின்சம்பந்தமான செய்திவகைகளை வாச்சியாயன சூத்திரம், மிருச்சகடிகம், சாகுந்தலம், மாளவிகாக்கினிமித்திரம் என்ற வடமொழி நூல்களின்பகுதிகளாலும் அவற்றின் உரைகளாலும் அறியலாமென்றும் வடமொழிவாணர் கூறுவர். ஓரகம் - ஒருவீடு. சதுர்த்தசபுவனம் - பதினன்கு உலகம்.

(பி-ம்.) 1 'திலகபாரநுதல்', 'திலகபாடநுதலருளுமாதர்கடை திறமினோ கடை கடிறமினோ' (கசு)

26. எளிவருங்கொழுநர் [1]புயமுநுங்களிரு
குயமுமண்டியெதி ரெதிர்விழும்
தெளிவருங்கலவி புலவிபோலினிய
தெய்வமாதர்கடை திறமினோ.

எ - து நும்மைக்கண்டால் எல்லா எளிவரவும்படும் பிராணவல்லபருடைய தோள்களும் நம்முடைய குயங்களும் இரண்டுக்கிரண்டு தம்மில் ஒன்றுக்கொன்று மண்டிமேலேறி எதிரேற்றுக்கொண்டு புரண்டுவிழுகின்ற பொழுதத்து உணர்விற்குத் தெளிவுவருதலரிதான சுரதானுபோகக்கலவி புலவிபோல இனியமாதர், கடைதிறமின் எ - று.

"ஊடுதல் காமத்துக் கின்பம்" (குறள். 1330) எனவும், "ஊடினும் புணர்ந்த தொத் தினியவள்" (சீவக. 1996) எனவும் வருவனகாண்க.

(வி - கு.) மூ. மண்டி - நெருங்கி.

(பி-ம்.) 1 'புயமுமுங்களிரு' (கஎ)

27. உலகபாடமனு வெனவுலாவுவன வொழுகுநீணயன முடையநீர்
[1]திலகபாடமிருள் பருகவந்துநிலை செறிகபாடநிரை திறமினோ.

எ - து உலகத்தில் உயர்ந்தாரெல்லாரும் மனுநீதியைத் தப்பென்னக் காதளவும்நீண்ட கருங்கண்களையுடைய நீங்கள் நுங்கள்திருமுகமீது நெற்றியிலிட்ட திலகத்திலுண்டானசோதி பாடஞ்செய்தலின் அதனால் இருளைக் கவர்ந்தருளி நிலைசெறிந்த கதவுநிரைகளைத் திறமின். எ - று.

எனவே கண்களால் உலகத்தார் மனங்களில் இருள்களைப் புகப்புகப் பெய்து உலகத்திலிருளைத் திலகத்தால் வாங்குவீரென்பது பொருள். பாடம் - சோதி. கபாடம் - கதவு.

(வி - கு) மூ. உலகு அபாடம். மனு - மனு ஸ்மிருதி. பாடம் : "பல்லாயிர மாமணி பாடமுறும்" (கம்ப. சரபங்கர். 11.)

(பி-ம்.) 1 'திலகபாடவிருள்' (கஅ)

28. அரனுமேனை யிமையவருமுண்பரென
வஞ்சிநஞ்சுமமு தமுமுடன்
திரைமகோததியைவிட விருந்தனைய
தெய்வமாதர்கடை திறமினோ.

எ - து மகாதேவரும் புரந்தராதி தேவர்களும் உண்பரெனப் பயப்பட்டு நஞ்சும்அமுதமுமான இவையிரண்டும் சமுத்திரத்தைவிட்டு வேறோரிடத்துவந்திருந்தனைய தெய்வப்பெண்காள், கதவுதிறமின் எ - று.

இஃது என்சொன்னவாறோவெனின், கடலிற்பிறந்த நஞ்சுகாணின் இவ்வாலகாலம் லோகத்தைச் சங்கரிக்குமென்று மகாதேவர் அமுது செய்தருளுவரென்று பயப்பட்டு அவராற் சங்கிரகிக்கவும் அருகுசெல்லவும் அரிதாயிருந்துள்ளதானந்தேடி நஞ்சுபுக்கு இருந்ததெனவும் இந்திராதி தேவர்கள் கடலிற் பிறந்த அமுதுகண்டால் அசுரர் இதனையுண்டால் நம்மைப்போல நித்தியத்துவம்பெறுவரென்று கருதி அத்தேவர்கள் அதை வாங்கியுண்பரென நினைந்து அஞ்சி அத்தேவர்களுக்கு முட்டவும் எட்டவும் அரிதாய இடந்தேடி அமுதமிருந்ததெனவுமுணர்க. எனவே இந்தப் பெண்களுக்கு நஞ்சும் அமிழ்துமல்லாத மற்றுறுப்புக்களில்லை யென்று கூறினாராயிற்று.

இப்பாட்டில் தெய்வமாதரென்னுஞ்சொல்லில், மாதரைக் காதலாக்கி அதனைப் பெண்களின் பெயராக்கியும், தெய்வமென்பதைத் திவ்வியமான வஸ்துவின் பெயராக்கியும், அவற்றை ஆகுபெயராக்கியும், நஞ்சு கண்களாகவும் அமுதம் குயங்களாகவுங்கொள்க. இது குறிப்பிறுற் றோன்றல். கண்களினருகு மகாதேவர்க்குப் போதலரிதெனவும் குயம் தேவர்களுக்குத் தீண்டலரிதெனவுங்கொள்க. குயத்தை அமுதென்கைக்குக் காரணம், அமிர்தகலசத்து உவமைபெறுதலும் சகத்திரவேதியாகலும் முப்பத்திரண்டுறுப்பும் ஒப்ப இனிமைபெறுதலுமாம். கண்களை நஞ்சென்கைக்குக் காரணம், உலகத்துயிரும் அறிவும் வாங்குதலும் கறுத்திடுதலும் கொடுமையுடைமையுமாம். அன்றியே கண்கள் செய்த வியசனவிஷத்தையும் கொங்கையென்னுமமுதம் தீர்ப்பதெனவுமுணர்க ; "பந்துவினை யாடிய பாவைதன் முகத்துச், சிந்தரி நெடுங்கணென் னெஞ்சம் போழக், கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல், ஆற்றே னவ்வழ லவிக்குமா மருந்து, கோற்றேன் கிளவிதன் குவிமுலை யாகும்......பரந்துரைத் தென்னை பாவையிக்குறை, இரந்தனனியான்" (4. 13 : 69 - 91) என்பது **உதயணன் கதை ;** "துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்ற மாய்வான், பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர் நுண்டாது போர்க்குங் கானல், நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த, உறைமலி யுய்யாநோ யூர்சுணங்கு மென்முலையே தீர்க்கும் போலும்" (**கானல் வரி,** 8.) இது **சிலப்பதிகாரம்.** மற்றும் இப்பெற்றியன வெல்லாமுணர்க. மகாதேவர் முற்படவும் அவர்க்கு நஞ்சும், தேவர்கள்பிற்படவும் அவர்கட்கு அமுதமுங்கொண்டது, பெண்கள் கண்

ணற்பட்ட விஷ வியசனம் அவர்கள் குயத்தாலல்லது தீராதென்பதைக் கூறுதல்பற்றி.

(வி - கு.) மூ. நஞ்சுமமுதமும் : " பசும் பொற்குழைதோய், நயனுர விந்தத்து நஞ்சுநும் வாயிதழ் நல்லமுதம், அயனுர் படைத்தில ரேலடங்காதவ் வரனுக்குமே" (தஞ்சை. 135.) உரை. முட்ட - சந்திக்க. மாதரைக் காதலாக்கி : "மாதர் காதல்" (தொல். உரி. சூ. 30.) நஞ்சு கண்கள் : "விழிவிடமுடுதலின்" (தக்க. 39.) அமுதம் குயங்களாகவும் : "அமிர்து பொதிவன சிலகுவடு" (தக்க. 42); "தங்குகண் வேல் செய்த" (கலிங். 33.); "அணங்கு மமுதமுமாய்த் தோன்றி - இணங்கொத்த, கொங்கையாள்" (ஆதியுலா. 177 - 8.) சகத்திரவேதி - ஆயிரம்பேரை மயக்குவது; தக்க. 593, உரையைப் பார்க்க. முப்பத்திரண்டுறுப்பு : 'முப்பத்திரண்டுறுப்புடன் புணர்ந்தது மக்கட்சட்டக மென்றால் முப்பத்திரண்டுறுப்பினும் தீர்ந்தது மக்கட்சட்டகம் இல்லை' (யா. வி. சூ. 1, உரை); "அவயவ மொன்றுக் கொன்று, முப்பத் திரண்டு கண் வேண்டுங்கண் டாயென் முகத்தினுக்கே" (தனிப். 'செப்பத்தில்'); முப்பத்திரண் டுறுப்பாவன கூந்தல் முதல் கிளவி ஈறாகவுள்ளவையென்பர்; இவற்றையும் இவற்றின் இலக்கணங்களையும் திருவிளையாடற் புராணம், வேல்வளை செண்டு கொடுத்த படலம், 30-ஆவது செய்யுள் முதலியவற்றால் அறியலாகும். " மழை பிறைசிலை வேல்" (56) என்னும் செய்யுளில் மகளிருடைய முப்பத்திரண்டுறுப்பும் கூறுவர் திருவரங்கக் கலம்பக முடையார். இவ்விலக்கணத்தை வடமொழியில் இயற்றிய ஆசிரியன் வருணனென்று தெரிகிறது. (கக)

29. மிசையகன்றுயரு [1]நகின்மருங்குல்குடி
[2]யடிபறிந்த தழுவிடுமெனத்
திசையகன்றளவு மகனிதம்பதட
[3]முடையமாதர்கடை திறமினோ.

எ - து மேலே அண்ணாந்து உயர்ந்து அகன்று வளருங் கொங்கைகள் ஒருகாலைக்கு ஒருகால்வளராநின்றன; இடையானது குடியிருக்கமாட்டாது அடிபறிந்தது; இதனைக் கொங்கைகள் அழவிடுவது போன்றிருந்தன; இவ்விடைக்கு மேனின்ற கொங்கைகள் சத்துருவானால் இவ்விடைக்குக் கீழ் நின்ற நாம் இந்த இடையைப் பரிகரிப்போமெனநினைந்து கொங்கைப்பெருமைக்குத் தக்கபடி வரவேண்டுமென்றெண்ணி எண்டிசைகளின் அகன்று விரிந்து நின்ற நிதம்பதடத்தையுடைய பெண்காள், கதவுதிறமின் எ - று.

தடம் - பெருமை.

(வி - கு.) மூ. குடியடிபறிந்தது - குடியிருக்கமாட்டாது அடியற்றது; "பலகுல விலங்கன் மேருவொடு குடியடி பறிந்த" (தக்க. 144) என்பர் பின்னும். இத்தாழிசையுடன் 37 - ஆம் தாழிசை ஒப்புநோக்கற் பாலது. உரை. அண்ணாந்து.........கொங்கைகள் : " அண்ணாந் தேந்திய வனமுலை" (நற். 10 : 1.) பரிகரிப்போம் - பாதுகாப்போம்; " தற்காத்தன்று" (பு. வெ. 278) என்பதற்கு, 'தன்னைப் பரிகரித்தது' என்று பொருளெழுதி யிருப்பது இங்கு உணரற்பாலது.

(பி-ம்.) 1 'முலை' 2 'யடி பறிந்த தனிவிடும்' 3 'முடையரம்பையர் கடிறமினோ' (உ0)

## வேறு

30. மகரவாரிதி மறுகவாசுகி வளையமேருவில் வடமுகச்
சிகரசீகர வருவிநீரர மகளிர்நீர்கடை திறமினோ.

இது நீரரமகளிரைநோக்கிய கடைதிறப்பு.

**எ - து** சுறுவென்னு மீனமுடைத்தான மகாசமுத்திரம் வயிறுமறுகப் பண்டு வாசுகியென்னும் மகாநாகத்தாலே வளையப்பட்ட மகாமேருபர்வதத்தில் வடமுகச்சிகரபருவதமான மந்தரபருவதத்துத் திரிவினாற் கடற்றிவலையிற் புறப்பட்ட அருவிநீரினின்றும் தோன்றிய தெய்வப்பெண்காள், கதவு திறமின் எ - று.

வாரிதி - கடல். மேருவின் வடமுகச் சிகரமெனவே மகாமேருவையல்லது மத்தாகக்கொண்டது மகாமேருவின் வடபக்கத்தேயுள்ள மந்தரமென்னுஞ் சிகரத்தை யெனவுணர்க. சீகரம் - திவலை. இங்ஙனம் உற்பவித்தாரென்றது வங்கிசசுத்தம் சொன்னவாறு.

இவரும் தேவரடியாரென வுணர்க.

(வி - கு.) மூ. மகர வாரிதி : "மகர மேய்தட மகோததி" (தக்க. 31.) **உரை.** மந்தரமலை மேருவின் கீழ்த்திசையிலுள்ளதென்பர் **கந்தபுராண முடையார்.** திரிவு - சுழற்சி. மகாமேரு மத்தாகக் கொள்ளப்பட்டதென்பது ஒருசாரார் கொள்கை; "**வடவரையை மத்தாக்கி**" (சிலப். 17 : முன்னிலைப் பரவல், 1); '**மேருவரை மத்தத்திற்** சுற்றுக்கயிறுவாசுகி யென்னும் பாம்பாகச் சுற்ற" (சிலப். 17 : பாட்டு, 2 - உரை); "இமிழ்திரை முற்றத்து **மேருமத் தார்த்து**" (**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்,** 4.) (உக)

*31. வடபகீரதி குமரிகாவிரி யமுனைகௌதம மகரமேய்
தடமகோததி யிவைவிடாதுறை தருணமாதர்கடை திறமினோ.

**எ - து** வடக்கிற் கங்கையும் குமரியும் காவிரியும் யமுனையும் கோதாவிரியும் மகரமீன்மேயு மகாசமுத்திரமும் இவையிற்றைவிடாதேவசிக்குஞ் சலவாசப்பெண்களான இளைய நீரரமகளிர்காள், கடைதிறமின் எ - று.

பாகீரதி பகீரதியெனச் செய்யுளாதலிற் குறுக்கும்வழிக் குறுகியதெனவுணர்க. கௌதமை யென்பது கௌதமனாற் கொணரப்பட்ட கங்கா தீர்த்தமான ஏழு கோதாவரி; இது கார்க்கியமதம். தருணமென்பது இளமை; "தருண ரவிகிரண புஞ்ச ரஞ்சித பாடலம்" என்பது **காதம்பரி.**

(வி - கு.) மூ. 'வட பகீரதி' என்றது தென்குமரியென்றாற்போல நின்றது. **உரை.** ஏழு கோதாவரி : ஸப்தகோதாவரியென்பது வடநூல் வழக்கு. கோதாவரியைக் கௌதமர் கொணர்ந்தகதை, '**போஜராஜீயம்**', '**கோதாவரி மாஹாத்மியம்**' என்பவற்றிலுள்ள தென்பர். கார்க்கிய மதம் - கர்க்கியரென்னும் முனிவருடைய கொள்கை. (உஉ)

32. உருகுவாருயிர் படுபடாமுலை [1]யுழறுமேலுல கிறுமெனத்
திருகுவார்முசி விசிவிடாதவர் திறமினோகடை திறமினோ.

**எ - து** நும்மைக்கண்டால் மனமுருகுவார் யாவர் சிலர் அவர்களுடைய உயிரகப்படவும் தாம் படாத முலையானவை உழறுமாகில் உலக மடங்கச் சங்காரப்படுமென நினைத்தாற்போலத் திருகிக் கட்டப்பட்ட கச்சுக்கட்டுண்டு முசியிலும் கட்டவிழாத பெண்காள், கதவுதிறமின் எ - று.

உழறுதல் - உருக்காட்டுதல். வார் - கச்சு. திறமினோ திறமினோவென் பது புனருத்தியல்ல; வியவகாரம். விடாதவரென்றது - விளியேற்றதல்ல; முன்னிலை.

(வி - ரு.) மூ. உழறுமேல்: "செண்டடித் துழறத் திருவுள்ளமே", "உலகமெல்லா முழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே", "பெரு மாநிலத்தி னெல்லை யெல்லா, முழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே" (தே. திருவால. திருவாரூர்); "மற்றென்னைக் கண்டுழறு நெகிழ்ந்தாய்" (பெருமாள். 6 : 8), "ஊதை திரிதந் துழறி புண்ண" (பெரியதிரு. 9. 5 : 2.) முசித்தல் - நெருங்கல் (பதிற்.); மெலிதலுமாம். இந்நூல் 83 - ஆம் தாழிசையும், "அணிமூலைகண், மைந்தர் மனங்கவரு மென்பதனுன் - முந்துறவே, பூங்கச்சி னுலடையப் பூட்டுமீஇ" (ஆதியுலா. 158 - 9.) என்பதும் இத்தாழிசையின் பொருளோடு ஒப்புநோக்கற்பாலன. உரை. வியவகாரம் - வழக்கு.

(பி-ம்.) 1 'யுழலு' (உ௩.)

*33. மந்தமேசில நூபுராரவ மகிழ்நர்சேகர மதுகரம்
சிந்தமேல்வரு மேகலாரவ முடையநீர்கடை திறமினோ.

எ - து மந்தவோசைபடச் சில சிலம்பின் ஆரவாரம் நும்முடைய பிராண வல்லபருடைய முடிகளிலுள்ள வண்டினங்களைச் சிதற அவற்றின் மேலே வருமேகலையின் ஆரவாரமுமுடைய பெண்காள், கதவுதிறமின் எ - று.

நூபுரம் - சிலம்பு. சேகரம் - தலைச்சூட்டு. மதுகரம் - வண்டு. "கிழ வோன், சென்னி மிதித்த பஞ்சி மெல்லடிப், பொன்செய் கிண்கிணி யின்னரி யொடுக்கிப், புலவிபெயர்த்த." இஃது உதயணன் கதை; "குஞ்சிமேலனிச் சம்மலர் கூட்டுணும், அஞ்சி லோதிய ரம்மலர்ச் சீறடி" (134); இது சிந்தாமணி.

(வி - ரு.) மூ. மந்தம் - மந்தவோசை; "குரன்மந்தமாக" (சிலப். ஆய்ச் சியர்.), "மந்தமுழவுங் குழலுமியம்பும் வளநாவலர்கோன்" (தே. சுந்தர.) சில - இரண்டு; "சில கண்ணீர்", "சிலகெண்டை", "சிலகுவடு" (தக்க. 14, 24, 42.) நூபுர அரவம் - சிலம்பின் ஒலி. மேகலா அரவம் - மேகலையின் ஒலி. உரை. தலைச்சூட்டு - முடிச்சுற்று, மாலை; "முடிச்சூட்டு முல்லையோ" (தக்க. 119), "சூட்டொடு விரைஇச் சுற்றுபு முடித்து" (பெருங். 2. 5 : 175.) சூட்டின் இயல்பை, 119-ஆம் தாழிசையாலும் அதன் குறிப்பு முதலியவற்று லும் அறிக. (உ௪)

34. நாவிமான மணங்கமழ்ந்திள நவ்விமான மலர்ப்பெருந்
தேவிமான விமானவாயில் [1]புகுந்தரம்பையர் திறமினோ.

நாவிமான் - கஸ்தூரி மிருகம்; 'அ' என்பது ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு.

எ - து கஸ்தூரி மிருகங்களென மணங்கமழ்ந்து இளைதாயிருந்த மான் கன்றுகளை யொப்பத் தாமரைமலரில் இருந்த திருவானதேவி இலச்சிப்பக் கோயில்வாயில் புகுந்து அரம்பையொப்பீர், கதவு திறமின் எ - று.

கஸ்தூரிமிருகத்திற்கு அகரப்பன்மை கொடுத்தது, கஸ்தூரிபோலும் சுகந்தங்களெல்லாவற்றையும் நினைத்தெனவுணர்க. இளநவ்விக்கு ஒப்புக் கொடுத்தது, அதன்விழி நோக்கிற்கு உவமையாதல்பற்றி. நவ்விக்கு இலச்சை கொடாது விட்டது, மிருகசாதிக்கு இலச்சையில்லையென நினைந்து. ஸ்ரீ தேவிக்கு இலச்சை கொடுத்தது, பெண்ணுதலால், அவள் இலச்சித்தற்குக்

காரணம், ரூபசௌந்தரிய சௌபாக்கியங்களை நினைத்தே. அரம்பையரென்றது, அரம்பைபோல்வாராகிய பெண்களை. இதற்குக் காரணம் அரம்பை யொருத்தியே யுள்ளாளாதலால் ; அருச்சுனர் வருக, பீமசேனர் வருக, தருமபுத்திரர் வருகவென ஒருவர்குணம் பலர் பக்கல் இருப்பக்கண்டால் இவ்வாறுரைப்பர் உலகத்தார்.

(வி - கு.) மூ. விமான வாயில் : தேவசாதியினர் விமானவாசிகளானமையின் இங்கே அரம்பையர்க்கு விமானம் கூறப்பட்டது ; தேவரை வைமானிகரென்பர் வடநூலார் ; "வேமானியர்தம் மகளின் விரும்ப நனிசேர்ந்தாள்" (சீவக. 2455). உரை. அரம்பைபோல்வாரை அரம்பையரென்றது போல 275-ஆம் தாழிசையில் நாராயணன்போல்வாரை நாராயணரென்றது ஈண்டறிதற்பாலது.

(பி-ம்.) 1 'புகுதெய்வ மாதர் கடைதிறமினோ', 'புருந்தரம் பையர் கடிறமினோ' (உரு)

35. [1]எளிவராமிர்த மதனனுள்படை யிறைவர்சீறினு மினியெனுத்
[2]தெளிவராமிர்த மதனனுள்வரு தெரிவைமீர்கடை திறமினோ.

எ - து ஈசுவரனால் இறந்துபோன காமதேவனது படையான பஞ்சபாணங்களும் இட்சுசாபமும் ஈசுவரனே கோபிக்கினும் எளிவரவுபடா இனியென்று உலகு சொல்லும்படிக்கீடாகத் தெளிந்து வரிஷ்டமான அமுது கடையுநாளிற்பிறந்த தெய்வப்பெண்காள், கதவுதிறமின் எ - று.

மிர்தமதனன் - மரித்த காமதேவன். ஆள்படை - அவனுளும்படை ; கரும்பும் பூவும் முதலாயின. வர அமிர்தமென்பது, "அகஸ்ஸவர்ணே தீர்க்கம்" (வியாகரண சூத்திரம்) என்பதனால், வராமிர்தமென்றுயிற்று ; தீர்க்கசந்தி. அமிர்த மதனநாள் - அமிர்துகடையும் நாள் ; மதனம் - கடைதல். இதனைப் பசுந்தமிழாற் சொல்லின், "எளிவராமிறுத மதனனுள்படை யிறைவர்சீறினு மினியெனுத் தெளிவராமிறுத மதனனுள்வரு தெரிவைமீர் கடை திறமினோ" என்க. இதுபோலுந் தமிழுக்குச் சிறப்பு ; "வடசொற் கிளவி வடவெழுத்தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (தொல். எச்ச. 5) என்றார்.

(வி. கு.) மூ. எளிவரா : அஃறிணைப் பன்மைவினைமுற்று. மகளிர் மதனன்படையெனப்படுவார் ; இது, "பொன்னிற் குலவு மோரிரண்டு பொருப்பு விருப்பி னுடன்பரித்து, மின்னிற் குலவு மென்படைக்கு மெலியாதெவரே வலியாரே" (பாசவதைப். 359) என்பதனாலும் அறியப்படும். வராமிர்தம் : "வராமிர்த சீகரம்" (தக்க. 284.) வராமிர்த மதனனுள்வரு தெரிவைமீர் : "கோழியிற் சோழ குலத்தொருவன் முன்கடைந்த, ஆழியிற் கொண்ட வரம்பையரும்" என்ற இந்நூலாசிரியர் வாக்காகிய இராசராச சோழனுலாக்கண்ணி ஈண்டு அறியற்பாலது. உரை. தீர்க்கசந்தி : தீர்க்கம் - நெட்டெழுத்து. பசுந்தமிழ் - செவ்வித் தமிழ் ; "பாதஞ் சிவக்கப் பசுந்தமிழ் வேண்டிப் பரவைதன்பால், தூதன்று சென்றதென் னூரூர்த் தியாகர்" (திருவாரூர்க்கோவை.)

(பி-ம்.) 1 *'எளிவராமிறுத' 2 'தெளிவராமிறுத' (உசு)

## வேறு

36. நெளியுமகரவிரு குழையுமிள வெயில்விட
நிறையுமதியிரவு [1]மழுகிநிலை கெடநகைத்

தெளியுநிலவுபக லினுமுளரி கெடமலர்
திலகவதனசுர மகளிர்கடை திறமினோ.

**ஏ - து** பார்த்தார்க்குப் பணியின் அழகால் உயிர்பெற்று நெளிவது போன்றிருக்கும் மகரபத்திர விசித்திரக் குழையிரண்டும் தம்மிலிட்ட இரத்தினங்களால் இளவெயில்போலச் சோதிவிட்டு விளங்கப் பூரணசந்திரன் இராத்திரியிலும் ஒளிமழுங்கித் தன்னிலை கெடவும் இனியசிரிப்பினாலே தெளிந்துவிளங்கும் நிலாப்பிரகாசத்தினாலே பகலிலும் தாமரை மொட்டிப்ப மலரப்பட்ட திலகமுகத்தையுடைய தெய்வப் பெண்காள், கதவு திறமின் எ - று.

குழையிலுள்ள மாணிக்கவெயிலாற் சந்திரன் இராத்திரியிலும் ஒளி கெடச் சிரிப்பின் நிலாவாலே பகலிலும் தாமரை மொட்டிப்ப, வெயிலாலும் நிலாவாலும் விநியோகங்கொண்டு மலர்கின்ற திலகமுகத்தையுடைய பெண்காள், கதவுதிறமினென்பது பொருள்.

இவைபடுகின்ற பாடுகண்டால் உலகுபடுதல் உரைக்கவேண்டாவென்றவாறு.

(வி-கு.) மூ. இத்தாழிசையின் பொருளோடு 431-ஆம் தாழிசையின் முதலடி ஒப்புநோக்கற்பாலது. மழுகி: "மதிமழுகி" (**புறநா.** 377 : 12.) **நகை - நகையால். உரை.** பணி - வேலைப்பாடு. மொட்டிப்ப - இதழ் குவிய. விநியோகம் - உபயோகம்.

(பி-ம்.) 1 'மழுகி நிலையது' (உஎ)

37. அருகுதிசையருகு கடிதடமு மிசைவெளி
அகலமடையவளர் தனதடமு மவையவை
திருகுசெருநினைய நினையநடு [1]விடையிறு
திகிரிவரையிலர மகளிர்கடை திறமினோ.

**ஏ - து** பெருகப்படுகின்ற திக்கடங்கச் சுருங்கும்படி அகல்கின்ற கடிதடங்களும் மேலான வெளியாகாசவகலமடங்க வளர்கின்ற குயங்களும் அவையவை தம்மிலே சினங்கொண்டு மிருதிபடப் பகைநினைந்து தம் பெருமைகாட்ட நடுநின்ற மத்திய தேசமான இடை நடுநிற்கப்பயப்பட்டு இற்றுப்போயினதுபோல நடுவின்றியிருக்கும் வடிவையுடைய சக்கிரவாளபருவதத்திலிருக்கும் வரையரமகளிர்காள், கதவுதிறமின் எ - று.

அருகுதல் - பெருகுதல்; "உருவினு மிசையினு மருகித் தோன்று, மொழிக்குறிப் பெல்லா மெழுத்தி னியலா, ஆய்த மஃகாக் காலையான" (மொழி. 7.) இது **தொல்காப்பியம்.** இனி, அருகுதல் - சுருங்குதல்; "வெண்மழை, யருகித் தோன்று மச்சிரக் காலத்து, மாங்க தன்றயு மோங்கிரும் பரப்பின், வங்க வீட்டத்துத் தொண்டியோ ரிட்ட" (14 : 104 - 7); இது **சிலப்பதிகாரம்;** "அருகிக் கஃயோ டகவன் மருங்கின்" (ஒழிபு. 5); இது **காரிகை.** கடிதட மென்பது கடிப்பிரதேசமென்னும் ஆரியச்சொல்; தடம் - பெருமை. வெளி - ஆகாசம். தனமும்: ஆரியசசொல். அவையவை யென்றது கடிதடமிரண்டையும் தனமிரண்டையும்.

(வி - கு.) மு. மு. = **தக்க.** 29. அருகு திசை: "அருகு நேமி" (**தக்க.** 104.) திகிரிவரையிலரமகளிர்: "சோளன் பரிசாந்தோர் சூழ வருஞ்சக்ர, வாள கிரியிலர மங்கையரும்." (**இராசராச.** 71.) **உரை.** கடிதடம்: "அகல்கின்ற" (**திருச்சிற்.** 4.)

(பி-ம்.) 'விடையறு' (உஅ)

## வேறு

38. [1]உலருமுதுமர மிளமையும் வளமையும்
உயிருநிலைபெற வொளிவிடுமிவருரு
உறுதியமுதினு மிவரிவர்பிறவியும்
[2]உததியிவர்களி லொருமகடிருமகள்
அலகில்சுரபதி மதனர்களரசிவர்
அவரதிகிரியு மனிகமுமகிலமும்
அலகில்புவனமு மிவரிவரெனவரும்
[3]அமரர்வனிதைய ரணிகடைதிறமினோ.

எ - து வருஷாகாலத்திலும் கோடைபோலத் தன்முதுமையால் உலரு மரமுங்கூட இளமையும் வளமையும்பெற்றுப் பிராணனும் பெற்று நிலை நிற்கச் சோதிவிடும், இவர்களுடைய ரூபச்சாயை. அமுதினும் விளங்குறுவர் இவர்; இவர் பிறவியும் மதன சமுத்திரத்திலே; இன்னும் இவர்களில் ஒருத்தியே ஸ்ரீ தேவியென்று உலகத்தாரால் சொல்லப்படுகின்ற லட்சுமியும். குற்றமும் கணக்குமில்லாத தேவேந்திரனும் காமதேவனுமெனப்பட்ட அவருடைய இராச்சியபாரஸ்ரீயும் இவரே; அவ்விருவருடைய சக்கிரங்களும் தந்திரங்களும் மற்றும அவருடையனவும் இவராதலால் எல்லா லோகங்களும் இவருடையவென உயர்ந்தோர் சொல்லவரும் தேவலோகத்தி லுள்ள பெண்காள், கதவுதிறமின் எ - று.

மரத்தின் வளமையாவது தளிரும் இலையும் கொம்பும் தழையும் பூவும் பிறவும். உயிருநிலைபெற என்றது விருட்சத்துக்கும் வல்லிசாதி சசியங்களுக்கும் பிராணனுமுளவென்னும்பொருள் நிலைநிற்ப வென்றவாறு. இதில் அதிகம் மாகேசுவரமாதலிற் புத்தரையழித்தது. உறுதியமுதினுமென்றது ஈண்டுக் கடல் கடைகிற காலத்துக் கற்பகவிருட்சமும் சுரபியும் அகலிகையென்னுந் தெய்வப் பெண்ணுந்தோற்ற இந்திர கௌதமர் அகமருஷணங் கிடந்தகதையாலுணர்க; கற்பகசுரபிகள் அமிர்தங் கொடுக்கவல்லன; இவரைக் கொடுக்கமாட்டா; இவர் போல்வாரைக்கொடுக்கும். இவருற்பவித்தது மதனசமுத்திரத்திலே; உததி - கடல். இவர்களில் ஒருத்தி திருமகளாதலே அரம்பை முதலான தெய்வப் பெண்களும் திருமகளும் அமுதுகடைகிறகாலத்துக் கடலிற் பிறந்தாரென்பதனாலுணர்க. இது வேதகதை. இந்திரனும் காமனும் இராச்சியம் பண்ணுவது இவரால்; இந்திரபதம்வேண்டித் தவம்பண்ணுவாரைத் தவமழிப்பாரிவர். காமதேவனுக்குச் சயங்கொடுப்பாருமிவர். இன்னமும் இந்திரகாமதேவர்க்குச் சக்கிரஞ்செலுத்துவாருமிவர். எனவே இந்திரனேவினவிடத்துப்போய், இந்திரசயம் பண்ணுவாரையும் சயஞ்செய்வாரிவர்; காமசக்கிரம் செலுத்துவாருமிவர்; அவரிருவர்க்கும் தந்திரமும் இவரேயெனவுணர்க. திகிரி - சக்கிரம். அனிகம் - படை. எல்லாம் இவர்களானவாறு; அகிலமென்பது எல்லாவற்றிற்கும் பெயர். முத்திச்சேத்திரங்கள் உலோகமல்ல, அலோகமென வுணர்க.

(வி - கு.) மூ. தெய்வப்பெண்களின் கடைதிறப்பு. உரை. சக்கிரங்கள் - ஆக்கினைசக்கரங்கள். தந்திரங்கள் - சேனைகள். சசியங்கள் - பயிர்கள். மரம் முதலியவற்றிற்கு உயிரில்லை யென்பது பௌத்தர்கொள்கை; இதனை, "மரமுயிரில்லை யென்பார" (சீவக. 1907) என்று குறிப்பாற் புத்தரை மறுக்கும் பகுதியால் அறியலாம். மரங்களுக்கு உயிருண்டென்பதை, நீலகேசி, மொக்கலவாதச் சருக்கம், 97 உரையிற் காணப்படும், 'இருவகை

மரங்களும் உயிருடையவாய் உற்பவித்து நீரும் எருவு முதலாயின பெற்றுத் திருப்தியோடு வளர்தலால்.................அகளங்கமாகிய இந்த ஹேது மரங்களுக்கு உயிருண்மை முடியுமென்பது' என்னும் பகுதியாலும், "செத்தமரம்" (காரைக். திருவிரட்டை. 20) என்பதனாலும் அறியலாகும். இந்திர கௌதமர் - இந்திரனும் கௌதம முனிவரும். அகமருஷணம் - ஒருவகை ஸ்நானம்; இஃது அகமருடமென்றும் வழங்கும்; "ஆராத விருப்பினொடு அகமருடம் படியாநீர், பேராது மூழ்கினர்" (பெரிய. திருஞான. 60.) கற்பகசுரபிகள் - கற்பகமும் காமதேனுவும்.

(பி-ம்.) 1 'உலகுமமுதமும் வளமையு மிளமையும்' 2 'உதவியவர் களில்' 3 'அரவவனிதையர்' (உகூ)

39. அடையவரியன கடையிருபுடையினும்
அளவுகெட நிமிர் விழிவிடமடுதலின்
அமரரனைவரு [1]முனிவரிலதிகரும்
அவனிதலமுற விழுபொழுதயிலெயி
றுடையகவிரித [2]முமிழ்நகையமிழ்துயிர்
உதவுமுதவியொ டுவமையிலிளமையொ
டுரககுலபதி வரவவனுடன்வரு
முரிமையரிவைய ருயர்கடைதிறமினோ.

இது முன்னிற்பாட்டில் தேவேந்திரனுடைய தேவிமாரைப்போல நாக ராசாவினுடைய தேவிமாரும்வந்து இராசராசேசுவரமுடையார் கோவிலிற் சேவைபண்ண வருவராதலில் அவருடைய கடைதிறப்பு.

எ - து மற்றிவர் வருமிடத்துப் பிறரால்வந்து பிரவேசித்தற்கு அரிய கடைக்கண்கள் இரண்டுபக்கத்திலும் தம்மளவு கெடப் பிறரைக் கண்ட வாறே வல்லிநிமிர்ந்த யானையைப்போலச் செல்ல நிமிர்ந்த கண்களான ஆலகாலச் சில்விஷம் கொல்லுதலால் முப்பத்துமூவர் முதலான தேவர்களும் பிரமரிஷிகளும் தத்தம் பதமிழந்து சுவர்க்காபவர்க்கங்களை யிழந்துவிட்டுப் பூதலத்திலே விழுகின்றவிடத்து அவரெளிமைகண்டு கூர்மையுண்டான இள முறுவலெயிற்றையுடைய முருக்கம்பூப்போலும் அதரத்தினின்றும் புறப்படு கின்ற சிரிப்பான அமுதினால் முன்னம் கண்கதுவின விஷந்தீர்ந்து அந்தத் தேவர்களும் ரிஷிகளும் பிராணன்பெற உபகரிக்கும் உபகாரத்துடன், ஒப் பில்லாத யௌவன வளமையுடனே உரககுலத்திற்கு இராசாவான நாக ராசன்வர அவனுடனே வரும் நாகராசன் தேவிமாரான பெண்காள், உம்முடைய மனைகளில் உயர்ந்த கதவுகளைத்திறமின் எ - று.

அதிகர் - மிகுதியுடையார். கவிர் - முருக்கு. உயர்கடை - மாணிக்கத் தாற்செய்யப்பட்ட கதவு. இதில் இவர்சிரித்தது இகழ்ச்சி; அவர் பிழைத்தது மோகம்.

(வி - கு.) மூ. விழிவிடம்: "நஞ்சு மமுதமும்" (தக்க. 28) என்பதன் விசேடவுரையைப் பார்க்க. நாககன்னியர் வரவினை, "காதலாற், றந்த பணிபதி தன்மகளைச் சேவித்து, வந்த கடவுண் மடந்தையரும்" (இராசராச. 75) என்று இந்நூலாசிரியர் கூறியிருப்பது இங்கே ஆராய்தற்குரித்து. உரை. வல்லி நிமிர்ந்தயானை: வல்லி - காற்சங்கிலி; "பூட்டும் வல்லி மூட்டோடும் புரசை யிழந்த போர்யானை" (கம்ப. பிணிவீட்டு. 119); "வல்லி தொடர் தளையைநீவி" (திருக்குற். கடவுள். 15.)

(பி-ம்.) 1 'முனிவரில்திபரும்' 2 'முகிணகையமுதுதவு முதல்வி' (௩௦)

40. [1]முடிதுமெனமறை முதலியபரவவும்
[2]முறிதுமெனநிசி சரர்குலமிரியவும்
முரிது[3]மெனவெழு குலகிரிகுலையவும்
முளிதுமெனவெழு புணரிகண்மறுகவும்
மடிதுமெனமகி [4]தலநிலைதளரவும்
மறிதுமெனவடி சுரபதிவருடவும்
வரத[5]னொருதமிழ் முனிவரன்வரவரு
மலயவரையர மகளிர்[6]கடிறமினோ.

எ - து முடிந்துபோவோமென்று வேதமுதலான சாத்திரங்கள் புகழவும், முறிந்துபோவேமென்று இராக்கதர்குலம் ஓடவும், விழுவோமெனச் சத்தபருவதங்கள் குலையவும், உலர்வேமெனச் சத்த சமுத்திரங்கள் மறுகவும், கெடுவோமெனப் பூதலம் நின்றுநிலைதளரவும், மீள்வேமெனத் திருப்பாதங்களைத் தேவராசன் வருடவும் வரங்கொடுக்கவல்லவனுகிச் சமானமின்றியிருக்கும் அகத்தியமகாரிஷி வர அவனுடனேவரும் பொதியின்மலையில் வரையரமகளிரான தெய்வப்பெண்காள், கதவுதிறமின் எ - று.

இதியாசமுதலானவை பவிஷ்யமான எதிர்காலமும் உணர்வனவாதலால் அகத்தியன் பண்டு மகாதேவர் அருளிச்செய்ய வடக்கினின்றும் தெற்கு நோக்கிப் போதுகின்ற காலத்தில் இவன் வேதாதி சாத்திரமான நம்மையெல்லாம் "அநந்தாவை வேதா:" என்னும் கீர்த்தியற மூன்று தமிழாக்கி முடிக்கின்றனெனவும், நிசிசரர் [நிசி என்பது இராத்திரி, அதில் சஞ்சரிப்பார் நிசிசரர்], பிரமரிஷியாகிய அகத்தியன் வாரா நின்றான் ; அவனால் நாமெல்லாம் முறிந்து போவேமென அவனது சாபமஞ்சியோடவும், பண்டு விந்தபருவதத்தை மேருபருவதங் காணத் தன் ஸ்ரீ பாதத்தாற் பாதாளத்தில் அழுத்தியகதையை நினைத்து உயர்ந்த தலையையுடைய குலபருவதங்கள் நம்மையும் இப்பிரகாரஞ் செய்வனெனை நினைந்து குலையவும், பண்டு ஓர் அசுரனைச்சுட்டி நம்மையும் உள்ளங்கையிலே கொண்டு நக்கி உதராக்கினியால் தகிப்பித்தான் ; இவன் நம்மை எவ்வாறுசெய்வனோவென்று ஏழு கடல்கள் மறுகவும், தவஞ் செய்யாதே தானஞ் செய்யாதே வடதிசைப் பெருங்களத்தாற் சுவர்க்கத்தைத் தொடலாம்படி உயர்ந்த எம்மை ஈசுவரனது ஏவலாலே சமதளமாக்கத் தனியே வருகின்றான் ; இனி நாம் கெட்டுப் பொன்றுகாது மண்ணேயாவோமெனப் பூமி தானின்ற நிலையில் தளரவும், பண்டு நகுஷனை கௌரவகுலபதி சுவர்க்கராச்சியத்து அமரராசனுக வீற்றிருந்து இந்திரனுடைய தேவி சசிதேவியைக் கண்டு மோகிப்ப அவள் பிரமரிஷிகளே காவின சிவிகையேறின் வரலாமென்ன அவனும் அகத்திய புலத்தியர்களை யழைத்துக் காவச்சொல்லி ஏறிவர முன்தண்டு காவின அகத்தியன் குறளனுதலின் அவன் முதுகிலே கால்படப் பெரும்பாம்பாய் விழுகெனச் சாபமிட்டதனை நினைத்துப் பூருவ தேவேந்திரன் பயப்பட்டுத் திருப்பாதங்களை வருடவுமென்பது பொருள். இவையெல்லாம் வேதகதை.

இனி, 'முடிதும்...மறிதும்' என உயர்திணைப் பன்மைத்தன்மை வாசகப்படச் சொல்லியது: வேத சாத்திரங்கள்தோறும் நின்றருளிய சரசுவதி ஒருத்தியேயாயின் முதன்மையாம் ; பலராயின் முடிவேயாம். அசுரர் உயர்திணைப்பாற்படுவர். மலையும் கடலும் பூமியும் வருணராசனும் பன்மையினும் ஒருமையினும் அப்படிப்படுவர். தேவேந்திரனது முதன்மை சொல்ல வேண்டா. வரதன் - வரத்தைத் தருபவன்.

(வி - கு.) மு. இது பொதியின்மலை அரமகளிர் கடைதிறப்பு.

இத்தாழிசையில் அகத்தியர்பெருமைகள் கூறப்படுகின்றன.

உரை. இதியாசம் - இதிகாசம்; கடந்த மனிதர் வரலாறு. "அநந் தாவை வேதா :" : இது காடகோபநிஷத்திலுள்ள தென்பர். பிரமரிஷியாகிய அகத்தியன் : "மறைமுது முதல்வன் பின்னர் மேய, பொறையுயர் பொதி யிற் பொருப்பன்" (சிலப். 12 : இறுதி.) ஓரசுரனைச் சுட்டி - விருத்திரா சுரனைக் குறித்து. தவஞ்செய்யாதே தானஞ்செய்யாதே : தவஞ் செய்தலும் தானஞ் செய்தலும் சுவர்க்கத்தை யடைதற்குச் சாதன மென்பர்; 'தவத் தானும் தானத்தானுமன்றிப் புகலாகாச் சுவர்க்கம்' (இறை. கலித். 4 - உரை); "தானமுந் தவமுந் தாஞ்செய்வ ராயின், வானவர் நாடு வழிதிறந் திடுமே" (தனிப்.) தவமுந் தானமும் இணைத்தே கூறப்படும்; "தானந் தவ மிரண்டுந் தங்கா வியனுலகம், வானம் வழங்கா தெனின்" (குறள்.); "தானஞ் செய் திலந் தவமு மன்னதே" (வளை.) கௌரவ குலபதி - குருகுல அரசன். அகத்திய புலத்தியர்கள் : இவர்கள் இருவரும் சேர்த்தே பழைய நூல் களில் வழங்கப்படுவார்கள்; தமிழ் நாட்டிலுள்ள திருக்கோளக்குடி முத லிய சிலதலங்களில் இவ்விருவருடைய பிம்பங்களும் சேர்த்தே சிலையில் அமைக்கப்பட்டிருத்தலைக் காணலாம்; 489 - ஆம் தாழிசையில் இவ்விரு வரும் சேரக் கூறப் பெற்றுள்ளார். குறளன் - குறியவன். பூருவம் - பழமை.

(பி-ம்.) 1 'முடிவுமினியென முதலாயர் பரவவும்' 2 'முழுதுமென வெழு' 3 'எனவுயர் குலகிரி' 4 'தலநிலை குலையவும்' 5 'ஒருதவமுனி வரன் வருமலை' 6 'மகளிர் கடைதிறமினோ' (௪௧)

41. அலகின்மரகத முறிகளும்வயிரமும்
அபரிமிதமெரி தமனியமடையவும்
அரியதரளமு மழகியபவளமும்
அரசவரவின சிகையவுமலைகொடு
கலகமறிகடல் புகவிடுவனகதிர்
கவடுவிடுவன விவருழையினுமுள
ககனதருவன மிவர்களுமெனவரு
கனகவரையர மகளிர்கடிறமினோ.

எ - து குற்றமில்லாத மரகதமுறிகளும் வயிரமும் அளவற்று எரிகின்ற சோதியையுடைய உயர்ந்த பொன்களெல்லாமும் பெறுதற்கரியமுத்தும் அழகுடைத்தான பவளமும் நாகராசாக்களுடைய முடிகளிலுள்ள மாணிக் கங்களும் பருவதத்தைக்கொண்டு கடையுங்காலத்து மறிகடலிலே புகவிடு வனவான அமிர்தும் சோதி கவடுபட விடுவனவாகிய கவுத்துவமணிகளும் இவர் பக்கலிலே உளவாதலால் இவர் ஆகாசத்துக் கற்பகவிருட்சக்காடு போல்வாரென உலகத்தார் சொல்லவருவீரான மகாமேருபருவதத்திற் றெய்வப் பெண்காள், கதவுதிறமின் எ - று.

மரகதமுறியாவன உருவப்பச்சையும் பிறவும். வயிரமாவது மனம்; இதனைக் கொங்கைகளென்பாருமுளர்; பொருளல்ல; உவமை பதஞ்செய்த லருமை. தமனியமாவது விசேஷமுள்ள பொன். அஃது இவர்களுடைய உகிரும் மயிருந்தவிர உடம்பெல்லாவற்றினுமமைந்த சோதி. எரிதலென்றது ஒளி விட்டுவிளங்கும் விளக்கத்தை. அரிய தரளமென்றது முறுவற்பற்களை. அதற்கு அருமை அதரத்துள்ளிருந்து வேண்டினபொழுது தோன்றிவிளங்

குதல்; வலம்புரிமுத்து. அழகிய பவளமென்றது, திருக்குமுடக்கும் பருமை யும் நேர்மையும் வெளுப்பும் கறுப்பும் இரேகையும் கீற்றும் பிளப்பும் பெரு மையும் பிறவுமானதோஷமும் சிக்கெனலும் மிக்க மென்மையுமின்றியிருக் கும் பவளம். அஃது இவர்கள் திருவாய்களேயெனவுணர்க. அரசவரவின சிகையவுமென்றது நாகராசாக்களுடைய திருமுடியிலேயுள்ள விற்பிடி மாணிக்கத்தை; அஃது இவருடைய மருங்குலெனவுணர்க. பெறுதற் கரு மையும் விற்பிடியளவாதலு மெல்லாம் கொள்க. சிகையவு மென்பது இடம் பற்றிப்பிறந்த பொருள்; பிறந்த வழிக்கூறலாம். மலைகொண்டு கடலிற் புகவிடுவன அமிர்த கலசங்கள்; அமுது கடையக்கருத்து அதுவாதலின். அவை இவ்விடத்து மற்றிவர் கொங்கைகளெனவுணர்க. கவுத்துவமான மாணிக்கம் இவர்களுடைய குணமும் கண்ணின் விசாலமும் பிறவுமென வுணர்க. ஆதலால் இவர் கற்பகக்காடுபோல்வர், வேண்டியது கொடுத்தலின். பிறவுமுணர்க.

(வி - கு.) மூ. இது மேருவரையரமகளிர் கடைதிறப்பு.

கனகவரையரமகளிர்: "மேரு வரையிற் புலிபொறித்து மீண்டநாள், வாரும் வரையர மாதரும்" (இராசராச. 76.) உரை. இதிற்கூறிய நவமணி இலக்கணங்களைச் சிலப்பதிகாரம், 14-ஆம் காதை, 180-ஆம் அடி முதலிய வற்றாலும், அவற்றின் உரைகளாலும், கல்லாடம், 47-ஆம் செய்யுளானும், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் 25 - ஆம் திருவிளையாடலா லும், திருவிளையாடற் புராணத்தில் மாணிக்கம்விற்ற திருவிளையாடலாலும் உணரலாகும். விற்பிடி மாணிக்கம் நாகராசாக்களின் தலைகளிலுள்ள தென்பது 154, 166 - ஆம் தாழிசை யுரைகளாலும் விளங்குகின்றது. (௪௨)

42. அளகமுகிலிரு புடையினுமதிரவும்[1]
[2]அகருமண[3]மிர்க மதமொடுகமழவும்
அதிகமிடையிடை சிலகொடியலசவும்
அமிர்துபொதிவன சிலகுவடசையவும்
[4]இளகுகலவைகொ டெழுதமைசமையவும்
எறியுமிருகடை யினபிணையணையவும்
இறைவர்[5]கயிலையி லிறைமகளுடன்வரும்
இமயவரையர மகளிர்[6]கடிதிறமினோ.

எ - து அளகமான பனிச்சையையுடைய கருமுகில்போலும் கொண்டை இரண்டருகிலும் சிறிது குலையவும் குலைதலால் அகிற்புகையின் நாற்றம் கஸ்தூரியுடன் கலந்து நாறவும் நடுவேசில வல்லிசாதிகளான இடைகள் மிக வருந்தவும் அமிர்தை உள்ளேபொதிந்துகொண்டிருக்கிற மலைக்குவடான குயத்தடங்கள் சிறிது அசையவும் பனிநீராலிளக்கி எழுதப்பட்ட குங்குமச் சேற்றுக்கோலக்கரும்பும் வல்லிசாதியுமான தொய்யிலெழுதிய தோள்கள் கடுநடைக்கே சமையவும் காதளவுஞ்சென்று எடுத்துவிட்டு எறிகின்ற கண் களின் கடைகளிரண்டருகினும் தம்மினங்களெனப் பெடைமானினம் தொடர்ந்துவரவும் ஈசுவரனுடைய திருக்கைலாச பருவதத்தில் உமாபரமேசு வரியுடனே சேவித்துவருகின்ற இமயபருவதத் தெய்வப்பெண்காள், கதவு திறமின் எ - று.

அகரு - அகில். மிர்கமதம் - கஸ்தூரி. கலவை - பசுஞ்செஞ்சாந்து; குங்குமத் தளம். அமை - மூங்கில். பிணை - பெட்டைமான். இவர்கள் உமா

பரமேசுவரியின் ஸ்திரீதனப் பெண்களெனவுணர்க. இதன்பாற் பலஆகு பெயருமுள.

(வி - கு.) மு. இஃது இமயவரை அரமகளிர் கடைதிறப்பு. சில குவடு : சில - இரண்டு. எழுது அமை - தொய்யிலெழுதப்பட்ட மூங்கில்கள் ; என்றது தோள்களை. உரை. குங்குமத் தளம் : "வெண்டளக் கலவைச் சேறும்" (கம்ப. நாட்டுப். 12) ; "வெண்டளச்சேறிடுபரணி" கம்ப. பம்பை. 16.)

(பி-ம்.) 1 'புடையினு மசையவும்' 2 'அகருமிர் கமதமணமொடு கமழுவும்' 3 'மிறுகமத' 4 'இளகுகலவை யொடெழுதமை' 5 'கயிலை யிலிமயவளுடன்' 6 'கடைதிறமினோ' (௧௧)

43. [1]எமதுமலையிறை யிகட்பொருசிலைமலை
ரவியுமதியமு முடன்வலம்வருமலை
யிருளுமிருள்கெட[2] வெரிதமனியமலை
ரசதமலையிம மலையிலொர்சிறுகுவ
டுமதுமலையென வுயர்கயிலையையிக
ழுரிமையுடைவட வரையரமகளிரை
யுலகுவெயில்கெட விளநிலவெழுநகு
முதயவரையர [3]மகளிர்கடிறமினோ.

எ - து எங்களுடையமலை ஈசுவரன் பண்டு திரிபுரதகனம் பண்ணு கின்றகாலத்தில் அதற்குத்தக்கபடி போதுமென வில்லாகக்கொண்ட மகா மேருபருவதம் ; அன்றியும் ஆதித்தியசந்திரர்களிருவரும் ஒக்கப் பிரதட்சி ணம்வரும் தெய்விகமலை ; இருள் கெட விளங்குகின்ற பொன்மலை ; உமது கயிலைமலை எமது இமயமலையில் ஒரு சிறு குவடென, எல்லா லோகத் திலும் மிக்குயர்ந்து வேண்டற்பாட்டினையுடைத்தாயிருக்கின்ற ஸ்ரீகைலாச பருவதத்தை இகழ்ந்து சொல்லவல்ல வடக்கில் மலையிலுள்ள தெய்வப் பெண்களை இகழ்ந்து சொல்லுவதற்கு உலகத்தாருடைய காமாக்கினி வியசன உஷ்ணந்தீர இளைய நிலாவைப் புறப்பட விடுவீர்போலச் சிரித்தரு ளும் உதயகிரியிற் றெய்வப்பெண்காள், கதவுதிறமின் எ - று.

உமாபரமேசுவரியுடைய அடியார் மகாதேவரடியாரைப் பழித்துரைத்த வாறு இது.

(வி - கு.) மு. இஃது உதயமலை அரமகளிர் கடைதிறப்பு.

ரசத மலை யிமமலையிலொர் சிறுகுவடு : "பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப், பன்னு நீள்பனி மால்வரைப் பாலது, தன்னை யார்க்கு மறி வரி யானென்று, மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை" (பெரிய. திருமலைச்.) நிலவெழுநகும் : 36 - ஆம் தாழிசையைப் பார்க்க.

(பி-ம்.) 1 'எமது மலைமறை' 2 'ஒளிர்தமனிய மலை' 3 'மகளிர் கடைதிறமினோ' (௧௪)

## வேறு

44. [1]மயிலா யிறக்கி னயிர்ப்பிக்கும் வறுங்க ணென்று வாசவனார்
[2]குயிலா யிறந்த கதைபாடக் கோலக் கபாடந் திறமினோ.

எ - து தட்சயாகத்தை ஈசுவரன் கோபித்து விநாசம் பண்ணுகின்ற காலத்துத் தேவேந்திரன் பயப்பட்டு வேண்டினருபங் கொண்டுபோகவல்ல வன் வழியிடைப் போகவேண்டுமென்று நினைத்துத் தேவசேனைபதி யுடைய

வாகனமாகிப் போகவேண்டுமென்று பார்த்து மயூரவேஷங்கொண்டு போனல் எண்ணிறந்த கண்பீலியால் இந்திரனென்று அபிர்த்துக்கொண்டு பூதகணநாதர்புடைப்பரென்று பயப்பட்டுப் பிள்ளைப் பட்சிகளிற் குயிலாய், எல்லாரும் அனுக்கிரகிக்கினும் பிடித்து வளர்ப்பாரின்றி யிருக்கு மிது வென்று சென்று இறந்துபோன புராணகதையைப்பாடக் கதவு திறமின் எ - று.

வறுங்கணென்றது, சாபமோட்சக் கண்ணுக்கும் அடைவுடைத்து. வாசவன் - தேவேந்திரன். குயிலாபிறந்த : குயிலாயும் இறந்தவென உம்மை தொக்கது. கோலம் - அழகு.

(வி - கு.) மூ. வறுங்கண் - பார்வையில்லாத கண். இந்திரன் குயில்வடிவங்கொண்டுசென்றது 488 - ஆம் தாழிசையாலும் அதனடிக்குறிப்பாலும் விளங்கும். உரை. பிள்ளைப்பட்சிகள் - கிளி, குயில், நாகணவாய்ப்புள் முதலியன. சாபமோட்சக்கண் - சாபவிமோசனக்கண் ; என்றது இந்திரன் கண்களைக் கருதி.

(பி-ம்.) 1 *'மயிலாய்ப் பிறக்கிலிறப்பிக்கும்' 2 'குயிலாய்ப் பிறந்த' (௩௫)

45. விண்ணிற் பகனுர் தாந்துரக்கு மெல்லா விருளு மீண்டுந்தங்
கண்ணிற் புகுந்த கதைபாடக் கனபொற் கபாடந் திறமினோ.

எ - து ஆகாசத்தில் ஆதித்தனல் துரப்புண்ணும் அந்தகாரமெல்லாம் மீண்டும் அந்த ஆதித்தனுடைய கண்களிலே புகுந்த புராணகதையைப் பாடக் கதவு திறமின் எ - று.

இப்பாட்டின்கருத்து : தட்சயக்கியவிநாசத்து வந்த ஆதித்தனுடைய கண்ணை ஈசுவரன் பறித்தருளினகதை ; "பகாட்சஹா:" என்பது **மகா காளஸ்தவம்**.

(வி - கு.) மூ. மு = "உண்ணப் புகுந்த **பக**னொளித் தோடாமே, **கண்ணைப் பறி**த்தவா றுந்தீபற, கருக்கெட நாமெலா முந்தீபற" (**திருவா.**) ; "சீரருக்கன் குருட்டிற்புகச் செற்றகோன்," "பகன்றமரைக் கண் கெடக்கடந்தோன்" (**திருச்சிற்.** 184, 270) ; "பகநேத்ரபிதேநம :" என்பது **சிவஸஹஸ்ரநாமம்** ; "சிறுவிதியா கத்துத் தினகரற்கு முன்னம், குறுகிபிருள் கூடவைத்த கோமான்" (**திருவிடைமருதூருலா**) என்பது இதன்கருத்தைத் தழுவியது. இத்தாழிசையாற் கூறப்பட்ட செய்தியை 490-ஆம் தாழிசையாலுமுணரலாகும். **உரை.** மகா காளஸ்தவம் - மகா காள மூர்த்தி விஷயமாக வடமொழியில் ஒருவர் செய்த தோத்திர நூல். (௩௬)

46. [1]புக்கா வுதிகள் பலவேற்றும் போரி லேற்றுஞ் சிரமொருவர்
[2]முக்கா லிழந்த கதைபாட மூரிக் கபாடந் திறமினோ.

எ - து தக்கனுடைய யக்கியத்தில் அக்கினிகோத்திர ஔபாசன யக்கியாகுதியை உண்கைக்கு யக்கிய மூர்த்தியாய்ப் புகுந்தும் சகத்திர தாரையாய அவிர்ப்பாக அவிசை ஏற்றுக்கொண்டருளியும் ஈசுவரனெதிரே நின்று பொருதும் ஒருவரெனப்பட்டவிட்டுணுதேவர் தமது தலையை மூன்று விசை இழந்தருளிய புராண கதையைப்பாடப் பெரிய கதவுகளைத் திறமின் எ - று.

மூரி - பெருமை. ஒருவர் ஒருதலையை முக்காலிழந்தது விசேடமென வுணர்க.

(வி - கு) மு. புக்கு ஆவுதிகள் : ஆவுதிகள் - ஆகுதிகள் ; "வேள்வி யாவுதி யுண்ணவோ" (தக்க. 252), "அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்" (புறநா. 99 : 1), "ஆவுதி மண்ணி யவிர்துகின் முடித்து" (மதுரைக். 494), "ஆவுதி நறும்புகை முனைஇ" (பட். 55.) உரை. விஷ்ணு யஞ்ஞமூர்த்தி யென்பதனை, "எச்சனைத் துளவினனை" (காஞ்சிப். தக்கீசப். 29), "எச்ச மென யாவர்களு மியம்புவார் மாயவனை" (திருநாகைக். புண்டரீக...முதற் காட்சி.) சகத்திரதாரை - வேள்வியிறுதியிற் செய்யப்படும் பூர்ணாகுதி.

(பி-ம்.) 1 'புக்காகுதிகள்' 2 'முக்காலிகந்த' (கஎ)

*47. ஊத்தைத் தலைநீத் துய்ந்தொழிந்த
வொருமா மடிக ளொருமுருட்டு
மோத்தைத் தலைபெற் றமைபாட
மூரிக் கபாடந் திறமினோ.

எ - து பொல்லாத்தலையைப் போகவிட்டுத் தக்கனார் மோத்தைத் தலை பெற்ற புராணகதையைப்பாடப் பெரிய கதவுகளைத்திறமின் எ - று.

முருடு - பெருமை. மாமடிகளென்பது ஒரு சொல். ஊத்தைத்தலை யென்பது இடக்கரடக்குமொழி ; "ஊத்தைவாய்ச்சமண்", "ஊத்தைத் துருத்தி." (தே. திருஞான. திருச்சாய்க்காடு.)

(வி - கு.) ஊத்தை : "ஊத்தையாகிய வாயை யாம்பலை யொக்குமென்ன வுரைப்பரே" (பாசவதைப். 486), "ஊத்தை வாய்ப்பேய்" (அஞ்ஞவதைப்.), "அழுகிவிழும் பீறலூத்தை" (திருப்.) ; இச்சொல் ஊற்றையெனவும் வழங் கும் ; "ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை" (பட்டினத்துப் பிள்ளையார் பாடல்), "ஊற்றைக்கொடி" (பழமலை.) மாமடிகள் - மனைவியைப் பெற்ற வன் ; மாமனார் ; "மகட்பெறுந்திரு மாமடிப் பேய்", "மாமடிப் பேயைப் பாராய்" (தக்க. 768, 793), "மந்தணமிருந்துபுரி மாமடிதன் வேள்வி, சிந்த விளை யாடுசிவ லோகன்" (தே. திருப்பழூர்), "உவகைமாமடி கடம்மை யழைத்தனன்", "நின்பால் வந்தனன் மாமடி" (திருவால. 9 : 5 ; 22 : 12), "மாமடிகளிடு சாபமும்" (மீனாட்சியம்மை பிள்ளை. அம்புலி. 6), "தாமடிகண் மறந்துமறித் தலைகொண்டார் கலைவல்ல, மாமடிகள்." (சிதம்பரச்செய். 67.) முருடு : "முடித்தலைகள் பத்துடைய முருட்டுரு வரக்கனை" (தே. திருஞா. திரு மறைக்காடு.) மோத்தைத்தலைபெற்றமை 797 - ஆம் தாழிசையாலுமுணரப் படும். (௪அ)

2. கடைதிறப்பு முற்றிற்று.

---

## ௩. காடு பாடியது

48. நெடுங்குன் றேழும் பிலமேழு நேமிக் கிரியுங் கடலேழும்
ஒடுங்கும் பாகத் துறைமோடி யுறையுங் காடு பாடுவாம்.

எ - து சத்தபருவதங்களும் ஏழுபிலங்களும் சக்கரவாள பருவதமும் சத்தசமுத்திரங்களுமொடுங்கும் வாமபாகத்தேயுறையும் துர்க்காபரமேசுவரி எழுந்தருளியிருக்குங்காடு சொல்லுவோம் எ - று.

(வி - கு.) மு. ஒடுங்கும் பாகமென்றது சிவபெருமானுடைய இடப்பாக மாகிய உமாதேவியார் திருமேனியின் பாகத்தை. நெடுங்குன்று முதலியவை

யொடுக்கும் பாகம். இவையெல்லாமொடுங்கும்பாகமென்றதன் பொருள் இந்நூல், 116, 245, 292, 293, 327 - ஆம் தாழிசைகளாலும் அவற்றின் விசேட உரைகளாலும் விளங்கும்; "பெண்ணுரு வொருதிற னாகின் றவ் வுருத், தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்" (புறநா. 1 : 7 - 8) என்ப தற்கு எழுதிய 'அவ்வடிவுதான் எல்லாப்பொருள்களையுந் தன்னுள்ளே யடக்கி அவ்விறைவன் கூற்றிலே மறையினும் மறையும்' என்னும் விசேட வுரையாலும் இது துணியப்படும். மோடியென்பதன் பொருளை 241 - ஆம் தாழிசை உரையிற் பார்க்க. மோடி யுறையுங்காடு: மோடியைக்காடுகிழா ளென்றுங் காடுகாளென்றும் கூறுவர்; "கையார் வளைக்காடு காளோடு முடனாய்" (தே. கோடிக்குழகர்.) பாகத்துறை மோடி: "போகமார் மோடி கொங்கை புணர்ந்த புனிதர்", "போகங்கொண்டாற் கடற்கோடியின் மோடியை" (தே. திருநாகேச்சுரம், நாவலூர்.) காடு - சுடுகாடு, பாலை நிலம். உரை. வாமபாகம் - இடப்பாகம். (க)

## வேறு

49. பால்வறந்துகீழ் நின்றகள்ளியும்
பசைவறந்துபோய் மீமிசைச்
சூல்வறந்துபோய் மாகமேகமுஞ்
சுண்டவீமவெரி மண்டவே.

இனி, துர்க்காபரமேசுவரிக்கு இருப்பான பாலைநிலத்தைக் கூறத் தொடங்கினர்.

எ - து அந்நிலத்தில் வெம்மையையே விரும்பிநின்ற மகாவிருட்சமான கள்ளியும் பால்வற்றிப் பின்னை உடற் புறப்பசையுமற்றுப்போக மேன் மேலான ஆகாசத்திற் கருக்கொண்டுநின்ற மேகத்திற் சூல்வற்றிக் கள்ளியே போல அம்மேகமும் தன்னுடற் பசைவற்றிப் பின்னையும் இங்கேநின்ற கள்ளியேபோலக் கரிந்து சுண்டி இன்றியேபோம்படி சுடுகாட்டுநெருப்பு மிஞ்சியெழ எ - று.

மாகம் - ஆகாசம். ஈமம் - சுடுகாடு.

(வி - கு.) மு. பால் வறந்து......வறந்து: "கள்ளி வற்றி வெள்ளில் பிறங்கு கடுவெங் காட்டுள்ளே" (11 - ஆம். மூத்த. 5.) மயானம் பாலை நிலத்தின் ஒரு பகுதியாதலின் ஈம எரி கூறப்பட்டது. ஈமம் - பிணஞ்சுடு வதற்கு அடுக்கும் விறகடுக்கென்பர் (புறநா. 231, 246 - உரை.) துர்க்கை பாலைநிலத் தலைவியென்பதைப் பாலைக்கிழத்தியென்னும் பெயரானுமுணர லாகும். (உ)

50. பிணங்கடுங்கனலு மின்றிவெந்து[1]நில
வாய்நிமிர்ந்துபில வாயபேய்
நிணங்கரைந்துருக நெய்யைநீரென
நினைத்துநாவினை நனைக்குமே.

எ - து அந்நிலத்திலிட்ட பிணங்களெல்லாம் நெருப்புமின்றி நிலங்களி னிடமெல்லாம் பரந்து வெந்து அப்பிணங்களின் நிணங்களால் நெய்யுருகப் பிலத்துவாரம் போன்றிருக்கும் வாய்களையுடைய பேய்கள் அந்நெய்யை நீராகநினைத்துத் தம்முடைய நாக்குக்களை நனைக்கும் எ - று.

நாவை நனைப்பதற்கலது நெய் கிடையாது, உலருங்கடுப்பினெனவுணர்க. கடுங்கனல் - புதுநெருப்பு. எனவே, பாலைநிலத்து உஷ்ணமே அமையும்; நெருப்பும் விறகும் கொண்டுவாராரென்றவாறு.

(வி - கு.) மூ. பிணங்கடுங்கனலுமின்றிவெந்து: "அருவ வுயிருமிற வெரியு மனலதனின்வே றனலுமிலது" (அஞ்ஞவதைப்.) நிணம்........ நெய்: "முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாக" (முத்.) நிணங்கரைந் துருக: "நிணந்தா னுருகி நிலந்தா னனைப்ப" (11 - ஆம். மூத்த. 2.) பிலவாயபேய்: "பிலவாய பேய்க்கணங்கள்" (தே. திருவீழி.) "பிலங்கண் டன்னதன் பெருமுழை வாய்திறந் தழையா" (நீல.) நாவினை நனைக்குமே: "நாவினை நனைத்ததால்" (தக்க. 644.) உரை. உலருங் கடுப்பின் - உலரும் வேகத்தால். கடுங்கனல்: கடுமை யென்பதற்குப் புதுமை யென்னும் பொருள், "கடுஞ்சூன் முண்டகம்" (சிறுபாண். 148) என்பதன் உரையால் அறியப்படுகின்றது.

(பி-ம்.) 1 'பல' (ரு)

51. [1]சிரந்தெரிந்தன வறிந்தரிந்துகுவை
செய்துபைரவர்கள் செந்நிலம்
பரந்தெரிந்துபொடி செய்யமற்றவை
பரிக்கவந்தவர் சிரிப்பரே.

எ - து மயான வாசினியது மந்திரசாதகரான பைரவவேஷதாரிகள், தமது தலைகளில் உணர்வுடையன அறிந்து ஆராய்ந்து அறுத்தறுத்துக் குவையாகத் தலைமலையான சிரபுட்பமிட்டுவைக்க அவை அந்நிலமான செம்பாலைத்தரையிலே பரந்து வெந்து பஸ்மமாய்ப்போகப் பின்பு அர்ச்சித்து வைத்த சிரபுட்பமான நிர்மாலிய புட்பமெடுத்துப் போகட வந்த மந்திரசாதகருடைய மாணுக்கர் அத்தலைகளைக்காணுது சிரிப்பர் எ - று.

சிரந்தெரிந்தன வென்றது, மது மச்சிய மாங்கிச முத்திரை இணை விழைச்சென்ற சகளபஞ்சகந்தெரிந்த யாமளாசாரியர் தலைகளையென வுணர்க. இப்பொருள் மகாவிரதிகளுடைய சாத்திரமான ஆகமத்திலுண்டு; கண்டு கொள்க.

(வி - கு.) மூ. செந்நிலம்: பாலைநிலம் சிவந்த நிறமுடைய தென்பர்; "செம்புலப் பெய்நீர் போல" (குறுந். 40); 'சேதா வெடுத்த செந்நிலக் குரூஉத்துகள்", "கழறுளை முத்திற் செந்நிலத் துகிர", "செந்நிலப் படுநீருடி" (அகநா. 79 : 7, 225 : 12, 227 : 10.) உரை. சிரபுட்பம் - சிரமாகிய புட்பம். நிர்மாலிய புட்பம் - அருச்சித்த புட்பம். மதுமச்சிய............விழைச்சு: மதுமச்சிய மாங்கிச முத்திரைமைதுனமெனவும் வழங்கும்; இவற்றை மகாரபஞ்சகமென்று கூறுவர் வாமமதத்தினர். யாமளாசாரியர் - யாமளாகமத்தின் வழியொழுகும் பெரியோர்.

(பி-ம்.) 1 'சிரந்தெரிந்தவர்' (சு)

52. புற்றினின்றெழு புயங்கசூடிகை
நெருப்புவிட்டசிறு பொறியெனப்
பற்றிநின்றன வநந்தமின்மினி
யினந்தனித்தனி பரப்பவே.

எ - து அந்நிலத்துப்புற்றுக்களினின்றும் எழுகின்ற மகாநாகங்களின் தலையின்மாணிக்கம், மூடிக்கிடந்த நெருப்புப் புறப்படுமாறு போன்றன;

அந்நெருப்பினின்றும் புறப்படுகின்ற சிறுதழற்பொறி யொத்தன, அப்புற்றைப் பற்றிநின்ற அளவில்லாத மின்மினியினங்கள் ; அவ்வண்ணமே தனித்தனியே புற்றுத்தோறும் பரப்பனவுள எ - று.

புற்றினின்றும் பாம்பெழுதற்குக்காரணம், நிலத்தழல் பொறுக்கமாட்டாமையாலென வுணர்க ; மின்மினிக்கும் இது. புயங்கம் - பாம்பு. சூடிகை - முடிமணி.

(வி - கு.) மு. சூடிகை - முடிமணி : '' படல சூடி காகோடி '', '' படத்தெடுத்த சூடிகை '', '' செஞ்சூடி காகோடி சிந்த '' (தக்க. 105, 362, 554.) புற்றில் மின்மினி பற்றிநிற்றல், '' மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம் '' (அகநா. 72 : 3) என்பதனுலும் அறியப்படும். (ரு)

53. பிணப்பறைக்குர லுவந்துவந்துசில[1]
பேய்துணங்கையிடு தொறுமிடும்
கணப்பறைக்குரல் படப்படச்சிறிது
[2]செவிடுபடுமமரர் கன்னமே.

எ - து பிணமிடவருவார் கொட்டிக்கொண்டு வருகின்ற சாக்காட்டுப் பறைக்குரலைக்கேட்டுத் தம்பசிமிகுதியாற் சந்தோஷித்துவந்து சில பசாசினங்கள் துணங்கையென்னுங் கூத்தாடுந்தோறும் அப்பிணப்பறைக் கூத்துக்காணவேண்டியிடுங்கூட்டப்பறைக்குரல் ஓசைபடமுழங்கச் சிறிது தேவலோகத்தார் செவிகள் செவிடுபடும் எ - று.

பிணப்பறை - செத்தார்க்குக் கொட்டும் பறை. கணப்பறை - வாய்ப்பலிக்குக் கொட்டும்பறையுமாம்.

(வி - கு) மு. துணங்கை - ஒருவகைக்கூத்து ; இதனைச் சிங்கிக்கூத்தென்பர் ; '' பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கையாகும் '' என்பது இதன் இலக்கணம் ; பேய்கள் துணங்கை யாடுதல், '' நிணந்தின் வாய டுணங்கை தூங்க '' (முருகு. 56), '' சுழலு மழல்விழிக் கொள்ளி வாய்ப்பேய் சூழ்ந்து துணங்கையிட் டோடி யாடித், தழலு ளெரியும் பிணத்தை வாங்கித் தான்றடி தின்றணங் காடு காட்டில் '', '' நெடும்பற் குழிகட்பேய், துணங்கை யெறிந்து '' (காரைக். திருவாலங்காட்டு மூத்த. எ ; கோயின்மூத்ததிருப். 2), '' அணங்குகள் குழுமி யாமம் பெருவயி ரூர்து மென்று, துணங்கைகோத் தாடி நக்கு '' (சூளா. அரசியற். 298), '' வணங்கி வந்திடம் வலங்கொண்டு வழிபடு பொழுதிற், கணங்கடாம்பல கடன்சொலிக் கலந்தெடுத் தேத்தித், துணங்கை யாடத்தன் றுகிலிடை மேகலை துளங்க, வணங்கு மெய்யவ ளருந்தவ னுழைவயி னிணைந்தாள் '' (நீல. தருமவுரைச். 34), '' பிள்ளை வீழ வீழவும் பெருந்துணங்கை கொட்டுமே '' (கலிங். 296) என்பவற்றாலறியப்படும். கணப்பறை - அதமக்கருவிகளான புறமுழவுகளில் ஒன்று (சிலப். 3 : 27, உரை) ; இஃது ஈமத்திற் கொட்டப்படுவது ; '' சிறுபறையு முரசுதுடி சத்தக்கணப்பறையு மொகுமொகென வதிர........ சுடலைதனி லிடு........எனவுரைக்கப் படிக்குடிலை '', '' கட்டக் கணப்பறைகள் கொட்டக் குலத்திளைஞர் கட்டிப் புறத்தி லணைமீதே, கச்சுக் கிழித்ததுணி சுற்றிக் கிடத்தியெரி கத்திக்கொளுத்தி யனைவோரும், சுட்டுக் குளித்துமனை புக்கிட் டிருப்பரிது சுத்தப்பொ யொப்ப துயிர்வாழ்வு '' (திருப்.) கன்னம் - செவி. உரை. வாய்ப்பலி - வாய்க்கரிசி. வாய்ப்பலிக்குக் கொட்டும் பறை : '' பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற வுலகிலுள பலரரிசி வாய் மீதிலேசொரியு மந்தநாளில் '' (திருப்.)

(பி-ம்.) 1 ' பல ' 2 ' செவிடு படு மிருகாதுமே ' (சு)

54. பள்ளிவேலைவிடு கானநாடிபடை
பாடிவீடுகொள் படங்கெனக்
கள்ளிவேலிகளின் மீதெழுப்பல[1]
சிலம்பிநூல்கொடு[2] கவிக்குமே.

**எ - து** தன்கோயிலும் படுக்கையுமான சமுத்திர சலத்தைவிட்ட வன துர்க்காதேவியுடைய படைக்குப் பாடிவீடு கொள்ள எடுத்துவிட்டுக் குடிஞைப்படங்கு அடித்தாற்போல அந்நிலத்துப் பிழைத்துநின்ற கள்ளிகளாலமைத்த வேலிகளின்மேலே பல சிலந்தி வாய்நூல் இழைத்துக் கவிந்து கிடக்கும் எ - று.

பள்ளி - கோயில்; "பள்ளி மாட்டும் பற்பல பெருண்டும்" என்பது **உதயணன்கதை.** பள்ளி - படுக்கை; "ஒருகைப் பள்ளி யொற்றி" (75.) இது **முல்லை.** வேலை - கடல். கானநாடி - காட்டையே நாடாகவுடையவள்; மயானவாசினியென்னலுமாம். சிலம்பி - சிலந்தி; "சிலம்பிபொதி செங்காய்." இது **குறுந்தொகை.**

(**வி - கு.**) மூ. பள்ளிவேலை: "பள்ளி வெற்பின்" (**தக்க.** 371) என்பதன் உரையைப் பார்க்க. கானநாடி: "கான நாடிதிரு முன்றில்கவினக் கருலுவார்" (**தக்க.** 80.) பாடிவீடு - படைகள் தங்குவதற்குப் புதிதாக அமைக்கப்பெற்ற கூடாரம்; இது கைந்நிலையெனவும் வழங்கப்படும். **உரை.** "சிலம்பிபொதி செங்காய்": இம்மேற்கோள், குறுந்தொகையிற் கிடைக்கவில்லை; பழைய உரைகளில் மேற்கோளாகக் காணப்படும், "உள்ளார் கொல்லோ தோழி" என்னுஞ் செய்யுளில் உள்ளது. குடிஞைப் படங்கு - குடிசையாகிய கூடாரம்.

(**பி-ம்.**) 1 'சிலசிலம்பி' 2 'கவிக்கவே' 'கவிப்பவே' (எ)

55. காதுமேயிறைவி திகிரிபூதமுங்
கழுதுமேககன முழுதுமே
போதுமேயிரவி புரவியுடுவுநடு
புகுதுமேனகுது நகுதுமே.

**எ - து** அந்நிலத்துக்குப் பரமேசுவரியைத்தவிர ஆதித்தனும் தெய்வமென்று சொல்லுவர்; ஆதித்தனது நிலம் மென்பாலை; இது வன்பாலையாதலால் ஆதித்தனுடைய குதிரைகளும் அவ்வழியே போகா; போகின் தேவியது உஷ்ணசக்கரம் பொறும்; அதற்குக் காரணம், ஆகாசமுழுவதும் தேவியுடைய பூதமும் பசாசுமே; அன்றி இவையிற்றின் உயரங்களாலும் வலியாலும் பூமியுஷ்ணத்தாலும் நட்சத்திரங்களும் நடுவுபுகுதப் பெறா; புகுதரின் நாங்கள் சிரித்தும் சிரித்தும் எ - று.

காதுமேயென்றதில் ஏகாரம் தேற்றேகாரம். போதுமேயென்றதில் ஏகாரம் ஐய ஏகாரம். கழுதுமே யென்றதில் ஏகாரம் தேற்றேகாரம். முழுதுமேயென்றதில் ஏகாரம் ஈற்றசையேகாரம். கழுது - பேய்; "கழுதுகள் காணக் கருமைத் தாகி." இஃது **உதயணன் கதை.** உடு - நட்சத்திரம். "ஊர்கோண் மதியை யுடுச்சூழ்ந் தாங்கு". இதுவும் **உதயணன் கதை;** நகுதுமே: ஏகாரம் ஈற்றசை.

(**வி - கு.**) **உரை.** ஆதித்தனும் பாலைக்குத் தெய்வமென்பர் **அடியார்க்கு நல்லார்** (**சிலப்.** பதிகம்.) மென்பாலை - முல்லைதிரிந்த பாலை. வன்பாலை - குறிஞ்சிதிரிந்த பாலை. இவையிற்றின் - இவற்றின். (அ)

## வேறு

56. யோகமுதலிறைவி கோயின்மிசை[1] நிருதர்
யூதம்வரவலகை யொட்டுமே
மேகமுருமொடற வெற்புமிறகொடற
மேலெயிறுகொடு வெட்டுமே.

எ - து யோககர்த்தரியா யிருக்கின்ற தேவிகோயிலின் மேலே அசுரர் கூட்டம் வர ஈசுவரியுடைய படையான பசாசுகள் ஓட்டுவனவல்ல; மேகங்கள் வரின் அவை உருமேறுடன் அறவும், பருவதங்கள் வரின் அவை இறகோடு அறவும் மேல்வாயெயிற்றாலே அறவெட்டும் எ - று.

எனவே மேகங்கள் மழையைப் பெய்யாத பாலைநில மெனவுணர்க. நிருதர் - அசுரர்; ராட்சதர்க்கும் பெயர். யூதம் - பெரும்படைக்கூட்டம்.

(வி - கு.) மூ. யூதம்: "பூதவே தாள யூதமே" (தக்க. 509.) வெற்பு மிறகொடற: மலைகள் பண்டுசிறகுடையனவாகப்பறந்து திரிந்தனவென்றது இங்கே அறிதற்பாலது; இந்நூல் 170, 366, 749 - ஆம் தாழிசைகளின் உரையைப்பார்க்க.

(பி-ம்.) 1 'நிருதர் புருவர்தமையலகை' (கூ)

57. [1]நீலவரைநிரைகள் போலுமவுணர்தொகை
[2]நிற்குமேயிறைவி கிற்குமே
[3]காலவிறுதியெரி போலமுகில்வயிறு
[4]காயவருமுருமு கக்குமே.

எ - து நீல பருவதங்களை நிரைத்தாற்போன்றிருக்கும் அவலட்சண ரூபங்களையுடைய அசுரருடைய கூட்டம் நிலத்தின்மேல் வந்து நிற்கவற்றோ? நிற்கிற் பரமேசுவரி சம்மதிக்குமோ? உகாந்தகாலத்து அக்கினிபோல மேல் வந்த மழைமுகில் வயிற்றினீருலர்ந்து காயும்படி தரையினெருப்புத் தழல் மேனோக்கிப் புறப்படக் கக்கும் எ - று.

மழைமுகில் வயிறுகாய நிலத்து அசுரர்க்கு நிற்கவரிது. கிற்றல்-சம் மதித்தல். உருமுவென்றது, உருமேறு போலும் நெருப்பையெனவுணர்க. 'உருமு' என்னுமுடிவுணர்க; உருமென்பது மகர விறு.

(வி - கு.) மூ. நீலவரைநிரைகள் போலு மவுணர்: "இலங்கா புரங்காவலன்காவி னூல்வீழ், கருங்குன்று போன்மண் முகங்குத்தி வீழ" (திருவரங்கக் கலம்.) கிற்கும்: இதற்கு இங்கே உரையாசிரியர் கூறும்பொருள், "பிறப்பாழ் குழியிடை வீழ்ந்துழை வேற்குநின் பேரருளின், சிறப்பார் திருக்கை தரக்கிற்றியே" (சிவ. திருவிரட்டை. 8) என்புழிக் கிற்றியென்பதற் கமைந்திருத்தல் காண்க. வயிறு - இங்கே நடுவிடம்; "கடல்வண்ணன் பண்டொரு நாள் கடல்வயிறு கலக்கினையே" (சிலப். ஆய்ச்சியர்.) உருமு - நெருப்புத் தழல்; உவம ஆகுபெயர்.

(பி-ம்.) 1 * 'நீல வரைகள் சில' 2 * 'நிற்குமே யெயிறுதிர்க்குமே' 3 'காலவிறுதி யெதிர்' 4 'காலவருமுருமு' (கூ0)

58. ஈரல்சுருளமுளி பேய்களெரிதலையொ
டேறுசருகுட னெடுத்தெழுஞ்
சூரனிரைகளெரி [1]சூளைநிரைகளென
வானினிடையிடை [2]சுழிக்குமே.

ஏ - து வயிற்றின் பசியின் பெருமையாலே ஈரலும் சுருளும்படி உலர்ந்து விறகான பேய்களின் நெருப்புப் போன்றிருக்கும் தலைமயிர்களுடன் சருகுகளை எடுத்தெழுந்த சூறைக்காற்றுத் துராலான் எரித்தசூளைகள் நெருப்பும் புகையுங் கூடத் தூற்றுவது போல ஆகாசத்தே சுழித்து இடையிடையே தூற்றும் எ - று.

(வி - கு.) மூ. எரிதலை : "தீயெழுக் கொளுந்தியன்ன குஞ்சிவெஞ் சிரத்தவே", "சுடர்கிளைத்தனைய செய்யகரி பங்கி" (தக்க. 121,400.) சூரல், சூறைக்காற்று - சுழல்காற்று : "சூரலங் கடுவளி" (அகநா. 1 : 17.) சூளை - குயவர்களின் சூளை. உரை. துரால் - செத்தை.

(பி-ம்.) 1 'சூளைநிலைகளென' 2 'சுழிக்கவே,' 'சுழிப்பவே' (கக)

59. பூதமலகிலன பொங்குகழுதிரத
மெங்குமெழுநடுவு புதையவந்
தோதமுகவிறுதி போதநடுநடுவு
முழுகுமெழுகிரியு மொக்குமே.

ஏ - து தேவியுடைய படையான பூதங்கள் எண்ணிலாதனவற்றிடையே பொங்கியெழுந்த பேய்த்தேர்கள் எவ்விடத்திலும் வந்துநடுவு வெளியடங்கப் புதையவருதலின், உகாந்த காலத்துக்கடலோதம் கிளர்ந்து புறப்பட நடுவு முழுகிப்போயெழுகின்ற சத்த பருவதங்களை யொக்கும் எ - று.

பூதம் பருவதம், பேய்த்தேர் ஓதமெனவுணர்க. கழுதிரதம் - பேய்த்தேர்.

(வி - கு.) மூ. 'ஓத முகவிறுதி போத நடுநடுவு முழுகு மெழுகிரி' என்பதனுடன், "நல்லூர்ப் பெருமணம்" (திருஞா. தே.) என்பதும், "வையகம் போர்த்த வயங்கொலிநீர் - கையகலக், கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே" (பு. வெ. 35) என்பதும் அதன் உரையும் ஒப்பிடற்பாலன. பேய்த்தேர் நீர்போலத் தோன்றுமென்பது, "வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு, வானீங்கு வைப்பின் வழுங்காத்தேர் நீர்க்கவாஅங், கானம்" (கலி. 7 : 1 - 3), "கொம்மை வாடிய வியவுள் யானை, நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி, அறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு, முள்ளுநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை" (அகநா. 29 : 16 - 9), "பேய்த்தேர்ப்பின் குடங்கொண்டு நீர்க்குச் செல்வார்" (திருஞான. தே. திருப்பருப்பதம்), "விழிசுழல வரும்பேய்த்தேர் மிதந்துவரு நீரநீர்ச், சுழிசுழல வருவதெனச் சூறைவளி சுழன்றிடுமால்" (கலிங்க. 77) என்பவற்றாலும் தெளியப்படும். (கஉ)

## வேறு

60. யாமுமிமையவர் தாமும்வெருவர வீமவெரி[1]யிர வெரிதொறும்
தாமுமெரிவன போலவெரிவன [2]தாடமிலசில தீபமே

ஏ - து மனுஷ்யலோகத்துள்ள யாமும் சுவர்க்கலோகத்துள்ள தேவர்களும் மரணமுண்டென்று பயப்பட்டிட இராமாறு எரியும் சுடுகாட்டு

நெருப்பு எரியுந்தோறும் அவற்றுடனே கூடத் தாமும் எரிவனபோலவே எரிவன சில விளக்குகள்; அவையிற்றுக்குத் தாகமோகங்களில்லை எ - று

எனவே உடம்பினும் தலையினும் விளக்கேற்றித்தேவிக்குத் திருவிளக்கெரிக்கும் மந்திரசாதகரது நிலைமை கூறியவாறு. நெய் உடம்பினெய்யே, விறகு தலைமயிரே. தாபமில்லையென்பதனாற்பயன், விளக்குத் தாபமுடையனபோல நெய்யைப்பருகி மீண்டும் நெய்பெறுவிடின் அவியும்; நெருப்புப் பசியுடையதுபோல விறகை எரித்துத்தின்னினும் வேண்டும்விறகு பெறுவிடின் அவியும். இந்நெருப்பு இங்குச்சொன்னது தந்திரவுத்தி. யாமென்பது உளப்பாட்டுத்தன்மைச்சொல்; இமையவர் பயப்படுவது பண்டு வெந்த படியை நினைத்தெனவுணர்க.

(வி - கு.) உரை. இராமாறு - இரவுதோறும்; வழக்கு. 'இமையவர் பயப்படுவது பண்டுவெந்தபடியை நினைத்தெனவுணர்க' என்றதில், 'பண்டு' என்றது தம் பழம்பிறப்பிற்போந்த ஊழியிறுதியை.

(பி-ம்.) 1 'இரவெதிர்தொறும்' 2 'தாபமில சிலபூதமே' (கூ)

61\. ஈடுபடுமிறை மகள்பொறுமைகொ
 லிதுபொறுமைகொ லிறைவர்தம்
 காடுபடுசடை யூடுமுருவு
 கரந்துவருவது கங்கையே.

எ - து எளிவரவுபட்டுண்ட ஈசுவரி பொறுளென்றே, இந்நிலத்தினுஷ்ணந்தான் சகிக்கமாட்டாமையாறே, கங்கை ஈசுவரனது காடுபடு சடையின் நடுவே தன்வடிவைக்கரந்து வருவது? எ - று.

காடுபடுசடையாவது கொன்றையும் எருக்குமுதலியனவும் பாம்பும் பிறவுமுள்ளதான திருச்சடை. கங்கைதான் எழுகடலும் அளவொக்கும் ஆகாயகங்கையெனவுணர்க. இதில் நெருப்பை அவிப்பது நீர், நீர்தன்னை நெருப்பு வெதுப்புமிடத்து வேறுபட்ட விகாரகாரியம் வேண்டுமெனவுணர்க.

(வி - கு.) மூ. ஈடுபடும்: வழக்கு; "ஈடுபடவிருந்து" (**பெருங்.** 2. 10: 10), "ஈடுண்டேகுவான்" (**கம்ப.** வாலி. 15.) காடுபடுசடை: "வாருஞ் **சடாடவி** முடித்தேவர்", "**காடுபோகு சடாமுடி**", "நக்க ரப்படை **சடாட**விப்புடையில்" (**தக்க.** 76, 622, 649); "குடைக்காடன் பசிக்கன்னக் குழியருத்தி வேட்கையறக் கொடுத்த கங்கைச், **சடைக்காடன்**" (**திருவிளை.** இடைக்காடன். 1); "திங்கணுதற் றிருமகள்சேர் செல்வனினி தோம்பிடுங்கா, டங்கண்மலர்க் கடுக்கைதழைந் தமர்தலினெ லறுகுறலாற், கொங்களவின் மலர்செறியுங் கூவிளங்கள் பொருந்துதலால், **எங்கள் பிரான் செஞ்சடைக்கா** டென்றுரைத்தற் கையமிலை" (**மாயூரப்.** திருநாட்டுப். 50); "பரவு தேரசைந் தாடுமா லைகளெனப் பல்பூ, விரவு தொத்துக டேக்கிய மதலைகூ விளஞ்சார்ந், துரவு மேவியோ திமமுறு தோங்கிடு திறத்தால், அரவு பூண்பவன் சடைவன மவ்வன மாமால்" (**திருப்பெருந்.** திருநாட்டுப். 49.) **உரை.** ஈசுவரி பொறுளென்றது கங்கைக்கு மாற்றுளென்பதை நினைந்து போலும். (கச)

62\. வெம்புகருநடர் [1]வந்தவனமெனும்
 [2]விந்தவனமென வேவவும்
 கொம்புவிடுவன கொங்குகமழ்வன
 கொந்துசொரிவன கொன்றையே.

எ - து சோழனுடைய ஐசுவரியத்தின் பெருமைகண்டு சகியாதே வெம்பித்திரியும் கன்னடராசனான சந்திரகௌரிவல்லபன் யுத்தஞ் செய்ய அவனைக் கலியாணபுரத்தினின்றுந் தாக்க அவனும் துரப்புண்டு விந்தாடவியிற் சென்றுபுக அவன் புக்க அவ்விந்தத்தடவியைத் தடவிப் பிடிக்கப்புக்கு அவ்வடவியை நெருப்பையிட்டுச்சுட அக்காடு வெந்தவாறு போல இப்பாலைநிலம் உஷ்ணத்தாலே வெந்தெழுந்து போகவும் இந்நிலத்து நாயகியான பரமேசுவரியுடைய திருமுடியிற்பூவும் திருத்தோள்களில் தோண்மாலையுமான புட்பங்களையுடைய திருக்கொன்றைகளே கொம்பு விட்டு வளர்வனவும் சுகந்தமாகித் திவ்யமாக நாறுவனவும் பூந்தாது சொரிவனவும் எ - று.

கொன்றையேயென்ற ஏகாரத்தால் மற்ற விருட்சங்களும் ஒன்று மின்று என்றவாறு.

(வி - கு.) மூ. கொந்து: இச்சொல்லிற்குப் பூந்தாது என்று உரையாசிரியர் கொண்டபொருள், "கொந்தார் குவளை" (திருஞா. தே. திருமருகல்) என்பதிற் கொந்தென்பதற்கமைதல் காண்க. உரை. சந்திரகௌரீ வல்லபன் - சாளுக்கிய வம்சத்தரசனாக இருத்தல் கூடுமென்று தெரிகிறது. கலியாணபுரம் - சாளுக்கியர் இராசதானி; சோழன் கலியாணபுரத்தைத் தாக்கியது "கரத்துஞ் சிரத்துங் களக்குங் களிறுடைக் கண்டன்வந்தான், இரத்துங் கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே, உரத்துஞ் சிரத்தும் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா, புரத்துங் கபாட புரத்துங்கல் யாண புரத்தினுமே" (தமிழ்நா. 125) என்பதனாலும், விந்தாடவியிலெதிர்த்தது, "கொலையைத் தடவிய வைவேலரக்கர் குலமடியச், சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள, மலையைத் தடவிய விந்தத்தடவி மலைந்தவொன்னார், தலையைத்தடவி நடக்குங்கால் யானைச் சயதுங்கனே" (தமிழ்நா. 134) என்பதனாலும் அறியப்படும். சோழன் விந்தாடவியில் நெருப்பை யிட்டது, பண்டைக்காலத்துத் தமிழரசர்கள் தம்முடைய பகைஞருடைய அரண்களிலும் இராசதானிகளிலும் தீயிடுதல் வழக்கமென்பதை நினைப்பிக்கின்றது. அவ்வீரச் செயலை உழுபுலவஞ்சி அல்லது எரிபரந்தெடுத்தல் என்னும் புறத்திணைத்துறையு ளடக்குவா; பு. வெ. 49. 'மற்ற விருட்சங்களுள் ஒன்றுமின்று' என்றதும், 228 - ஆம் தாழிசை விசேட வுரையில், 'நீ எழுந்தருளி யிருக்கும் அவ்வனத்தில் மற்றுவிருட்சமில்லை' என்றெழுதி யிருப்பதும் ஒப்புநோக்கற்பாலன.

(பி-ம்.) 1 'விந்தவனமென வந்தவனமென' 2 'வெந்தவனமென வந்தவனமெனமேவவும்' (கரு)

63. கண்டமலைவன [1]சண்டதருநிரை கந்துளெழமிசை கதுவவும்
[2]சண்டவெரியினு ணின்றுகுளிர்வது தங்களொருசிறு திங்களே.

எ - து வெந்து பொடியாய் முறியானமலைகளும் மரக்கூட்டமும் காற்றினால் எடுக்கப்பட்ட நெருப்புக்கட்டியான கந்துளெழும்படி வேவ மிக்க பிரசண்டமான நெருப்பெழவும் பின்னையும் அதில் நிலைநின்று சீதமிகக் குளிர்வது தங்களுடைய திருமுடித் தனிச்சிறுதிங்களொன்றுமே எ - று.

கண்டம் - பிளவு. வனதருநிரை - காட்டுமரக்கூட்டம். சண்டம் - பெருமை. தரு - விருட்சம். கந்துள் - நெருப்பொடுகூடிய கரிக்கட்டி. கதுவவும் - சந்திரபதத்தளவுஞ்சென்று ஓரோர் அக்கினிச்சுவாலைதொடவும். தங்களொருசிறுதிங்களென்றது, திருமேனியிரண்டும் ஒன்றாய்நின்றவிடத்துத்தங்களுக்குத் திருமுடியொன்றேயாதல் பெற்றது. பண்டு கங்காளவேடம்

ஈசுவரன்கொண்டருளினகாலத்தில் முனிவர்கள்விட்டஅக்கினி நலியாமற் சீதத்தாலே நலிவுண்ண அவர்படைத்துவிட்ட சந்திரனெனவும் ஆலகாலம் அமுதுசெய்தற்குப் பிரதியுபகாரமாகத் தேவர்கள் பாலசந்திரனைக்கொடுத் தார்களெனவும் கதைகளுள. இது வேதத்திற் கண்டுகொள்க.

(வி - கு.) மூ. கந்துள் : "கந்துளுமிழுங் கரியசூழ் புகைகள் விம்ம" (சூளா. கல்யாணச். 275.) உரை. திருமேனியிரண்டும் ஒன்றாய் நின்றவிட மென்றது, அர்த்தநாரீசுவர மூர்த்தத்தை. கங்காளவேடம் - முழு என்பைய ணிந்த மூர்த்தம்; "கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ" (திருவா.) முனிவர்கள் - தாருகாவனத்து ரிஷிகள். தாருகாவனத்து ரிஷிகள் சந்திரனை யாகாக்கினியிற் படைத்து விட்டார்களென்று தெரிகிறது; "யாகப் பிறையா னினியென் னகம்புகுந்து, போகப் பெறுமோ புறம்" (சிவ. திருவிரட்டை. 13), "சித்தி ரக்கனன் முகத்தினும் பிறந்தொளி சிறந்தோன்", "விழியினெஞ்சின்வா னெருப்பினி டுத்தியின் விதிபடைப் பினிற்றோன்றிப், பொழியும் வெண்கதி ரைவகை மதியும்" (வி. பா. குருகுலச். 5; சூது போர்ச். 78.)

(பி-ம்.) 1 'சண்டைமலை நிரை' 2 'சண்டவெரியினும் நின்று குளிர்வன' (௬௩)

64. படப்படப்பொடி யாகவெங்குள பாதவாதிக [1]ளாதவம்
சுடச்சுடப்பொடி யாயெழச்சுழல் சூறைபுகுவன பாறையே.

எ - து உஷ்ணமுண்டாக உண்டாகப் பொடியாய்ப்போக எங்குள்ள விருட்சமுதலான எல்லாம் வெயில் சுடச்சுடப் பொடியாய் வெந்தெழச் சுழன்று அடிக்கின்ற சூறைக்காற்றில் அகப்படுவன அந்நிலத்திற் படர் பாறையான பாறுங்கல் எ - று.

பாதவம் - விருட்சம். ஆதவம் - வெயில். சூறை - சுழல்காற்று; "சூறைக்காற்றின் பாறுங்கல்லே" என்றாராதலின். புகுதல் - அகப்படுதல். பாறைகளும் பொடியாய்ச் சருகிலையாயே கிடந்தன வெனவுணர்க.

(பி-ம்.) 1 'ளாதபம்' (௬௪)

## வேறு

65. புறச்சோலை பூதங்க ளும்பேயும் யாவும் புகுஞ்சோலையே
அறச்சோலை தானும் பிரானும் பயின்றாடு மச்சோலையே.

எ - து இந்நிலத்திற் புறச்சோலை பரமேசுவரியுடைய படைகளான ஸ்ரீ பூதகணங்களும் பசாசுகளும் அவற்றிற் கடையான தந்திரமாதிகளு மெல்லாம் புக்கிருக்குஞ்சோலை; அச்சோலை கொன்றைச்சோலை. அறச் சோலையாவது பரமேசுவரியிருக்கும் கோயிற்சோலையான உட்சோலை. அதுதான் பரமேசுவரிதானும் தனக்குக் கர்த்தாவான ஈசுவரனும் பழகி யாடும் அழகிய சோலை எ - று.

'அ' என்றது, பிரமாவின்பெயருமாம்; அகரம்போலும் சோலை அச் சோலையென்றுமாம். யாவதேயாக, அச்சோலைதான் கற்பகச்சோலை. கொன்றைச்சோலை துவாரகந்தவனம், கற்பகச்சோலை அந்தப்புரமான உபவனச்சோலையெனவுணர்க.

இனிக் கற்பகங்களைச்சொல்லப் புகுகின்றார்.

(வி - கு.) மூ. அச்சோலை - அழகியசோலையுமாம்; அ - அழகு; "அவ் வாய் வளர்பிறை" (பெரும்பாண். 412), "அவ்வித ழவிழ்பதங் கமழ"

(நெடுநல். 41) என்பவற்றினுரையைப் பார்க்க. உரை. அக்ரம் போலுஞ் சோலையென்றது தலைமைபற்றி. துவார நந்தவனம் - வாயிற்புறத்தேயுள்ள நந்தவனம். (கஅ)

## வேறு

66. வெற்ப நேகசிக ரத்துடன் மிடைந்தனவென
[1]கற்ப கோடிவிழ [2]நீடுவன கற்பதருவே.

எ - து குலபருவதங்கள் பலபல சிகரங்களுடனே மிடைந்து தம்மிற் செறிந்தனவெனக் கூடிப் பின்னை உகாந்தகற்பங்கள் அநேகநூறாயிரங்கள் போகவும் நின்று வளர்ந்தோங்கிவருவன கற்பகவிருட்சமுள, இவளது அகச்சோலையில் எ - று.

எனவே இந்திரபதமும் பிரமபதமுமழிந்த புறங்களிலும்நிற்பன, தேவியுடைய கற்பகச்சோலைகளெனவுணர்க.

(வி - கு.) மூ. பெரிய மரங்களுக்கு மலைகளை உவமைகூறுவது கவி மரபு; "மலைகண் டோமென்ப தல்லது மலர்மிசை யயற்கும், இலைகண் டோமெனத் தெரிப்பருந் தபத்தன வேழும்" (கம்ப. மராமரப். 126), "பொருவி லாவதன் பூந்தடத் தின்கரை, மரக தக்குவ டொப்பது வான்றிசை, விரிவ ளக்கும் வியன்சினைத் தூன்றும்வீழ்த், திரள தேராற் றிருமா னிகர்க்கு மால்" (சீகாளத்திப். நக்கீரச். 93.)

(பி-ம்.) 1 'கற்பகோடிவிட' 2 'நீடியது' (கக)

67. வாரி சாலையனு [1]மாலய நமக்கெனவரும்
பாரி சாதமுள சாதகர் [2]பராவுவனவே.

எ - து வருணராசனும் நமக்கு உட்டினமிக்ககாலத்தில் உட்டினந் தீர்ந்திருக்கலாமிருப்பிடமிதுவெனவந்து புகுதும் கற்பகசாதியில் இரண்டாங்குலமான பாரிசாதச் சோலையுள்; அவைதாம் யாமளசாத்திர மந்திர சாதகர் காலம்பார்த்துப் பிரார்த்தித்துப் புகழப்படுவன எ - று.

வாரியாவது சலம்; கடலுக்கும் பெயராம். வருணராசனுக்கு உட்டினம் வடவாமுகாக்கினியும் யுகாந்தாக்கினியும் அகத்தியரிஷியின் உதராக்கினியும் ஈசுவரனது அமுதமான ஆலகாலவிஷாக்கினியும் இராமசக்கரவர்த்தியுடைய சராக்கினியும் பதிவிரதைகளுடைய சாபாக்கினியுமெனவுணர்க. வாரிசாலயனென்று பாடமோதுவாருமுளர்; வாரிசம் - செந்தாமரை. ஆலயம் - இடம்.

(வி - கு.) உரை. அகத்தியரிஷியின் உதராக்கினியைக் கூறியது, அவர் உண்டகாலத்துக் கடல் அவர்வயிற்றிற் சுவறியதுபற்றி. இராம சக்கரவர்த்தியின் சராக்கினியைக் கூறியது, அணைகட்டுதற்குமுன் அம்புவிட்டுக் கடலைக்கொதிக்கச் செய்ததுபற்றி.

(பி-ம்.) 1 'மாலயனமக்கென' 2 'பாரவனமே' (உ0)

68. பாலை தாழமது மாரிசொரி யும்பருவநாள்
மாலை தாழ்வன [1]வநேகமுள மந்தாரமே.

எ - து பாலை நிலமான இந்நிலமும் பிறபுலத்திற் பாலைநிலங்களும் தமது தன்மைகெட்டுத் தாழ்வுபட்டுக் குளிரத் தேனென்னுங் கால வருடம் வருடிக்கவல்ல பரிபக்குவப் புஷ்பக்கொத்துக்களைத் தாழவிடவல்ல அநேக

விதமான கற்பகத்துக்கு மூன்றுஞ் சாதிகளான மந்தாரச் சோலைகளுமுள எ - று.

பாலையென்பது உட்டினத்துக்குப் பெயருமாம்; "காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப், பாலைநின்ற பாலை நெடுவழி" (10 - 11.) இது **சிறுபாணாற்றுப்படை**. பருவம் - காலபக்குவம். நாள் - புஷ்பம்.

(வி - கு.) உரை. 'நாள் - புஷ்பம்' என்றது, பூவரும்பைப்போதென்றதுபோலும்.

(பி-ம்.) 1 'வநேகவித' (உக)

69. [1]மீதெ டுத்தபணை யாவையும் விழுங்கவெழுசெந்
[2]தாதெ டுத்தன வநேகமுள சந்தானமே.

எ - து மீதெடுத்த பணைக்கவடுகளைப் புட்பத்தால் விழுங்குவதுபோல மேன்மேலெழுந்த சிவந்த பூந்தாதெடுத்துவிளங்குவன அநேககோடியுள, கற்பகத்தில் நாலாஞ்சாதியான சந்தானவிருட்சம் எ - று.

மீது ஆகாயமுமாகும்.

(பி-ம்.) 1 'மீதடுத்தபணை' 2 'தாதடுத்தன வனந்தமுள', 'தாதெடுத்தன வநேகவித சந்தானமே' (உஉ)

70. சுவடு கொண்டபொழி லேழின்ஞிமி றுந்துறுமொரோர்
கவடு கொண்ட[1]வரி சந்தன வனங்கவினவே.

எ - து சுகந்தச்சுவடுகொண்டுசீவிக்கும் பிரமரசாதியால் மொய்த்திருக்கும் அரிசந்தனச்சோலையும் அழகுசெய்ய எ - று.

பொழிலேழென்பதற்கு ஏழுசோலையெனச் சொல்லுவாருமுளர். இப்பொருள் **காளக்கவி**க்குப் பொருந்தாது. பொழிலேழென்பது ஏழு பூமி; "ஏழுடை யான்பொழி லெட்டுடை யான்புயம்" (எ) எனத் **திருக்கோவையில்** இரண்டு பொருளுமுளவெனவுணர்க.

(வி - கு.) மூ. சுவடு: "தெரியற் சுவடு படுகளபத் தொய்யில்" (**விக்கிரம**. 175 - 6.) கவடு - கிளை; "கோவை யார்வடக் கொழுங்கவ டொடிதர நிவந்த" (**கம்ப**. வரைக்காட்சி. 1), "அலையான் கவடுபடான்......சோலையென் றுப சொன்னவரார் சொல்" (**தனிப்**.) உரை. காளக்கவியென்றது இந்நூலாசிரியரை; பண்டைக் காலத்திற் சிறந்தகவிகளுக்கு அரசர்கொடுக்கும் விருதுகள் பலவற்றுள் காளம், சின்னம், சங்கு முதலியவைகளும் சிலவாம். அவற்றை இவர்பெற்று விளங்கினரென்பது, 'சோழன் **வரிசை** யளித்து விடுத்தபோது **கூத்தமுதலி** கூறிய வருப்பு' என்ற தலைப்பின்கீழ், "இடுக்கட் புண்படு கிரப்புக் கொண்டுழன் றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களம், திடுக்குற் றஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன் றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன, படுக்கக் கம்பளம் பரக்கக் குங்குமம் பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம், கடுக்கக் குண்டலங் கலிக்கச் **சங்கினங்** கவிக்குப் பஞ்சரங் கவிக்கத் தொங்கலே" (118) என்றும், 'இந்தவிருதுகள் யாருக்கென்றபோது பாடியது' என்னுந்தலைப்பின் கீழ், "பத்துக்கொண்டனதிக்கும் பதறிப்போய் முடியப் பைம்பொற்றுரகைசிந்தப் பகிரண்டத்திடையே, மத்துக்கொண்டமுதத்தைக் கடையாழித் திருமால் வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானு பரணு, முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேன் முருகற்கும் பொதியக்கோ மூனிவற்கும் பதுமக், கொத்தற்குஞ் சடிலக்குந் தளருக்குமல்லாற் கூழைத்தண் டமிழுக்கேன் கொடியுங்காளமுமே" (119) என்றும் காணப்படும் **தமிழ் நாவலர் சரிதைச்** செய்யுட்களால்

விளக்கும். பிறரும் இவ்வாறே பெற்றதை, 'வாணியன்தாதன் விருதுகாளம் பிடிக்க (கம்பர்)ப் பாடிய கலித்துறை' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படும், "கூளம்பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக், காளம் பிடித் திடிற் சின்னம் படுமன்னர் காதலிமார், வேளம் பிடிக்கக்கண் வெள்ளம் பிடிக்க வெம்பேய்க்கிளம்பேய், தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங் கனே" (தமிழ்நா. 83) என்பதும், "கூறுகாளக்கவிப் புலவோன் யான்" (திருப்.) என்பதும் வலியுறுத்தும். சுகந்தச்சுவடு......பிரமரசாதி : "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" (குறுந். 2 : 1.) பொழிலேழென்பதற்கு ஏழு பூமியென்று பொருள்கூறியவாறே, 571 - ஆம் தாழிசையில், "ஏழுபொழி லுங்கதுவவே" என்பதில் ஏழுபொழிலென்பதற்கு ஏழுலோகமென்றுரை யிடுவர்; "காத்த னேபொழி லேழையும்" (திருநா. தே. திருவீழி.) ஏழுசோலை யெனின் தேவிதிருக்கோயிலைச்சூழ்ந்த சோலைகளெனக்கொள்க. அவை களே, ஸப்தவாடிகா, ஸப்தோத்தியானமென்பர் வாமமார்க்கத்தார்.

(பி - ம்) 1 'அரிசந்தன வினம்' (உ௯)

## வேறு

71. பூவைந் தாலும் புகுதற் கரும்பொலங்
காவைந் தாலைந்து [1]சோலை கவினவே.

ஏ - து "மாம்பூ வசோகப்பூத் தாமரைப்பூ முல்லைப்பூ, தேம்பாய் தருகுவளைச் செவ்விப்பூ - மேம்பட்ட, மைந்துபூண் மார்ப மதனன் கணை யான, வைந்துபூ வாகு மவை" என்னும் இப்பஞ்ச புட்பங்களாற் புகுதற் கரியனவாய் இப்புட்பங்களின்றியொழிந்தாற் காமதேவற்கு வேண்டிய பொழுது பெறப்படுவதற்கு எளியனவாயிருக்கும் பொன்னின்சோலையான கற்பகம் மந்தாரம் பாரிசாதம் சந்தானம் அரிசந்தனமென்னப்பட்ட ஐந்து விருட்சங்களிலும் ஓரொன்றால் ஒரு சோலையான ஐந்துசோலைகள் அழகு பெற்றிருக்க எ - று.

(வி - கு.) மூ. காவைந்து : 66 - ஆம் தாழிசைமுதல் 70-ஆம்தாழிசை வரையிற் கூறப்பட்டன; "சந்தானம் வேண்டிற் றெல்லாந் தருமரி சந்த னம்பூ, மந்தாரம் பாரி சாதங் கற்பக மற்றோ ரைந்தாம்" என்பது சூடாமணி நிகண்டு. உரை. "மாம்பூ......யவை", "அந்தணரவிந்த..." (சீவக. 706, ந. மேற்.)

(பி-ம்.) 1 'சோலைகதுவவே' (உ௪)

## வேறு

72. மலைதருவன கடறருவன [1]மணியணிபணி மகுடத்
தலைதருவன புவிதருவன தருவனசுர தருவே.

பருவதங்களால் தரப்படுவனவான சிங்கமுதலிய மிருகங்களும் மற்றும் பலவும் தாமே தருவனவான சுரதருவெனவும், சமுத்திரம் தருவனவான இப்பி சங்கு வலம்புரி சலஞ்சலம் இவைகளும் இவைதருவனவான முத்துக் களும் பவழங்களும் மகாமச்சியங்களும் மாணிக்கங்களும் இவை முதலான பலவும் தாமேதருவனவான சுரதருவெனவும், விற்பிடிமாணிக்கங்களை ஆபரணமாகவுடைய நாகராசாக்களது தலைகள் தருவனவான மகாரத்தி னங்களும் பிறவும் தாமேதருவனவான சுரதருவெனவும், பூமியால் தரப்படு வனவான மகாவாகனமாகிய கசரத முதலாயின பிறவும் தாமே தருவன வான சுரதருவெனவும் கொள்க.

எ - து இவ்வாறு எல்லாம் வல்லனவான தேவ விருட்சமைந்தும் ஐந்து சோலையாய்த் தேவியது உத்தியான நந்தனவனமாயிருக்கும் எ - று.

(வி - கு.) மு. "வரையேழி னுள்ள வயிரமும் வாங்கும், திரையேழின் முத்தின் றிரளும், தரையேழிற், பொன்னும் பிலனேழிற் போகாவிருள் போக, மின்னுஞ் சுடிகை வெயின்மணியும்" (இராச.) உரை. இப்பி சங்கு வலம்புரி சலஞ்சலம் : "இப்பியா யிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில்சங் காயி ரஞ்சூ ழுறுவலம் புரியென் றோதும், அப்படி யதுவுஞ் சூழ்ந்த சலஞ்சல மாகும்" (நூடா. 3 : 73); சங்கு - இடம்புரி. 'மகாமச்சியங்கள்' என்பதை மகரமச்சியங்களென்று கொள்ளலும் ஆம். உத்தியானம் - உய்யானமெனத் தமிழில்வழங்கும்.

(பி-ம்.) * 'பணிபதிமணிமகுடத்தலை' (உரு)

## வேறு

73. பொங்க மளிப்புண ரித்துயில் வல்லி புறங்கடையிற்
சங்க மளிப்பன ரத்ன விதஞ்சத கோடியே.

எ - து விஞ்சப்பட்ட படுக்கையானதுகொண்டு கடலில் உறங்கும் விட்டுணுசத்தியான பரமேசுவரியின் திருக்கோயிற்றிருவாசற் புறத்திருக்கும் சங்கநிதி கொடுப்பன, அரிய ரத்தினவத்துக்கள் அநேகவித நூறுகோடிகள் எ - று.

சதமென்பது அநந்தவாசி.

(வி - கு.) மு. இதிற்கூறப்படும் சங்கநிதியும் அடுத்ததாழிசையிற் கூறப்படும் பத்மநிதியும் தேவிகோயிலின் துவாரபாலகர்கள். சிவாலயங்களில் அமைக்கப்பெற்றிருக்கும் துவாரபாலகர்களைச் சங்கநிதி பத்மநிதி யென்றே கூறுவர். இதனைவிளக்கச் சில சிவதலங்களில் அவ்விருவர்பிம்பங்களையும் சூழச் சங்கம் பதுமமென்பவற்றின் உருவங்கள் முறையே அமைக்கப் பெற்றிருத்தலைக் காணலாம். உரை. அநந்தவாசி - பலவற்றைச் சொல்வது. (உசு)

74. பாகன கங்குழை வித்த [1]பவித்ர பயோதரிதன்
கோகன கங்கன கஞ்சத கோடி கொடுப்பனவே.

எ - து தனது சமபாகங்கொண்டு நின்ற பரமேசுவரனுடைய திருவுள்ளத்தைக் குழைவித்த பவித்திரமான குயங்களையுடையாளது திருக்கோயிற் றிருவாசலிற் பத்மநிதிகொடுப்பன சதகோடி கனகராசிகள் எ - று.

பவித்திரமென்பது வரிட்டமங்கலம்.

(வி - கு.) மு. பாகனகங்குழைவித்த பவித்ரபயோதரி : "உடையகேள்வ ரோர்பாதி யுருகுகாதல் கூர்வாளே" (தக்க. 109.) உரை. வரிட்டமங்கலம் - மிகவுயர்ந்த மங்கலப் பொருள்கள்.

(பி-ம்.) 1 'விசித்ரபயோதரி' (உஎ)

## வேறு

75. நுதிக்கோடு கூர்கலை யுகைப்பாள் விடாமுல்லை
நூறுயி ரங்கிளைகொ டேறு விசும்பிவர்
மதிக்கோடு தைவர வெழுந்தண் கொழுந்துகளை
வாயா வெனக்கொண்டு மேயாது மான்மறியே.

எ - து நுனியிற்கொம்பு கூரிதாயிருக்கும் கலைமான்மேலேறி நடாத்தும் துர்க்காபரமேசுவரி கைவிடாதே வளர்க்கின்ற முல்லைவல்லிசாதி நூறுபிரங்கிளைகொண்டு வளர்ந்து ஆகாசத்திலே ஏறி மைத்திரம் பரந்த சந்திரனுடைய இரண்டுகோடுகளையும் தடவும்படி எழுந்த கொழுந்துகளை, நம் பசியாலே மேய்ந்தேமாயினும் வாயாது, பிரமாதம் பிறக்கும்; இஃது ஈசுவரி பரிசாரகமுல்லையென்று கொண்டு சந்திரனுட்கிடந்த மான்மறி பயப்படும் எ - று.

தேவி முல்லைவளர்த்தற்குக் காரணம் கற்புடைமையெனவுணர்க; "முல்லை சான்ற கற்பின் மெல்லியல்" (30.) இது **சிறுபாணாற்றுப்படை.** மதி என்றது இளம்பிறையை. இம்முல்லைக்கொழுந்துகள் சந்திரன் பக்கலுள்ள மான்மறியது பசியுணர்ந்து தெய்விகமாதலாற் சென்றன போன்றன.

(வி - ரு.) மூ. கலையுகைப்பாள்: "கலையமர் செல்வி", "கலைப்பரியூர்தியைக் கைதொழு தேத்தி", "கலையமர் செல்வி" (**சிலப்.** 12 : 16, 44; 23 : 125), "காவலிற் **கலையூர் கன்னி**யை யொக்கும்" (**கம்ப.** நகரப். 9); கலையானத்தியென்றுங் கூறப்படுவாள். விடாமுல்லை : 119 - ஆம்தாழிசையும், அதன்உரையும், அடிக்குறிப்பும் இங்கே அறியற்பாலன. மாதர்கள் முல்லைவளர்ப்பது மரபு; "பவழங்கொள் கோடு நாட்டிப் பைம்பொனால் வேலி கோலித், தவழ்கதிர் முத்தம் பாய்த்தித் தன்கையாற் றீண்டி நன்னீட், புகழ்கொடி நங்கை தன்பேர் பொறித்ததோர் கன்னிமுல்லை, அகழ்கடற் றானை வேந்தே யணியெயி றீந்த தன்றே" (**சீவக.** 1268), "அல்லியங் கோதை மாதரன்புடன் வளர்த்த முல்லை, மெல்லரும் பீன்ற தென்று விழாவயர் முழவினோடு, மல்லுயர் திணிதோண் மைந்தர் மங்கையர் வதுவை யாற்றும், பல்லிய முழக்க மார்க்கும் பரவையோ டிகலு மாதோ" (**நைடத.** நாட்டுப். 18.) **உரை.** மதி: "இருகோட் டொருமதி யெழில் பெற மிலைத்தனை" (**நக்கீரர் திருவெழுக்கூற்றிருக்கை.**) இத்தாழிசையால் தேவிவளர்க்கும் முல்லைக்கொடியின் பெருமை கூறப்பட்டது. மைத்திரம் - நட்பு. பிரமாதம் - தவறு. (உஅ)

76. வாருஞ் சடாடவி முடித்தேவர் தந்தேவி
வன்மா னுகைத்தகொடி பொன்மா தவிக்கொடிகள்
ஊரும் பகற்றேரை முட்டுவன கட்டுவன
வுருகா கொழுந்துமுகை [1]கருகா செழுந்துணருமே.

எ - து நெடுஞ்சடைக்காட்டை முடியாகவுடைய தேவர் தமது திருத்தேவியாய் வலியாயிருக்குஞ் சிங்கத்தை ஏறி ஓட்டும் கற்பகவல்லி சாதி போல்வாள் வளர்த்த பொற்குருக்கத்திக்கொடிகள் சென்று ஆகாசம் புக்கு அங்கே ஊர்ந்துதிரியும் ஆதித்தியபகவானுடைய தேரை முட்டுவனவும் கட்டுவனவுமாயினும் அக்குருக்கத்திக் கொழுந்துகள் ஆதித்தியனது உட்டினத்துக்கு உருகுவதுஞ் செய்யா; அன்றியே புட்பமொட்டுக்களும் கருகா; வளப்பத்தையுடைய பூந்தொத்துக்களும் அப்படியே ஒன்றும் செய்யா எ - று.

ஆதித்தனும் பயப்பட்டுத் தண்ணியனுவனென்பதாம். இவை அவனது ஓராழித்தேர்க்கு நிழலளிப்பனபோல வளருமென வுணர்க.

(வி - ரு.) மூ. இப்பாட்டில், சூரியனைமுட்டியும் வெயிலால் வாடாதனவென்று தேவிவளர்க்கும் மாதவிக் கொடிகளின் பெருமை கூறப்படுகிறது.

வன்மானுகைத்தகொடி : "கடவுணீலி யூர்யாளி", "ஆளியேறி யகி லாண்ட நாயகி", "யாளி யூர்தி" (தக்க. 359, 613, 729), "நீலி சிங்க வட லேற்றின்மேற் செல்ல" (ஆதி. 42); "வீரர், தொலைக்குமரி யேறுகைப் பாள்" (தண்டி. மேற்.); ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேசுவரியென்பது லலிதா ஸஹஸ்ர நாமத்திலொரு திருநாமம். அதற்குச்சிங்கத்தை வாகனமாக உடையவ ளென்று பொருள்கூறுவர். தேவி இளமையில் சிங்கத்திலெழுந்தருளி மகிஷாசுரனைச் சங்கரித்ததனால் மகிஷாசுரமர்த்தனியென்றும் ஸிம்ஹாஸ னேசுவரியென்றும் கூறப்படுகிறாளென்று தேவீபுராணம் கூறும். தேவி மாதவியை வளர்ப்பது, "மன்னு மெம்பிரான் குடங்கையால் வளர்த்தமாங் கன்றும், அன்னை தன்கரத் தன்பினால் வளர்த்தமா லதியும்" (காஞ்சிப். திருக்கண். 167) என்பதனாலும் விளங்கும்; மாதவி, குருக்கத்தி, மாலதி, மௌவல் என்பன ஒருபொருட்கிளவிகள்.

(பி-ம்.) 1 'கருகாகொழுந்தினிணையே' (௨௧)

77. பிரமற்கு மம்மனை பெறுங்கற்ப கக்கொடிகள்
பெருவான மேறுவன வருவான மாறுவன
பரமற்கு மீதுமிடை சடையொக்கு மென்பதுகொல்
பறியா பெருஞ்சுழியு மெறியா தரங்கமுமே.

எ - து பிரமாவுக்குந் தாயாகிய பரமேசுவரிபெற்ற பிள்ளையான கற் பகவல்லிசாதிக்கொடிகள் சென்று மேனோக்கி ஆகாசத்திற் கங்கையிலே சென்றேறுவனவும் கங்கை போகாமல் மாறுவனவுமானாலும் அந்தக்கங்கை மகாதேவருடைய திருமுடியில் மிடைந்த சடையை ஒக்குமெனக் கருதிக் கொல்லோ, கங்கைத்தண்ணீர்ச்சுழிகளும் பறியா? கங்கையிற்றிரைகளும் இவைபிற்றைப் போக எறியா? எ - று.

'பிரமற்கு மம்மனை' என்ற உம்மையால், விட்டுணு புரந்தராதிகட்கும் தாயாதல் முடிந்தது; இதனால் ஈசுவரனுக்குத் தாயெனலுமாம்; "சத்தி யீன்ற சதாசிவம்" என்பதறிக. இது திருமந்திரமாலை; 'சத்தியீன்ற' என்பது தடுமாறுதொழிற்பெயர். "கலைவள ருத்தமனைக் கருமுகி லொப்பவனை...... தருமத் திருவுதரத்தினளே" (கலிங்க. 111.)

(வி - ரு.) மூ. கற்பகக்கொடிகள் காமவல்லியெனவும் கூறப்படும். மாறு வன - தடுப்பன; "படைமாறு கொண்டமைக் கண்ணியர் பால்வைத்த பாசநெஞ்சை, மடைமாறி யுன்றன் றிருவடிக் கேவர வைத்தருளே" (திருவ ரங்கத்துமாலை, 108.) கற்பகக்கொடிகள் .....சடையொக்கும்: கொடிக்குச் சடையையும் சடைக்குக்கொடியையும் உவமைகூறுதல் கவிமரபு; "கிளைத்தி டுங்கதிர்க் கொடிநிகர் சடையவன்" (வி. பா. சம்பவச். 15), "பவர்படு செஞ்சடை", "பவர்வேணிச் சுடர்மதிபோல்" (மீ. பிரபந்தத். 1130, 1169.) பவர் - கொடி. உரை. தேவி பிரமாமுதலிய மூவர்க்குந் தாயாதல், "ஆதி மறையவனு மாலு முயர்சுடலை யாடு மரனுமிவ ரொன்ற தான, ஆயி" (திருப்.) என்பதனாலும் பெறப்படும்; "கலைவள ருத்தமனைக் கருமுகி லொப்பவனை.....தருமத் திருவுதரத்தினளே" (கலிங்க. 111.) 'சத்தியீன்ற என்பது தடுமாறு தொழிற்பெயர்' என்றதால், 'சத்தியீன்ற' என்பதனுக்குச் சத்தியையீன்ற, சத்தியாலீனப்பட்டவெனப் பொருள் கொள்க; "சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்" (சிவஞானசித்தியார்.) தடுமாறுதொழிற் பெயர்: தொல். வேற்றுமைமயங்கு. சூ. 12. "எம்பெரு மானிம வான்மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன் றகப்பன் றமையனெம் மையன்" என்பது திருவாசகம், திருப்பொற்

சுண்ணம், 13; "தன்னொருபால், அவளத்த னுமக னுந்தில்லையான்" என்பது **திருக்கோவையார்**, 112; "கனக மார்க வின்செய் மன்றில், அனக நாடகற்கெ மன்னை, மனைவிதாய் தங்கை மகள்" என்பது **சிதம்பரச்செய்யுட்கோவை**, 33. (௧0)

## வேறு

78\. சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண் டாயிரஞ்
சுடரொடுஞ் சூழ்வருவரே
நேரியர்க டிகிரியுந் திகிரியோ வவைதொறு
நிலாவர வுலாவருவதே.

**எ - து** இங்குச்சொல்லப்பட்ட பரமேசுவரியுடைய திருக்கோயிலைச் சூழ ஆதித்தர்பன்னிருவரும் ஒரோவொருவர் தம்முடைய ஆயிரங்கதிர்களைக் கைவிளக்காகப் பிடித்துக்கொண்டு பன்னீராயிரம் விளக்குடன் சூழவருவர். இதனை ரட்சிக்குஞ் சோழசக்கரவர்த்திகளுடைய சக்கரமும் சக்கரமோ? அல்ல; அப்பன்னீராயிரங்கதிர்களும் உட்டினஞ்செய்யாதபடி குளிர்ந்து நிலாவாம்படிவர உலாவித்திரியும் எ - று.

எனவே தேவிகோயிலைச்சுற்றும்வந்து விளக்குக்கொண்டு திரிகின்றார், எங்கள் வாமத்தாரென்றவாறு. மற்று அவருட்டினம் நலியாதபடி ரட்சிக்குமென்பது நிந்தாத்துதியலங்காரம்; நிதரிசனமென்னும் அலங்காரமுமாம். நேரியர் - நேரிமலையையுடையவர்.

(வி - கு.) மூ. பன்னிரண்டாயிரஞ்சுடர்: "**ஆயிர மான** வெய்ய கதிர**ாிரண்டும்**", "பதங்கர் வெங்கதிர் **பன்னிரண் டாயிரம்**". 'ஆதித்தியர் **பன்னிருவருடைய** நெருப்புவிரிகிறகதிர்கள் **பன்னீராயிரமும்**' (**தக்க**. 440, 608; 141 - உரை.) நேரியர்கள் - சோழர்கள்; "**நேரியன்** பதாகையிற் புலியென", "கச்சைக்கிரி **நேரியர்** பாவை" (**தக்க**. 156, 180), "நேரிவெற்பன்" (**திவா.**) **உரை**. வாமத்தார் - தேவியின் யாசகர்களில் ஒருவகையினர். நிந்தாத்துதியலங்காரம் - பழிப்பதுபோலப் புகழ்தல்; **தண்டி**. சூ. 65. நிதரிசனலங்காரம்: "ஒருவகை நிகழ்வதற் கொத்த பயன் பிறிதிற்குப், புகழ்மை தீமை யென்றிவை புலப்பட, நிகழ்வ தாயி **னிதரிசன** மதுவே" (**தண்டி**. சூ. 83.) (௧௧)

79\. சேவக முராரிகள் புராரிகள் [1]தெரித்தன
சிவாகம விதந்தெரிவரே
பூவகம் விடாதவர்க ளோதவுட னோதுவர்
பரம்பர புரந்தரருமே.

**எ - து** தேவிதிருக்கோயிலிடத்து விட்டுணுக்கள்பலருமிருந்து மகாதேவராலருளிச்செய்யப்பட்ட சிவாகமமான சைவசித்தாந்தப் பரப்புக்களை ஆராய்வர்; அன்றியே இவ்வாகமங்களையே 'பிரமாக்களோத அவருடனே வழிவழிப் பரமசுவாமியிந்திரர் ஓதுவர் எ - று.

முராரிகள் - முரனென்பானோரசுரனைக் கொன்றருளின மகா விட்டுணுக்கள். புராரி - திரிபுரங்களை எரித்தருளின மகாதேவர். முராரிகளென்பது பன்மைவாசகம். புராரிகளென்பது முதன்மைவாசகம், பலர் ஈசுவரரின்மையால். பூவகம்விடாதவர் பிரமாக்கள்; அவர்களோத வென்பதனைக் கற்பிக்கவென்று கொள்ளலுமாம்.

(வி - கு.) மூ. சேவகம் - வீரம். பூ அகம் - தாமரைப் பூவின் உள்ளிடம். உரை. முரனைத் திருமால் கொன்றருளிய வரலாற்றைப் பாகவதம், நரகாசுரனைக்கொன்ற அத்தியாயத்தில், 6 - ஆம்செய்யுள்முதலியவற்றாலறியலாகும்.

(பி-ம்.) 1 'பணித்தன' (௬௨)

## வேறு

80. கான நாடிதிரு முன்றில்கவி னக்கரு ளுவார்
வான நாடியர் வணங்கவரு மாதருளரே.

எ - து மயானவாசினியான மகாதேவி திருக்கோயிற்றிருமுற்றம் அழகு பெற நெருங்கிநிற்பார், சுவர்க்கவாசிகளான அரம்பை ஊர்வசிமுதலாயினராகிய நமக்கரிக்கவரும் வடிவையுடைய பெண்கள் எ - று.

கவின் - அழகு. கருளுதல் - நெருங்குதல். வானநாடு - சுவர்க்கம். முன்றில் - இல்முன் ; மரூஉச்சொல்.

(வி - கு.) உரை. முன்றில்......மரூஉச்சொல் : "முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும், இல்லென் கிளவிமிசை றகர மொற்றல், தொல்லியன் மருங்கின் மரீஇய மரபே" (தொல். புள்ளி. சூ. 60.) (௬௩)

## வேறு

81. ஓலக் கடனெருப்பி னுலகேழு முருகும்
காலக் கடையினுங் கொடியகட் கடைகளே.

எ - து இங்குச்சொல்லப்பட்ட தெய்வப்பெண்களுடைய திருமுகத்துக் கடைக்கண்களானவை ஆரவாரத்தையுடைய கடலிலுறையும் வடவாமுகாக்கினி புறப்பட உலகமேழுமுருகும் உகாந்தகால இறுதிப்பொழுதினும் மிகக்கொடிய எ - று.

கட்கடைக்கு உவமை காலக்கடை ; நெருப்பிற்கு உவமை நோக்கு. ஓலம் - ஆரவாரம்.

(வி - கு.) மூ. இத்தாழிசையும், "ஓலக் கடலேழு மொன்று யுலகொடுக்கும், காலக் கடையனைய கட்கடையாள்" (விக்கிரம. உலா. 194) என்பதும் சொல்லிலும் பொருளிலும் ஒத்துவிளங்குதல் காண்க. (௬௪)

82. புங்கப் படைவிழிக் கடையிலன் றிவர்புரூஉப்
பங்கத் தகிலமும் படுகொலைப் படுவதே.

எ - து முன்சொல்லப்பட்ட பெண்களுடைய கடைக்கண்களான அப் புப்படைபோலும் விழிக்கடைக்கண்ணாலன்று ; மற்றும் எல்லா உலோகமும் படுகொலைப்படுவது இந்தப்பெண்களுடைய புருவமுரிப்பிலே எ - று.

புரூஉ - புருவம் ; புரூபங்கமென்றே சங்கிருதசத்தம் ; புங்கம் - அம்பு.

(வி - கு.) மூ. புரூப்பங்கத்து : "புரூப்பங்கத்தினும்" (தக்க. 430.) புரூப் பங்கத்து அகிலமும்படுகொலைப்படுவது : "செங்கே ழெறித்து மயக்குந் திருநயன, பங்கே ருகஞ்சூழ் படுகொலைக்கும்" (குலோத். உலா. 260.) (௬௫)

83. நச்சுக்கண் முலைமே லிடுதுகிற்கு நகுபொற்
கச்சுக்கு மடையப் [1]புடவிகை யடைகொலோ.

எ - து இந்த மகாதேவியின் திருக்கோயிலின் திருமுற்றத்திருந்து நெருங்கிவிளையாடும் தெய்வப்பெண்களுடைய நஞ்சுபோலுங் கண்ணுடைய நகில்களின்மேலிடும் துகில்களுக்கும் அவை விசித்துக்கட்டுஞ் சோதிவிடும் பொற்கச்சுக்கும் இப்பூமியெல்லாம் அடைக்கலங்கொல்லோ? எ - று.

துகிலிட்டுத் தனங்களை மறையாவிடினும் அவை விம்மி வீங்காவகைக் கச்சிட்டுக் கட்டாவிடினும் அவற்றைக்கண்டால் மதனவியசனராய்க் காமாக்கினியில் அகப்படுதல் பொருள். கச்சிட்டுக் கட்டுவது கொங்கைகள் தாம்காணுமல்; துகிலிட்டுமறைப்பது அவற்றைப் பிறர்காணுமல்; "கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர், படாஅ முலைமேற் றுகில்" (குறள். 1087.) யானைக்கு முகபடாமணிதல் யானைகாணிற்கொல்லுமென்று. அவற்றின் கண்களும் யானைக்கண்போல உணர்வுடையவாகப் பாடியவாறெனவுணர்க.

(வி - கு.) மூ. இத்தாழிசையின் பொருளோடு, 32 - ஆம்தாழிசையின் பொருளும் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன. உரை. 'மதனவியசனர்': "மலையினும்பர் புகினுமண்டு மதனவங்கி விதனமே" (மோகவதைப். 59.)

(பி - ம்) 1 'புவிகை' (௬௬)

84. மின்போல்வ ரவரே யவர்மருங்கு லினிவே
றென்போல்வ தெனவெண் ணுவதெனில்லை யிணையே.

எ - து தேவியது திருமுற்றத்துத் தெய்வப்பெண்கள், மின்போல் விட்டுவிளங்கியும் மெல்லியராயுமிருப்பாராதலால் அவர்தாமே மின்னையொப்பார்; அவரிடைக்கு உவமை வேறு நுண்ணிய மின்னில்லை; ஆதலால் அவரிடைக்கு இணையில்லை எ - று.

(வி - கு.) உரை. 'மருங்குல்......இல்லையிணையே' என்பது பொது நீங்குவமையணி. (௬௭)

வேறு

*85. நின்றற கன்றவிடை நேடிவரை நேமியளவும்
சென்றற கன்றன நிதம்பநடு வில்லைதிசையே.

எ - து திருமுற்றத்திருக்கும் தெய்வப்பெண்களுடைய இடைகள் அகன்றுபோய் நின்றன; மீண்டனவில்லையென்று நினைத்து இடையைத் தேடிக்கொண்டுவரச் சக்கரவாள பருவதத்தளவும் சென்றன, இவர் நிதம்பம்; இனி உலகத்தில் திசையில்லாமையால் நின்றன; திசையுண்டாயின் வளரும் எ - று.

வரைநேமி - சக்கரவாள பருவதம், பருவத சக்கரவாளமென்றவாறு. நிதம்பம் - கடிதடம்.

(வி - கு.) மூ. இத்தாழிசையும் 37 - ஆம் தாழிசையின் முதலடியும் கருத்தாலொத்துள்ளன. (௬௮)

86. அங்கண் முளரிமல ரன்மையது திங்களறியத்
திங்க ளன்மையர வறியவில குந்திலகமே.

எ - து திருமுற்றத்திருக்கும் தெய்வப்பெண்களின் திருநெற்றியில் திலகமிடுவது, இவர்முகத்தைச் செந்தாமரையெனச் சந்திரன்நினைக்க லாகாதெனவும் அவனோடுபகைத்த இராகுகேதுக்கள் இவர்கள் முகத்தைச் சந்திரனென்று நினைக்கலாகாதெனவுமே ; அல்லது திலகம்வேண்டாம் எ - று.

எனவே இவர்தாமே உலகத்தின் திலகமாவரென்றவாறு.

இலகுதல் - ஒளிவிடுதல். ஒருகுறி இரண்டுபகையைக் காத்ததென உணர்க.

இவற்றில் இயல்விளங்கிய ஒற்றளபெடையுணர்க.

(வி - கு.) உரை. ஒருகுறி - திலகம். இரண்டுபகை - சந்திரனும் அரவும். (௩௯)

87. அடைய மோகினிக ளாயினர்கொ [1]லவ்வுருநினைந்
துடைய மோகினியை யொக்கவுளர் யோகினிகளே.

எ - து பரமேசுவரி திருக்கோயிலிலிருக்கும் யோகினிப்பெண்கள் எல்லாரும் இயல்பாகவே மோகினிப்பெண்களாயினரோ? அன்று; அந்தப் பரமேசுவரியின் ரூபத்தைத் தியானம்பண்ணித் தங்களையும் பிறரையு முடைய அந்தப்பரமேசுவரியான மோகினியை ஒக்க உளரானார், அவ்யோ கினிகள் எ - று.

உடைய மோகினியென்றது பண்டு மகாவிட்டுணு மோகினிவடிவம் கொண்டதை நினைத்தெனவுணர்க.

(வி - கு.) மூ. உடையமோகினி : "அமரர் வாழ்வு வாழ்வாக வவுணர் வாழ்வு பாழாக வருளுமோகி னீயாகி யமுத பான மீவாளே" (தக்க. 107), "சிவனுடன் வாழ்ந்த மோகினி" (திருப்.) யோகினிகள் : யோகினிகள் எழுவ ரென்றும், அவர்கள் மூலாதாரமுதலிய ஆதாரங்களாறிலும் பிரமரந்தரத் திலுமுள்ளவர்களாகத் தியானிக்கப்படுவார்களென்றும், அவர்கள் பெயர் கள் முறையே டாகினி, ராகினி, லாகினி, காகினி, சாகினி, ஹாகினி, யாகினி என்றும் தெரிகின்றன. யோகினிகள் ஸ்ரீசக்கரத்தின் அதிஷ் டானதேவதைகளெனவும், அவர்கள் பிரகடயோகினி, குப்தயோகினி, குப்ததரயோகினி, சம்பிரதாயயோகினி, குளகௌளயோகினி, நிகர்ப்ப யோகினி, பராபரயோகினியென்னும் ஒன்பதின்மரெனவும் ஒருசாரார் கூறுவர்.

(பி-ம்) 1 'லாவயினினைந்து' (௪0)

88. சூழு மின்னொளி நிவந்துசுர நாடியர்களும்
தாழு மின்மினிக ளாகவுளர் [1]சர்மினிகளே.

எ - து பரமேசுவரி திருக்கோயிலிற் சிலதிவ்வியப்பெண்கள் சர்மினிக ளென்னும் பெயரையுடையாருளர் ; அவர்கள் திருக்கோயிலிற்றிருப்பணி யெடுத்துக் கைநீட்டுவார் ; அவர்களுடைய விட்டுவிளங்கும் மின்னொளி சூழ்ந்து பரந்துவருதலால் தேவலோகத்திலுள்ள பெண்களும் ஆதித்தனெதிர் மின்மினிபோல்வர் எ - று.

ஆதித்தனென்பது தந்திரயுத்தி. நிவத்தல் - பரத்தல். சர்மினிகளாவார் தோல்போர்த்திருப்பார் ; சர்மம் - தோல். இங்கே சர்மினிகளென்பது பர

மேசுவரியுடைய திருவடிநிலையை எடுப்பாரெனவுணர்க; சர்மகாரரை யுணர்க; இக்காலத்துத் தமிழாற்சிதைந்து செம்மாராயிற்று.

(வி - கு.) மூ. சர்மினிகள் சம்மினிகளெனவும் கூறப்படுவார்கள்; "யாக **சம்மினிகள்**" (**தக்க.** 593) என்றவிடத்து, 'யாககாரியமான வேதோத்தேச அவிர்ப்பாக மந்திரகாரணிகளான சரசுவதிகள்' என உரையெழுதியிருப்பது ஈண்டு உணரற்பாலது; "**சம்மினிகணமும்**" (**தக்க.** 753.) **உரை.** எடுத்துக்கைநீட்டுவார் - ஒருவகைப்பணியாளர்; 'எடுத்துக்கை நீட்டுவான்' என்று பின்னும் கூறுவர்; **தக்க.** 505-உரை; "மடுத்துச்சொல்லுரையாவாணி மறையுரைப் பவளாம் யாவும், **எடுத்துக்கை நீட்டு வாளா** மெழிற்பெருந் திருவாஞ் செல்வி" (**திருக்குற்.** தக்கன்வேள்விச். 80.) ஆதித்தனெதிர்மின்மினி: "அண்ட முற்றவும் வீங்கிரு ளகற்றுநின் றலரி, கண்டவாற்றினிக் கடிநகர் நெடுமனைக் கதிர்கள், உண்ட வாற்றினென் றுரைப்பரிதொப்பிடிற் றன்முன், விண்ட வாய்ச்சிறு மின்மினியென்னவும் விளங்கா", "மொய்ம்மணி மாட மூதூர் முழுதிரு ளகற்றுந் தானே, மெய்ம்மையேயுணரி னுறை மிகையென விலங்கிப் போனான், இம்மதி லிலங்கை நாப்பணெய்துமேற் றன்பா லெய்து, மின்மினி யல்லனேவெவ் வெயிற்கதிர் வேந்தனென்றான்" (**கம்ப.** ஊர்தேடு. 16, 98.) செம்மார்: 'தோலின்துன்னர் - செம்மார்' (**சிலப்.** 5 : 32, அரும்பத.)

(**பி-ம்**) 1 'சாகினிகளே' (சக)

89. தரவ ரும்புடவி [1]குறையவுளர் சாகினிகளே
பரவ ருந்தகைய நாயகிப தாகினிகளே.

**எ - து** பிரமா படைக்க வந்துதோன்றும் பூமண்டலமடங்க இடங்குறையும்படி உளராவார்கள் சாகினிகளென்பார், ஒருவராலும் புகழுதற்கரிய அழகினையுடைய நாயகியுடைய கொடிப்படைகள் எ - று.

இப்பாட்டைத் தாவருவெனவும் பாவருவெனவும் நெட்டெழுத்திற் றுக்கிக் கூவிளமென்று பாடமோதிற் கெடுதற்கரியவெனவும் பரந்து வரு மழகெனவுங் கொள்க. பதாகினி - கொடிப்படை. சாகினிகளாவார் ஈசுவரனதுகாதலாற் பிராமணிகள் வயிற்றிற்பிறந்த நங்கைமாரெனவுணர்க.

(**வி - கு.**) மூ. சாகினிகள் 430, 433, 593, 753 - ஆம் தாழிசைகளிலும் கூறப்படுவார்கள்; 'சாகினி-மூலாதாரத்தில் நான்கிதழ்களையுடைய தாமரை மலரிலிருப்பவள்; ஐந்துமுகங்களும் மூன்றுகண்களும் புகைநிறமும் உடையவள்; என்பிற்கு அதிஷ்டானதேவதை; பாசம், தாமரை, புத்தகம், ஞான முத்திரை இவைகளைத்தரித்த திருக்கரங்களையுடையவள்' என்பர் தேவி உபாஸகர். பதாகினிகள்: இந்நூல் 433, 603-ஆம் தாழிசைகளிலும் கூறப்படுவார்கள்.

(**பி-ம்**) 1 'குன்றவளர் சர்மினிகளே,' 'குன்றவுளர் சாகினிகளே' (சஉ)

90. நகுந குங்கடவு ளித்தகைய மாதர்நகைபோய்
மொகுமொ கென்றகில லோகமு முழங்குவனவே.

**எ - து** யோகினிகள் சர்மினிகள் சாகினிகள் முதலாய இப்பெற்றியோரான எல்லாத்தெய்வப்பெண்களும் பரமேசுவரி திருக்கோயிலில் திருமுற்றத்திருந்து சிரித்து விளையாடும் சிரிப்புப் போய் மொகுமொகென்னும் அனுகரண மகாசத்தம்பிறந்து சதுர்த்தசபுவனமு முழங்கும் எ - று.

நகுநகைகபோயென்றுகொள்க. மொகுமொகென்பது இரட்டைக்கிளவி; "இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசையா" (**தொல். கிளவி. சூ. 48.**) என்னை? "வாளமர் நீந்தும் போழ்து வழுவழுத் தொழியு மன்றே" (257.) இது **சிந்தாமணி**; "குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (188.) இது **புறம்**.

(**வி - கு.**) மு. மொகுமொகு: "இரைக்கு மிரை**மொகுமொ கென்ன**" (**குலோத். உலா.** 106), "நிரைத்த தெண்டிரை **மொகுமொகு மொகு**வென", "**மொகுமொகெனுங்** கடல்", "**மொகுமொ**கென வதிர' (**திருப்**); "அடர்ந் தளிகண் **மொகுமொகெ**னு மாமோத வலம்புரித்தா ரண்ணல்" (**வி. பா.** 18-ஆம் போர். 236.); "மொகுமொகென்றொலி மிகுந்த மருகங்கள் பலவே" (**கலிங்க.** 100.) (சுக)

91. *தலைய ரிந்துவிடு வாருயிர் விடார்தலைவிமுன்
னிலைய ருந்தமது மெய்யெரியி னின்றெரிவரே.

**எ - து** பரமேசுவரியுடைய யாமளசாத்திர மந்திரசாதகர், தம்முடைய தலையைத் தாமே யரிந்தரிந்து தலையைவிட்டு உடலைப்பற்றிநிற்பார், தம் பிராணன்களைவிடார்; பரமேசுவரிமுன்னே பிறருக்கு நிற்கவரிய நிலையிலேநின்று தம்முடைய சரீரங்களிலுண்டாகிய அக்கினியினாலே நின்றெரிவர் எ - று.

எனவே தலையை அறுத்துவிட்டு உடலோடேநின்று தங்கள்யோகாங் கத்தாற் பிராணனைப் போகாமல் தடுத்து நாபிகமலத்து அக்கினி மண்டலத்தை யெழுப்பி இருதயகமலத்தில் தீபத்திற்கொளுத்தி அதுவேநெருப்பாக நின்று யோகாக்கினியமைப்பரென்றவாறு.

(**வி - கு.**) மு. 'தலையரிந்த': "மோடி முன்றலையை வைப்ப ரேமுடி குலைந்த குஞ்சியை முடிப்பரே, நின்றுகுரு திப்பு துத்திலக மம்மு கத்தினி லமைப்பரே" (**சிலப்.** 5: 76 - 88, மேற்.); "அடிக்கழுத்தி னெடுஞ்சிரத்தை யரிவராலோ வரிந்தசிர மணங்கின்கைக் கொடுப்பராலோ, கொடுத்தசிரங் கொற்றவையைப் பரவுமாலோ குறையுடலுங் கும்பிட்டு நிற்குமாலோ", "கடனமைந்தது கருந்தலை யரிந்தபொழுதே கடவ தொன்றுமிலை யென்று விளை யாடுமுடலே" (**கலிங்க.** 97, 99); "அடலருந்திற லினைவுடன் சிலரரி பசுந்தலை பலிகொடுத், துடல்வலஞ்செய வரமிருந்தவை யொன்றிரண்டெனவெண்ணுமே" (**இரணியவதைப்.** 94.) 'மெய்யெரி': "மெய்விளக்கினர் மேவுகோயிலுக் கெவ்விளக்குவே றினிவிளக்குமே" (**அஞ்ஞவதைப்பரணி**, 87.) (சுசு)

## வேறு

92. அகவனச முகவனச மவைமலர வரிவார்
நகவனச [1]மலர்குவிய வலம்வருவர் நகரே.

**எ - து** இருதயகமலமறுக்கும்பொழுது வதனகமலம் மலரவும் முக கமலமான தமது தலையையறுக்கும்பொழுது இருதயகமலம் மலரவும் இரண்டும் இரண்டுகூறிட அறுக்கும்பொழுது இரண்டுமலரை அரிவாராய் அரிந்துகொண்டு சீருடைய கைத்தாமரைமலர்குவித்துக் கும்பிட்டுத் தேவி கோட்டத்தைப் பிரதட்சணமாகவருவர், சிலமந்திரசாதகர் எ - று.

வனசம் - தாமரை. நகவனசம் - மலர்ந்த வனசம்; அன்றி உகிருடைய வனசமென்றுமாம். நகரென்பது கோவில்.

(வி - ரு.) மூ. வலம்வருவர் நகரே : "முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" (புறநா. 6 : 18.) நகர் - கோயில் ; 322 பார்க்க.

(பி-ம்) 1 'மலர் குலைய' (௯௫)

## வேறு

*93. கொக்கொ ழுங்குபட வோடிமுகில் கூடியனையார்
அக்கொ ழுங்குபடு கஞ்சுக [1]மலம்பவுளரே.

எ - று ஆகாசத்து வருஷாகாலத்துப் பறந்துதிரியும் கொக்கென்னும் பெயரையுடைய வெண்பறவை நிரைபட ஓடிவரக் கருமுகில் அதற்குமேலாகக் கூடினவைபோன்றிருக்கும்படி சங்கு மணிவடம் கோக்கப்பட்ட கருஞ் சட்டையைக் கலந்திட்டவர் பலருளர் எ - று.

ஒழுங்கு - நிரை. அக்கொழுங்கு - சங்குமணிவடம். படுதல் - உண்டாதல். அலம்புதல் - கலத்தல் ; அசைதற்கும்பெயர் ; வேலைவடிம்பலம்பநின்ரு னென்னும் சொல்லாலுணர்க.

(வி - ரு.) மூ. இத்தாழிசையின் பொருளுடன், "நெடுவேண் மார்பி னாரம்போலச், செவ்வாய் வானந் தீண்டிமீ னருந்தும், பைங்காற் கொக்கி னிரைபறை யுகப்ப" (அகநா. 120 : 1 - 3), "காரெ னும்பெயர்க் கரியவன் மார்பினிற் கதிர்முத், தார மென்னவும் பொலிந்தன வளப்பரு மளக்கர், நீர்மு கந்தமா மேகத்தி னருகுற நிரைத்துக், கூரும் வெண்ணிறத் திரையெனப் பறப்பன குரண்டம்" (கம்ப. கார்கால. 41) என்பவை ஒப்பு நோக்கற்பாலன.

இத்தாழிசையிற் கூறப்பட்டவர்கள் பைரவர்கள். பைரவர் கரியகஞ் சுகம் அணிவாரென்பது, இந்நூற்காப்புத்தாழிசையினாலும், அதனோடு அக்கு மாலையையும் அணிவாரென்பது, "செம்பருதி கடற்குளித்த செக்கரொளி யினையந்திப், பம்பமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத், தம் பழைய கரியுரிவை கொண்டுசமைத் ததுசாத்தும், அம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தி னணிவிளங்க", "மிக்கெழுமன் பர்களன்பு திருமேனி விளைந்ததென, அக்குமணி யாற்சன்ன வீரமுமா ரமும்வடமும்......சாத்திய வொண் சுடர்தயங்க" (பெரிய. சிறுத்தொண்ட. 31, 32) என்பவற்றாலும் விளங்கும். அலம்ப : "அலைநெடுங் கடலி னீர்தன் வன்ருளலம்ப" (கம்ப. கடறுவு. 79.) உரை. வேலைவடிம்பலம்ப நின்ருன் - உக்கிரகுமார பாண்டியன் ; "மாலைமுடியோன்வேலை வடிம்பலம்ப நின்றதனுல் வேலை வடிம்பலம்ப நின்ருனென்றெங்கும் விளங்கியதால்" (திருவால. 21 : 7) ; "ஆவுமானியற்பார்ப்பன" (புறநா. 9 : 10) என்பதன் அடிக் குறிப்பைப் பார்க்க.

(பி-ம்) 1 'மலம்புகுவரே' (௯௬)

94. [1]இந்தி ராதியரு மெக்கமல யோனிகளுமே
[2]சந்தி ராதியரு மத்தலைவி சாதகர்களே.

எ - று பரமேசுவரி திருக்கோயிலில் மந்திரசாதகம் பண்ணுவாரை எண்ணக்கடவதோ ! இந்திரன் அக்கினி வருணன் வாயுவாதிதேவர்களும் எல்லாலோகங்களிலுமுள்ள பிரமாக்களும் எங்குமுள்ள சந்திராதித்திய நட்சத்திரகணங்களெல்லாம் பரமேசுவரியுடைய கோயிலிலிருந்து மந்திர சாதகம் பண்ணுவார்கள் எ - று.

இதற்குப்பயன் அவர்க்கு ஐசுவரியங்களருதே சோதியும் கீர்த்தியுமுண்டாதலெனவுணர்க.

(வி - ரை.) மூ. சாதகர்கள் : இந்நூல் 67,593-ஆம் தாழிசைகளிலும் கூறப்படுவார்கள் ; " பெத்த முத்தி யிலதான தொரு சாதகர்களே " (அஞ்ஞ வதை. 129), " பகலுமத் தருமறப் பரமதத் துவமுறச், சகலவத் துவுமெடுத் தயில்வர்சா தகர்களே " (மோகவதை. 125), " சொல்லரிய நனவினொடு துயின் மறந் தவர்களே தூங்குதனி நிட்டைவிடு தொழில்சிறந் தவர்களே, நல்லதொரு ஞானமுற் றிசைதழைத் தவர்களே ஞானநாயகி கருணை நாடுசா தகர்களே " (பாசவதை. 210.) உரை. சந்திராதித்திய நட்சத்திரகணங்களெல்லாம் - சந்திரர், சூரியர், ஏனை ஏழுகோள்கள், இருபத்தேழு நாட்கள், ஏனை நட்சத்திரங்கள் ; இவற்றை வடமொழியில் ஜ்யோதிஷ்கரென்றும், பஞ்சவரென்றும் தமிழில் சோதிடரென்றும் கூறுதல் சைனநூன்மரபு ; சீவக. 600, 2817, ந.

(பி-ம்) 1 ' இந்திராதிபரும் ' 2 ' சந்திராதிபரும் ' (௯௪)

## வேறு

95. அடையாள முளரித் தலைவியாதி மடவார்
உடையா டிருவகம் படியில்யோ கினிகளே.

எ - து தாமரைமுதலான அடையாளங்களையுடையாராகிய ஸ்ரீதேவி முதலான பிரதானப்பெண்களெல்லாரும் பரமேசுவரியுடைய திருக்கோயிற் றிருவகம்படிப்பெண்டுகளில் யோகநிட்டை பண்ணின யோகினிப் பெண்கள் எ - று.

சரசுவதியையுங்கொள்க, அவளும் நித்தியசித்திப்பெண்ணாதலின். அடையாண்முளரியென்னும்பாடமழகிது ; அடை - இலை.

(வி - ரை.) மூ. உடையாள் திருவகம்படியில் யோகினிகள் : " அறுமுக த்ரிபுர பயிரவி யகம்படியரே " (தக்க. 431), " உரையிறந் துணர்விறந் திடனுணர்ந் திடுவரே யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே, திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே செறிதரும் வடிவருந் திருவகம் படியரே " (அஞ்ஞவதை. 130), " பிறிவி றந்தசுக வாரிதி அழுந்திடுவரே பிரியம்வந்து பலியங்கையி னயின்றமைவரே, அறிவிறந்துரை யிறந்திட முணர்ந்திடுவரே யமலை யம்பிகை யணங்குடை யகம்படியரே " (பாசவதை. 211.) உரை. திருவகம்படிப் பெண்டுகள் - திருவணுக்கத் தொண்டுசெய்யும் மகளிர். அகம்படி - உள்ளிடம். அடையாண்முளரி : அடையாளமென்னுஞ் சொல்லே அடையாண், அடையாள் எனவும் வழங்கும் ; " அடையாண் கிளவியோ டறியக் கூறலும் ", " அடையா ளருண்மொழி யறியக்கூறி ", " அறியக் கூறிய வடையாண் கிளவியும் " (பெருங். 1. 36 : 201, 54 : 105, 56 : 184.) (௯௫)

## வேறு

96. சுழல்வட்டத் துடிகொட்டத் துணைநட்டத் தினரே
தழல்வட்டத் தனிநெற்றித் தறுகட்கொட் பினரே.

எ - து சுழன்றிருக்கும் வட்டத்தையுடைய துடியென்னும் பறை கொட்டுமளவில் விரைந்தாடுங் கூத்தினர்......எ - று.

துணை - விரைவு. கொட்பு - சுழற்றி.

(வி - ரை.) மூ. இதுமுதல் 102 - ஆவதுதாழிசைமுடியப் பைரவர்களின் செயல்கள் கூறப்படுகின்றன. சுழல் வட்டத்துடி : "உருடுடி" (அகநா. 19 : 4.)

பைரவர் தமருகத்தையுடையாரென்பது இந்நூல் **காப்புத் தாழிசையா லும்,** "தயங்குசுடர் வலத்திருக்கைத் **தமருகத்தி** னொலிதழைப்ப", "**துடிசேர் கரத்துப் பைரவர்**" (**பெரிய.** சிறுத்தொண்ட. 34, 43) என்பவற்றாலு மறிய லாகும். சுழல்வட்டத் துடிகொட்டத் துணைநட்டத் தினர்: "கல கலெ னணி சிறந்த பைரவர்நீள் கலேகளி னொலியடங்க லீவகைபூ, தலகலி கெட வியைந்த கீதமொடே **தமருக விசைவழங்கி** யாடுவரே" (**மோகவதை.** 129); "தமருகங்கடரு கின்றசதி யின்கண்வருவார்" (**கலிங்க.** 101.)

**உரை.** சுழற்றி - சுழற்சி; கழற்றிபோல. (**பெருங்.** 2. 18 : 74.) (சு௯)

97. கழுவைப்புக் கறவெட்டிக் கவர்சுற்றத் தினரே
உழுவைச்சிற் றுரிவைப்பச் சுதிரப்பட் டினரே.

எ - து உயிர்க்கழுமுதலான கழுக்களிற்புக்கு அவற்றை அறும்படி வெட்டிப் பிணங்களைக்கொள்ளும் பேய்ச்சுற்றத்தினையுடையர் சிலர்; புலி களுடைய சிறுதோலையுரித்து அத்தோலைவாங்கி உதிரப்பசுமைகெடாமே உடுத்த உடைப்பட்டினையுடையர் சிலர் எ - று.

**உ**ழுவையுதிரப்பட்டென்க; உழுவை - புலி; உரிவை - தோல்; "அரியி னுரிவை மேகலே யாட்டி" (12 : 62) என்பது **சிலப்பதிகாரம்.** பச்சுதி ரப்பட்டென்பதன் பயன், விலேக்குக்கொண்டு உடுத்ததோலல்ல; தாங்களே புலியைப்பிடித்துக்கொல்லாதே உரித்ததோலெனவுணர்க.

(**வி - கு.**) மூ. பச்சுதிரம்: "**பச்சிரத்தம்** வந்தொழுகிட" (**கம்ப.** பாசப். 40), "**பச்சுதிர** முற்றொழுக வைப்பசத கோடிகள் பசாசகணமே" (**அரிச் சந்திர.** விவாக. 121.) **உரை.** உயிர்க்கழு: "ஏற்றுக் கோட்டி னுயிர்க்கழு வேற்றவே" (**தக்க.** 667.) (௬0)

98. அகைமத்தத் தளிவர்க்கத் தளகக்கொத் தினரே
பகைகுத்திப் பயில்சத்திப் பருமுக்கப் பினரே.

எ - து மலர்ந்த மதமத்தையிற் பூவின்வண்டினஞ் சேரவணிந்து வைத்த அளகக்கொத்துக்களையுடையராயும் பகைகளைக்குத்திப் பழகிய வேலான மூன்று கவட்டினையுடைய ஆயுதத்தையுடையராயுமிருப்பர் சிலர் எ - று.

அகைத்தல் - வலியமலர்த்தலுமாம். அளி - வண்டு. முக்கப்பு - சூலம்.

(**வி - கு.**) மூ. மத்தம் - ஊமத்தை; "**மத்தமும்** வன்னியு மலிந்த சென்னி மேற், கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே" (**திருஞா. தே.**), "கரந் தையும் வன்னியு **மத்தமுங்** கூவிளம், பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி யம் மானை" (**சுந்தர. தே.**), "கரந்தை **மத்தமோ** டெருக்கலர் கூவிளை கடுக்கை, நிரந்த பொறசடை நின்மலக் கொழுந்தினை" (**கம்ப.** அகலிகை. 52), "**மத் தமு** மதியமும் வைத்திடு மரன்" (**திருப்.**) அளிவாக்கத் தளகக் கொத்தினா; "அஞ்சனமஞ் சனஞ்செய்த தனையவணி கிளர்பம்பை, மஞ்சினிடை யிடை யெழுந்த வானமீன் பரப்பென்னப், புஞ்சநிரை **வண்டுதேன் சுரும்புபுடை** பரந்தார்ப்பத், துஞ்சினுனித் தனிப்பரப்புந் தும்பை நறுமலர் தோன்ற" (**பெரிய.** சிறுத்தொண்ட. 27.) பருமுக்கப்பினர்: "வயங்கொளிமூ விலேச்சூல மணித்திருத்தோண் மிசைப்பொலிய", "மருள்பொழிமும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்ப" (**பெரிய.** சிறுத்தொண்ட. 34, 35.) **உரை.** மதமத்தை - ஊமத்தை; இது மதமத்தமெனவும் வழங்கும்; "கள்ளார்ந்த பூங்

கொன்றை மதிமத்தங்கதிர்மதியம் உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமான்" (தேவாரம்.) (ருக)

99. உகுநச்சுத் தலைநெட்டெட் [1]டுரகக்கச் சினரே
[2]தகுபுத்தப் புதுமக்கட் டலைமக்கட் டினரே.

எ - து விஷதாரை ஓவாது சொரிதரும் தலைகளையுடையவாய் நெடியவாயிருக்கும் எட்டுப்பாம்புகளையே கச்சாக அரைக்குமேற்கட்டின கட்டையுடைய சிலர். அதற்குத்தக்கவாகச் சேர்த்த மனிதர் தலைகளை அவையிற்றின் மேலே மணிவடமாகக் கட்டினகட்டையுடையார் சிலர் எ - று.

எட்டுரகமாவன : அநந்தன், வாசுகி, தட்சகன், கார்க்கோடகன், சங்கன், குளிகன், பற்பன், மகாபற்பனெனவுணர்க. இவ்வெட்டும் எண்மர் கட்டின வல்ல ; இவ்வினங்களில் தெரிந்து பலருங்கட்டினவென வுணர்க. மக்கட்டு, மணிக்கட்டான முன்கைக்கும் கலையிற் கட்டின கட்டுக்கும் பெயர். மக்கட்டலையென்பதின் முடிவுணர்க. தகுமென்ற சொல்லால், நாகராசாக்களுக்குத் தக்கபடியுள்ள மனுஷ்ய ராசாக்கள் தலை யெனவுணர்க. இது நிலையாமைப்பொருள்.

(வி - கு.) மூ. புத்தப்புது - மிகப்புதிய. உரை. கலையிற்கட்டின - உடையாடையின்மேலே கட்டின.

(பி - ம்) 1 'டுரகக் கொத்தினரே' 2 'தகுபுத்தத் தலைமக்கட்டலைமைக் கட்டினரே' (ருஉ)

100. குடரட்டத் தொருசெக்கர்க் குருதிப்பொட் டினரே
படர்பொற்கைச் செறியக்குச் சரிபப்பத் தினரே.

எ - து வீரபுருஷர் குடர்களிலுதிரத்தை ஒருவிரலால் தொட்டு நெற்றியிலிட்டுக்கொண்ட பொட்டுடையார் சிலர் ; மிகப்படர்ந்த அழகிய கைகளிற் செறிந்த சங்குமணிச்சரி பத்துப்பத்தினையுடையார் சிலர் எ - று.

வீரபுருஷர் அஞ்சாதுபட்டால் அவர்வயிற்றிலுதிரத்தை ஒருவிரலாற் றொட்டு நெற்றியிலிடுவரென்றுணர்க.

மிகப்படர்ந்த அழகிய கையென்பது பேய்க்கழகு ; இது கோமாளமெனவுணர்க.

(வி - கு.) மூ. குடரட்டம் : "ஈரட்டமும்" (குலோத். பிள்ளைத்.) பொட்டு: "திலகமிட்டழகுறத் திரிவர் வைரவர்களே", "குருதிப்பொட்டுநுதல்" (இரணியவதைப். 100, 111.) படர்பொற்கைச் செறியக்குச் சரிபப்பத்தினரே : "கைக்கணிதோள் வளைச்சரியும்" (பெரிய. சிறுத்தொண்ட. 32.) உரை. பேய்க்கழகு : "புகல்வதென்கொல் பேய்க்கழகு பொல்லாமையேயன்றோ" (மோகவதைப். 389.) கோமாளம் : "கோமாள மானவலைக் குழலாதே", "கோமாள மான குறிக்கழுத்திகள்" (திருப்.) இச்சொல் கொம்மாளமெனவும் வழங்கும். (ருந)

101. இருபக்கத் தொருபக்கத் தெறிவச்ரத் தினரே
ஒருபக்கத் தொளிவட்டத் தொருபொற்றட் டினரே.

எ - து வலமும் இடமுமான இரண்டுபக்கத்திலும் வலப்பக்கமான ஒருபக்கத்திற் சத்துருக்களை எறியாநின்ற வச்சிராயுதத்தையுடையார்,

மற்றை ஒருபக்கமான இடக்கையிலே சோதிவிடும் பொன்னுற்சமைத்த வட்டணைக் கிடுகையுடையார் சிலர் எ - று.

வச்சிரம் - வச்சிராயுதம்.

(வி - ரை.) மூ. ஒளிவட்டந் தொருபொற்றட் டினரே: "கால்கழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்க ளடக்கிய, வாளொளி வட்ட முனைத்திட" (பெரிய. ஏனாதி. 16.) பொற்றட்டு: தட்டு - கேடகம்; "உருவி யோடின கேடகத் தட்டொடு முடலம்" (கம்ப.) உரை வட்டணைக்கிடுகு - வட்டமாகிய கேடகம்; "கட்டெழில், சேர்ந்த வட்டணைப் பலகை" (பெருங். 1. 42 : 63.) (ருச)

102\. தழைவர்க்கக் [1]கருவெப்புத் தடிசக்ரத் தினரே
கழைமுத்துப் பொதிகக்கக் கிழிகட்டட் சியரே.

எ - து பசுந்தழையைக் கருகும்படிசெய்கின்ற வெப்பான உஷ்ண வியாதியைக்கெடுக்குஞ் சக்கரபூசையையுடையார் சிலர்; அவர் மூங்கில்கள் முத்துப்பொதியைப் புறப்படவிடும்படி கிழிக்கின்ற கண்களையுடைய காட்டினர் எ - று.

"சக்கரபூசை பூசிப்பார்" என்பது பைரவத்திற்பாட்டு. கிழிகண்ணென்றது மூங்கிற்கண்ணின் கிழிவை. கட்சி - காடு; "கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்" (205.) இது பெரும்பாணறு.

(வி - ரை.) 'தழைவர்க்கக் கருவெப்பு' என்றது பாலைநிலத்திலுள்ள உஷ்ணத்தை. கழைமுத்துப் பொதிகக்கக்கிழிகட்சி: "வேய்க ளோங்கி வெண்முத் துதிர வெடிகொள் சுடலையுள்" (காரைக். கோயின் மூத்த. 8.) கண் - கணு.

(பி - ம்) 1 'ஒரு வெற்புத்தடி' (ருரு)

க.—காடுபாடியது முற்றிற்று.

---

## ச. தேவியைப் பாடியது

103\. கவனமாவொ டராறு கதிரும்வாரி யூடாடு
கனல்கடாவி யோரேழு கடலும்வாரு மாலாலம்
அவனிவேவ வான்வேவ வுளறுவேவ வேவாம
லயிலுநாதன் மாதேவி யகிலலோக மாதாவே.

எ - து வாவுந்தொழில்வல்ல குதிரைகளுடனே துவாதசாதித்தியர் அனைவரையும் வாரிக்கொண்டு நடுவே ஆகாசத்திலே ஊடாடுகின்ற நெருப்புக்களைச் சென்றுதாவிச் சத்த சமுத்திரங்களான லவணம், இட்சு, சுரா, ததி, கிருதம், சீரம், சலமென்னுநின்ற ஏழுகடலையுங் கூட வாரிக்கொள்ளும் ஆலகாலமான விஷத்தைப் பூமி வேவவும் சுவர்க்கம் வேவவும் பாதாளநரகம் வேவவும் வேவாதபடி அமுது செய்தருளின மகாதேவருடைய மகாதேவி, சகலலோகங்களையும் பெற்ற தனித்தாய் எ - று.

கவனம் - முன்னிரண்டடிகளை ஒக்கவைத்துப் பாயும் பாய்ச்சல். மாவொடென்றது, ஆதித்தியர்களையுங் கொண்டோடிப் போகவல்ல குதிரை

கலேயுங்கூட வாரிக்கொண்டெனவுணர்க. ஊடாடுகனலாவது, உருமேற்றி னெருப்பெனவும் அக்கினிபகவானெனவுங்கொள்க. அவனி - பூமி. வான் - சுவர்க்கம். அளறு - நரகம். அளறுவேகையாவது நரகத்துள்ளார்க்கு விஷஞ்சென்று வியசனமிருகை. வேவாமலென்றது விடந்தான் கோபியாம லென்றவாறு. கோபித்தாரை வெந்தாரென்றும் வேவாநின்ருரென்றும் சொல்லுவாருமுளர். அயிலுதல் - உண்டல்.

(வி - கு.) மு. கவனமா : "கவன முவப்பன" (தக்க. 264.) வேவ : "பழுதுளம் **வேவா** நின்ற பறிதலைக் கையர்" (திருவால. 37 : 74.) அகில லோகமாதா : "உலகினன்னை" (தக்க. 294); "உலகமுழு தீன்றபெருங் கன்னி" (திருவாரூர்ப்.), "அகில தலம்பெறு பூவை" (திருப்.), "ஞால மேழையு மீன்ற நாயகி" (திருக்குற். தக்கன்வேள்வியழிந்த. 25), "சரா சரங்க ளீன்ற, பெண்மையுரு வாகிய தன் னனந்தக் கொடி", "எள்ளரிய பல்லுயிரு மெவ்வுலகு மீன்றருள்' (திருவிளை.); 'ஸ்ரீமாதா' என்பது **லலிதா ஸஹஸ்ரநாமத்தில்** முதல் திருநாமம்.

உரை. லவணம் - உப்பு; இக்ஷு - கருப்பஞ்சாறு; சுரா - கள்; ததி - தயிர்; கிருதம் - நெய்; சீரம்=க்ஷீரம் - பால். (க)

104. அனகபூமி கோலோக மருகுநேமி பாதாள
மயனிவாச மேழ்தீவு [1]மசலமேழு [2]மேழ்காவு
கனகலோக மேழாழி கருலவீதி போதாத
கலகபூத வேதாள கடகமேய மாயோளே.

எ - து புண்ணியதேசமும் பசுசாதிலோகமும் பெருகப்பட்ட சக்கர வாளமும் பாதாளலோகமும் பிரமலோகமும் ஏழுதீவுகளும் ஏழுமலைகளும் ஏழுபொழிலெனப்பட்ட சோலைகளும் பொன்னுலகமும் ஏழுகடல்களும் இவைகளெல்லாம் விளையாட இடம்போதாதபடி கலகமிடும் ஸ்ரீபூதபசாச கணநாதருடனே மேவியிருக்கும் திருக்கோயிற்றிருமுற்றத்தையுடைய மகா மாயாசத்தியாய்க் கருநிறத்தையுடையாள் எ - று.

அகம் - பாவம்; அநகம் - புண்ணியம். நிவாசம் - இருப்பு. அசலம் - மலை. கா - சோலை. கனகம் - பொன். ஆழி - கடல். கருலுதல் - நெருங்கு தல். வேதாளம் - பசாசு. கடகம் - பெரும்படை. மாயோள் - அழகியோ ளென்றுமாம்.

(வி - கு.) மு. கோலோகம்: 427 - ஆம்தாழிசையின் குறிப்பைப் பார்க்க. கோலோகம்=பசுக்களின் உலகம்; "ஆனிலை யுலகம்" (புறநா. 6 : 7) என்பர். இதன் இயல்பைச் **சிவதரு மோத்தரத்துள்ள** கோபுரவியலா லும், காசி காண்டத்தாலும் உணர்க. ஏழுகாவு : "எத்த ராதலமு மேழலகு **மேழ்பொழிலும்**" (தக்க. 404.) காவு : "வீரனை யெய்த வியன் **காவு** சென்றெய்தி" (இராசராச. 153), "அண்ணல் கண்ணோர் மூன்றினு ணைக் **காவு** கைதொழ" (திருஞா. தே.) வேதாளகடகமேயமாயோள் : "வேதாள நாயகி" (திருப்.) கடகம் - சேனை : "கயிலை யாளி கடகம்", "பிரமரண்ட கடகம்" (தக்க. 403.) உரை. மாயோள் : யாயாகியளே மாஅயோளே" (குறுந். 9 : 1.)

(பி - ம்) 1 'மசலமோலியேழ்தீவு' 2 'மேழ்தீபும்' (உ)

105. இரவையீரு மீர்வாள்கொ லெனவிடாது பாதாள
விருளைவேறு போய்நூறி யெழிலியேமொ டேழாய
பரவையோளி வாளேறு படநடாவி மீள்சோதி
படலகுடி காகோடி பணிமதாணி மார்பாளே.

**(ஏ - து)** இராத்திரியான அந்தகாரமெல்லாவற்றையுமீர்ந்து களைவதோர் ஈர்வாளென விடாதேசென்று பாதாளத்திருளையெல்லாம் பொடிசெய்து மேலேறி மேகங்களேழாகியயானைகளையும் அவற்றோடுகூட ஏழான கடல்களாகிய யானைக்கூட்டங்களையும் சோதிபட நடாத்தி மீண்டசோதி படலமான நாகராசாக்களின் மாணிக்கச்சூடிகாகோடிகளைப் பணிவிக்கும் மதாணியான பேரணிகலப் பதக்கமுடைய மார்பினள் எ - று.

இப்பாட்டில், ஈர்வாளென்றது இருளின்செறிவைப்பிளத்தலினென வுணர்க. வேறுபோய் நூறுகையாவது என்றும் மேனோக்கிய சோதியானது கீழ்நோக்கியுஞ்சென்று ஆதித்தியசோதிபோல்வது. பொடிசெய்தென்றது இருட்டினையென்றுநினைக்க. மேகமுங் கடலுமென்றது அவற்றின் கருநிறங்களை. எழிலி - மேகம். ஒளி - யானைக்கூட்டம்; யானை நீருண்ணுமிடமுமாம். வாள் - சோதி; எறித்தற்றொழிலால் வாளேறென்று பெயர்பெற்றது. "சோதி படலசூடி காகோடி மணிமதாணி" என்று பாடங்கொண்டு, சோதிப்பெரும்பரப்பினையுடைய முடியின்மணியாலான மதாணியெனப் பொருள்கொள்வாருமுளர். மணியென்றபாடத்திலும் பணியென்னும் பாடமழகிது; முடியும் பணியும் மதாணியென்பது மிக்க அழகுடைத்து.

**(வி - ரு.)** மு. ஒளி: "தரும னொளியோடு" (**தக்க.** 497), "நீடிய வாரியுஞ் சேவகந் தண்டமும், கூடமு மோளியும் யானை சேரிடம்" (**திவா.**) ஏறு- எறியுந்தொழில்: "ஏறு தூக்குமிடியெரி" (**தக்க.** 583.) (௫)

106. நிகரவேறு [1]வேறுய நிலவுவீசு பேரார
நிபுடமாலை [2]மால்யாறு நிமிரவீழ்வ போல்வீழ
மகரவேறு [3]மீராளி மதுகையேறு மாறுடி
வதனபாக மேய்வாகு வலையமோது காதாளே.

**(ஏ - து)** வேறுவேறுபட்ட திரள்முத்து நிலாவாகப் புறப்படவிடும் முத்துமாலையின் நெருக்கமானவை பெரிய யாறுநிமிர்தற்கு விழுவதுபோல விழவும், மச்சசாதியில் மகரங்களில் ஆணேறும் இரண்டு யாளியேறுகளும் வலியுடையவானவையாகக்கொண்டு கோத்தன இரண்டு தம்மில் மாறுடி முகபாகங்களிலே மேவித் திருத்தோளிலிட்ட வாகுவலயங்களை மோதும் காதினையுடையாள் எ - று.

நிகரமென்பது திரள். நிபுடமென்பது நெருக்கம். மாலை - சகசிரதாரையென்னுமுத்தக்கோவை. மதுகை - வலி. வதனம் - முகம். வாகுவலயம் - தோள்வளை.

**(வி - ரு.)** மு. நிபுடம்: "நெடிய முதுதண்டு சத்ரசாமரம் நிபுடமிட", "சண்டைத் திரட்கழுகு தொடர்நிபுட கருடனடர் தர" (**திருப்.**) பேரார ...வீழ: "நதிக்குப் போத வொழுகுமுத் தாரமும்" (**தக்க.** 280), "காக்குங் கடலேழின் முத்தும் வரகங்கை, தூக்கு மருவியிற் சூழ்போக்கி", "மன்னன் புனைந்த திருமுத்தின் மாலையை, அன்னம் படிந்தாடவாறென்னும்", "சாத்து மபிடேகத் தாரைபோற் றூழ்கின்ற, கோத்த பருமுத்தக் கோவையாள்", "ஆர்க்கு நதியேழு மாரமோ", "பாய வருமுத்த மாலை பலதூக்கித், தூய வருவியாத் தோன்றுவார்" (**குலோத். உலா,** 42, 131, 142, 150, 214), "காவிரி, மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றூழ்ந்ததோ, சோதநீர் நித்திலத் தாம மொக்குமால்" (**பெரிய.**

திருநாட்டு. 2.) இதன்பின்னடியுடன் 370 - ஆம் தாழிசையின் கருத்து ஒத்துள்ளது. உரை. சகசிரதாரை - ஆயிரம்வடமுள்ள ஓரணி.

(பி - ம்) 1 'வேருக' 2 'வான்யாறு' 3 'ஈராளிமறுக' (ச)

107. தமரநூபு ராதார சரணியார [1]ணுகாரி
தருணவாணி லாவீசு சடிலமோலி மாகாளி
அமரர்வாழ்வு வாழ்வாக வவுணர்வாழ்வு பாழாக
வருளுமோகி னீயாகி யமுதபான மீவாளே.

எ - து ஆரவாரத்தையுடைய சிலம்புக்கு ஆதாரமாயுள்ள திருவடி மலர்களையுடையாள்; வேதங்களுக்கு ஆகாரமாயுள்ளாள்; இளநிலவை விரித்து விளங்குஞ் சடைமுடியையுடையாள்; மகாகாளி; அவள்தான் பண்டு தேவர்களின்வாழ்வு வாழ்வாகவும் அசுரர்களின்வாழ்வு பாழாகவும் அனுக்கிரகிக்கும் மோகினிவடிவு கொண்டருளி அமிர்தபானம் ஊட்டியருளினவள் எ - று.

தமரம் - ஆரவாரம். நூபுரம் - சிலம்பு. சரணி: உடைப்பெயர். ஆரணம் - வேதம். ஆகாரம் - உடம்பு. தருணம் - இளமை. சடிலம் - சடை. காளி - கறுப்பினையுடையோள்.

(வி - கு.) மூ. தருணவாணிலாவீசுசடிலமோலி: "சடையும் பிறையுந் தாழ்ந்த சென்னிக், குவளை யுண்கட் பவளவாண் முகத்தி" (சிலப். 23 : 1 - 2), "பகிர்மதியம் பூத்த தாழ்சடைச்சி" (திருப்.) உரை. உடைப்பெயர் - தன் உடைமையாற்பெற்ற பெயர் (தொல். பெயர். சூ. 11, சே.)

(பி - ம்) 1 'ணுதாரி' (ரு)

108. எறியலோவி மாவாத மிரியவீசி யூடாடு
மெழிலிபீறி மாமேரு [1]விடையைநூறி யோராழி
முறியமோதி வான்யாறு [2]முழுதுமாறி யாகாய
முடியவேறி மேலாய முகடுசாடு தாளாளே.

எ - து எடுத்தவிசையால் மகாவாதமான பெருங்காற்றானது எறிகை தவிர்ந்து இரிந்தோடாநிற்க எடுத்துவீசியருளி ஆகாசத்திடையே நடையாடு மேகங்களைப்பீறி மகாமேருவினிடைக்கட்டைப் பொடியாக்கிச் சோதிச்சக்கரமான ஏகசக்கரத்தை முறியும்படியடித்து ஆகாசமெங்கும் வழிமாறிவழிமுழுதுங்கெட்ட அவ்வாகாசம் இனியில்லையென்ன வெளியடங்க முடியச்சென்றேறி எல்லாவற்றிற்குமேலான மோட்சலோகத்தைச் சாடியருளிய ஸ்ரீ பாதங்களையுடையாள் எ - று.

எறியலென்றது காற்றெறிதலென்னுந்தொழில். ஓவுதல் - ஒழிதல். மாவாதம் - பெருங்காற்று. எழிலி - மேகம். மேகத்தைப்பீறுதலாவது ஸ்ரீ பாதமெடுத்த கடுமை மேகத்துக்கு ஓடவேண்டினதில்லையெனவுணர்க. மகாமேருவின் இடைக்கட்டாவன சுவர்க்கங்கள். ஓராழி - சோதிச்சக்கரம்.

(வி - கு.) மூ. முகடு: "முகடு படுமண்ட கோளகை", "முகடு தகர்ந்துசிந்த" (தக்க. 140, 437) என்பவற்றினுரைகளும் இங்கே ஆராய்தற்குரியன. உரை. சோதிச்சக்கரம் - துருவ சக்கரம்.

(பி - ம்) 1 'விடியநூறி' 2 'முழுதுமாடி' (சு)

109. [1]வழியுநீறு வேருர மகிழுமோரொ ரோர்கூறு
மறமருத வாணுள மடமருத மாளுள
ஓழியுமோரொ ரோர்கூறு மொருவராகி நேராகி
யுடையகேள்வ ரோர்பாதி யுருகுகாதல் கூர்வாளே.

ஏ - து திருமேனியைமுட்ட வழியவிட்டதிருநீறு வேறுகூருனகூறு நிரம்பச் சம்பிரமிக்கும் ஒருபக்கத்தை வீரமருத புருஷனை, நின்ற ஒரு பக்கத்தை மடப்பமருத மான்போல்வாள் ஆளாநிற்கச்செய்தேயும் தமக் கின்றியொழிந்த ஒவ்வொருபக்கத்தே நின்றவராகத் தமக்குவமையாகத் தம்மையுடைய சுவாமியாகிய ஒருபாதி யுருகுங் காதல்மிகுவாள் எ - று.

வழியுநீறு - வழியவிட்டநீறு; வழுவில்நீறு - வழுவில்லாதநீறென்று மாம். திருநீறுவேறேநிரம்ப மகிழுமென்பது இடப்பாகமும் திருநீறுபட மகிழ்வர் மகாதேவரெனவுணர்க. எனவே இடப்பக்கம் வலப்பக்கத்தைத் தழுவலும் வலப்பக்கம் இடப்பக்கத்தைத்தழுவலும் கொள்க. வீரமருதார் மகாதேவரொருவருமெனவுணர்க.

(வி - கு.) மு. ‘வழியுநீறு வேருரமகிழும்’ என்பதனுடன், “தணிதவ ளப்பிறையைச் சடைமிசை வைத்தவிடைத் தலைவர் வனத்தினிடைத் தனி நுகர்தற்குநினைத், தணிதவளப்பொடியிட் டடையவில்ச்சினையிட் டமுத மிருத்தியசெப் பனையதனத்தினளே” (கலிங்க. 112) என்பது ஒத்துள்ளது. உடையகேள்வர்......உருகுகாதல்கூர்வாள்: “பரிவகலத்தழுவிப் புணர்கல விக்குருகிப் படர்சடைமுக்கணுடைப் பரமர்கொடுத்த” (கலிங்க. 110.)

(பி - ம்) 1 * ‘மழுவிணுதிபூணுக’ (எ

110. அதரசோதி மீதாடு குமுதவாச வாயார
வமிழ்தமாக நேராக வகிலலோக மீரேழும்
உதரசோபி தாநாபி கமலவாயி னுன்மீள
வுமிழுநீலி மேலாய வுவணவூர்தி யூர்வாளே.

ஏ - து திருவதரச்சோதிச்செஞ்சிவப்பு மேன்மேல்மீதாடுங் குமுத மான அரக்காம்பல் போன்றிருக்குஞ் சுகந்தமுடைய திருவாய்க்கு நிரம்ப அளவுபோதவும் பதினுலுலோகமும் லோகத்திலுள்ளவத்துக்களும் ஒன்று மொழியாமல் நேராய்ப்போம்படி திருவயிற்றுக்கு அமிழ்தமாகவும் அமுது செய்து, மற்றந்த அமுதுசெய்த பதினுலுலோகங்களையும் மீளத் திருவயிற் றிற்சோதியுண்டான திருத்தொப்புளான மடுவிற்பிறந்த செந்தாமரையி னுலே புறப்படவிடும் நீலி, வரிட்டமான கருடபகவானை ஏறி ஊர்ந்து திரி வாள் எ - று.

அமிழ்தம் - உணவு. உதரம் - வயிறு. சோபிதம் - சோதி. உமிழ் தல் - புறப்படவிடுதல்; இஃது இந்திரஞாலங்காட்டுதல். இப்பாட்டு இடக் கரடக்கு.

(வி - கு.) மு. குமுதவாசவாய்: தக்க. 318. நேராக - அழிய, தேய்ந்து போக; இந்நூல் 690, 691, 692 - ஆம்தாழிசைகளும், அவற்றிற்காணப் படும் நேர் என்ற சொல்லின் உரையும், “எக்கிரியுமெக்கடலுநேர்” (தக்க. 705) என்பதும் இங்கே அறியற்பாலன. நீலி: “கடவுணீலி”, “கதங்கொ ணீலி” (தக்க. 359, 608.) உவணவூர்திபூர்வாளென்றது, தேவி விஷ்ணு சக்தியென்னும் கொள்கையைத்தழுவி; “பொங்க மளிப்புண ரித்துயில் வல்லி” (தக்க. 73) என்றாற்போல. உரை. இந்திர ஞாலம்-இந்திர சாலம். (அ)

111. வலையவாள ராமீது துயில்விடாத தான்மான
மதியமூர்ச டாமோலி மகிணர்தாமு மீதோடி
அலையுமேக லாபார [1]கடிதடாக மாநாக
வமளியேறி ஞராக வழகுகூர நேர்வாளே.

எ - து வளைத்த வளையத்தையுடைத்தாய்ப் படுக்கையான வார்த்தைக் கீர்த்தியையுடைய பாம்பின்மேலே என்றும் உறக்கத்தைத் தவிராத தன்னை யொப்பப் பாலசந்திரன் தவழ்ந்து திரியுஞ் சடையை முடியாகவுடைய சுவாமியான மகாதேவரும் மேலேபோந்து அலைகின்ற மேகலாபாரத்தை யுடைய அல்குற்பரப்பான பெரும்பாம்பின் படுக்கையின்மேலே ஏறினாராக, அழகுமிகும்படி அதற்கும் பொருந்துவாள் எ - று.

வலையமென்பது, திருப்பாற்கடலில் இப்பாம்பு வளையமாகிவிடினல் லது நேர்கிடக்கின் தலையும்வாலும் கடற்புறத்திற்கிடக்கு மெனவுணர்க ; வாள் - வார்த்தை, கீர்த்தி ; மாணிக்கச்சோதியென்பாரும் பாம்புச்சோதி யென்பாருமுளர். துயில் - உறக்கம். தானென்பது விட்டுணுசத்தியை. சடாவென்றது சடையை. மீதோடியலையு மேகலையாவது அல்குலை விட்டுக் கழன்றுபோன மேகலையெனவுணர்க. இதுவும் இடக்கரடக்கு.

(வி - கு.) உரை. இப்பாம்பு......உணர்க : இப்பாம்பின் நீட்சியைப் பற்றி 154 - ஆம்தாழிசை விசேடவுரையில், 'ஒருபடத்துக்கு ஒருபாற்கடல் ஒப்பல்லது உடம்பின்நீளத்துக்கு உவமையில்லையெனவுணர்க' என வெழுதியிருப்பதும் இங்கே கோடற்குரித்து.

(பி - ம்) 1 'கடிதடாதமாநாக' (கூ)

## வேறு

112. போர்ப்பன தீம்புகையோ புராதனரோ மப்புகையே
ஆர்ப்பன பல்லியமோ வந்தரதுந் துமியுமே.

எ - து தேவியுடைய திருக்கோயிலை முட்டப்போர்ப்பன தித்தித்த தூபமான புகைகளேயோ? அல்ல ; பிறவுமுள ; அவை பழையோருடைய அக்கினியோத்திர ஓமப்புகையே. தேவிக்குத் திருப்பள்ளியெழுச்சி முதலா கத் திருவர்த்தயாமமீறாகவுள்ள மங்கலகாரியங்களுக்கு முழக்கக்கடவ வாச் சியங்கள் பலவுமேயோவுள்ளன? அல்ல; தேவலோகத்தில் இந்திராதி பிர மாதிகளால் பூசைசெய்து முழக்கப்படுகின்ற ஆகாசதுந்துமிமுழக்கங்களு முள எ - று.

தீம்புகை : அகில், கண்டசர்க்கரை, கற்பூரம் இம் மூன்று முதலாகிய முப்பத்திரண்டு தூபத் திரவியங்களெனவுணர்க. என்னை? "நேர்கட்டி செந்தே னிரியாசங் கற்பூரம், ஆர மகிலுறுப்போ ரைந்து" என்பன முத லானவை. இவற்றை யாமளத்திற் கண்டுகொள்க. ஓகாரம் சிறப்பினும் வினவினுங்கொள்க. துந்துமி : அனுகரண சத்தத்தாற்பிறந்தபெயர்.

(வி - கு.) உரை. தூபத்திரவியம்முப்பத்திரண்டு : சீவக. 623, ந. ; "முப்பத் திருவகை யோமா லிகையினும்" (சிலப். 6 : 77), "ஓரை விரை யினு மீரைந் துவரினும் ஆறைந்தின் மேலிரண் டோமா லிகையினும்" (சிலப். 6 : 76-9, அடியார். மேற்.) என்பவற்றால் இவை அபிஷேகத் திரவி யங்களாகவும் கூறப்படுமென்று தெரிகிறது. நிரியாசம் - பிசின், குங்குலி யம் முதலியன ; சீவக. 534, ந. உரை. (கo)

113\. பரவுவன யாமளமோ பதினெட்டுப் புராணமுமே
விரவுவன பூதமோ விண்முதலைம் பூதமே.

**எ - து** தேவியைத்துதிப்பன **பிரமயாமள** முதலான பிரதமயாமளங்களும் ஒன்பதிற்றென்பது எண்பத்தொன்றான உபயாமளங்களுமேயோ? அல்லன பிறவுமுள; அவை பிரமாண்டபுராணமுதலாக விட்டுணு புராண நடுவாகக் கூச்மாண்டபுராணங்கடையான பதினெட்டுமகாபுராணங்களுமே. அன்றியே தேவியுடைய ஸ்ரீபாதங்களைச் சென்று சேர்வன வீரபத்திர விசித்திர கர்ணாதிகளான ஸ்ரீபூதகணங்களேயோ? அல்லன பிறவுமுள; அவை ஆகாசாதிபூதமான பஞ்சமகாபூதங்களுமே எ - று.

சதாசிவ ஈசுவர ருத்திர விட்டுணு பிரமாவென்னப்பட்ட பஞ்சமகா பூதங்களும் தேவிதிருக்கோயிற் றிருவாசலிற் பணிசெய்யக்கடவ பஞ்சபூத மகாபசாசுகளெனவுணர்க. ஓகாரம் இங்குமொக்கும்.

**(வி - கு.)** **உரை.** பிரமயாமளம் போல விஷ்ணு யாமளம், ருத்திரயாமளம், சக்தியாமளம் முதலிய யாமள நூல்கள் பலஉள என்பர். வீரபத்திர விசித்ரகர்ணாதிகளான ஸ்ரீபூதகணங்கள்: இவர்களின்பெயர்களை 473 - ஆம் தாழிசையின் உரையினால் அறியலாகும். சதாசிவ......பசாசுகள்: 761-ஆம் தாழிசையினுரையிலும் இக்கருத்தைக் காணலாகும். பஞ்சமகாபூதங்களும் தேவியின் திருவாசலிற் பணிசெய்யக்கடவன என்பது, "பூதமவள் திருவாசல் காவ லாகும்" (**அஞ்ஞவதை.** 121) என்பதனாலும் விளங்குகின்றது. 'சதாசிவ......என்னப்பட்ட பஞ்சமகாபூதங்கள்' என்பதனோடு, 'ஐவகைப் பூதத்துக்கும் நாயகரான பிரமா விட்டுணுருத்திர ஈசுவரசதாசிவர்கள்' (**தக்க.** 138 - உரை) என்பதும் ஒப்பிடற்பாலது; 'சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின் ஐவரென்றார்' (**முருகு.** 254, **ந.**) என்பதும் இக்கொள்கையை வலியுறுத்தும். (கக)

114\. ஆடுவன தோகையோ வயனூர்தி யன்னமுமே
பாடுவன பூவையோ கின்னரங்கள் பலவுமே.

**எ - து** தேவிதிருக்கோயிலிற்கூத்தாடுவன பிள்ளையாருடைய துவசவாகனமான தோகைமயில்களேயோ? அல்லன; பிரமாவினுடையவாகனமான அன்னங்களுமுள. தேவி கீதப்பிரியையாதலால் பாடுவன தேவியால் வளர்க்கப்பட்ட பூவைப்பட்சிசாதிகளேயோ? அல்லன; தேவலோகத்திலுள்ள கின்னரமிதுனங்களான அபேதப்புட்களின் இனம்பலவுமுள எ - று.

கொட்டாட்டுப்பாட்டுப் பூசாந்தம்.

**(வி - கு.)** **உரை.** பிள்ளையார் - முருகக்கடவுள். துவசவாகனமான - துவசமும்வாகனமுமான. கின்னரமிதுனங்கள் - ஆணும்பெண்ணுமாகவுள்ள கின்னரபட்சிகள். கின்னரங்கள் பாடும்தன்மையையுடையனவென்பதை, இந்நூல் 151, 610 - ஆம்தாழிசைகளாலும் அவற்றின் உரையாலும் அறியலாம்; "பாடுகின்றன கின்னரமிதுனங்கள் பாராய்" (**கம்ப.** சித்திரகூடப். 12); இவை இசையின் குணகுற்றங்களை அறியும் ஆற்றலுடையனவென்பது **சீவகசிந்தாமணி**, 657, 660 - ஆம் செய்யுட்களாலும் அவற்றின் உரையாலும் தெரிகின்றது. கொட்டாட்டுப்பாட்டுப் பூசாந்தம் - கொட்டும், ஆட்டும், பாட்டும் ஆகிய இவை பூசையின்முடிவில் நிகழ்த்தப்படுவன; "கொட்டாட்டுப்பாட்டாகி நின்றானை", "கொட்டாட்டொடு பாட்டொலியோவாத்துறையூர்" (**தே.**) (கஉ)

115. வனமலரோ பூமாரி வானக்கற் பகமலரே
கனசலமோ வபிடேகங் கடவுட்கங் காசலமே.

எ - து தேவிக்குத் திருமுடிமுதல் திருமேனிக்குச் சாத்தப்பட்ட புட்ப வருடம் திருக்கோயிலிலுண்டாகிய கற்பகசாதியான ஐந்துபவனச்சோலையி லுண்டான புட்பங்களேயோ? அவையல்லன; சுவர்க்கத்து அமராபதியி லுள்ள கற்பகவிருட்சங்களின் நித்தியமான புட்பங்களுமுள்ளன; அன்றியே தேவிக்குத்திருமஞ்சனமாகத் திருவபிஷேகம் பண்ணுவன மேகசலங் களேயோ? அவையல்லன; தெய்வீகமான ஈசுவரனுடைய திருமுடியிற் கங்கையின் சலங்களுமுள எ - று.

கனம் - மேகம். கடவுட்கங்கையை ஈசுவரன் திருமுடியிற் கங்கை யாகப் பொருளெழுதிய குறிப்புணர்க.

(வி - கு.) உரை. ஐந்துபவனச்சோலை - தேவியின் திருக்கோயிலி லுள்ள கற்பகச்சோலை முதலிய ஐந்து சோலைகள்; பவனம் - கோயில்; தக்க. 66 முதலியவற்றைப் பார்க்க. (கரு)

116. வயங்குகுழை மதியமோ [1]வாளிரவி மண்டலமே
தயங்குகவுத் துவமோபூண் டனிச்சோதிச் சக்கரமே.

எ - து தேவிக்குத் திருக்காதிலிடப்படும் குழை சந்திரனேயோ? அல்ல; ஒளிபொருந்திய ஆதித்தனுமல்லனோ? அன்றியேயும் திருமார்புக்கு ஆபரண மாவது ஒளிவிட்டுவிளங்கிய கவுத்துபமென்னும் இரத்தினமேயோ? அல்ல; ஆகாசத்திற் சந்திராதித்த கிரகநட்சத்திர தாரகாகணங்களைக் கொண்டு உலாவாநின்ற ஏகசோதிச்சக்கரமுமே எ - று.

தேவிக்கு மதியம் முத்தக்குழையென்றும் இரவிமண்டலம் மாணிக்கக் குழையென்றுங் கொள்க.

இதனால், தேவி சருவலோகமும் தானேயாதலறிக.

(வி - கு.) உரை. சந்திராதித்தகிரக நட்சத்திரதாரகாகணங்கள்: 94-ஆம் தாழிசைக்குறிப்பைப்பார்க்க. தேவி சருவலோகமுந் தானேயாதலறிக; இக் கருத்தை உரையாசிரியர், 'தேவிதான் இவ்வுலகமெல்லாமெனவுணர்க' (தக்க. 158, உரை) என்றும், 'இதுசருவலோகமெனினுமாம்' (தக்க. 245, உரை) என்றும், 'தோற்றப்பட்டரூபமெல்லாம் பரமேசுவரியின் வடி வெனக்கொள்க' (தக்க. 292, உரை) என்றும், 'சகத்தில் வடிவெல்லாம் பரமேசுவரி வடிவும்......எனக்கொள்க' (தக்க. 293, உரை) என்றும் இவ் வாறே ஆங்காங்கே வெளியிட்டுச் செல்வர்.

(பி - ம்) 1 'வானிரவி' (கசா)

117. சார்த்துவன கோசிகமோ [1]தன்பேழைத் தமனியமே
ஆர்த்துவன வறுசுவையோ வந்தமிலா வமுதமுமே.

எ - து தேவிக்குத் திருவுடையாடையாக உபாசக பாரசவன் சார்த்து வன கௌசிகப்பட்டாடைகளேயோ? அல்ல; பண்டைத் தனது பேழைப் பொன்னுடையல்லவோ; அன்றியும் தேவியைப்பூசிக்கும் பாரசவன் அமுது செய்விப்பன அறுசுவையடிசிலேயோ? அல்ல; முடிவில்லாத ஆயுஷ்யத் தைக் கொடுக்கும் அமிர்தமல்லவோ? எ - று.

இவ்வமுதம் உதவுவார் தேவர்களெனவுணர்க. இது யாமளத்திற் கண்டது. கோசிகப்பட்டு - கௌசிகவிஷய பாசனம்.

(வி - ரு.) உரை. பாரசவன் - தேவிபூஜை பண்ணுபவன் ; 'பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திரகாளியம்' (சிலப். உரைப்பாயிரம்.) ஆயுஷ்யம் - ஆயுள். கௌசிக விஷயபாசனம் - கௌசிக நாட்டில் நெய்யப்படும் பட்டு ; விஷயம் - நாடு.

(பி - ம்) 1 * 'தன் பழைய' (கரு)

118. கொடும்புரிசை நேமியோ கொற்றப்போர் நேமியே
¹இடுந்திலக மான்மதமோ² வெண்டிசைய மான்மதமே.

எ - து தேவிகோயிற்றிருமதில் சக்கரவாளபருவதமோ அல்ல ; தன்னுடைய ஆக்கினைசக்கர மல்லவோ ? அல்லவாகிற் சக்கரவாளபருவதத்தைக் கடந்து பரசமயிகள் புகுதாரோ ? அன்றியே, நெற்றிக்குத் திலகமிடுவன கத்தூரியோ ? அல்ல ; எட்டுத்திக்கிலும் நின்ற ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபௌமம், சுப்பிரதீபமென்கின்ற திக்கசங்களினுடைய கபோலத்தலங்கள் முதலான சத்ததாரைகளின் மதங்களல்லவோ ? எ - று.

எனவே திருநெற்றிக்குக் கத்தூரித்திலகம் போதாதெனக்கொள்க.

இதில் தேவிபெருமையுணர்க.

(வி - ரு.) உரை. யானைக்குமதமுண்டாகும் இடங்கள்ஏழாவன : கன்னமிரண்டு, கண்களிரண்டு, துதிக்கைத் துவாரம் இரண்டு, கோசமொன்று ; "எழுதிறத்தினு மிகவிடுவன மததாரை" (வி. பா. சூது. 79.)

(பி - ம்) 1 'இடுந்திலதம்' 2 'எண்டிசை மாமதமுமே' (கசு)

119. ¹அடிச்சூட்டு நூபுரமோ வாரணங்க ளனைத்துமே
²முடிச்சூட்டு முல்லையோ முதற்கற்பு முல்லையே.

எ - து தேவியுடைய திருவடிமலர்களைச் சுற்றுமடர்ந்து கட்டிக்கொண்டிருப்பன நூபுரமான சிலம்புகளோ ? அல்ல ; வேதமந்திரசாகையாகிய சகசிராஸ்பதமான மந்திரங்களுமுளவல்லவோ ? அன்றியே, திருமுடிச்சுற்றுமாலையாவன வல்லிசாதிமுல்லைப்பூவோ ? அல்ல ; தன்னுடைய பிரதானகுணமான பதிவிரதமுல்லை யல்லவோ ? எ - று.

சிலம்போசையும் வேதமந்திரவோசையும் ஒக்கும். கற்புக்கு முல்லை சொல்லுதற்குக்காரணம் ஸ்ரீயும் சரசுவதியுமுதலாயினோர் புண்ணியபாப வழிச்செல்வரெனவுணர்க.

(வி - ரு.) மூ. அடிச்சூட்டு...... ஆரணங்களனைத்துமே : "ஆரண நூபுரஞ் சிலம்பு மடிகள்போற்றி" (திருவிளை. கடவுள்.) கற்புமுல்லையின் இலக்கணத்தை, பு. வெ. முதலியவற்றால் அறிக. முடிச்சூட்டுமுல்லை : "பண்ணிறச் சுரும்பு சூழும் பனிமுல்லைச் சூட்டுவேய்ந்தார்", "கரும்புந் தேனுமமிழ்தும் பாலுங் கலந்த தீஞ்சொன்மடவாட், கரும்புமில்லையு மயக்கி யாய்ந்த முல்லைச்சூட்டு மிலேச்சி" (சீவக. 624, 2438), "முல்லையங்கோதை, சில்சூட்டணிந்து", "முடிமிசையணிந்த முல்லையங்கோதை, கொடுங்குழை திளைக்குங்காதினர்", "மங்கலநறுஞ்சூட்டு மரபினனணிந்து" (பெருங். 1. 42 : 149, 2. 5 : 83 - 4, 3. 22 : 211.) உரை. வேதமந்திரசாகையான சகசிராஸ்பதமான மந்திரங்கள் : "சாலவரிதென்று நாலுமறை யாயிரமுகங்களான வுயர்சாகைபல கொண்டுதேட" (மோகவதை. 134), "சாத்திரத்திரளான சடுதிகழாஸ்பதத்தமை யாதவருமறை" (திருப்.) தன்னுடைய பிரதான

குணமான பதிவிரதம்: "கற்புடையபெண்ணமுதை", "பதிவ்ரதைவேதஞானி", "பதிவிரதம்பற்றப்பெற்ற மகப்பெண்", "படிதருங்கற்புக்கற்பகம்" (திருப்.)

கற்புக்கு முல்லைசொல்லுதல்: "முல்லைசான்ற கற்பின் மெல்லியல்", (சிறுபாண். 30; நற். 10; அகநா. 274); "வாணுத லரிவை முல்லைமலைய" (ஐங். 408.) "முல்லையந் தொடையருந்ததி" (பிரபு. கைலாய. 27.)

(பி - ம்) 1 'அடிசூட்டு' 2 'முடிசூட்டு' (கள)

ச.—தேவியைப்பாடியது முற்றிற்று.

---

## ரு. பேய்களைப் பாடியது

இதில் பேய்களின் உருவவர்ணனையும் அவற்றின் பசி மிகுதியுங்கூறப் படுகின்றன.

120. எல்லைநான் மறைபரவு மிறைமகளைச் சிறிதுரைத்தாம்
தொல்லைநா யகியுடைய [1]பேய்க்கணங்கள் சொல்லுவாம்.

எ - து தனது விசேஷப் பிரபாவத்தை நாலுவேதங்களும் புகழுவல் லவளை எம்முடையதரத்தார் புகழ்கை ஆவதன்றாகிலும் எங்களறியாமை யாற் சிறிதுசொல்லினோம். இனிப் புராதனநாயகியான பரமேசுவரியுடைய பசாசகணங்களையுஞ் சொல்லுதும் எ - று.

தொல்லை - பழமை. கணங்கள்: இரண்டாவது தொக்கது.

(வி - கு.) மூ. தொல்லைநாயகி: "இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" (முருகு. 259), "பூமிக்கடன் மூவர்க்குமுன்னாள்" (திருப்.), "பூரணை புராதனி சுமங்கலை" (தாயுமானவர்.)

(பி - ம்.) 1 'பேய்க்கணங்களைச் சொல்வாம்' (க)

### வேறு

121. வாயெழப் புகைந்துகீழ் வயிற்றெரிந்து மண்டுசெந்
தீயெழக் கொளுந்தியன்ன குஞ்சிவெஞ் சிரத்தவே.

எ - து நாபிக்குக்கீழானவயிற்றிற் பசியின்பெருமையாலே எழுந்த உதராக்கினிச்சுவாலை புறப்பட்டு வாயினாலே மேனோக்கிப் புகைந்து தலைக் கொண்டு சிவந்த நெருப்பெழக் கொளுந்தினாற்போல இருக்கும் மயிரை யுடைய தலைகளையுடையன எ - று. குஞ்சியென்றதனால் ஆண்பேயெனக் கொள்க.

(வி - கு.) மூ. கீழ்வயிறு: 'கீழ்வயிற்றுக்கழலை' (நன். 368, மயிலை. மேற்.) தீயெழக்கொளுந்தியன்னகுஞ்சி: இந்நூல் 58 - ஆந்தாழிசையில், 'எரிதலை' என்றதற்கு எழுதிய குறிப்பைப் பார்க்க. உரை. குஞ்சி ஆண் மயிரென்பது, "குஞ்சிவேர்பறித்தகுண்டர்" (தக்க. 372) என்பதனுரையா லும் அறியப்படும். (உ)

122. [1]புரண்டுபோத வேரிவாரி போனபோன பூமிபுக்
[2]கிரண்டுபோது முண்டுமுண்டி லாதபோ லிருப்பவே.

மதுச்சமுத்திரமான கட்கடற்கு ஏறுநீர் இழிநீருளவோவென்னிற்கடலாந்தன்மையால் உரைத்ததெனவுணர்க. வேரி - மது. வாரி - கடல். ஏறுநீர் இப்பேய்களுக்குப் பயப்பட்டுப்போவது போன்றது. கடல் வற்ற வற்றப் பிரமா படைக்குமென்ப. அவனுக்கு ஈசுவரன் பணித்து பணி இது.

(வி - கு.) உரை. ஏறுநீர் - நதிகளிலிருந்து பாயும்நீர். இழிநீர் - கால்வாய்களின்வழியே புறத்திற்செல்லுநீர்.

(பி - ம்) 1 'புரண்டு, போதும்' 2 'கிரண்டு போழ்து மூண்டும்' (க)

123. பாதியிற் பிலந்துழாவு பாறுகால மாறுகால்
ஓதியிற் செவித்துளைத் திளைக்குமுத் துடுப்பவே.

எ - து பாதிக்காலில் ஏழுபிலத்துவாரமும் துழாவவல்லவாயிருக்கும் பாறியகாலையுடையன; மாறுகாலையுடையவாகிய ஓந்திகள்பலவும் பண்டே புக்கிருக்கும் செவித்துளையிடத்திற்புக்கு இடைவிடாதே யிருக்கும் முத்துடும்புகளையுடையன எ - று.

பாதியிற் பிலந்துழாவுங் காலெனவே பேயின் பெருமைகொள்க.

(வி - கு.) மூ. பாறுகால்: "பட்டடி நெட்டுகிர்ப் பாறுகாற்பேய்" (11-ஆம்திருமுறை, திருவாலங். பதி. 6.) செவித்துளைத்திளைக்குமுத்துடுப்பவே: இதனுடன், "உழுவைத்தழைசெவி......கழுது" (பொன்வண்ணத். 75), "புக்குவாளரி முழங்குசெவி" (கம்ப. விராதன். 9), "வெய்யவெங் கதிர்களை விழுங்குவெவ்வரா, செய்தொழி லிலைதுயில் செவியின் றுள்ளையான்" (கம்ப. கவந்தன். 17), "கட்செவிக்கிடங்காட்டுஞ்செவியின" (இரணியவதை. 118), "ஆந்தை பாந்தி யிருப்பத் துரிஞ்சல்புக்கங்கு மிங்குமுலாவுஞ் செவியன" (கலிங்க. 127) என்பவைகளும் ஒப்புநோக்கற்பாலன. முத்துடும்பு - முதுமையை யுடைய உடும்புகள்; "முத்தெருது" என்றதுபோல; தக்க. 461, 580, 789. (சு)

124. எழுங்கடற் பகைப்பிணத்தும் [1]ரவிதிகந்த வெல்லைபோய்
விழுங்கடற் பகைப்பிணத்து மோடியுண்டு மீள்பவே.

எ - து ஆதித்தன் உதயஞ்செய்தருளும் கீழைச்சமுத்திரத்திற் புறத்திலே நின்று அவனுடன் யுத்தஞ்செய்யும் அசுரர்களை அவன் கொன்றருளினல், பட்ட மூன்று நூறுபிரத்தறுபதிறுபிரவர் பிணங்களை அப்பொழுதே சென்று புக்குத் தின்று பின்னையும் அவ்வாதித்தன் அத்தமிக்கும்பொழுதே மேலைச்சமுத்திரத்தினது புறத்தினின்றுபொருத அசுரர்களையும் அவ்வண்ணமே அவன்கொன்றால் அவ்வண்ணமே அவர்களின்பிணங்களையும் ஓடிச் சென்று தின்று மீண்டுவருவன எ - று.

திகந்தம் - திக்கின்முடிவு; திக் அந்தம்; அல்லின்மேல் அச்சேறின ஆரியமுடிவு; இதனைக் குற்றியலுகரவீறென்றதே தமிழாமிதற்குத் தமிழாமுடிவு, "புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது" (தொல். புணர். சூ. 36) என்பதனாற் கொள்ளின், ககரவொற்று முதலிய வல்லெழுத்துக்களாறும் மொழிக்கிறுதியில்வாரா; ஆனபடியால், இதனைத் திக்கென்னுஞ்சொல்லின் கடையைக்குறைத்து உயிரேற்றி முடித்துக்கொள்க; விறகு, கோடு, மூக்கு என்பவை முடிந்ததுபோலக் கொள்கையும் நலமாம்; "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" (தொல். எச்ச. 6) என்பதனாற் கொள்ளலுமாம். திகந்தமென்றதனாற் கிழக்கறுதியும் மேற்கறுதியும் கொள்க. இப்பாட்டில்

ஓடியென்னுஞ்சொல்லால் தேவியுடைய குற்றேவல்செய்ய வருதற்குரிய பேய்களின் விரைவு கூறப்பட்டது. ஆதித்தன் முப்பதுநாழிகையிற் செல்லுமிடம் முழுதும் ஒரு முகூர்த்தத்திற் போய் வருவன பேயுள வென்றவாறு.

(வி - கு.) மூ. ரவி எழுங்கடல். உரை. ஆதித்தனுடன் யுத்தஞ்செய்யும் அசுரர் மந்தேகர் எனப்படுவர். அவர் இறந்திறந்து மீட்டுமீட்டும் பிழைப்ப ரென்று பழையநூல்கள் கூறும்; "தரங்க வாரிதிப் புறத்தெதிர் மலைந்த வெஞ் சமரில், உரங்கொள் கூர்நெடும் படைகளா லுடன்றமந் தேகர்", "மந் தேக ரெல்லா மலைவுற்று மடிந்து வீழச், செந்தே ருக்கன் குடபாற்றிசை சென்று சேர்ந்தான்" (வி. பா. கண்ணன்றூது. 87, எட்டாம்போர். 33), "வந்தெதி ரவுணர் தங்கண் மணிநிறத் திட்டுவாங்கும், கொந்தொளிக் குருதி தோய்ந்த கூர்நுதி யீட்டி போலும், கந்தமிக் கரும்புக் கஞ்சக் கடிமலர் மணந்த கேள்வன், சிந்திய கிரணக் கற்றை செந்நிறம் படைத்த தோற்றம்" (காஞ்சிப். பன்னிரு. 357.) அல் - மெய்யெழுத்து. அச்சு - உயிரெழுத்து. முகூர்த்தமென்பது மூன்றேமுக்கால்நாழிகையென்பது முதற் பலவாறுகக் கூறப்படும்.

(பி - ம்) 1 'இரவிழுந்த' (ரு)

125. எயிறிரண்டு தட்டினூ டுமிவ்விரண்டெ டூழ்ந்துபாழ்
வயிறறிந்து தாழ்செறித்து வைத்தவொத்த வாயவே.

எ - து மேலுங்கீழுமான வாயுதடு இரண்டிலும் ஏறி இழிந்து இத ழொன்றிற்கு இரண்டெயிருகக் கீழுமேலும் நாலெயிறுளவன்றே அவை இவையிற்றின் வயிற்றின் பெருமையறிந்து வாயையடைத்துத் தாழிட்டு வைத்தனபோன்றன எ - று.

இல்லையாயின் உலகமெல்லா மொருக்காலே விழுங்குமென வுணர்க.

(வி - கு.) மூ. பாழ்வயிறு: "அசும்புதூர்வயிறு" என்பர்பின்; தக்க. 232. (சு)

126. [1]வயங்களிற் புறப்பொருப்பில் வேரிவாரி வந்துதிக்
கயங்களிற் [2]கடாமிடா மடுத்தெடுத்த கையவே.

எ - து வலிகளாலே சென்றுசென்று சக்கரவாளபருவதங்களின் புறத்து மதுச்சமுத்திரங்களை வாரியுண்டு வந்து பின்னைத் திக்கயங்களின் செவிமுதல்மதங்களை மிடாக்களை மடுத்தெடுத்து மிடற்றின்மடுத்த கையினை யுடையன எ - று.

(வி - கு.) மூ. மிடா - முகத்தற்கருவிகளுள் ஒன்று; இங்கே பெரிய பானை ;, "மிடாப்பலவும்", "மிடாக்களிற் சொரியவாரீர்", "ஏறின மிடாக்கள் வெந்து சமைந்தன" (தக்க. 230, 739, 749.) உரை. செவிமுதல் - காதடி. கயத்தின்செவிமுதல் மதம்: "இருகவுட்டுளை வாக்குகார்க்கடங்கள்" (காஞ்சிப். விநாயகர்.)

(பி - ம்) 1 'வயங்கொளிப் புறப்பொருப்பு' 2 'கடப்படா' (எ)

வேறு

127. உலரெலும்பொ[1]டொசிநரம்பி னுடலினின்ற [2]குடலைபோன்
றலர்சிலம்பி யிழைசுமன்று வெளியடங்க வணிவவே,

**எ - து** பசையறவுலர்ந்த எலும்புடன் கட்டொசிந்த நரம்புடன்நின்ற பசாசுகளினுடம்புகளைக் கிணற்றுக்குக் கட்டிவிட்ட குடலையாக நினைத்துக் கொண்டு பெருத்தசிலந்திகள் தம்முடைய வாய்நூலால் அவற்றின் வயிற் றெலும்புகளின் இடைவெளி தோன்ருவகை அணிவன எ - று.

இதன்பயன் தம்முடம்பின் மாங்கிசங்களையும் தம்முதராக்கினி தின்ற தென்றவாறு. குடலை - கிணற்றிற்கூடு (கிணற்றின் உறை.)

**(வி - ரை.)** மூ. இத்தாழிசையின் கருத்துடன், 234, 235 - ஆம்தாழிசை கள் ஒப்புநோக்கற்பாலன.

**(பி - ம்)** 1 'டொருக ரம்பினுடல நின்று சுடலை யென்' 2 'குடலை யென்' (அ)

## வேறு

128. குறிக்குமெக் கொழுக்களுக்கு மிக்கடிக்கொ டுக்கொடுத்
தெறிக்குமெப் பிறைக்குமெட்டி ரட்டிநெட்டெ யிற்றவே.

குறிக்கும் எக்கொழுக்களுக்கும் - பேய்களின் பற்கு உவமையாக உல கத்தாராற்சொல்லப்பட்ட உழுகொழுக்களெவற்றினுக்கும் ; குறித்தல் பிறைக்குமொக்கும். கொடுக்கொடுத்து : இரட்டைக்கிளவி. எறித்தல் - நிலாவெறித்தல். பிறை - பதினைலாம் பக்கத்துப்பிறையும், முதற்பக்கத்துப் பிறையும்.

**(வி - ரை.)** மூ. எட்டிரட்டி - மிகுதியைக்குறிக்கும் ஒருவழக்கு ; "கார் முழக்கொலியி னெட்டிரட்டிநிறை கடன்முழக்கென முழக்கெழ" (**சேக் கிழார்புராணம்**, 58.) எரிக்கு மெப்பிறைக்கு......நெட்டெயிற்றவே : "எயிறி ரண்டருகு வெண்பிறைக்கு" (**தக்க.** 420.) **உரை**. பக்கம் - திதி ; "மாக்கட னடுவ னெண்ணாட் பக்கத்துப், பசுவெண்டிங்க டோன்றி யாங்கு" (**குறுந்.** 129 : 3 - 4.) 'பூர்வபக்கத்துப் பதினைலாம் பக்கம்', 'பூர்வபக்கத்துப் பதின் மூன்ரும் பக்கம்' (**சிலப்.** 8 : 45-71, **உரை** ; 10 : 1-3, **உரை**.) (க)

129. [1]கதுப்பிறக் கழுக்களிற் [2]பழுக்களைக் கடித்துறிப்
புதுப்பிணத் திரைப்புமிக் கடிப்பொருப் பொருப்பவே.

**எ - து** உயர்ந்த கழுக்களிற் புழுவெலும்புகளைத் தம்முடையவாய் களில் இரண்டுகதுப்பும் ஒடிந்தோடக் கடித்துத்தின்று அவையிற்றிற் பசை காணுதவிடத்திற் புதிதான பிணங்கிடைத்திலதென இரைப்புமிக்கு வயிற்றடி வீங்கிப் பொருப்பொருத்த பலபேயுமுள எ - று.

கதுப்பென்றது கொடிற்றை. இரைப்பு - மோகம் ; செந்தமிழ். பொருப்பொருப்ப : இரட்டைக்கிளவி.

**(வி - ரை.)** மூ. இரைப்பு : "இரைத்தகூர்பசி", "ஞால முண்ட வயிற் றிரைப்பை யடக்குமின்கள்" (**தக்க.** 242, 762) ; "உணரும் வாழ்க்கையை யொன்றறியாத, இரைப்ப னேனுக்கொ ருய்வகை யருளா யிடைமருதுறை யெந்தைபிரானே" (**சுந்தர. தே.**)

**(பி - ம்)** 1 'கதுப்பினிற்' 2 * 'பிணத்தினைக்' (கo)

130. புரக்குமற் புதத்துயிர்க் கிழத்திபுக் குழித்தமக்
கிரக்கமற் றிருப்பதற் கெடுத்துளைத் திளைப்பவே.

எ - து பசாசகணங்கள் தமக்கு உணவுமுதலாயின கொடுக்கும் தேவி வாழ்க்கைப்பட்டுப்புக்க மகாதேவர் தங்களுக்கு உணவுமுதலாயின கொடாதே இரக்கமின்றி யிருப்பதற்கு எடுத்துக் கதறி முறையிட்டு இளைத்திருப்பன அநேகமுள எ - று.

அற்புதத்துயிரென்றது உணவுண்டாகில் இருந்து உணவில்லையாகில் வருந்தும் இதுவல்லது காணப்படாத பிராணனென்றவாறு.

அற்புதம் - அதிசயம் ; அது காணப்படாமை. புக்குழியென்றது மகாதேவரை. உளைகை - கதறுகை.

(வி - கு.) மூ. புக்குழி - புக்ககம், கணவன்வீடு ; இங்கே மகாதேவர்க் காயிற்று. உரை. மகாதேவர் தங்களுக்கு உணவுமுதலியன கொடாதே இரக்கமின்றியிருப்பதற்கு எடுத்துக்கதறிப் பேய் முறையிட்டதை, இந்நூல் 223-6-ஆம் தாழிசைகளாலுணரலாகும். (கக)

## வேறு

131. மதிதுரந்து வரவொழிந்த [1]மதநினைந்து சதமகன்
பதி[2]துரந்து [3]படையயின்று சிறிதவிந்த பசியவே.

எ - து சந்திரனைத் துரந்து பின்னை அவன் ஆகாசத்தில் வருதலைத் தவிர்ந்த கருவத்தை நினைந்து தேவேந்திரனது பதியான சுவர்க்கத்தைத் துரந்து அதில் தேவர்களான படையைத்தின்று சிறிதடங்கின பசியை யுடையன எ - று.

இது தர்க்கவாதம். இது தமிழில் தகடூர் யாத்திரையிலுமுண்டு. இக்கதை வேதகதை.

(பி - ம்) 1 'வது நினைந்த சதுமுகன்' 2 'துரந்துபடவயின்று' 3 'படியயின்று' (கஉ)

132. கருநிறங்கொ டுருவுகொம்பு வெருவுமும்பர் கழிவிடும்
பரிபிளந்து தசைமிசைந்து[1] சிறிதவிந்த பசியவே.

எ - து கருநிறத்தைக் கொண்டு பிறருடலை உருவுகொம்புகளாற் குத்த வல்ல கடாக்களை வெருவுந் தேவர்கள் பண்டு கட்டவிழ்த்துவிட்ட குதிரைகளைப் பிளந்து மற்றவற்றின் மாங்கிசங்களைத் தின்று சிறிது பசிதவிர்ந்தன, அப்பசாசுகள் எ - று.

இது பண்டு மகிஷவதைபண்ணின பரமேசுவரி, தன்னை-வஞ்சித்து விட்ட தேவர்கள்மேல் தன்படைகளைப் போகவிட்டகதை யெனவுணர்க.

உருவுகொம்பு : அன்மொழித் தொகை. கழி - கயிறு. இதனை "வானுகத்தின் றுளைவழி நேர்கழி கோத்தென" (6) என்ற திருச்சிற்றம்பலக் கோவையிற் கண்டுகொள்க.

(வி - கு.) மூ. கழி : இச்சொல் கயிறென்னும்பொருளில் வருதலை, "கழிப்பிணிக் கறைத்தோ னிரைகண் டன்ன" (அகநா. 67 : 13), "நோன்கழிசிவணி" (சீவக. 2749) என்பவற்றாலும் அறியலாகும். கருநிறங்கொடுருவுகொம்பென்றது, மகிஷாசுரனை.

(பி - ம்) 1 'பசிதணிந்த பணியவே' (கங)

133. இருவிசும்பு வறிதியம்ப விடிவிழுந்த தெனவிழும்
பெருவிலங்க லனபுயங்க பிசிதவுண்டி பெறுபவே.

**எ - து** பெரிய ஆகாசத்திற் சுவர்க்கம் அரசின்றிப் பாழ்பட்டுக் கதறப் பூமியிலே அசனிவிழுந்தாற்போலவிழுந்த மலைபோன்றிருக்கும் வடிவை யுடைய பாம்பினிறைச்சியை உண்டியாகப்பெற்றுப் பசிதீர்ந்தன எ - று.

புயங்கம் - பாம்பு. பிசிதம் - மாங்கிசம்.

**(வி - கு.)** மூ. இதிற்கூறப்படும் பெருவிலங்கலன புயங்கமென்றது, சாபத்தால் இந்திரபதவியிலிருந்து விழுந்த நகுடனது மலைப்பாம்பினுரு வத்தை. (கச)

134. வாரியுண்டு மேகவிந்த்ர வாகனங்கள் வாய்விடும்
சோரியுண்டு [1]சூன்முதிர்ந்த போன்மிதந்த தோலவே.

**எ - து** சமுத்திரசலத்தைக் குடித்து மேகமான தேவேந்திரவாகனங் களைப் பிடித்துக்கொண்டு பிளந்து மற்றவற்றின் வாயாற்சொரிகின்ற இரத் தங்களை மிகவுங் குடித்து உள்ளிற் கெர்ப்பம் வளர்ந்தாற்போல மேன்மிதந்த தோலையுடையன எ - று.

சோரி - உதிரம். சூன்முதிர்தலாவது உடம்பின்மாங்கிச மிகுகை.

இது காண்டாவனப்பூசற்கதை.

**(வி - கு.)** **உரை.** காண்டாவனப்பூசற்கதை **வி - பா.** காண்டவதகனச் சருக்கத்திற் கூறப்பட்டுள்ளது.

**(பி - ம்)** 1 'சூன் மிதந்த' (கரு)

## வேறு

135. மிசைபெறு துகுற ளானகூளிகளும்
விம்மி யுள்ளதிசை செம்மியே
திசைபெறு து[1]தடி யாதபாரிடமு
முடைய ளுலகுடைய செல்வியே.

**எ - து** மேல்வளர ஆகாசமில்லாமையிற் குறளான பேய்களையும் திக்குமுட்டப் பருத்துவிம்மித் திசையையடைத்து மீண்டும்வளரத் திக்குப் பெறாது தடிக்கைதவிர்ந்த பூதங்களையும் உடையாள், அகிலலோகநாயகியான பரமேசுவரி எ - று.

மிசையென்றது ஆகாசத்தை. கூளி - பேய். பாரிடம் - பூதம்.

**(வி - கு)** மூ. மிசைபெறாது குறளானகூளிகள் : "எழுந்து நிற்கின் விசும்பினின் முட்டியே யிடம்பெறுமன் முடங்கி யிருப்பன" (**இரணியவதை.** 119.) செம்மி : "சேனை யேவினை னெங்கணுஞ் **செம்மவே**" (**தக்க.** 662), "செறிவென்னுந் திண்கதவஞ் **செம்மி**" (**இயற்பா.** 3 : 12), "தொட்டு மேலெழுந் தோங்கிய தூளியிற் பூழி, யட்டிச் **செம்மிய**" (கம்ப. தாடகை காண். 31.) உலகுடைய செல்வி : "**அகில லோகநாயகி** யமர்ந்ததோர்......ஆலம்" (**தக்க.** 139.)

**(பி - ம்)** 1 'கடிதாய பாரிடமும்' (கசு)

ரு.—பேய்களைப்பாடியது முற்றிற்று.

## ௬. கோயிலைப் பாடியது

[இதில், தேவியினுடைய கோயில் வருணனையும், அக்கோயிலிலுள்ள ஆலமரத்தின் பெருமையும், தேவியின் அமளியான அரவரசின் பெற்றியும், தேவி வீற்றிருக்கும் சிறப்பும், தேவியின் பஞ்சாயுதங்களின் செயல்களும் தேவி திருமேனியின் அழகும், தேவி ஆளுடையபிள்ளையார் சமணரை வாதில் வென்ற கதையைச் சொல்லும்படி கலைமகளைப் பணித்தலும், அவ்வாறே கலைமகள் அக்கதையைச் சொல்லுதலும், தேவி கேட்டு மகிழ்ந்து கலைமகளுக்கு அருள் செய்தலும் கூறப்படுகின்றன.]

136. இக்கணங்கள் வந்துசூழும் [1]யோகயா மளத்தினுள்
[2]மெய்க்கணங்க ளேவிரும்பு கோயில்யாம் விளம்புவாம்.

ஏ - து முன்சொல்லப்பட்ட பூதபசாசகணங்களால் வந்துசூழப்படும் வேதசிவாகமங்களாற்பொருந்தும் யாமளசாத்திரத்தினுற் சொல்லப்படுகின்ற ஈசுவரியின் பதினெண்கணநாதராலும் விரும்பப்படுகின்ற கோயிலை யாம் இனிச் சொல்லப்புகுகின்றேம் எ - று.

பதினெண்கணமாவன தேவகணம் பிதிரர்கணமுதலியன.

(வி - கு.) உரை. யாமளசாத்திரத்தினுற் சொல்லப்படுகின்ற ஈசுவரி: "பரவுவன யாமளமோ பதினெட்டுப் புராணமுமே" (தக்க. 113.) பதினெண்கணம்: "பதினெண் பதாதி புடையே பரந்த படையே" (தக்க. 445); 'பதினெண்கணங்களாவார் தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தருவரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதமும் வேதாளமும் தாராகணமும் ஆகாசவாசிகளும் போகபூமியோருமென இவர்' என்பர் புறநானூற்றுரையாசிரியர் (புறநா. 1, உரை); 'பேயும் பூதமும் பாம்புமீறுகிய பதினெண்கணம்' என்பர் பேராசிரியர்; தொல். பொ. 256, உரை.

(பி - ம்) 1 * 'யாமளாகமத்தினுள்' 2 'மெய்க்கணங்கள் மேல் விரும்பு' (க)

### வேறு

137. கீழுமேழுநிலை மேலுமேழுநிலை கோயில்வாயிலிரு கிரியுமே
சூழுமேழ்கடலு மகழிசக்ரகிரி புரிசைகாவலொரு சூலமே.

ஏ - து கீழேழுலகமென்று சொல்லப்பட்ட சத்தபாதாளங்களும் கீழ்நிலை; மேலேழுலோகமும் நாயகிகோயிலின் மேல்நிலை; இது கோயிற் கட்டணம். திருவாசல் உதயகிரியும் அத்தமனகிரியுமான இரண்டுமலைகளும். கோயிற்கிடங்கு சத்தசமுத்திரங்களும். இந்தக்கோயிற்கு மதில்சக்கரவாளம். இந்தக்கோயிற் கட்டணம் இத்தனைக்கும் ரட்சையாவது தேவி திருக்கையிலிருக்கும் ஒருசூலம் எ - று.

கோயிற்குக் கிடங்குண்மை உதயணன்கதையிற் கண்டுகொள்க.

(வி - கு.) மூ. சக்ரகிரிபுரிசை: "கொடும்புரிசை நேமியோ கொற்றப் போர் நேமியே" (தக்க. 118.) காவலொரு சூலம்: "சக்கரந் தண்டு சூலஞ்சலியாத காவலே" (பாசவதை. 155.) உரை. கட்டணம்: 'தாபரருந் தகைப்பென்றது ஒழுங்குபாட்டையுடைய ஆண்டு வாழ்வார்க் கல்லது பிறர் புகுதற்கரிய மாளிகைக் கட்டணம் என்றவாறு' (பதிற். 64 : 7, உரை.) (உ)

138. பூதநாயகர் மகோதராதிகள் புரக்கவாயின்முறை புகுதுவார்
வேதநாயகி விமானபீடிகை யநேககோடிவட மேருவே.

ஏ - து இப்படிக்கொத்த திருக்கோயிற் றிருவாசற் காவலாளராகிய மகோதரர் குண்டோதரர் வியாக்கிரமுகராதி காரண பூதகணநாதர் உள்ளுட் புக்கு விண்ணப்பஞ்செய்து, வரவிடுகவென்ன, தடைதவிர்ந்து விலகாது புகுமினென்றருளப் புகுதப்பெறுவார், ஐவகைப் பூதத்துக்கும் நாயகரான பிரமா விட்டுணு ருத்திர ஈசுவர சதாசிவர்கள். வேதநாயகியான விசுவேசுவரியுடைய கோயிற் பலிபீடமானவை அநேக கோடி வடதிசை மகாமேருக்கள் எ - று.

புரத்தல் - அனுக்கிரகித்தல். அனந்தசக்கரவாளமுண்டென்னுங் கதையால் மகாமேருவும் அநேக கோடியுள வென்பர். அநேகங்குவடுகளையுடைய மகா மேருவொன்றுமேயென்பாருமுளர். இது மகாசத்தியான தேவி பெருமைக்குப் போதாது.

(வி - கு.) மூ. மகோதராதிகள் : மகோதரர், குண்டோதரர், வியாக்கிரமுகர், கும்போதரர், விசித்திரகர்ணர், சிங்கமுகர், கசகர்ணர், பட்சபாட்சர் முதலாயினோர் ; 473-ஆம் தாழிசையுரையைப்பார்க்க. மகோதராதிகள் புரக்கப் பூதநாயகர் முறை வாயில் புகுதுவார் என இயைக்க. உரை. ஐவகைப் பூதத்துக்கும்......சதாசிவர்கள் : 113, குறிப்பைப் பார்க்க. (ந)

## ஆலமரம்

139. அப்பெரும்பழைய கோயிலூடகில
லோகநாயகி யமர்ந்ததோர்
ஒப்பருங்கடவு ளாலமுண்டதனை
[1]யுள்ளவாசிறி துரைத்துமே.

ஏ - து இங்குச் சொல்லப்பட்ட பெரிதாய்ப் பழைதாயிருக்கும் சருவாண்டங்களான கோயிலினடுவே எல்லாலோகங்களுக்கும் நாயகியான பரமேசுவரி சமித்திருப்பதொரு வடவிருட்சமுண்டு. அதனை உள்ளபடி சிறிது சொல்லுவோம் எ - று.

பழையகோயிலென்பது பிரமாமுதலான காரணேசுவரராலும் செய்யப்படாத கோயில். அதுதான் நித்தியசித்தமெனவுணர்க. இது வைதீகம். உள்ளவா வென்றது உள்ளவாறுமுரைப்ப அரிதென்றபடி.

(வி - கு.) உரை. சருவாண்டங்களானகோயில்என்பது "கூறுவேதமுஞ் சூழுதற்கருங் கோயிலுக்குநா னளவை கூறுகேன், ஆறுநாலுதிக் குள்ள நீளமே யம்மைகோயிலுக் களவையாவதே" (பரசமதை. 150) என்பதனாலும் உணரப்படும். (பி - ம்) 1 'யுள்ளவாறினி' (ச)

## வேறு

140. முடுகியபுறம்பு நீர்நலிய முகடுபடு மண்டகோளகையை
நெடுகியவரம்பி லாதபணி நிரைகொடுசு மந்தநேமியது.

ஏ - து உகாந்தகாலத்தில் உலகத்தை முட்டமுடுகிவந்த புறம்பிலுள்ள மகாசமுத்திரங்களினீரான பிரளயோததி நலிதலாற் பாழ்பட்ட அண்டகோளகைகளைத் தன்னுடைய நெடுகிய அளவில்லாத பெருங்கவடுகளான பலநிரைகளைக்கொடு சுமந்துதாங்கிய சுற்றுக்களையுடைத்து எ - று.

முகடுபடுதல் - பாழாகை ; முகடு மோட்சமுமாம்.

(வி - கு.) மூ. புறம்புநீர் - பெரும்புறக்கடல். (ரு)

141. விரிகடல்கொளுந்தி வேவவிழ [1]வருமிகுபதங்க ராறிருவர்
எரிவிரிகரங்க ளாறியெழ வெழுகுழையசைந்த சாகையது.

ஏ - து விரிவினையுடைய கடல்களெல்லாம் அழல்கொளுந்தி வேம்படிக்கீடாக வருமிக்க பதங்கர்களான ஆதித்தியர் பன்னிருவருடைய நெருப்புவிரிகிற கதிர்கள் பன்னீராயிரமும் குளிர்ந்துபோம்படி அப்பொழுது எழுகின்ற முகிழ்விரி சிறுகுழையசைந்த கொம்புகளை யுடையது எ - று.

எனவே திக்குத்தோறும் துவாதசாதித்தர்வரினும் இப்படிப்படுவரென வுணர்க.

மிகுபதங்கரென்றது, ஈசுவரனுடைய அங்கிசமானது பற்றி. அதனை அட்டமூர்த்தி யென்னும் ஈசுவரன் பெயராலுணர்க. பதங்கர் - ஆதித்தர். கரம் - கதிர் ; சகசிரகிரணம்.

(வி - கு.) மூ. குழை - தளிர். உரை. ஆதித்தியர்...பன்னீராயிரமும் : "சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண்டாயிரஞ் சுடரொடுஞ் சுழ்வருவரே" (தக்க. 78.) அட்டமூர்த்தி : "எண்கூறவனொரு பேருரு" (452.) "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாச மாயட்ட மூர்த்தியாகி" (தே.)

(பி - ம்) 1 'வருமிகு மத பதங்கராறிருவர் ஒரு கதிர் கரங்களாறியற' (சா)

142. சதுமுகன்முடிந்த வூழியொரு
சருகிலையுதிர்ந்து தூர்புனலி
[1]னிதுமுதலவைந்து பூதமென
விருநிலம்வழங்கு [2]சோலையது.

ஏ - து ஒரு பிரமா மரித்தால் அந்தப் பிரமகற்பத்தில் ஒரு சருகிலை விழும் ; விழுவதாகியவது கடலினடுவே விழுந்தால் அந்தக்கடலினது கம்பீரமெல்லாம் தூர்ந்து தரையாம் ; இத்தரை முதலாக ஐந்து பூதங்களாமென உலகத்தார் வியவகரிக்கும் அழகுடையது அது எ - று.

"இது முதலியைந்தபூதமெனவிரு நிலம்வழங்கு" எனப்பாட மோதி, இது முதலாக இயைந்துபொருந்திய பூமியான பூதமாய் வழங்குமென்பாருமுளர்.

(வி - கு.) மூ. சோலை : "மதிமிசை யிடைவிளங்கு **சோலையது**" (தக்க. 146.) உரை. கம்பீரம் - ஆழம்.

(பி - ம்) 1 'னிதுமுதலியைந்த' 2 'சாகை யது' (எ)

143. இறுதியினெரிந்து பாருருக
வெழுகனல்கரிந்து போயவிய
உறுதியினனந்த சாகைதொறு
மொருதனிகுளிர்ந்த நீர்மையது.

ஏ - து உகாந்தகாலத்து எரிந்து பூமியுருகும்படியாக எழுகின்ற யுகாந்தாக்கினி கரிந்துபோய் அவியும்படிக்கு ஈடாக உரவிதாய் அளவில்லாத கவடுதொறும் ஒன்றாய்த் தனித்தனி குளிர்ந்த நீர்மையுடைத்து அது எ - று. இறுதி - ஊழி. உறுதி - சத்தி. (அ)

144. படியடியெறிந்து கால்பொருது
பலகுலவிலங்கன் மேருவொடு
குடியடிபறிந்த நாளுமொரு
குழைசலனமின்றி நீடுவது.

ஏ - து பூமியினுடைய ஊசிவேர் அடிபறிய எறிந்து மகாவாதஞ் சென்று தாக்கியபொழுது பின்னைப் பல குலபருவதங்களோடு மகா மேருவுங் குடியிருப்பு அடிபறிந்த மகாகற்பாந்தநாளிலும் அந்தக் காற்றுக்கு ஓர் அற்பமாயினும் ஓர் இலை அசங்காதே நிலைநிற்கத் தானு முண்டாவது அது எ - று. கால் - காற்று. (வி - கு.) மூ. "குடியடிபறிந்த" : 29. (கூ)

145. மழையென [1]வுகங்க ளேழெழிலி வரவரவிசும்பின் [2]மாறுவது
பழையன [3]பொதும்பி லேழுமெழு பரவையுமடங்கு கோளினது

ஏ - து யுகாந்தங்கள்தோறும் மேகமேழும் உலகமெல்லாம் ஏகோதகமாய்ப் பெய்யுநாள்வரவர அம்மழைப்புனல்களை ஏற்றுக்கொண்டு ஆகாசத்திலே மாறிப் பூமியைக்காப்பது; பழையனவான பொதும்பில் இவ் வேழு மேகப்புனல்களையும் கடலேழினது சலங்களையும் கொள்ளுங் கோட்பாட்டினையுடையது எ - று.

இதன்பொதும்பிலடங்குவன இவையென வுணர்க.

(வி - கு.) உரை. ஏகோதகம் - ஏக உதகம்.

(பி - ம்) 1 'வுகங்களோடெழிலி' 2 'மாறுவன' 3 'பொதும்பினேழ் பெரிய' (கo)

146. அரிதனிதுயின்ற தோரிலையி
லரனவையிருந்த நீழலது
[1]விரிசுடர்நிவந்த சாயைமதி
மிசையிடை விளங்கு சோபையது.

ஏ - து மகாவிட்டுணு பதினாலுலோகமும் அமுதுசெய்தருளிப் பள்ளி கொள்ளும் பாற்கடற்பரப்புப் போதாமல் வந்து உறங்கும்படி விரிந்த இலையையுடையது. அதுவுமன்றி மகாதேவரான தட்சிணாமூர்த்தி அறுபத்துநாலு கலைக்கியானமும் உலகத்தாரெல்லார்க்கும் உபதேசிப்ப ஆத்தானமிருந்த நிழலினையுடையது. மிக்குவிரிந்த பிரகாசத்தையுடைய சந்திரன்மேலேபோய் அவன்மேல் விளங்கித்தோன்றும் நிழலினையுடையது எ - று.

(வி - கு.) மூ. அரிதனி துயின்றதோரிலையில் : 148 - ஆம் தாழிசை முற்றும் இங்கே அறிதற்பாலது; "வைய முண்டுதனி துஞ்சுமால்" (தக்க. 646.) அவையிருந்த : "அவையிருந்த வரசர்" (வி. பா. வாரணாவத. 61.) உரை. மகாதேவரான......நிழலினையுடையது : "நாயனார், ஐயமுண்டுதரு மம்பணித்தருளு மாதியால்" (தக்க. 646.)

(பி - ம்) 1 'விரிசினை நிவந்தசாகை மதிமிசை விடவிளங்கு சோலையது'(கக)

147. இசையனபிலங்க ளேழுமத னிடையிடைவிழுந்த [1]வேர்விவர
மிசையனபதங்க ளேழுமதன் விடுகவடுதந்த கோடரமே.

ஏ - து ஓசையையுடையவான ஏழுபிலமும் அவ்வடவிருட்சத்தின் கீழிடத்துவிழுந்த வேர்களின் வெளியந்தரம்; இனி மேனின்ற ஆகாசத் தானமான பதங்களேழும் அவ்விருட்சத்தின் பெரிய கவடுகளிலாகியகோட ரங்களின் இடையே நின்ற பெரிய வெளிகள் எ - று.

கோஷவதியென்பது நாகலோகத்திற்கும் வீணைக்கும் பெயர் ; 'இசை யனபிலங்களேழும்' என்பதற்குப்பொருள், இவைகொண்டு கண்டுபிடித்த தென வுணர்க.

(வி - கு.) மூ. பதங்கள் - உலகங்கள்.

(பி - ம்) 1 *'வேர் விழுது' (கஉ)

148. உரியபலவண்ட கோடிபுகு முதரமொடனந்த கோடியுகம்
அரிதனிதுயின்ற தோரிலையி லதனளவியம்பு வாரெவரே.

ஏ - து அமுதுசெயற்குரிய திருப்போனகமான பிரமாண்டமுதலாகிய அநேககோடி அண்டங்களையும் இவற்றிலகப்பட்ட மகாமேருவாதி அநேக கோடி வத்துக்களையும் அமுதுசெய்தருளிய திருவயிற்றுடன் அநேக உகாந் கம் மகாவிட்டுணுபகவானை பெரியோன் யோகநித்திரை கொள்ளுவது அவ்விருட்சத்தின் ஓரிலையிலென்றால் அதனுடைய பெருமையைச் சொல்லு வார் யாவர் எ - று.

(வி - கு.) மூ. ஒப்பு : "அகில வண்டமும் வயிறொரு சிறுபுரை யடைய வுண்டுமி னளவறு புவனமு மடியி லொன்றினி லமைவர நகமையரு ளயனை யுந்தியின் மலர்மிசை யருளிய, முகில்க ருங்கட லறிதுயில் கொளுநெறி முறைப யின்றது மகில்வரு மொருசினை முதிர்வின் மென்றளிர் நுனியினு னுனியெனின் மொழிவ தெங்ஙன மதன்வளர் பணையையே" (பாசவதை. 163); "அயனையுல கடையவரு மோருந்தி மாமலரி னருளியறி வரியபர யோகொன்றி மாறுயில்கொள், சயனமென மொழிவதொரு தாழ்கொம்பின் மேவுசிறு தளிரிறொரு தலைபினுனி யேயென்பர் சாகையையே" (அஞ்ஞ வதைப். 101.) (கங)

வேறு

149. கடநாகத் தீருரிவை யரன்விரிப்பக் கடற்றிவலைப்
படநாகப் பெரும்பாய லரிவிரிக்கும் பணையதே.

ஏ - து எல்லா உலகங்களையும் வருணராசனும் வாதராசனும் ஏற்றி யுஞ் சுழற்றியுந் திரிந்துகெடுக்கும் சருவசங்கார லோகயுகாந்தத்தில் வெள் ளந்தட்டாமலும் காற்றுஅசைக்காமலும் பரிகாரமாக மகாதேவர் தம்மு டைய யானைத்தோலாகிய உரிவையைப் படுத்து அதனுடைய ஒரு பணை யிலே பள்ளிகொண்டருளுவர். அக்காலத்தில் இவருடனே மகாவிட்டுணுவும் தம்முடைய அனந்தனென்னும் மகாநாகப்படுக்கையை அதன்வேறு ஒரு பணையிலே படுத்துப் பள்ளிகொண்டருளுவர் எ - று.

கடநாகம் - மதயானை. ஈருரிவை - எப்போதும் ஈரமானதோல். பாயல் விரிக்கையாவது படுக்கையைப் படுத்தல். (வி - கு.) மூ. கடநாகத் தீருரிவை : "களிற்றீருரிவைப் போர்வை" (தக்க. 551) (கச)

**150.** கோழியான் மயிலதனிற் குலமயிலி லொருமயிலே
ஆழியா னேறுவது மதனுவணத் துவணமே.

**எ - து** தேவசேனைபதியுடைய மயிலும் அவ்விருட்சத்தின் மயில்களில் ஒரு மயிலே; விட்டுணுபகவான் ஏறியருளுங் கருடனும் அதிலுண்டாகிய கருடர்களில் ஒரு கருடனே எ - று.

கோழியான் - கோழிக்கொடியை யுடையான். குலமயிலென்றது வாலியமயிலென மயிற்குலத்திலுஞ் செல்லும். ஆழி - சக்கரம். (கரு)

**151.** அயனுடைய வூர்தியத னன்னத்தோ ரன்னமே
பயனுடைய கின்னரமு மதிற்பிறந்த பறவையே.

**எ - து** பிரமாவினுடைய இராச அங்கிசமும் அம்மரத்தி லுறையும் அன்னங்களில் ஒன்றே; மிடற்றுப்பயனையுடைய முதற்கின்னரராசாவான கின்னர மிதுனபட்சியும் அதிற் பிறந்த பறவையே எ - று.

(வி - கு.) உரை. மிடற்றுப்பயனையுடைய...கின்னர மிதுனபட்சி: தக்க. 114, குறிப்பைப் பார்க்க. (கசு)

**152.** பைந்நாக மிருநான்கு மதன்வேரிற் பயில்வனவே
கைந்நாக மிருநான்கு மதன்வீழிற் கட்டுபவே.

**எ - து** அட்டமகாநாகங்களும் அவ்விருட்சத்தின் கீழே பழகுவன; அன்றியே திக்கயங்களெட்டும் அதனுடைய விழுதுகளிற் கட்டப்படுவன எ - று. பை - படம். கை - துதிக்கை.

(வி - கு.) மூ. இத்தாழிசையிலுள்ள எதுகைநயமே, "பைந்நாக மெட்டுஞ் சுடரெடுப்பப் பைந்தறுகட், கைந்நாக மெட்டுங் கழல்வணங்க" (ஆதி. 31) என்பதிலும் காணப்படுகின்றது. (கஎ)

## தேவியின் அமளியான அரவரசு

**153.** அப்படிய தொருகடவு ளாலின்கீ ழமளியாய்
எப்படியுந் தனிதாங்கு மரவரசை யியம்புவாம்.

**எ - து** இங்குச் சொன்ன பிரகாரமேயான தெய்வீகவடவிருட்சத்தின் கீழிருந்த தேவிக்குப் படுக்கையாகி எவ்வுலகுந் தாங்கும் நாகராசாவை இனிச் சொல்லுவேம் எ - று.

அப்படியதென்றது சுட்டு. எப்படி யென்றமுடிவு ஆரியமுடிவு. (கஅ)

## வேறு

**154.** [1]மாயிரும்பயோ ததித்தொகையென
[2]வாள்விடுந்திவா கரத்திரளென
ஆயிரம்பணு மிதப்பரவைய
தாயிரஞ்சிகா மணிப்ரபையதே.

**எ - து** மாவையுடைத்தாய்ப் பெருத்திருக்கும் பாற்கடற்றிரைகளென வும் சோதிவிடும் ஆதித்தர் கூட்டங்களெனவும் ஆயிரமானபணமாய் அளக் கப்படாத பரப்பையுடையது; பின்னை ஆயிரந்தலையிலும் ஆயிரம் விற்பிடி மாணிக்கச் சோதியையுடைத்து எ - று.

மாவையும் பெருமையிற் கொள்வாருமுளர். பயம் - பால். உததி - கடல்; பயோததி, "ஆத்குண:" எனக் குணசந்தி. இது ரூபாவதாரம்; "அவர்ணே இவர்ணே." இது கௌமார வியாகரணம். திவாகரன் - ஆதித்தன். பண அமிதம், பணுமிதமாயிற்று; அமிதம்-அளவுபடாமை. பரவை - பரப்பு. சிகா - சிகை. இப்பாட்டு நிரனிறை.

அன்றியே ஆயிரம் பாற்கடலில் ஆயிரம் ஆதித்தர் உதித்தாற்போலவா யிருக்கும் ஆயிரம் படத்தையும் ஆயிரம் இரத்தினத்தையுமுடைய பாம்பெனவுணர்க.

ஒரு படத்துக்கு ஒரு பாற்கடலொப்பல்லது உடம்பினீளத்துக்கு உவமையில்லை யெனவுணர்க.

(வி - கு.) மூ. மா - திருமகள். உரை. ரூபாவதாரம்: தருமகீர்த்தியென்பவரால் இயற்றப்பெற்ற ஒரு வடமொழி வியாகரணநூல். இது சோழர்கள் காலத்தில் பெரும்பான்மையாகப் பயிலப் பெற்றுவந்ததென்று சிலாசாஸனங்களால் தெரிய வருகின்றது. திவாகரன் - பகலைச் செய்பவன். பண அமிதம் = பணுமிதம்; தீர்க்கசந்தி. பாற்கடல் படத்துக்கும், சூரியன் இரத்தினத்துக்கும் உவமை. ஆதிசேடன் வெண்ணிறமுடையவனென்பது இங்கே அறியற்பாலது; 282 - ஆம்தாழிசையில் சேடன்படங்களுக்கு வெண்டாமரையை உவமைகூறியிருத்தல் இதனைப் புலப்படுத்தும்.

(பி - ம்) 1 'ஆயிரம்,' 2 'வாயிரம்' (கக)

155. வேலைநின் றெழா வுகக்கனலென
வேகநஞ்சரு மதிப்பிளவென
மாலையும்படா விழித்திரளது
வாய்தொறுங்குவா லெயிற்றணியதே.

எ - து சமுத்திர சலத்தினின்றும் புறப்படாது உகாந்தங்கடோறும் புறப்பட்டு உலகைத் தகனம்பண்ணும் வடவாமுகாக்கினியெனவும், அதிவேகத்தினையுடைத்தான விஷம் என்றுமமருத சந்திரனுடைய பாதிவகிர்ப் பிளப்பெனவும் உண்டாயின பாதிராத்திரியிலுமுறங்காத கண்களையும் வாய்தோறுமுண்டான எயிற்றுக்குவால்களையுமுடையது எ - று.

இதுவும் நிரனிறைப்பாற்படும்.

ஒருகண்ணே வடவாமுகாக்கினியொப்பது; இரண்டாயிரம்கண்ணுள. ஒருவாயிற்பற்களே சந்திரனுடைய பிளந்த வகிர்களையொப்பன, நான்கு விஷ தந்தமுள்ளன; ஆதலால், இரண்டாயிர மதிகளின்வகிர்ப் பிளப்புடையனவென நினைந்து குவாலென்றார். என - என்று வேதஞ்சொல்ல. மதி - அமுதகிரணம்; நஞ்சருமதிப்பிளவு: அபூதவுவமை. மதிப்பிள வென்பதற்கு இரண்டு வகிரையுங்கொள்க. காளியும் காளாத்திரியும் தூதியும் யமதூதியுமென்ற பற்கள் தமிட்டிரம். இப்பொருள் சித்தர்களுடைய சாத்திரங்களிலுந் தமிழிற் சிந்தாமணியிலும் (1286) கண்டுகொள்க.

(வி - கு.) மூ. வேகநஞ்சருமதிப்பிளவு: "குடபாலின் மூளைத்தது கண்ட குணங்க டையோன், வடவாவன லன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின், விடவாளெயிறு" (கம்ப. மாரீசன்வதை. 134), "திங்களின் பகிர்புரை நஞ்சம் பில்கெயிறு" (திருவிளை. நாகமெய்த. 15.) உரை. காளியும்......தூதியும்: காளி, காளாத்திரி, யமன், யமதூதியென்பர்; முருகு. 148, ந. சித்தர்களுடைய சாத்திரங்கள் என்றது சித்தராரூடம் முதலியவற்றை. (உ0)

156. நேரியன்பதா கையிற்புலியென
நேரியன்றரா தரப்புயமென
மேருவும்பொறு வயப்பொறையது
மேருவின்பரா ரையிற்பெரியதே.

எ - து சோழசக்கரவர்த்தியுடைய படைக்கு முன்னெடுக்குங் கொடியி லெழுதிய புலிபோல மகாமேருவும் சகிக்கமாட்டாத வலியகனத்தையுடை யது (எனவே அம்மகாநாகத்தை மகாமேருசகிக்கமாட்டாதெனப் பாம்பின் மகிமைசொன்னவாறு); இன்னுஞ்சோழசக்கரவர்த்தியுடைய பூமியைத் தரிக்கிற திருப்புயங்களேபோல மகாமேருவின் பெரிய தாழ்வரையிலும் பெரியது எ - று.

எனவே மேருப்பொறுத வலியையுடையன சோழன்புலியும் இப்பாம்பு மெனவும் மேருவிற் பெரியன சோழனுடைய திருத்தோள்களும் இப்பாம்பு மெனவு முணர்க.

இது விஷமகவி. பொறை - கனம். பராரை - பருவரை ; செய்யுள் முடிவு "பராரைமரா அத்து" (முருகு. 10) எனவும், வழக்குமுடிவு பருவரை யெனவும் முடியும்.

(வி - கு) மூ. தராதரப்புயமென......மேருவின் பராரையிற் பெரி யதே : "வடமேருத்தன்னெழி லழிப்பர்திர டோளின்வலி தன்னால்" (கம்ப. 3. 7 : 58.) (உக)

## தேவியின் வீற்றிருக்கை

### வேறு

157. திரண்டகலை [1]கூடிநிறை திங்கள்குடை
யாகநிழல் செய்யமுறையால்
இரண்டுருகும் வாடையொடு தென்றல்குளிர்
சாமரை யிரட்டிவரவே.

எ - து பிரிந்து திரளப்பட்ட பதினாறுகலைகளும் தம்மிற்கூடிச் சந்திர மண்டலம் வந்து வெண்குடையாகக் கவித்து நிழல்செய்ய முறைமையாலே வாடையும் தென்றலும் இரண்டுருகும் வந்து வெண்சாமரையாய் விநியோ கப்பட்டு வீச எழுந்தருளியிருந்தாள் மகாகாளி எ - று.

இதுமுதலாகத் தேவி இருக்கும்படி சொல்லுகிறார்.

(வி - கு.) மூ. இத்தாழிசையில் வாடையும் தென்றலும் சாமரையாகக் கூறப்பட்டவாறே, 339-ம் தாழிசையிலும் கூறப்படும். உரை. விநியோகப் பட்டு - உபயோகப்பட்டு. இருக்கும்படி - வீற்றிருக்குந் திருக்கோலம்.

(பி - ம்) 1 'கூடியொரு' (உஉ)

158. குறிக்குமிரு பாலுமுள தீபமென வேறுசில கூறவுளவோ
எறிக்குமதி யும்பருதி யுஞ்சுட ரெடுப்பன விரண்டுருகுமே.

எ - து பிராட்டி திருக்கோயிற்குக் குறித்தெடுக்குந் திருவிளக்கு வேறு சில சொல்லவுளவோ? சோதிவிடுஞ் சந்திரசூரியரிருவரும் இரண்டு பக்கத் திலும் விளக்காகத் திரிவர் எ - று.

பாலும் அருகும் பக்கம். இரண்டருகுமென்றது தேவிதனக்கு இரண்டருகும்; அவையிற்றைப் பகலும் இரவுமாகக் கொள்க. தேவிதான் இவ்வுலகமெல்லாமென வுணர்க. இனிக் குடையும் தானேயாய் விளக்கும் தானேயாமோ சந்திரனெனின், சக்கரவாளங்கள்தோறுமுள்ள சந்திரர்களை யென்க; அன்றியேயும் குடையாயும் விளக்காயும் வரவல்லன அவை; இறப்பது பிறப்பது வளர்வது தேய்வதாகின்றவற்றிற்கு மாட்டாதன இல்லையென வுணர்க. பருதி - ஆதித்தன்.

(வி - கு.) உரை. மதியின்இயல்பு: தேய்தலுண்மையும் பெருகலுண்மையும், மாய்தலுண்மையும் பிறத்த லுண்மையும், அறியாதோரையு மறியக் காட்டித், திங்கட் புத்தேடிரிதருமுலகம்'' (புறநா. 27.) (௨௩)

## வேறு

159. எளிதளித்தன சுரர்தருத்[1]தொகை யிரவிபுற்கிட வெழிலியும்
[2]தளிதளித்திரு [3]தனுவெடுத்தன தகனமற்றது ககனமே.

எ - து தேவிகோயிலிற் கற்பகவிருட்சங்கள் ஆதித்தனுட்டினம் புற்கிடும்படியாக எளியவான நிழலையும் ஒளியையும் கொடுத்தன; மேகங்களும் மழைத்துளிகளைத் துளித்துப் பின்னை இந்திரதனுவான இரண்டுவில்லையு மெடுத்தன; பின்னை ஆகாசம் வெளியடங்கிற்று எ - று.

எனவே கற்பகவிருட்சங்கள் சோதியையும் புறப்படவிட்டன வென வுணர்க. அவை எளியவெனவும் அவையே பெரியவெனவும் கொள்க; எளிது: சாதியொருமை.

(வி - கு.) மூ. 'புற்கென' (சீவக. 283) புற்கிட - பொலிவழிய; "வாளற்றுப் புற்கென்ற கண்ணும்" (குறள். 1261); பு. வெ. 20. இருதனு: இந்திரவில் இரண்டுளவென்பதை, "வானில்வந் திட்டவிற்க ளிரண்டு" (தக்க. 160), "வடுத்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலை யிரண்டும் பற்றி", "கோட்டுடைக் குழவித் திங்கள் குனிசிலை யிரண்டு மானின், சூட்டுடை நுதற்கொவ்வாது தொலைந்துபோய்த் தொல்லை வான, நாட்டிடைக் கரந்துந் தோன்றநணுகியுந் திரியும்", "இருணிற விசும்பினி லிடைய ருமலே, வருசிலையிரண்டையும்" (கந்த.திருவிளை. 29, மாயைப். 40, இந்திரபுரி. 59), "இந்திரற்குத் திருமதலை மன்றலெண்ணி யாதவர்கோன் வளம்பதியி லெய்தினனென், றந்தரத்தை நீலத்தால் விதான மாக்கி யண்டமுற விடிமுரச மார்ப்பவார்ப்ப, வந்திரட்டை வரிசிலையாற் பஞ்ச வண்ண மகரதோ ரண நாட்டி" (வி - பா. அருச்சுனன்றீர்த்த. 51) என்பவற்றால் அறியலாகும்.

(பி - ம்) 1 'தொகரவி புறப்பட' 2 'தளிரளித்தன' 3 'தனுவெடுத்தது' (௨௪)

160. வட்டமொத்தன வண்ணமொத்தன
மதுகையொத்தன வானில்வந்
திட்டவிற்க ளிரண்டுதங்க
ளிரண்டுவிற்களு மென்னவே.

எ - து ஆகாசத்து வந்திட்ட இரண்டு இந்திரதனுக்களும் வளைவும் நவரத்தினவண்ணமும் வலியும் இவையெல்லாம் சமானமாயின, தங்களுடைய கைகளிலுள்ள இரண்டு வில்லுமென்ன எ - று.

தங்கள் வில்லாவன, விநாகமும் சார்ங்கமும் எனவறிக. விட்டுணு ஈசுவரற்குத் தேவி.

(வி - கு.) உரை. விட்டுணு ஈசுவரற்குத் தேவி : "அரியலாற்றேவி யில்லையை யனையாறனுர்க்கே" (தே.) (உரு)

## தேவியின் பஞ்சாயுதங்கள்

### 1.—தண்டாயுதம்

161. பொங்குதிரிபுரம் வெந்துபொடிபட
வந்துபொருமொரு பொருநர்கைத்
தங்குமலைசிலை கொண்டபொழுதுல
கங்கள்தகைவது தண்டமே.

இனிச் சொல்லப்புகுகின்றது ஸ்ரீ பஞ்சாயுதங்களை.

எ - து கருவித்துத் திரியுந் திரிபுரங்கள் வெந்து பொடியாக அசுர ரெதிரே நின்று பொருகிற ஒரு சேவகரான மகாதேவர் திருக்கையில்திரு வில்லாகப் பிடித்தற்கு மகாமேருபருவதத்தை மூலவேருடன் முடியுடன் வாங்கினவன்று மகாமேருவாய்ச் சென்று பதினுலுலோகங்களையும் கோத் துக்கொண்டு காத்துக்கொள்வது, வீரகாளியுடைய திருக்கையிற் பிடித்து விளையாடும் தண்டு எ - று.

இதன் கருத்து : மகாமேருப் பறியுண்ண உலகு நிலைகுலையும் ; குலை யவே மகாதேவரைப் பழிப்பார்கள் தண்டு தகையாதாயின்.

(வி - கு.) மூ. இதிற் கூறப்பட்ட செய்தி திரிபுரஸம்ஹாரத்தில் தேவி செய்த உதவியைக் குறிக்கும். தண்டம் - கதாயுதம். உரை. வீரகாளி : "வீரியைமுன் படைத்தார் போலும்" (தே.) (உசு)

### 2.—கட்காயுதம்

162. தடிந்ததுரக குலங்களுரக பிலங்கள்வயிறு தழங்குமா
வடிந்தகுருதி படிந்துபருதிகண் [1]மட்கவருமொரு கட்கமே.

எ - து வெட்டுண்ட குதிரைக்குலங்களினின்றும் நாககுலம் வாழும் பிலத்துவாரங்கள் நிரம்பவிழுமகாவுதிரத்திற் படிந்து தோய்ந்து சிவந்து சூரியமண்டலச்சிவப்பும் ஒளிமட்கவரும், ஒரு வாள் எ - று.

துரகம் - குதிரை. உரகம் - பாம்பு. மா - மகா. வடிந்த குருதி - வடிந்த உதிரம். கட்கம் - வாள் ; வடசொல். சூரபன்மா துரகவங்கிசத்தின் முதல் ; தேவாசுரம் முதற்போர்.

(வி - கு.) மூ. இது சூரபன்மா யுத்தத்தில் தேவி செய்த உதவியைப் புலப்படுத்துகின்றது. வயிறு - நடுவிடம். உரை. சூரபன்மா துரகவங்கி சத்தின்முதல் : தக்க. 231 - ஆம்தாழிசையையும் அதனுரையையும் பார்க்க ; சூரபன்மா குதிரைமுகமுடையவனுதலின் இங்ஙனம் கொண்டனர்போலும் ; "இருபேருருவின்" (முருகு. 57, ந. அடிக்.) (பி - ம்) 1 'மடங்கவரு' (உஎ)

### 3.—வில்

163. எறிப்பவெறிபடை [1]நிசிசரன்சிர மொருபதுங்கர மிருபதும்
தறிப்பவொருசரம் விடுவதுங்கடல் சுடுவதுங்குனி சாபமே.

எ - து சோதி விட்டெறிப்ப எறியவல்ல படையையுடைய இராவண னுடைய தலைபத்தும் கையிருபதும் ஒக்க ஒருதொடையில் ஓரேவால் அறும் படி ஓரம்புவிட்டதும் கடலைக் கொதிப்பித்ததும் திருக்கையில் வளைந்திருக் கும் வில் எ - று.

நிசிசரன் - இராவணன். கடல்சுடுவது வில்லல்ல; அதனால் விடப்பட்ட அம்பென வுணர்க. இதற்குக் காரணம், வைணவ மந்திரத்தினால் அபிமந் திரித்த அம்பு ஏவினபணி செய்து மீண்டும்போய்த் திருப்பாற்கடல் புக்குச் சுத்திபண்ணி மீண்டும் பெருமாள்பக்கலிலே வருமெனவறிக.

இஃது இராமாயணத்திற் கண்டுகொள்க.

(வி - கு.) மூ. இஃது இராமராவணயுத்தத்தில் தேவி ஆற்றியவுதவியை உணர்த்தும். கடல்சுடுவதென்றது, இராமர் சேதுபந்தனம் செய்வதன்முன் வருணனை அழைக்க அவன்வராததுபற்றிச்சினந்து கடலில் அம்பெய்ததைச் சுட்டியபடி. உரை. வைணவ......வரும்: "ஆர்க்கின்ற வானவரு மந்த ணரு முனிவர்களு மாசிகூறித், தூர்க்கின்ற வலர்மாரி தொடரப் போய்ப் பாற்கடலிற் றூநீராடித், தேர்க்குன்ற விராவணன்றன் செழுங்குருதிப் பெரும்பரவைத் திரைமேற்சென்று, கார்க்குன்ற மனையான்றன் கடுங் கணைப்புட் டிலினடுவுட் கலந்ததம்மா" (கம்ப. இராவணன் வதைப். 199.)

(பி - ம்) 1 'நிசிசரர்' (உ அ)

## 4.—சங்கம்

164. இகலுநிசிசர கணமுமவுணரு
மிடியின்மலையென மடியவெப்
[1]பகலும்ரவியொளி [2]யிரியநிலவொளி
விரியவருமொரு பணிலமே.

எ - து மாறுபடும் ராட்சதரும் அசுரர்களும் இடியாலேறுண்ட மலை கள் மடிவனபோல் மடிய ஓசைப்பட்டு, இனி எப்பகலும் ஆதித்தன் சோதி யோடச் சந்திரன்சோதிமிடையத் தனது சோதிவிடும், ஒரு திருச்சங்கான ஆயுதம் எ - று.

'வெம்பகல்' என்று பாடஞ் சொல்லின் அழகிது; ஓசையுமுண்டு; வெம்பகல் - மத்தியான்னம். இப்படிக்கொத்தது சங்கத்தொனி. இது தந்திர வுத்தி.

(வி - கு.) மூ. தேவாசுரயுத்தத்தில் தேவி அருளியஉதவி இதிற் சொல் லப்படுகின்றது. சங்கிற்குச் சந்திரனை உவமைகூறுதல் மரபாதலால், 'நிலவொளி விரியவருமொரு பணிலம்' என்றார்; "சங்கு திகிரி சந்த்ர சூரியர்" (தக்க. 700.)

(பி - ம்) 1 'பகலுமதியொளி விரியுநிலவென' 2 'விளியுநில வென' (உக)

## 5.—சக்கராயுதம்

165. இருவருதயமு மிருளவொளிவிடு
மெனையபலரிர ணியரெனும்
ஒருவருரமிரு பிளவுபடநடு
முகிரிதனதொரு திகிரியே.

**எ - து** பண்டு இரணியனுடைய இரத்தம் தரையில் விழின் ஒரு துளிக்கு ஒன்பதுகோடி இரணியர் பிறக்க அவ்வுதிரவெள்ளத்தின் துளிகளிற் பிறந்த எல்லா இரணியர்களின் உடல்களுள் ஓருடல் இரண்டு வகிர்பட ஒரு முகூர்த்தத்தில் அவர்கள் மார்பிலே நடவல்ல திருக்கையிற்றிருவுகிருடைய ஸ்ரீவைணவியினுடைய திருக்கையில் திருச்சக்கரம் சந்திராதித்தருடைய சோதிமழுங்கி அந்தகாரமாம்படி மகாசோதியை விடும் எ - று.

இது சக்கராஞ்ஞை.

(வி - கு.) மூ. எனையபலர் : "எனைப்பலவுமே" (தக்க. 729.) பலரிரணியரெனும்......உகிரி : "கோகனக னுள்பெறு கொடுங்கனக னுகமிரு கூறுபடுகூர், ஏகநக நாயகி" (தக்க. 167.) (கO)

## தேவிதிருமேனியின் மரகதசோதி

166. அரவினமளியி னகிலபணமணி
யடைய[1]மரகத மானவோர்
இரவிவெயிலிலன் மதியுநிலவில
னிறைவியொளிவெளி யெங்குமே.

**எ - து** ஈசுவரியுடைய திருமேனிச் சோதிப் பசுமையாலே தானெழுந்தருளியிருந்த நாகராசாப்படம் ஆயிரத்திலுமுள்ளவான ஆயிரம் விற்பிடிமாணிக்கங்களும் தம் சிவப்புக்கெட்டு மரகதரத்தினமாயின. இனி மற்றுரைப்பதென் ? ஒப்பற்ற ஆதித்தனும் சோதியிலன் ; சந்திரனும் அவ்வண்ணமே. உலகமடங்கத் தேவியுடைய சோதியே எங்கும் பிரகாசித்தது எ - று.

(வி - கு.) மூ. தேவியானவள் பசுமைநிறமுடையாளென்பதை, "பச்சை விளக்கே" (தக்க. 308), "இச்சைப்படி தன்பேரறமெண்ணான்கும் வளர்க்கும், பச்சைக்கொடி" (வி - பா. அருச்சுனன்றீர்த்த. 13), "பச்சையெறிக்கும் ப்ரபையடண் டிற்கைப் பத்மமடப்பெண் கொடிவாழ்வே", "தெரிவருஞ் சுத்தப் பச்சைநிறப்பெண்", "கருணையுஞ் சுத்தப் பச்சைவனப்புங் கருது மன்பர்க்குச் சித்தியளிக்குங் கௌரி" (ஸ்ரீகாஞ்சீபுரத் திருப்புகழ்) என்பவற்றால் அறியலாகும். ஆன : விகுதி முற்று.

(பி - ம்) 1 'மரகதமானபோல்', 'மரகதமாயவோர்' (கக)

## வேறு

167. [1]கோகனக னுள்பெறு கொடுங்கனக னுகமிரு கூறுபடுகூர்
ஏகநக நாயகி யனந்தசய னத்தினி திருந்தருளியே.

**எ - து** பிரமாவினுடைய வாளுள் பெற்ற இரணியனுடைய மார்பை இரண்டு கூறுபடும்படி கூர்த்த ஒரு திருவுகிருடைய பரமேசுவரி முன்பு சொல்லப்பட்ட பெரும்பாம்பின் படுக்கையில் வீற்றிருந்தருளி எ - று.

கோகனகனாற் கொடுக்கப்பட்ட வாளுளென்னலுமாம். கொடுங்கனகன் : பண்புத்தொகை. அவன்மார்பு கூறுபடக் கூர்த்தது விசேடம். ஏகம் - ஒன்று ; "ஏகச் செல்வத் தின்பமெய் தியது" என்பது **உதயணன் கதை**.

(வி - ரு.) மூ. கோகனக......நாயகி : தக்க. 165.
(பி - ம்) 1 'கோகனக நாயகி கொடுங்கணரிதாக' (௧௨)

## வேறு

168. எறிபடை வல்லவிசயை யிசைகெழு தெய்வமகளி
ரெழுவரும் வெள்ளைமுளரி யினிதுறை செல்வமகளு
மறிகடல் வையமகளு மலர்கெழு செய்யதிருவும்
வரவிரு மெல்லவுரகன் மணியணி பள்ளியருகே.

எ - து பகைவரை எறியும் ஆயுதங்களில் வல்ல விசயையும் கீர்த்தி கெழுமிய தெய்வமுதல்வியரான பெண்களெழுவரும் வெண்டாமரைமேல் வீற்றிருக்குஞ் செல்வப் பெண்டாட்டியுந் திரைமலிகடலே உடையாகவுடைய பூமிதேவியும் சிவந்த மலருடன் கெழுமிய சிவந்தவடிவினையுடையளான ஸ்ரீதேவியும் தூரவிராதே மெத்தென மாணிக்கமணிந்த பாம்பின்படுக்கையி னருகே இரும் எ - று.

இவ்வார்த்தை சொன்னார் ஏவலாட்டியரெனவுணர்க. விசயை - வெற்றி மகள். எழுவராவார் சத்தமாதாக்கள். எனவே அவர்களில் ஒருத்தியல்லள் பரமேசுவரி யென்பது போந்தது ; மாயாசத்தியெனவுணர்க ; அவர்களெழு வரும் பிறராற் படைக்கப்பட்டார் ; படைத்தவர்கட்கு முதல்வியான தேவி இவள். இது யாமளருபதேசம். மெல்லவென்று தேவியே அழைத்தருளிற் பணியெளிதென்றவாறு. தேவிதான் இது சொல்லின், தன் படுக்கையைத் தானே புகழ்ந்தாளாம் ; அங்ஙனம் புகழாளெனவுணர்க.

இனிச் சொல்லும்பாட்டுத் தேவியருளிச்செயல்.

(வி - ரு.) மூ. தெய்வ மகளிரெழுவரும் : "கொம்மை முலைமருங் கெழுவர் குமரிமார்" என்பர் பின்னும் ; தக்க. 351. உரை. பெண்டாட்டி - பெண் : "மழையுமஞ்சும் வளியும் போமுஞ் செலவிளு ளொரு பெண் டாட்டி" (தகடூர் யாத்திரை.) ஐயையைப் பூசற்பெண்டாட்டி யென்பர் பின் னும் ; 170, உரை. தேவி மாயாசக்தி என்றது போலவே, 'என்றும் மயக்கி வருகிற மாயாசக்தியான எனக்கு' (தக்க. 301, உரை) என்றும், "ஒரு மருங் குடைய மூலநாயகி" (தக்க. 778) என்றதில் மூலநாயகி யென்பதற்கு, 'மூலப்பிரகிருதியான மாயாசக்தியை' என்றும் பின்னுங் கூறுவர். 'மகா மாயா' என்பது லலிதாஸஹஸ்ரநாமத்தில், 215-ஆம் திருநாமம். 'படைத்தவர் கட்கு முதல்வி' என்பது, "பிரமற்குயம்மனை", "மூலநாயகி" (தக்க. 77, 778) என்பவற்றாலும் அறியப்படும். (௧௩)

## ஆளுடைய பிள்ளையார் சமணரை வாதில் வென்ற கதை

169. வருகதை தெய்வமகளென் மருமகள் வள்ளிவதுவை
மனமகிழ் பிள்ளைமுருகன் மதுரையில் வெல்லுமினிய
தொருகதை சொல்லுதவள [1]வொளிவிரி செவ்விமுளரி
யொளிதிக ழல்லிகமழு மொருமனை வல்லியெனவே.

வருகதை - இக்கலியுகத்தில் வருங்கதை.
எ - து 'தெய்வப்பெண், எனக்குமருமகள், வள்ளியென்னும் பெயர் பெற்றவள். அவளுடைய கலியாணத்தை மனமகிழ்ந்தபிள்ளை, முருக னென்னும் பெயருடைய தெய்வம் ; அவன் பாண்டிமண்டலத்து மதுரை

யென்னுமாநகரியில் மகாசமய ஆசிரியருடன் மந்திரவாத விவாதம் பண்ணி வெல்லும் இனியதொருகதையினைச் சொல்லுவாயாக, வெள்ளிய ஒளி விரிந்த தாமரை யிதழொழுகி அல்லியும் இனிதாகி நாறியிருக்குமொரு புட்பத்தின்மேலிருக்கும் வல்லிசாதிபோல்வாய்' என்ன எ - று.

எனவே சரசுவதி யெனவுணர்க. ஆளுடைய பிள்ளையார் முருகக் கடவுளென்றுணர்க.

இது கேட்டுச் சரசுவதி விண்ணப்பஞ் செய்வாள்.

(வி - ரை.) மூ. வள்ளி வதுவை மணமகிழ் பிள்ளை : "வள்ளி கணவன்" (தக்க. 170.) சொல்லு - சொல்லுக. அல்லி - அகவிதழ். உரை. மகாசமய ஆசிரியரென்றது, சைனசமயமுதலிய பலசமய ஆசிரியர்களைக்குறிக்கும் பெயராயினும் இங்கே சைனசமய ஆசிரியர்களைச் சுட்டிற்று. மந்திரவாத விவாதம் : மந்திரவாதம் - மந்திரசக்தியினால் ஓர் அரியசெயலைச் செய்வது ; "தந்திர மிக்க முந்தையோர் சோழன் ருலையால் வெல்லமாட்டாமல், மந்திர வாதஞ் செய்து", "மன்றுநீ டசோக நீழன் மந்திர வாதஞ் செய்ய", "மற மலி யமண ரெல்லாம் மந்திர வாதஞ் செய்து", "மந்திர வாதஞ் செய்த மான மில் சமணர்" (திருவால. 26 : 2, 5 ; 36 : 2, 25.)

ஆளுடைய பிள்ளையார் முருகக்கடவுளென்பது, இந்நூலாசிரியர் உரையாசிரியர்களுடைய கொள்கை. அருணகிரிநாதர் முதலியோர்களும் இக்கொள்கையையுடையவர்களே ; "புழுகொழுகு காழி கவுணியரின் ஞான புனிதனென வேடு தமிழாலே, புனலிலெதி ரேற வமணர்கழு வேற வமர்பொருத வீர குருநாதா", "பாலருத்திரு வாயா லோதிய வேடுநீர்க் கெதிர் போயே வாதுசெய் பாடரேற்றிரு நாலா மாயிர சமண்மூடர், பாரின்மேற்கழு மீதே யேறிட நீறிடாத்தமிழ் நாடீ டேறிடப் பாதுகாத் தருளாலே கூனிமி ரிறையோனும், ஞாலமேத்திய தோர்மா தேவியு மால வாய்ப்பதி வாழ்வா மாறெணு ஞானபாக்கிய பாலா வேலவ மயில்வீரா", "பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப் பொறியிலிச் சமணரைத் தனைபேரும், பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்புகலியிற் கவுணியப் புலவோனே" (திருப்.)

(பி - ம்) 1 * 'ஒளிவளர் செல்வி மூளரி யொழுகிதழல்லி' (கசு)

170\. எழுமலை கொல்லுமசனி யிளமயில் வள்ளிகணவ
[1]னிறைமலை வில்லிபுதல்வ [2]னிகன்மக ளையைகளிறு
கழுமல முய்யவிரவு கலியுக வெல்லைபொருத
கதைகளி லுள்ளதமணர் கழுமிசை கொள்வதிதுவே.

எ - து கருவிக்கு மலைகளைக் கொல்லும் இடியுருமேற்றேடொப்பான் ; இளமயிற் சாயலையுடைய வள்ளிதேவிக்குக் கர்த்தாவானவன் ; மகாமேருவை வில்லாகவுடைய இறைவனுடையபுத்திரன் ; பூசற்பெண்டாட்டியான துர்க்காதேவி பெற்ற யானை ; திருக்கழுமலமென்னும் ஊர் பிழைக்க மேல்வரப்படுங் கலியுகத்தில் அவனால் வெல்லப்பட்ட கதைகளிலுள்ள கதை ; இதுதான் அமணசமயத்தார் பலருங்கழுவை மேல் கொண்டேறின கதை எ - று.

கருவம், சூரபன்மாவைக் காக்கின்றேமென்பது. அசனி - உருமேறு. மலையைக் கொல்லுமென்றது, மலை பண்டு பிராணனுடையவாய்ப் பறந்து திரிந்தமையின் ; "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (266.) இது

**திருமுருகாற்றுப்படை.** ஐயையென்றது உயர்ந்தோளென்றவாறு; ஆரியை யென்றுமாம். களிறு: ஆகுபெயர். கழுமலமென்பது **சீகாழி.** அஃது உய்தலாவது வைதிகவாழ்க்கை பெறுவது. கழுமிசைக் கொள்கையாவது யானைமேல் கொண்டாரென்பதுபோல உயிர்க்கழுவேறுகை. இதுதான் அமணர் கழுவைத்தொத்தப் பிள்ளையார் கொல்லாதே விட்டருளினரென் னுங்கதை. அமணர் தாம் கழுவேறுதற்குக்காரணம் பொய்சொல்லா விரத மெனவுணர்க.

(**வி - கு.**) மூ. எழுமலைகொல்லும்அசனி: "எழுமலைபொடித்த கதிரிலை நெடுவேல் வள்ளிதுணைக்கேள்வன் புள்ளுடன்மகிழ்ந்த, கறங்குகாலருவிப் பரங்குன்று" (**கல்.** 3.) ஐயை: **தக்க.** 243, 410. கழுமலம்உய்ய: "வளர் காழிப் பதிவாழ......சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய் தார்", "காழி வாழவந் தருளிய கவுணியர் பிரானும்" (**பெரிய.** திருஞான். 25 - 6, 673.) **உரை.** கருவம்......என்பது: 5 - ஆம் தாழிசையையும் அதனுரையையும் பார்க்க. 'வைதிகவாழ்க்கைபெறுவது' என்னுங்கருத்து, "வேதநெறி தழைத்தோங்க...அமுத...திருஞான சம்பந்தர்", "பரசமயத், தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க" (**பெரிய.** திரு ஞான. 1, 22) என்பவற்றாலும் அறியப்படும். அமணர் தாமே கழுவேறினா ரென்பது 7 - ஆம் தாழிசையாலும் அதன் உரை முதலியவற்றாலும் விளங்கும்.

(**பி - ம்.**) 1 'னிறைமலைவல்லி,' 2 'னிமமலையை யைகளிறு' (௧௫)

## வேறு

171. பொய்கைசூழ்புக லிப்பெருந்தகை
பொன்னிநாடு கடந்துபோய்
வைகைசூழ்மது ராபுரித்திரு
வாலவாயை வணங்கியே.

இதன்பொருளுணர்க. புகலி - சீகாழி.

(**வி - கு.**) மூ. பொய்கை - இங்கே பிரமதீர்த்தம். பொன்னிநாடு-சோழ நாடு. மதுராபுரித் திருவாலவாய்: திருவாலவாயென்றது சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை; "தேசொடுவான் முகடு தொடுஞ் செழுமணிக்கோ புரமிலங்கும் ஈசனுறை திருவால வாயிதுவே யெனக்காட்ட" (**திருவால.** 57 : 25.) வாலவாய் என்பது மதுரைத்தலத்தின் திருநாமங்களுள் ஒன்று; இது சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலின் பெயராகவும் வழங்கும். வாட்போக்கி யென்பது ஆட்போக்கி யென்றும், விடைக்கழி யென்பது இடைக்கழியென்றும் மருவிவழங்குவதுபோல வால வாய் என்பது ஆலவாய் என்று வழங்கலாயிற்றென்று தெரிகிறது; "வால வாய்வதிந்த மதிமுடித்தனிமுதல்" (**கல்.** 48.) (௧௬)

172. ஞாயில்கொண்ட மதிற்புறம்பர
சமயகோளரி [1]நண்ணியே
கோயில்கொண்ட மடத்தைவெங்கனல்
கொண்டுகுண்டர் கொளுத்தவே.

**இவ்விரண்டும் ஒரு தொடர்.**

**எ - து** பிள்ளையார் மதுரையினுள்ளுப்புகாதே தூரத்தே திருவால வாய்ச்சொக்கனார் கோயில்கண்டு நமக்கரித்துவந்தணைவதற்கு முன்னே பிள்ளையாரெழுந்தருளுவரென மதிற்புறம்பாகக் கோயிலாகமடஞ்செய்தார். அம்மடத்தில் பிள்ளையார்சென்றுவிட்டருளினபின் திருமடத்தின் திருவாச லிலே அமணர் நெருப்பிட்டுக் கொளுத்தினார் எ - று.

ஞாயில் - அட்டாலை; இங்கே பரசமயகோளரி எழுந்தருளியதற்குக் காரணம் அட்டாலைச்சேவகரை நினைத்து. அம்மடத்தருகாக **வாது செய் வாரண**மென்பதோரூராயிற்று; அஃது இக்காலத்துமுள்ளது.

(**வி - கு.**) மூ. பரசமயகோளரி: "விரவும் **பரமத கோளரியே**", "தாள ரிக்கு மரியா னருள்பெற்ற **பரசமய கோளரிக்கும்**" (**ஆளுடைய பிள்ளை. திருவந். 4, 54**), "பரமகுரு நாதன்மிகு **பரசமய கோளரியே**", "பண்டித ரின்பன் **பரசமய கோளரியே**" (**ஆளுடைய பிள்ளை. திருக்கலம். 24, 37**), "பார்குலவு தனிக்காளஞ் சின்ன மெல்லாம் **பரசமய கோளரிவந்** தானென்றூத" (**பெரிய. திருஞான. 904**), "**பரசமய கோளரியைப்** பாலரு வாயனை," (**காஞ்சிப். கடவுள்.**) **உரை.** அட்டாலைச் சேவகர். சிவபக்திச் செல்வம்வாய்ந்த பாண்டிய னொருவனைக் கொல்லக்கருதிய சமணர் யாகத்தில் தோற்றுவித்தனுப்பிய யானையை அவன்வேண்டுகோளின்படி ஸ்ரீசோமசுந்தரக்கடவுள் வேட்டுவ வீரராய்ச்சென்று மதுரையின்கீழ்பாலுள்ள மதிலின்மேற் கட்டுவிக்கப் பெற்றிருந்த அட்டாலைமண்டபத்தில் நின்றருளி எய்து வீழ்த்தி அடியார் வேண்டுகோளின்படி அம்மண்டபத்திலேயே அந்த வேட்டுவக் கோலத் தோடு **அட்டாலைச் சேவக**ரென்னும் திருநாமங்கொண்டு எழுந்தருளியிருந்தன ரென்பதும் பிற்காலத்துப் பாண்டியபரம்பரையினர்களும் பிறரும் அவ்வப்போது தத்தமக்குப் பகைவராலும் பிறராலும் நேரும் இடையூறு களை அம்மூர்த்தியை வழிபட்டுப்போக்கிக்கொண்டு வாழ்ந்தார்களென்பதும் பண்டைய வரலாறுகள். இவை **திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண** முதலியவற்றால் அறியலாகும்; "ஊனெழு குன்றை யானை மலையென வொழிந்த குன்றை, யனமி லாவி லத்தி மலையென வெய்த கோவைத், தேனலர்த் தொடை**யட்டாலைச் சேவக**னென்ன நாமம், மாநிலத் தன்று முன்னு மன்னிட வழங்குமன்றே" (**திருவால. 26 : 28.**) வாது செய் வாரணம்: "தளம்புநெஞ் சுடைய வெண்ணு யிரஞ்சமண் டலைவ ராயோர் உளம்பரி வொடுக மூக்கண் யோசனை யகல மேற, வளம்பட **வாது செய்த வாரண** மென்னு நாமம், விளங்கிய தன்று முன்னு, மேதகு தராத லத்தே" (**திருவால. 38 : 49.**)

(**பி - ம்**) 1 'நண்ணமுன்' (கஎ)

173. திருமடத்தெரி யிட்டகுண்டர் கிடக்கவவ்வெரி தென்னனிற்
பெருமடத்தர சைச்சுடத்திரு வாய்மலர்ந்தது பிள்ளையே.

அமணர்நிற்க அரசர்மேலே நெருப்பேவினது இராசாக்கினையில்லை யோவெனநினைத்து இராசாவிற்குணர்த்த அக்கினிதேவனை ஏவினபடியென வுணர்க.

பெருமடமென்றது அஞ்ஞானம்; "மடவோர் காட்சி நாணிக் கடை யடைத்து" (138) என்பது **சிறுபாணாற்றுப்படை.** 'திருவாய்மலர்ந்தது பிள்ளை' என்பது விரவுப்பெயர்; "குடிமையாண்மை" (**தொல். கிளவி. 56**) என்பத னாற்கொள்க.

(**வி - கு.**) **உரை.** "இராசாக்கினையில்லையோவென நினைத்து" என்றது, "அரசனிங் கில்லை கொல்லோ" (**திருவிளை. மாமனுக. 21**) என்பதனை

நினைப்பிக்கின்றது; "முத்தமிழ் விரகர்மன்புரக்கு மெய்ம்முறை வழுவென மனங்கொண்டார்" (பெரிய. திருஞான. 703.)

(பி - ம்) 1 'தென்னரிற்' (௧௮)

174. பிள்ளைகொண்ட சினத்தொடக்கனல்
சென்றுதென்னர் பிரானுயிர்
கொள்ளைகொண்டுட லங்கிளர்ந்து
கொதிப்பவந்து [1]கொளுந்தவே.

**எ - து** பிள்ளையாரால் ஏவப்பட்ட அக்கினி தான் தனிச்செல்லமாட்டாது அவருடையகோபமே துணையாகச்சென்று புக்கது. (இதற்குக் காரணம், வேலையைவேல்கொண்டெறிந்தும் இந்திரன்முடிமேல் இனவளை தகர்த்தும் மேகத்தைத் தொடர்கொளுவியும் மகாபராக்கிரமங்கள்செய்தார்கள் பாண்டியர்களென வுணர்க.) இக்கனலால் அவனுடம்பு வெதும்பிற்று எ - று.

(வி - ரு.) மூ. 'சினத்தொடு அக்கனல்சென்று' என்றதும் அதனுடைய உரைநயமும் துணைவலி இன்றியமையாததென்பதைப் புலப்படுத்துகின்றன. **உரை.** வேலையைவேல்கொண்டெறிந்த வரலாறு முதலியவற்றை "வடிவேலெறிந்த வான்பகைபொறுது" (சிலப். 11 : 18) என்பது முதலியவற்றாலுணர்க. (பி - ம்) 1 'கொளுத்தவே' (௧௧)

175. யந்திரங்கள் வரைந்துகட்டி விரைந்துகுண்ட ரெடுக்குமா
மந்திரங்களின் மிக்கபோழ்ல் மாதிரங்களின் மண்டவே.

**எ - து** இராசாவை விஷசுரம்பற்றினவாறே அமணர் தாங்களறிந்தவாறு யந்திரங்களைவரைந்து குளிகைசெய்து கட்டிப் பின்னை அதிலுமிகக் கடுகி விரைந்து தங்களுடைய மகாமந்திரங்களைச்சொன்னார்; அது சொல்லவே வெதுப்புமிக்குத் திக்குத்தோறும் புறப்படப் பேரழல் மண்டிற்று எ - று. விரைய யந்திரங்கட்டினவாறே வெதுப்பு மிக்கது, அரசற்கென வுணர்க. மண்டுதல் - சுடுதல்; மேற்செல்லலுமாம். திக்குக்களில் மண்டுதலாவது அருகுநின்ற அமணர்மேலும்படுதல்.

(வி - ரு.) மூ. அமணர் யந்திரங்கள் வரைந்துகட்டியது : "கண்டவர் வருந்தேறிண்டிறல் மன்ற கடிதினிக் கருங்கொடுஞ் சுரத்தை. மண்டல மதிப்ப மாற்றுவமென்றே வரைந்தயந் திரங்கள்மந் திரங்கள், கொண்டுறப் பார்க்கு மளவினின்" (திருவால. 37 : 45.) **உரை.** பற்றினவாறே - பற்றினவுடனே; கட்டினவாறே - கட்டினவுடனே; 'கண்டவாறே', 'திருநீறிட்டவாறே' என்பர்பின்; **தக்க.** 185, 196, உரை. திக்குக்களில்.........படுதல் : "வேந்தனுக்குமெய் விதிர்ப்புற வெதுப்புறு வெம்மை, காந்து வெந்தழற் கணமென மெய்யெலாங் கவர்ந்து, போந்து மாளிகைப் புறத்துநின் றூர்களும் புலர்ந்து, தீந்து போம்படி யெழுந்தது விழுந்துடறிரங்க" (பெரிய. திருஞான. 711.) (௨0)

## வேறு

176. [1]ஆலிவெந்து மந்த்ரம்வெந்தி யந்த்ரம்வெந்த மைந்ததோர்
பீலிவெந்து பாயும்வெந்து பிண்டியேற மண்டவே.

ஆலி - குண்டிகைநீர். மந்திரம் வேகையாவது தங்களான்மாவிற் கோபாக்கினியால் மந்திரமறுகை; "எல்லாம், வெகுண்டோர்முற் றோன்று

கெடும்" (8.) இது **நான்மணிக்கடிகை.** பீலிகட்டினபீலியென்பர்; அது பொருளல்ல; பார்ப்பவரது கரமெனவுணர்க. **பிண்டியென்பது அசோக விருட்சம்.** அருகதேவரையும் நினைத்துச் சென்றது அக்கினியென வுணர்க.

(**வி - கு.**) மூ. இத்தாழிசையுடன் "பண்டைமந்திரங்கள்வெந்து படைத்த யந்திரங்கள் வெந்து, பிண்டியுந் தண்டும் பாவும் பீலியுங்குடையும்வெந்து, மண்டமுறணிப் பானங்கண்டெளிப்ப மந்திரித்தகையிற், குண்டிகைநீரு நின்று கொதித்திடக்கண்டார் குண்டர்" (**திருவால.** 37 : 63), "பீலிவெந்துய ராலி வெந்தவ சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை பீதி கொண்டிட வாது கொண்டருள்" (**திருப்.**) என்பன ஒப்புநோக்கற்பாலன.

(**பி - ம்**) 1 'ஆலிவெந்து யந்த்ரம் வெந்து மந்த்ரம் வெந்து கண்டர் கைப் பீலி வெந்து' (சக)

## வேறு

177. ஒருவரும்பொரு வாததென்ன
னிரண்டுகண்களு மொத்தபேர்
இருவரும்பெரு தஞ்சியாமினி
[1]யென்செய்வேமென வெண்ணியே.

பொருவு - ஒப்பு; 'ஒருவரும் பொருவாததென்னன்' என்றது தெய் வப் பாண்டியனாதலாலென வுணர்க. இருவராவார் பாண்டியன்குலமகா தேவியாரான மங்கையர்க்கரசியாரும் பெருநம்பிகுலோற்பவரான குலச் சிறையாண்டாரும். எண்ணுதல் - நினைத்தல்.

(**வி - கு.**) மூ. இரண்டுகண்களுமொத்தபேர் : மந்திரி அரசனுக்குக் கண்போல்வானென்பதை, "சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்" (445) என்ற **குறளும்** அதனுரையும், "கற்பலர் கொடியன் னாருந் தென்னவன் கண்போல் வாரும்" (**திருவிளை.** பாண்டியன் சுரந்தீர்த்த. 25) என்றபாடலின்கருத்தும் வலியுறுத்தும், மனைவியும், "விறன்மந் திரிமதியும்" (**தனிப்.**) என்பதற்கேற்பக் கணவ னுக்குமந்திரிபோன்றவளாதலின் அவளொடு மந்திரியையும், 'இரண்டு கண்களுமொத்தபேர்' என்றார். பேர் - ஆண்பெண் இருபாலாரையும் சுட் டும் ஒருபெயர்; "தங்கள் காரியப்பேர், ஆர்தட்டினும்" (**படிக்காசுப்புலவர் பாடல்.**); "கடனறி காரியக்கண்ணவரோடும்" (**பரி.** 19 : 22, உரை); **திருவிளை.** வாதவூரர், 7. **உரை.** தெய்வப்பாண்டியர் : பாண்டியபரம்பரையிற் சிலர் தெய்வப்பாண்டியரென்று பாராட்டப்பட்டிருத்தலும் உண்டு; "தெய் வப்பாண்டியனென்று முடிசூடி" (**திருவால.** கடவுள். 19.) பெருநம்பி குலோற்பவர் : "பெருநம்பி குலச்சிறை" (**நக்க.** 211.)

(**பி - ம்**) 1 'யென் கொலாமென' (சஉ)

178. [1]விலங்கினாரிலர் வெம்மையெம்மையு
மேன்முனிந்திடு வான்மிகக்
கலங்கினானிறை பிள்ளையாரை
யழைத்துமே விதுகாலமே.

**எ - து** பாண்டியனுற்ற **உட்டினத்தைத்தடுத்தாரிலர்; எங்களை இனி மேல் இராசா முனியினு முனிவன். இவன் மிகக்கலங்கினான்; பிள்ளை யாரை அழைப்பேமாயின் இது காலம் எ - று.**

வெம்மையென்றது வெதுப்பை. "விலங்கினரிலரென்னை" என்று பாடமோதுவாருமுளர். இறை - இராசா.

(பி - ம்) 1 'விலங்கினரிவர் தம்மை யெம்மையும்' (சஅ)

179. என்றுபோயதி காரிவைதிக
ராசசிங்க மிருந்துழிச்
சென்றுமுன்னர் விழுந்துபின்ன
ரெழுந்துதங்குறை [1]செப்புமே.

வைதிகராசசிங்கமென்றது பிள்ளையாரை.

இப்பாட்டில் அதிகாரி தனித்துப்போனானென்பதனை நினைத்து முன்னிற் பாட்டிலும் என்னையெனவேண்டுமென்பாருமுளர். அது பொருளன்று. இராசா துஞ்சின் உடன்துஞ்சவிருந்தார் நம்பிராட்டியார்; இது விஷசுரத்தின் கொடுமை மிகுதியாலெனவுணர்க. முன்னிற் பாட்டில் இது காலமென்றதனாலே அவத்தையையறிக.

இதில் அதிகாரியென்றதனால் இவரைப் போசராசா வங்கிசோற்பவர் தங்கள்வங்கிசத்தாரென்பர். அவ்வங்கிசத்தவர் மந்திரிகளாகவே இருப்பதல்லது காரியஞ்செய்யார். அவர் இக்காலத்துக் கணக்கெழுதுகின்றது முறைமையல்ல; அவர் முடிசூடப் பெறுத அத்தனையே யல்லாது இராசவிபவமெல்லாம் பெறுவரெனவும் மந்திரிகளாவதே முறையெனவுமுணர்க. பெருநம்பிப்பட்டம்பெறுதல் **சிந்தாமணியிலும் உதயணன் கதையிலு**முள்ளது. அது குமாரப்பட்டமாதலால் இராசாவும் நம்பிராட்டியும் ஏவினகருமம் செய்யக்கடவர்; அல்லாத போசராசா வங்கிசோற்பவர் மந்திரிகளாயே இராசாக்களையும் நம்பிராட்டிகளையும் சிட்சித்துத் தங்களேவல் செய்விப்பர். இஃது இவர்களுடையவாசி. இரண்டுசாதியார்க்கும் அதிகாரியென்னும் பட்டப்பெயர் பொதுவெனவுணர்க.

(வி - கு.) மூ. அதிகாரி: "எழிற்சங்கம்வைத்த, பெருந்தமிழ் மீனவன்றன் னதிகாரி பிரசமல்கு, குருந்தவிழ் சாரல் மணமேற்குடிமன்குலச் சிறையே" (**திருத்தொண்டர் திருவந்தாதி**, 26.) வைதிக ராச சிங்கம்: "வைதீகத் தனியிளஞ் சிறுமடங்கலேறு" (**திருவிளை**. பாண்டியன் சுரந்தீர்த்த. 42.)

**உரை**. தலைவன் துஞ்சினால் உடன்துஞ்சுவது கற்புடைமகளிர் இலக்கணமாதலால் இங்கே, 'இராசா துஞ்சின் உடன் துஞ்ச இருந்தார் நம்பிராட்டியார்' என்றார்; "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவர்" (**மணி**. 2 : 42 - 4); இவ்வாறு இறத்தலை **மூதானந்த**மென்பர்; **பு. வெ**. பொதுவியற்படலம், 9. போசராசாவங்கிசோற்பவர்: இங்கே குறிப்பிட்ட போசராசன் குந்திபோசனென்னும் அரசனாகஇருத்தல் கூடுமென்பர். முடிமன்னர்களிடமுள்ள அதிகாரிகளிற் சிலர் தங்கள் அரசர்களுடைய பொதுப்பெயரோடு போசனென்றபெயரையும் பெற்றிருந்தார்களென்று **சிலாசாஸனங்க**ளால் தெரிகின்றது. அவர்கள் இங்கே கூறப்படும் போசராசாவங்கிசத்தவர்போலும்; "மும்முடிச் சோழ**போசன்**" **பெருநம்பிப்பட்டம்**: "பெருநம்பிகுலச்சிறை தன்னடியார்க்கு மடியேன்" (**திருத்தொண்டத் தொகை**, 4); "அப்பதிக்கு முதல்வர் வன்றொண்டர்தாம், ஒப்பரும் பெருநம்பியென் றோதிய, செப்பருஞ்சீர்க்குலச்சிறையார்" (**பெரிய**. குலச்சிறை. 2.) "இலக்கணையீன்ற சிங்கம், சீருடைச் செம்பொற் கண்ணிச் சிறுவனைச் செம்பொன்மாரி, பேரறைந்துலக முண்ணப் பெருநம்பியாக வென்றான்" (**சீவக**. 2913), "முன்னோன் றன்னைப் பின்னரியற்றிய

பின்னோன் றன்னையும் பெருநம்பியா கென" (சிலப். பதிகம், 1-2 ; கட்டுரை ; அடியார்.) குமாரப்பட்டம் - அரசகுமாரர்களுக்குக் கொடுக்கும் பட்டம். வாசி - வேறுபாடு ; " வாசிதீரவே, காசுநல்குவீர் " (திருஞா. தே.).

(பி - ம்) 1 'செப்பியே' (சுச)

## வேறு

180. [1]கச்சைக்கிரி நேரியர் பாவைதிருக்
காவற்கிறை வாவிது காலமெனக்
கொச்சைப்பெரு மானடி தன்முடியிற்
கொண்டானதி காரி குலச்சிறையே.

கச்சையாவது யானைக்கழுத்திலிடும் மெத்தை; கிரியென்பது மலை. கச்சைக்கிரியென்பது ஆகுபெயர்; "பிறிதின் பெயராற் பிறிது பொருள் சொலின், அறிவோ ரதனை யாகுபெய ரென்ப." இஃது அவிநயம். நேரியர் - சோழர். சோழன்மகளார் - பாண்டியன்குலமகாதேவியார்; மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை" (தே. திருஞா.) என்னுந்திருப்பாட்டாலு முணர்க. அவர் திருவிற்குக் காவலானமுதலியே! இது காலமென்னப் பாண்டியனவத்தையை உணர்த்தியவாறு.

கொச்சை - சீகாழி. குலச்சிறையென்பதற்குக் குலங்காப்பவரென்பது பொருள். இனி, 'குலைச்சிறையென்பது பெயர்; குலைப்பட்டிருக்கிற சிறையென்பது அதன் பொருள்; அது மணந்தப்பாமை; இஃது எல்லார்க்கும் பெயர். இவர்க்குச் சிறப்புப்பெயர், இவர் அறிதலாலே' என்றுரைப்பாரு முளர்; நல்லதுணர்க.

(வி - கு.) மூ. கச்சைக்கிரி : " கச்சை யானை " (சிலப். 5 : 142, 26:231.) உரை. முதலி - முதல்வன்: 'எங்களுக்கு முதலிகளுளரோ' (தக்க. 301, உரை), " முன்வரு முதலி யல்லேயோ " (பெரிய. கண்ணப்ப. 117), " மூவாத பேரன் பின் மூவர் முதலிகளும், தேவாரஞ் செய்த திருப்பாட்டும் " (ஏகாம்பரநாதருலா, 78.) குலச்சிறையைக் குலபக்ஷரென்பர் உபமன்னியு விலாசமுடையார்.

(பி - ம்) 1 'கச்சைக்கரி' (சரு)

181. உவரிப்பரு முத்த நிரைத்ததிருப்
பள்ளிச்சிவி கைப்புடை யும்பர்வரக்
கவரிச்சிறு தென்ற லசைப்பமிசைக்
கொற்றக்குடை வந்து கவிப்பவுமே.

உவரி - கடல். உவரிமுத்தென்றது எட்டிடத்திலும் சிறப்புடையவிடம் கடலாகையாலெனவுணர்க. உம்பர் - தேவர்; இங்குப் பிராமணரென்பது நல்லபொருள்.

(வி - கு.) உரை. முத்து எட்டிடங்களிற் பிறக்குமென்பது, 340 - ஆம் தாழிசை யுரையாலும் அறியப்படும். எட்டிடத்திலும் சிறப்புடையது கடலென்பது, " சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை, நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யும் " (கலி. 8 : 15 - 6) என்பதற்கு 'தலைமை பொருந்திய வெள்ளிய முத்துக்கள்.........கடலிடத்தே பிறந்தன வாயினும் ......கொடுக்கும்' (ந.) என்றெழுதிய உரையாலும் அறியப்படும். (சசு)

182. மேகத்தொரு பந்த ரெடுத்துடுவாம்
வெண்முத்த [1]மொழுக்கி மினற்கொடியால்
மாகத்து நிரைத்து மழைச்சிலையால்
வழிதோரண மிட்டனன் வாசவனே.

மேகம் பந்தல்; நட்சத்திரம் முத்துமாலை; மின்னல் கொடி; இந்திர தனு மகரதோரணம். இவைசெய்தான் தேவேந்திரனெனிற் கண்டாரில்லை யென்பார்க்கு உத்தரமில்லை. இவரைத் தேவசேனைபதியென்றுகருதிச் செய்தானென்றலுமாம்; இறைவன் மெய்த்தவப் புதல்வராதலிற் செய்தா னென்றலுமாம்.

இனி, மேகம்போலும் பந்தரும் நட்சத்திரம் போலு முத்தும் மின்னல் போலும் கொடியும் இந்திரதனுப்போலு மகரதோரணமும் குலச்சிறை யாண்டார் இட்டனரென்பதும் கொள்ளலாகும். வாசவன் - இந்திரன்; மதுரையிலுள்ளா ரெல்லாரும் பத்தியால் இந்திரசமானர்; ஐசுவரியத் தாற்கொள்ளின் வாசவனென்னும் பெருமை மாறுபடும். ஆதலால வாசவ னென்பதற்குக் குலச்சிறையாண்டா ரெனப்பொருள் கொள்ளுதலே நேர்.

(வி - கு.) மூ. இத்தாழிசையுடன், "மேகம் விதானமா மின்னலெல் லாஞ் சூழ்கொடியா மேகத்துருமு முரசறைய" (ஆதியுலா, 32), "இந்திரற் குத் திருமதலை மன்ற லெண்ணி யாதவர்கோன் வளம்பதியி லெய்தி னுனென், றந்தரத்தை நீலத்தால் விதான மாக்கி யண்டமுற விடிமுரச மார்ப்ப வார்ப்ப, வந்திரட்டை வரிசிலையாற் பஞ்ச வண்ண மகரதோ ரண நாட்டி வயங்கு மின்னுன், முந்துறத்தீ பமுமெடுத்துத் தாரை முத்தான் முழுப் பொரிசுந் தினகால முகில்க ளம்மா" (வி. பா. அருச்சுனன் தீர்த்த. 51) என் பன ஒப்புநோக்கற்பாலன. உரை. இந்திரசமானர்: விருத்திராசுரனைக் கொன்ற பாவத்தைத் தீர்த்துக்கொள்ளுதற் பொருட்டு மதுரைவந்து இந்தி ரன் ஸ்ரீசோமசுந்தரக் கடவுளைப் பூசித்துப் பேறுபெற்ற வரலாறு இங்கே அறிதற்பாலது. (பி - ம்) 'மொழுக்கிய மின்கொடியால்' (சஎ)

183. சதுரா னனனுஞ் சக்ரா யுதனுஞ்
[1]சந்த்ரா தவரு மிந்த்ரா தியரும்
மதுரா புரிவா தறிவா மெனமேல்
வரவந் தனன்வை திகவா ரணமே.

எ - து பிரமா விட்டுணு சந்திராதித்தர் தேவேந்திரர் முதலாகிய சுவர்க்கவாசிகளெல்லாரும் மதுராபுரியிற்புகுந்த இவ்வாதமறிவோமென்று மேலேவர எழுந்தருளினுன், வைதிகசமய மதகசம் எ - று.

சதுரானனன் - பிரமா; சதுரம் - நான்கு; ஆனனம் - முகம்; நான் முகனென்றவாறு. இங்கு வைதிகமென்றது ஞானகண்டவேதத்தை.

இதனையும் முன்னையனபோலப் பொய்யென்றவர்க்குப் பொருள்: சதுரானனனென்றதற்கு நான்மறையாளரான பிராமணரிற் பிரதானனைக் கொள்க; அவன் கர்மமீமாங்கிசகன்; ஆதி ஈசுவரநிராகரணம் பண்ணுமவ னென வுணர்க. சக்கராயுதன் விட்டுணுசமய கர்த்தாவெனவுணர்க. சந்தி ரன் பௌத்த சமயத்தானென வுணர்க. க்ஷணபவபங்கத்தால். ஆதவன் - ஆதித்தன்; ஆதித்தன் ஆருகதசித்தாந்தியெனவுணர்க, அனந்த சோதியால். இந்திரன் - லோகாயதன்; ஆதியர் - ஸ்தவிர மதவாதசாத்திரராதியராவர். எனவே மகேசுவர வைசேஷிகரொழிந்தோர் வாது ஒத்ததால் வந்தாரென வுணர்க.

மேல்விழுந்த ஆதித்தன் கிழக்கே உதிப்பானென்பது பூர்வீகரான வானவாத சித்தாந்தமென்றுணர்க.

பொருளென்னென்னின், ஆருகதவாசிரியரெல்லாரும் பாண்டியன் பக்கலிலே இருந்தாரென்பது.

ஆசீவகசங்கசமயத்தவர்க்கு ஆதித்தியமென்பதொருநூலுண்டு. மற்றது ஆதித்தனைப்பற்றியிருக்கும்; அது சோதிசாத்திரமெனவுணர்க. அன்றியேயும் ஆதித்தனைப்போல மீண்டும் அவர் வானமண்டலவரவுடையாரெனப்படுவர்.

இந்திரன் உலோகாயதனானதற்குக்காரணம் பிருகஸ்பதிமதமாதலினென வுணர்க. இந்திரகணகாமவாமகாபடாதிசாத்திரம் உலோகாயதர் விரிப்பரெனவுணர்க.

இவர்களெல்லாரும் பிள்ளையார் நக்ஷத்திரத்தின் நிலைமையைப்பார்த்துத் தோற்பரென வந்தவர்கள்; "சிறியவன்தோல்வி பெரியவனுடன் பொருதல்; அது மதுராபுரிவாது" என்பர். இம்மண்டலங்களையெல்லாம் பிள்ளையார் வென்றமையுணர்க. இங்ஙனம் வரைந்தது, "கதைகளிலுள்ள தமணர் கழுமிசை கொள்வதிது" (170) என்னும் பாட்டைக் கடைப்பிடித்து.

இவ்வெண்ணினசமயமெல்லாம் அர்த்தவாதமல்ல; கர்மவாதம்.

ஆருகதசமயிகள் தங்களில் இருபத்துநாலு தீர்த்தத்தாரிலும் ஆதிநாதரான விருஷபதேவர் திருத்தாயார் மருதேவியார் அவதரித்ததேவரைத் திருவயிறுவாய்த்தருளினவன்று அபிஷேகத் திருமஞ்சனமாட்ட முப்பத்துமூன்று கோடி தேவர்களும் அமுதகலசம் தனித்தனி ஏந்தினார்கள். கலசமொவ்வொன்றும் ஒருகடல்கொள்வது. இப்படி முப்பத்துமுக்கோடி கடல். இவர் திருவவதாரம்பண்ணினஇன்றே சகிக்கமாட்டாரென்று தேவர்கள் நினைப்ப அன்று திருவவதாரம் பண்ணினபிள்ளை இத்தேவர்கள் நினைத்தவெல்லாமுணர்ந்து திருமூக்கில் மச்சியசுவாசத்தை விட்டருளத் தேவர்களனைவரும் முப்பத்துமூன்றுகோடி கலசங்களோடு பறந்துபோயினரென்னுங் கதை பொய்யோ மெய்யோவென நினைக.

இனிப் புத்ததேவரில், சினேந்திரபுத்தர் சுவர்க்கத்துக்கு எழுந்தருளுகிறபொழுது சுவர்க்கத்துத் தெருவழுருசெய்கிறவிடத்துக்கருகு குழிநீர் வற்றாதிருப்பத் ததாகதபுத்தராவதற்குமுன்பு தமது திருமேனியைவிட்டு அக்குழி தூர்த்தாரென்பது ஆகமத்தாற் காட்டுவதல்லது அனுமானமுமாம். அந்தத் ததாகதபுத்தர் ஸ்ரீ வாரணசியிலே தர்மம் அருளிச்செய்கிறார்: இனிப் பிறக்கக்கடவ மயித்திரியாழ்வாரான புத்ததேவர்க்குப் பாதாளத்திலே மாணிக்கத்தால் அடித்துக்கிடப்பதொரு கோயிலுண்டு; அக்கோயில் மாணிக்கரத்தினமாளிகை. ஐஞ்ஞூறுயோசனை நீளமும் ஐஞ்ஞூறுயோசனை அகலமுமுள்ளதொன்றென்று தம்முடைய ஸ்ரீ பாதத்திலொன்றாலே பெருவிரலுமணிவிரலுங்கொண்டு எடுத்துக்காட்டியருளி மீட்டும் காலாலே அழுத்தியருளினாரென்று ஒருகதையுண்டு. இதுபோல்வன பிறவுமுள; இவை பொய்யோ மெய்யோ?

அவ்வளவில் இராசா அவத்தைகண்டு அமணர் செய்கிற மந்திரவாதம் இவ்வண்ணமாயிற்று.

(வி - ரு.) மூ. பிரமா முதலியோர் வருதல்: "முதிருமா மறைமுழங்க முத்தமிழ் வாணர் போற்றக், கதிர்விடு முத்தக் கொற்றச் சிவிகைமேற் கவிகை துன்றப், புதியசாமரையிரட்டப் பொருவரும் வாது காண்பான்,

றுதிசெய்து வந்த வானோர் சூழ்ந்தலர் மாரிபெய்ய" (திருவால. 37 : 21.) **வைதிகவாரணம்** : "மன்னுமறை யோர் குலத்து **வைதிகவா ரண**மென்றோர், கன்னன் மொழிப் பாலகனார் கௌணியகோத் திரத்துதித்தார்", "மற்ற வன்றனை **வைதிக வாரணம்**......செப்பினார்" (திருவால. 37 : 2; 62 : 24); "புகலியினில் **வைதிகவா ரண**மென் றியாரும் போற்றியசம் பந்தரென்றோர் புதல்வர் தோன்றி" (கடம்பவனப். இலீலாசங்கிரக. 37.) **உரை. சுவர்க்க** மென்பது மேலுலகங்களெல்லாவற்றிற்கும் பொதுப் பெயர். **க்ஷணபவ பங்கம்** - கணத்திற்றோன்றியழிதல். **சோதி சாத்திரம்**-சோதிட சாத்திரம். **இம்மண்டலங்களையெல்லாம்** - இந்தச் சமய ஆசிரியர்களுடைய தொகுதிக ளெல்லாவற்றையும். **தீர்த்தத்தார்**-தீர்த்தங்கரர்; இருபத்து நான்கு தீர்த்தங்க ரர்களுடைய பெயர்களையும், 375-ஆம் தாழிசை உரையிற் காணலாகும். **ஸ்ரீ வாரணசி** - காசி. **ஆதிநாதர்** : முதல் தீர்த்தங்கரர்; **ஸ்ரீபுராணத்தைப்** பார்த்ததில் இங்கே கூறப்படும் சரித்திரம் 24 - ஆம் தீர்த்தங்கரராகிய ஸ்ரீவர்த்தமானருடைய சரித்திரமாகக் காணப்படுகிறது. **திருமூக்கில்** மச்சிய சுவாசத்தை விட்டருள என்ற இடத்தில் நாசிகாபுடத்தெழுந்த க்ஷீரதபவன ஜலத்தால் என **ஸ்ரீ புராணம்** கூறும்.

(பி - ம்) 1 'சந்த்ராதியரு மிந்த்ராதிபரும்' (சஅ)

## வேறு

184. ஆலியுங்கடி திற்புலர்ந்து கலந்துகுண்டர் துடைக்குமப்
பீலியுஞ்சுறு நாறியேறி யெரிந்துபோன பிரம்புமே.

இதன் பொருளறிக.

(வி - ரு.) மூ. இதன் சொல்லும்பொருளும், தக்க. 176-ஆம் தாழிசை யோடு ஒப்பு நோக்கற்பாலன. **சுறுநாறல்** - தீப்படுகின்ற தசை மயிர் முத லியவற்றிலிருந்து உண்டாகும் கெட்ட நாற்றம்; "கூறுமங்கையர் நறுங் கூந்தலின் சுறு, நாறுகின்றது நுகர்ந்திருத்து நாமெலாம்" (கம்ப. யுத்த. மந்திர. 13); பொய்யர்கள் பார்க்கும் பீலிச்சுறு நாறிப் புகைந்து முன் னிற்கை யறவெந்தது" (திருவால. 37 : 67); "வெம்பரற் **சுறுநாறும்** வியன் சுரத்தே" (ஆளுடையபிள்ளை. திருவந். 25), "பிணங்கருகிச் **சுறுநாறு** முடையி னுலும்" (அரிச்சந்திர. மயான. 35.) (சக)

## வேறு

185. பொறைசூழ்வரை யிற்புலி யேறெழுதும்
பொன்மேரு வரைப்பெரு மான்மகளார்
மறைசூழ்திரு வெள்ளி [1]மலைப்பெருமான்
மகனாரடி வந்து வணங்கியுமே.

**எ - து** பொறைசூழ்ந்த மலைதோறும் புலியெழுதுஞ் சோழன் பொன் னை மகாமேருமலையினையுடையவன்; அவன் மகளாரான மங்கையர்க் கரசியார் வேதங்கள் சூழப்பட்ட திருவெள்ளிமலைப் பெருமானை மகாதேவ ருடைய திருமகனைக் கண்டவாறே அவர் திருவடிமலர்களில் நமக்கரித்து எ - று.

பொன்மலை இவனதாதற்குக்காரணம் மகாமேருவின் அடிமுதல் முடி கடை சோழர்களாலெழுதப்பட்ட புலிப்பொறியே யாதலாலும் கரிகாலன்

கைச்செண்டால்' திரித்தானென்னுங் கதையுண்டாதலாலும். இனி அம் மலையில் இடமில்லையென்றுகொண்டு பிறமலைகளிற் புலியேறெழுதப்பட்ட தென உணர்க. பொன்மலையுடையவன்மகள் வெள்ளிமலையுடையவன் மகனைக் கும்பிடுதற்குக்காரணம் வேதவேள்வி தப்பாமையும், "அறி வுடையா ரெல்லா முடைய ரறிவிலார், என்னுடைய ரேனுமிலர்" (குறள், 430) என்பதுமே ; இதனையுணர்க.

(வி - கு.) மூ. பொறை சூழ் வரையிற் புலியேறெழுதும்.........பெரு மான் : தக்க. 4 ; "வடமேருப், பொன்மலை மார்பும் புலிபொறித்தோன்", "மேரு வரையிற் புலிபொறித்து மீண்டநாள்" (இராசராச. 17, 76.)

உரை. கண்டவாறே - கண்டவுடன் ; தக்க. 175, உரையைப் பார்க்க.

கரிகாலன் கதை : "செண்டு கொண்டுகரி காலனொரு காலிலிமயச் சிமய மால்வரை திரித்தருளி மீளவதனைப், பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற் பாய்ப்பு லிப்பொறி குறித்தது மறித்தபொழுதே" (கலிங்க. இராச. 1); "கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல், மெச்சி யினி திருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு, கம்பக் களிற்றுக் கரிகாற் பெரு வளத்தான், செம்பொற் கிரிதிரித்த செண்டு" (சிலப். 5 : 95 - 8, அடியார். மேற்.)

(பி - ம்) 1 * 'மலைப்பெருமாண் மகனார்' (௫0)

186. [1]மன்காதலி லுய்வதிவ் வையமெலா
[2]மலையாண்முலை யாரமு துண்டவனே
என்காதல னெம்பெரு மானிவனுக்
கிதுவோதக வென்றன ளென்றலுமே.

'உன்காதலின்' எனப்பாடஞ் சொல்லுவாருமுளர். அது தமிழல்ல. மன்காதலிலுய்வதிவ்வையமெலாமென்பது உத்தமம் ; மன்னேயென்னும் விளி தொக்கது. என்று விண்ணப்பஞ்செய்யப் பெண்பெருமாளுக்குப் பிள்ளையாரருளிச் செய்வார்.

(வி - கு.) உரை. பெண்பெருமாளென்றது மங்கையர்க்கரசியாரை ; இப்பெயர் பெருமையை யுடையவளென்ற பொருளிலும் வழங்குவதுண்டு ; "நஞ்சிலே தோய்ந்த நயனவிழிப் பெண்பெருமாள், நெஞ்சிலே யிட்ட நெருப்பு" (அம்பிகாபதி பாடல்.)

(பி - ம்) 1 'உன்காதலில்' 2 'முலையாண்முலை' (௫௧)

187. மாமான்மர பிற்பகன் மண்டிலமொத்
தெரிமண்டின னென்னு மகீபதிநின்
கோமான்மர பிற்சசி மண்டிலநேர்
குளிரும்படி காணுதி கோமளமே.

எ - று கேளாய் பாண்டியகுலமகாதேவி, தன்மாமனை சோழவங்கிசத் துக்கு முதல்வனை ஆதித்தனையொத்த உட்டினம்படைத்தானையினும், நின் னுடையசுவாமியான பாண்டியன், தன் வங்கிசத்துக்கு முதல்வனை சந்திர னைப்போலச் சைத்தியமாம்படி காணக்கடவை எ - று.

இதிற் காணுதியென்றது காண்டியென்றவாறு. மகீ - பூமி.

(வி - கு.) மூ. மாமான்மரபிற் பகன்மண்டிலம் : "பகலோன் மரபிற் பெறுபைந் தொடியே", "தவனன் குலவல்லி" (தக்க. 204, 207) என்பூர் பாண்டிமாதேவியாரை. மாமான் : "மாமான் மகளே" (திவ். திருப்பாவை, 9), "மாமான் சூட்டொடு கண்ணரி யன்றே" (சீவக. 484), "தேர் வேந்தர் மாமான்" (பெருந். பாரதம். உத்தியோக.) உரை. சுவாமி - கணவன். சைத்தியம் - குளிர்ச்சி. (ருஉ)

188. (1) என்னக்களி கூரு [1]மிளங்கொடியோ
டெதிர்கொண்டு புகுந்து குலச்சிறையார்
தென்னற்கரு கேயொரு பீடிகையிட்
டினிதேறி யிருந்தருள் செய்கெனவே.

189. (2) ஏறிச்செழி யற்கரு கிட்டதிருப்
பள்ளித்தவி சின்க ணிருந்தருளச்
சீறிச்சமண் மூகர் குலச்சிறையார்
செவிவேவன சிற்சில செப்புவரே.

எ - து இராசபுத்திரியே, நின்சுவாமியை வெதுப்புத்தீர்க்கின்றோமென்றருளிச்செய்ய, சம்பிரமித்த மங்கையர்க்கரசியாருடனே குலச்சிறையாண்டாரும் பிள்ளையாரை எதிர்கொண்டு எழுந்தருளுவித்துக்கொண்டு வந்து பாண்டியற்கு அருகாகத் திருப்பள்ளிப்பீடமொன்று இட்டு 'இதில் ஏறியிருந்தருள்க' என்று பிள்ளையாரைவேண்ட, அமணர்கள் கோபித்துக் குலச்சிறையாண்டார் திருச்செவி வேவப் பருஷவாக்கியங்கள் சொல்வார்கள் எ - று.

(2) சமண்மூக ரென்றது, சமணரான ஊமர்களென்றவாறு; "எய்கணை விழுந்துளை யன்றே செவித்துளை, மையறு கேள்வி கேளா தோர்க்கே." இஃது இரும்பல்காஞ்சி. எனவே அமணர்கேள்வி சகத்துக்குச் சிருஷ்டிகர்த்தா ஒருவனில்லையென்னுங் கேள்வியென்றது. குலச்சிறையார் செவிகள் வேவனவாவன சிவத்துரோக வார்த்தைகள். சிற்சிலவென்பது, "தொடர விறுதி தம்முற் றும்வரின், லஃகான் றகரவொற் றாதலு முரித்தே" (உயிர்மயங்கு. 12) என்பதனால் முடிந்தது; இது தொல்காப்பியம்.

(வி - கு.) மூ. (உ) சமண்மூகர் : 7, குறிப். "வெற்றரையே மூங்கைகள் போலுண்ணுமூடர்" (தே.) உரை. (1) சம்பிரமித்த - திருப்தியுற்ற. பருஷவாக்கியம் - கொடுஞ் சொல்.

(2) ஊமர்கள் பிறவிச்செவிடர்களென்பது இங்கே அறிதற்பாலது. எய்கணை......கேளா தோர்க்கே : "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப் படாத செவி" (குறள். 418.)

(பி - ம்.) 1 'மிளங்கிளியோடு' (ருக-ச)

இனி, அவர்வைத வசவுகள் வருமாறு.

190. வருவாளொரு சோழிய வைதிகனும்
[1]வந்தாலிவன் மாளிகை [2]வாயிறனில்
வெருவாது புகுந்து தொடப்பெறுமோ
[3]மீளச்செழி யன்றிரு மேனியையே.

இதிற் சோழியவைதிகனென்றது பாண்டிநாட்டாரைப் பகைத்த நாட்டினனென்றும் யாகம்பண்ணுறுபவனென்றும் கூறியவாறு.

அமணர் - தாங்கள் பெரியராதலிற் சமயப்பொருள் பற்றியல்லது கோபியாரெனவுணர்க. மீளவென்றது மாளிகைவாயிலிலே புகுமிதனுலேயே தோஷம்போதும். இதுவன்றிப் பாண்டியனைத் தீண்டுவதேயென்றவாறு.

(வி - கு.) மூ. சோழியவைதிகனும் : ஆம் - இழிவைக்காட்டும் ஓரிடைச்சொல் ; "விடுவித்தன னுமிவன் வேதியனே" (தக்க. 197), "கைத்தோடுஞ் சிறை கற்போயை, வைத்தோ னின்னுயிர் வாழ்வானும், பொய்த்தோர்வில்லிகள் போவாராம், இத்தோ டொப்பதி யாதுண்டே" (கம்ப. சூளாமணிப். 41), "ஒருவனும்......தனதனுமாம்", "அடுப்பனும்...ராசனும்" (வி. பா. மணிமான், 80, 81), "அன்னையானவருமிருவராம்......என்கொலாம்" (வி. பா. கண்ணன்தூது. 124.) சோழியவைதிகன் : "மறைஞானி யென்பானோர் சோழியவை திகச்சிறுவன்" (திருவால. 37 : 35.)

(பி - ம்) 1 'வந்தானிவன்' 2 'வாயிலிலே' 3 'மீளிச்' (௫௫)

191. தண்ணார்மதி யக்கவி கைச்செழியன்
[1]றனிமந்திரி காண்முனி புங்கவரோ
ரெண்ணாயிர வர்க்கும் விடாதவெதுப்
பிவனால்விடு மென்ப திழித்தகவே.

தண்மை - தட்பம். ஆர்தல் - நிறைதல். மதியம் - சந்திரன். கவிகை - குடை. தனிமந்திரிகாளென்றது தனித்தனிமந்திரிகாளென்று விளித்தவாறு. முனிபுங்கவரென்றது அமணர்களில் ரிஷிகளாயினரிவரென்றவாறு ; இவனென்றது ரிஷிபோல்வானிவனென்றவாறு. இழித்தகவு - இளிவரவு.

(வி - கு.) மூ. முனிபுங்கவரோரெண்ணாயிரவர் : "எண்ணாயிர மூகரும்", "எண்ணா யிரவர்க் கெளியரோ" (தக்க. 204, 219), "நாமொருவரவ ரெண்ணா யிரவர்", "செற்றமில் சமண ரெண்ணா யிரவர்", "ஏற்றருந் தலைவ ரெண்ணா யிரவர்", "தருக்கமார் சமணர்......எண்ணாயிரர்", "கோளுறு சமண ரெண்ணா யிரவரும்", "தளம்புநெஞ் சுடைய வெண்ணா யிரஞ்சமண் டலைவ ராயோர்" (திருவால. 38 : 3, 9, 18, 21; 32, 49.) (பி - ம்) 1* 'றனி மந்திரி கேள்' (௫௬)

192. என்றூரவ ரென்றலு மேகெடுவீர்
எரியாலர வாலிடி யான்முடியச்
சென்றூர்பவ மேழினு மிப்படியே
செல்வாரிவர் முன்பு செயிர்த்தவரே.

எ - து என்று அமணர்கள் இப்படிச்சொன்னார்கள் ; என்றபோதே குலச்சிறையாண்டார் அருளிச் செய்வார் : கெடுவீர், அமணீர்காள், கேளீர் ; நெருப்பாலும் பாம்பாலும் இடியுருமேற்றினாலும் பட்டுப்போய் மீண்டும் பிறந்து இப்படி ஏழுபிறப்பும் பாவாத்துமாக்களாய் மரிப்பர் மாகேசுவரர் முன்பு கோபித்தவர் எ - று.

இது சிவதர்மம். அரவாலெனவே புலி கரடிகள் முதலாயினவும் கொள்க. இவரென்றது மாகேசுவரர் கோயியாமையை விளக்கி நின்றது.

இன்னும் குலச்சிறையாண்டாரருளிச்செய்வார். (ருஎ)

193. நாணீரறி யீருறி வல்லமணீர்
மதுரேசனை யெங்குல நாயகனைக்
காணீரிவர் தந்திரு நீறிடவே
முகிலூர்தி பெறுத கவின்பெறவே.

நாணீரென்றது மிருகசாதியோடொப்பீரென்றவாறு. அறியீரென்றது ஒன்றுமறியீரென்றவாறு; பாவாத்துமாவான உணர்வத்தனையேயென்று மாம். உறிவல்லமணீரென்றது குண்டிகைக்குக் கயிற்றுறிபண்ணவல்லீ ரென்றவாறு; இதுபண்ணவா சங்கத்திலும் புக்கீரெனலுமாம். மதுரே சனையென்றது மதுரா ஈசனெனக; ருணமுடிவு; தமிழ்க்கு ஒருசொல். காணீரென்றது இனிச் சற்றுப்போதிற் பாரீரென்றவாறு.

இவரென்றது ஆளுடைய பிள்ளையாரை. முகிலூர்தி - வருண ராசன்.

பின்னைப் பிள்ளையாரைநோக்கிக் குலச்சிறையாண்டார் விண்ணப்பஞ் செய்வார்.

(வி - கு.) மூ. நாணீர்: "நாணிலீர் மன்னன் முன்னு நல்லசொல்கின் றேன்" (திருவால. 38 : 32.) உறிவல்லமணீர்: "உறித்தலைச் சுரையொடு குண்டிகைபிடித்து" (திருஞா. தே.) (ருஅ)

194. [1]ஏயேயிம வான்மக ளார்மகனே
எந்தாய்சிந்தா குலவேரரியும்
சேயேவர சைவ சிகாமணியே
திருநீறினி யிட்டருள் செய்கெனவே.

ஏயேயிமவான்மகளார் - இசையை யொக்கும் உமாபரமேசுவரி; இன் னும் இசையைப் பொருந்தும் பரமேசுவரியென்றுமாம், இசை மகாதேவ ராதலால். சிந்தாகுலம் - துக்கம்; சிந்தா ஆகுலம்; சிந்தாவென்பதுசிந்தை. சேயேயென்பது தூரியா வென்றவாறு; இங்கே தேவசேனாபதி பெயரல்ல. வரசைவமென்றது சுத்தசைவ மென்றவாறு; வரசைவந்தான் ஆறுகூறு படும். இனித் திருநீறிட்டருள் செய்கவென்றது பாண்டியன் குலபதிக்கு அவத்தை மிக்கதென்றவாறு.

(வி - கு.) மூ. சைவசிகாமணி: "இன்னருள்சேர் சைவசிகாமணியே" (திருவால. 38 : 2); "மொழிவது சைவ சிகாமணி மூரித்தடவரைத்தோள்" (ஆளுடைய பிள்ளை. திருவந். 11), "கண்ட சைவசிகாமணி" (திருச்சண்பை. 9) "சைவ சிகாமணி சம்பந்தன்" (ஆளுடைய பிள்ளை, மும்மணி. 13), "மாமறை நாவளர் சைவசிகாமணி" (ஆளுடைய பிள்ளை. திருக்கலம். 15.) உரை. ஏயென்ப தற்குச் சாமவேதமெனப் பொருள்கூறுவர் பரிமேலழகர்; பரி. 3 : 62, உரை. இசை மகாதேவர்: "ஏழிசையா யிசைப்பயனாய்", "ஏழிசையை" (திருநா. தே.) சேயேயென்பதற்கு எழுதிய தூரியாவென்னும் பொருளுடன், "புறத்தார்க்குச் சேயோன்" (திருவா. சிவபு.), "தீதில்வர வாகதிரு நின்வரவு

சேயோய் " (கம்ப. சூர்ப்பநகை. 38) என்பவற்றிலுள்ள சேயோன் சேயோ யென்பவற்றின் பொருள்கள் ஒப்பிடற்பாலன.

(பி - ம்) 1 ' யாயே யிமவான் ' (ருகூ)

195. எப்புத்தரொ டெவ்வம ணுங்களைவார்
திருநீறிவ னெற்றியி [1]லிட்டலுமே
வெப்புத்தடை பட்டது பட்டளவே
வேவாத வுடம்புடை மீனவனே.

எப்புத்தரோடென்றது தீபங்கரர் கௌதமர் முதலாயினரெல்லாரையு மென்க. எவ்வமணுமென்றது ஆதிதேவரானரிஷபதேவர் நேமிநாதர் பார்சுவ நாதர் முதலாயினரெனவுணர்க. இவர்களைக்களைவார் மாகேசுவர்களி லொருவரான ஆளுடையபிள்ளையாரெனவுணர்க.

(வி - கு.) உரை. தீபங்கரர் : கௌதமபுத்தருடைய காலத்திற்குமுன்பு அவதரித்தவர்களுள் ஒருவர் ; மணி. 30 : 14, அடிக்.

(பி - ம்) 1 * ' லிட்டளவே ' (சுo)

இனிப்பாண்டியன்றான் செய்தபடி.

196. [1]உய்யாவுண ராவிழி யாவருகே
சரியாவொரு கேசரி யாசனமேல்
வையாவதி காரிக ளும்பெருமாண்
மகளாரும் வணங்க வணங்கினனே.

எ - து ஆளுடைய பிள்ளையார் திருக்கையில் திருநீறிட்டவாறே வெதுப்பும்அவத்தையும் ஒக்கவிட்டுப்போகப் பிராணன்வந்து இந்திரியங்க ளுடனே கலந்தபின்னைக் கண்ணால் விழித்துப்பார்த்து ஒரு பீடத்திலே எழுந்தருளியிருந்த பிள்ளையாரைக்கண்டு பயப்பட்டுத் தானிழிந்து ஓரருகே சரிந்து தன்னுடைய சிங்காதனத்தின்மேலே பிள்ளையாரை யெடுத்தேற வைத்துப் பின்னைத்தன் அதிகாரிகளான குலச்சிறையாண்டாரும் தன்குல மகாதேவியாரும் நமக்கரிக்கத் தானும் நமக்கரித்தான் எ - று.

பெருமாளென்றது சோழனை, ஸ்ரீராமன்வங்கிசமாதலால். பாண்டியன் பண்டுகிடந்தது வியாதிமிகுதியாற் பள்ளிக்கட்டிலிலெனவுணர்க ; அதற்குக் காரணம் ஒருகேசரியாசனமென்றது ; கேசரி - சிங்கம். மந்திரியாரும் தேவி யாரும் இவரையே கும்பிடுதற்குச் சமிஞ்ஞை அறிவித்தாரெனவுணர்க. அருகே சரிந்தென்பது பதற்றம்.

(வி - கு.) உரை. திருநீறிட்டவாறே - திருநீறிட்டவுடனே ; தக்க. 175, உரையைப் பார்க்க. பெருமாளென்றது......ஸ்ரீ ராமன் வங்கிசமாதலால் : " ரகுமரபிற் பொன் " (தக்க. 211) என்பதற்கு, ' ராகவ வங்கிசத்திற் பொன் ' என்று உரையெழுதியிருப்பதும் இங்கே உணரற்பாலது. பெரு மாள் : சோழர்களுடைய இயற்பெயர்களோடும் சிறப்புப் பெயர்களோடும் இச்சொல்லைச் சேர்த்து வழங்குவதும், தனியே வழங்குவதும் மரபென்ப தைச் சிலாசாஸனங்களாலும் பழைய தமிழ்நூல்களாலும் அறியலாம் ; "தெய் வப் பெருமாளை வாழ்த்தினவே ", " பெரிய பெருமாளை வாழ்த்தினவே " (தக்க. 772, 773); " உலகிற் பெரிய பெருமாள் ", " வளவர் பெருமாள் ",

" பெருமாள் பவனி யெழுச்சி ", " திருவுலாப் போதும் பெருமாள் ", " பெருமாளுங் கொற்றக் குடைக்கீழ்......யானைமேல் வந்தான் ", " ஞாலத்தோர் தெய்வப் பெருமாளும் " (குலோத். உலா); " பெரும் பெருமாள் ", " யானைப் பெருமா ளயிரா பதத்திருந்த, தானைப் பெருமானைச் சந்தித்தாள் ", "பெருமாள் விரும்பேர் புதுக்கன்னி", " தெய்வப் பெருமாளும் ", " பேரேற்ற தெய்வப் பெருமாளும் " (இராசராச.)

(பி-ம்.) 1 ' உய்யாவுணரா வருகேசரி யாவொரு கேசரியாசன மீமிசைச் சேவையா ' (௬௧)

இனிஅமணர்கள் சொல்லுவார்.

197. சுடுகின்ற மருங்கிரு பாலுமிருந்
தனைவேமும் விடாது தொடத்தொடவே
விடுகின்ற [1]வெதுப்பை வெறும்பொடியால்
விடுவித்தன ருமிவன் வேதியனே.

இதன்பொருளுணர்க.

(பி - ம்) 1 ' வெதுப்பை யிவன் பொடியால் ' (௬௨)

198. யாம்யாது மிதற்கு முயன்றிலமோ
வெம்மந்த்ரமும் யந்த்ரமு மில்லைகொலோ
கோமானிவ னைப்பணி கின்றதெனீ
றணிகின்றதெ னென்று கொதித்தெழவே.

முன்னிற்பாட்டில் வெறும்பொடியென்றதுபோல இப்பாட்டிலும் திருநீறென்னுமல் நீறென்றார் அமணர். கொதித்தெழுதல் - கோபித்துப் புடையெழுதல்.

இனிப் பாண்டியன் சொல்வான். (௬௩)

199. கெடுவீர் கெடுவீ ரிவைசொல் லுவதே
[1]கெட்டே னடிகள் ளிவர்கே வலரோ
விடுவீர் விடுவீ ரினியென் னெதிர்நீர்
வெங்கோ பமுமுங்கள் விவா தமுமே.

அடிகளிவரென்றது மகாதேவருறவாகிய இவரென்றவாறு. கேவலம் - எளிமை.

(வி - கு.) மூ. கெட்டேனடிகள் : " கெட்டேனடிகேள் " (தக்க. 207); கெட்டேன் : இரக்கக்குறிப்பு. உரை. அடிகள் இவரென்பதற்கு, ' மகாதேவர் உறவாகிய இவர் ' என்று உரையெழுதியது போலவே பின்னும், " அடிகேள் " (தக்க. 207) என்பதற்கு, ' சுவாமி உறவாயிருப்பீர் ' என் றெழுதுவர். (பி - ம்) 1 ' கெட்டேனடிகேள் ' (௬௪)

200. நீர்வந்து தொடத்தொட வெந்துருகா
[1]நெடுவேனில் சுடச்சுட நின்றுலறிக்
கார்வந்து தொடத்தொட வுய்ந்திளகுங்
காடொத்தனனென் யானிவர் கைப்படவே.

எ - து நீங்கள் தொடத்தொடக் கோடைக்காலத்துக் காடுபட்டது பட்டு வெந்துருகினேன்; இவர் தொடத்தொட அக்காட்டைக் கார்காலத்தில் மகா வருஷம் வருஷித்துத் தளிருந்தழையுமாக்கினாற்போலக் குளிர்ந்திளகினேன் யானெ ன் எ - று.

வேனில் - கோடை.

(வி - கு.) மு. இளகுங்காடு: "இளகு காடின கப்பரி கொண்டதே" (சீவக. 1778), "இளகு காடகிற் சந்தனப் பொதும்பர்" (தணிகை. நாடு. 39.) கார்வந்து......ஒத்தனன்: "நீரற்ற புலமேபோற் புல்லென்றாள் வைகறை, கார்பெற்ற புலமே போற் கவின்பெறும்" (கலி. 38 : 11 - 2), "வெயில் பொர வாட்ட முற்ற வென்றளிர்ப் பசிய வல்லி, புயல்பொழி துவலை மாந் திப் பொங்கெழில் படைக்கு மாபோல்" (பாகவதம், உருக்குமணிமணத் திறம் 28), "காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக் கவினி" (வி. பா. 12 - ஆம்போர். 82.) (பி - ம்) 1 'முதுவேனில்' (கூ௫)

இனி அமணர் சொல்லுவார்.

201\. ஒருநீயொரு மாணி யிடும்பொடியா
லுய்ந்தேனுயி ரென்ப துரைத்தனையேல்
வருநீரினு மிட்டு நெருப்பினுமிட்
டறிவோமிரு மந்த்ரமும் யந்த்ரமுமே.

மாணியென்றது இப்பொழுது ஓதுகின்றவனென்றவாறு; பிராமணச் சிறுபிள்ளைக்குப்பெயர். திருநீற்றைப் பொடியென்றது பிள்ளையார் திருநீறிடுகின்றபோது வேதமந்திரம் பிராமணரல்லாதார்க்கு ஆகாதென்று மனத்திலே உச்சரித்துவைத்தலால்; அமணரில் அச்சாதி மிக்கிருத்தலால் அச்சிவமூலமந்திரங்களான வேதமந்திரம் கேட்டிலரென வுணர்க. வருநீரெனவே ஏடெதிரோட மந்திரமெழுதுகவென்றாரென வுணர்க.

(வி - கு.) உரை. மாணி: "மறையோன்பின் மாணியாய்வான்பொருட் கேள்வித் துறைபோய்" (சிலப். 9 : 29 - 30.) (கூ௬)

202\. எரியாதன தீயி லிடிற்கொடுபோ
யெறிவைகையி [1]லேயிடில் வைகையுடன்
சரியாதன வேடுடை யார்தவமே
தவமாவது மேலிது சாதனமே.

எ - து நெருப்பிலிட்டால் எரியாதனவும் வைகையாற்றிலிட்டால் வைகையாறு போனவழிபோகாதே எதிரோடிவந்து நீரினதுசத்தியைக் கெடுக்கவல்லனவுமாகிய மந்திரமெழுதின ஓலையேட்டையுடையவரே வென்றார் எ - று. உடன்சரித்தல் - ஒக்கவொழுகுதல்.

(வி - கு.) மு. சாதனம் - செய்யுமுறை. (பி - ம்) 1 'லேடிடில்' (கூ௭)

இன்னும் அமணர் சொல்லுவார்.

203\. வேமேடுடை யாரையும் வைகையிலே
விட்டாலதன் மீது மிதந்தொழுகிப்
போமேடுடை யாரையு நீகழுவிற்
புகுவிப்பது தெக்கண பூபதியே.

தெக்கணம் - தெற்கு. பூபதி - இராசா. இதற்குப்பொருள் தர்மராசா வும் நீயேயென்று பாண்டியனைப் புகழ்ந்தவாறு. இப்பொருளும் அமணர் சொல்லுதற்குக் காரணம் தாம் கொலைசெய்வாரல்லர் ; தாம்கற்ற மந்திர வாதவித்தையாற் கொல்லக்கடவராதலாற் சொன்னரென்க.

(வி - கு.) மூ. புகுவிப்பது : இது புகுவிக்க என்னும் வியங்கோள் மாத் திரையாய் நின்றது. தெக்கணம் : இது தக்ஷிணம் என்ற வடசொல்லின் திரிபு ; தெக்கிணம், தக்கணம் எனவும் வழங்கும் ; "தெக்கிண மேரு வென்ன" (தக்க. 773), "தெக்கண மலையகச் செழுஞ்சே ருடி" (சிலப். 14 : 81), "தக்கண மதுரை தான்சென் றெய்தி" (மணி. 13 : 105.) (சா அ)

204. என்னக்கடி தெண்பெரு வெற்பும்விடா
வெண்ணுயிர மூகரு மிப்படியே
பன்னப்பெரி தஞ்சிய வச்சமுடன்
பகலோன்மர பிற்பெறு பைந்தொடியே.

பன்ன - சொல்ல ; இது வெகுசனவசனம்.

இப்படியே தோற்றுரைக் கழுவேற்றக்கடவதென்ன, சோழசக்கர வர்த்தி மகளாரான பாண்டியகுலபதிமகாதேவியார் பயப்பட்டுச் சொல்லு வார்.

(வி - கு.) மூ. எண்பெருவெற்பு : இவற்றின்பெயர்களை 218 - ஆம் தாழிசையுரையால் அறியலாகும். (சாகூ)

அவர்சொன்னவார்த்தை வருமாறு.

205. மலைகொண் டெழு வார்கடல் கொண் டெழுவார்
மிசைவந்து சிலாவரு டஞ்சொரிவார்
நிலைகொண் டெழு வார்கொலை கொண் டெழுதற்
கிவரிற்பிறர் யாவர் நிசாசரரே.

எ - து அமணர்கள் மந்திரவாதம் வல்லவாறு பண்டு கண்டறிவோம். மலைகளை எடுத்துக்கொண்டெழுவார். கடல்களை எடுத்துக்கொண்டெழு வார். அன்றியே ஆகாசத்தால் வந்து பருவதங்களைச் சிறுதுளியாகச்சொரிய வல்லார். மேகங்களின் நிலைகளைக்கொண்டெழுவார். ஆதலாற் கொலையை மேற்கொண்டொழுகுவதற்கு இவரிற் பிறர் யாவரேனுமுளரோ ராட்சதர் எ - று.

யானைமலை நாகமலையென இரண்டுமலை உளவென அவையிற்றைக் காட்டி, "பண்டு இவை அமணர் மந்திரவாத வலிகாட்டினமலைகள். மது ரையை ஒருமலை யானையாயழிக்கவும் அவ்வியானை மதுரையில் வருவதன் முன் இந்தமலை மகாநாகமாய் அந்தயானையை விழுங்கவுங்காட்டி உயிர் பெறுத்தி நடத்திவர, என்சுவாமி சாதுவாதலிற் பயப்பட்டு இம்மகாநகரத் திற் புக்கனர். பின்பு எழுகடலுக்குமாறாக மதுரையில் எழுகடலெனக் காட்டின இந்திரசாலமுமுண்டு. உறையூரில் கல்வருஷமும் மண்வருஷமும் பெய்வித்து அதனைக்கெடுத்துத்துரோகமுஞ்செய்தார் இவர். அதற்குப்பின்பு இராசதானி திருச்சிராப்பள்ளியாய்த்து" என்றவாறு.

(வி - கு.) மூ. சிலாவருடம் - கல்மாரி. உரை. யானையைப் பெரும் பாம்பு விழுங்கு மென்பது ஈண்டறியற்பாலது ; 543-ஆம் தாழிசையையும்

அதன் உரை முதலியவற்றையும் பார்க்க. சுவாமி என்றது பாண்டியனை, ஆய்த்து - ஆயிற்று : 'சுவர்ணமயமாய்த்து' என்பர்பின் ; தக்க. 217, உரை ; "கூடிய கூட்டத்தினுளதாய்த்திக் குவலயமே" (ஆளுடையபிள்ளை. திருவந். 80) ; "போய்த்து" என்றார் கம்பரும் ; கம்ப. சூர்ப்பநகை. 130. (எ0)

206. குழைதந்தனை செந்தமிழ் மண்டலமுங்
கொடிமாநக ருங்குன் றங்களிகூர்
[1]மழைதந்தென வந்தனை வாழியினிப்
பிரமாபுர மேற [2]மறித்தருளே.

ஏ - து செந்தமிழ்மண்டலமான பாண்டிமண்டலத்தைத் தளிரெழப் பண்ணினை ; மதுரையையுமப்படியேசெய்தனை. மலைகளிகூர மழைதந்தாற் போல எழுந்தருளினை. சயசய ! இனிப்போய்ப் பிரமாபுரத்தேற மீண்டருள் எ - று.

வாழியென்றது சயசயவென்றவாறு.

என்னப் பிள்ளையார் திருவுள்ளத்தே வாதுசெய்வோமென நினைத்தருளப் பின்னையும் பாண்டியன் குலமகாதேவி சொல்லுவார்.

(வி - கு.) மூ. செந்தமிழ்மண்டலம் : பாண்டியனைத் தமிழ்நாடன்என்பர்பின் ; தக்க. 211 ; "தமிழ்நாட்டிற் போனார் ஞானத் தலைவனார்", "மண் குலவு தமிழ்நாடு", "பொங்கு தமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி", "தேம்பொழில்சூழ் செந்தமிழ்நாட்டினில்", "செந்தமிழ்த் திருநாடெய்தி", "பூழியர் தமிழ்நாட் டுள்ள", "தண்டமிழ்நாட்டு மன்னன்" (பெரிய. திருநா. 289, 400, 410, 412 ; காரைக். 43 ; திருஞா. 601, 751.) குன்றங்களிகூர் மழைதந்தெனவந்தனை : 200 - ஆம் தாழிசையும் அதன்உரை முதலியவைகளும் இங்கே அறியற்பாலன ; "கழைவளர் நவிரத்து மீமிசை ஞெரேரென, மழைசுரந் தன்ன வீகைநல்கி" (மலைபடு. 579 - 80.) உரை. சயசய: "போற்றி போற்றி சயசய போற்றி", "போற்றி சயசய போற்றியென்னும்", "சயசய போற்றி போற்றி" (திருவா. போற்றித். 225 ; திருச்சதகம், 1, 62), "சிந்தித் தவர்க்கருள் கணபதி சயசய" (பழையபாட்டு), "சயசய ஹரஹர செந்திற் கந்தப்பெருமாளே" (திருப்.)

(பி - ம்) 1 'மழைதந்தனை யந்தணவாழி' 2 * 'மதித்தருளே' (எக)

207. [1]கேள்பற்றி யமண்கெடு வாரொடுபோர்
கெட்டேனடி கேளொட்டேனனவே
தாள்பற்றி வணங்கி வணங்கிவிடாள்
[2]தவனன்குல வல்லி தடுத்தலுமே.

ஏ - து தங்கள்சமயத்தையே பற்றிப் பிறசமயத்தார் பசிக்கினுஞ் சோறிடார் அமணர் ; அக்கெடுவாரோடு கெட்டேன் ! சுவாமி, உறவாயிருப்பீர் ; உம்மைப்போர்செய்ய ஒட்டேனென்று பிள்ளையார் ஸ்ரீபாதங்களைப்பற்றி நமக்கரித்து விடாதேதடுத்தாள், தவனன்குலவல்லியான பாண்டியன் குலமகாதேவி எ - று. தவனன் - ஆதித்தன்.

என்னப் பிள்ளையார் அருளிச்செய்வார்.

(வி - ரை.) மூ. கெட்டேன் : 199 - ஆம்தாழிசையின் குறிப்பைப் பார்க்க.

(பி - ம்) 1 'கேள்பற்றமணர்,' 'கேள்பெற்றுமமண்' 2 'தபனன்' (எஉ)

208. காதிற்[1]கனகக் குழைநின் றிலகக்
கமழுங்குழன் முன்பு கலந்தசையச்
சோதித்திரு நெற்றியில் நீறிலகச்
[2]சுட்டிக்கலன் மீது துலங்கவுமே.

இதன் பொருளுணர்க.

(வி - ரை.) மூ. சுட்டிக்கலன் : குழந்தைகளுக்கு முன்னுச்சிமயிரிற் சூட்டப்படும் ஒருவகை அணி.

(பி - ம்) * 1 'கனபொற் குழை நின்றொளிரக் கண்டாழ் வடமுன்பு கலந்தசைய' 2 'சுட்டிகலனின்று' (எஙு)

209. கனலெங்கன லக்கன லால்விளையுங்
கார்காரவை வந்து தருங்கலுழிப்
புனலெம்புனல் யாமிடு மேடுசுடா
போகாதிரி யக்கொடு போமெனவே.

எ - து பாண்டியகுல மகாதேவி, கேளாய். உலகத்தில் அக்கினியெல்லாம் எங்களக்கினி ; அவ்வக்கினியால்விளைவன மழையானவை ; அம்மழைதான்வந்துசொரியும் ஆற்றுநீர் எங்கள் நீரே. ஆதலால் யாமிடும் ஏடுகளைச் சுடா அக்கினி ; உடன்கொண்டுபோகா சலமும் ; திரியக்கொண்டு போமென்று சொல்ல எ - று.

எனவே, சொல்லிற்றுச்செய்யும் அக்கினிதேவனும் வருணராசனும் உளர் எங்கட்கு ; பரசமயத்தார்க்கெல்லாம் நெருப்பும் நீருமேயுளவென வுணர்க.

என்று பிள்ளையார் அருளிச்செய்யப் பாண்டியன்குலமகாதேவியார் நீங்கியருள எண்பெருங்குன்றத்தெண்ணாயிர அமணருங்கூடிப் பிள்ளையாரெதிரேவந்து சொல்லுவார்.

(வி - ரை.) மூ. திருமாலை நோக்கி வீரபத்திரதேவர் கூறுவதாகவுள்ள, "சங்க மெங்கள் குழை" (தக்க. 714) என்பது இதனுடன் ஒருவாறு ஒத்துள்ளது ; "தூமமு மெமது பவனனு மெமது தோழனத் தோயமு மெமதே, யாமுமிங் கிவற்றோ டொன்றுத லொழிது மீரிரு பொருள்களும் பிரிந்தான், மாமுகி லெனும்பே ரெங்குள தடர்த்து வாசவ னென்செயு மெம்மை, யாமுறை யறிது மென்றுகொண் டறவு மகங்கரித் தனன்வெகுண் டழலோன்" (வி. பா. காண்டவ. 32) என்பதும் ஈண்டறியற்பாலது. (எச)

210. நீரோடு நெருப்பிவை [1]நும்மனவே
யிது[2]நிச்சய மாகிலு நின்னெதிரிப்
பாரோடு விசும்பு பணிப்பவினிப்
பணிகொள்ளுதும் யாமிது பாரெனவே.

எ - து நீரும்நெருப்புமானவை மாகேசுவரரினவே; இதுநிச்சயமாயி னும் நின்னுடைய எதிரே மனுஷ்யரன்றித் தேவர்களும் பயப்படும்படி நீரையும் நெருப்பையும் யாம்பணிகொள்ளுமாறு பாரென்றார் எ - று.

நீரும் நெருப்பும் சடையினுங்கையினும் உளவென்னும் நயமுமாம்; அவை இவையல்லவென்றுமாம். பனித்தல் - பயப்படுதல்.

இதற்குப்பின்னைப் புகுந்தகதை.

(பி - ம்) 1 'நும்மினமே' 2 'நிச்சயமாவதுணர்ந்தனையேல்' (எரு)

211. என்னுஞ்சமண் மூகரு நான்மறையோ
ரேறுந்தமிழ் நாடனும் [1]ரகுமரபிற்
பொன்னும்பெரு நம்பி குலச்சிறையும்
போய்வைகையில் வாது களம்புகவே.

ரகுமரபாவது ஸ்ரீராகவவங்கிசம். பொன்போல்வானைப் பொன்னென் றார். வாதுகளம் - தர்மாசனம்.

(வி - கு.) மூ. சமண்மூகர் : 7, குறிப். இத்தாழிசையின்பின், "எரிபுக் கனவே டிறைவன்சடையிற் பிறையொத் தனவை கையிலிட்டனவுங் கிரி புக்கனவக் கிரிசூழுருவிக் கிழியா தககங்கள கிழிதறவே" என்னும் பாட லொன்று மூலமட்டுமுள்ள பிரதியொன்றில் இந்த வடிவமாகவே காணப் படுகிறது.

(பி - ம்) 1 'மான்மரபிற்', 'மாமரபிற்' (எசு)

212. கனலிற்புகு மேடிறை கண்ணின்மதன்
கையம்பென வெந்தன கையரிடப்
புனலிற்புகு மேடிறை [1]வைகையுடன்
போகாவிடி னுங்கடல் புக்கனவே.

எ - து முற்பட்ட இலச்சையின் மிகுதியாலே அமணர் தங்கள் அக்கினி ஸ்தம்பனமந்திரத்தை நெருப்பிலிட, ஈசுவரனது நெற்றிக்கண்மலரிற்புறப் பட்ட கோபாக்கினியால் காமதேவனுடைய அம்பென ஓலையேடுகள் வெந் தன. உயிரென மந்திரம் ஆகாசமே அரூபியாய்ப்போயின. பின்னை வைகையாற்றிலிட்ட சலத்தம்பனவிபரீத மந்திரவோலைகள்தாம் வைகை யுடனே கூடிப்போய் வைகைதான் கடல்புகாதாயினும் மந்திரங்களுடனே கடல்புக்கன எ - று.

மதன்கையம்பென வெந்தன - நெருப்பிலிட்டபுட்பம்போல் வெந்தன. மதனும்கையம்புமென உம்மைத்தொகையுமாம். இதற்கு உவமை ஏடும் மந்திரமுமென்னலுமாம்; எழுத்தும் ஓசையுமென்னலுமாம். [கைய ரென்னும்பெயர் மழுவேந்திறைக்கள்ளரென்பதுபோலக்கொள்க; இது மலைநாட்டிற்சொல்.] வைகையானது சமுத்திரகாமினியல்ல. ஏடுகடல் புக்கவாறு என்னெனின் பாம்பாற்றுக்காலொடுகூடிக் கடல்புக்கதென உணர்க

(வி - கு.) உரை. வைகை கடலிற்கலக்கவில்லையென்பது ஒருசாரார் கொள்கை; "மைக்கடலில் வைகலொழி வைகை" (திருவாதவூரர். மந்திரி. 1), "அவனியெலா, மூடுத்தகட லொருவர்க்கு முதவாத வுவரியென, மடுத் தறியாப் புனல்வைகை" (திருவிளை. 58 : 2.) பாம்பாறு : இப்பெயரையுடைய

ஒருசிற்ருறு இராமநாதபுரம் ஸமஸ்தானத்திலுள்ள ஹநுமந்தக்குடி தாலூகாவிற் பலகுளங்களை நிரப்பிக்கொண்டு சென்று கடலிற் கலக்கிறதென்று ஷை ஸமஸ்தான சரிதம் தெரிவிக்கின்றமையின் இவ்வாறு பண்டைக்காலத்தில் வைகையிலிருந்து பிரிந்துசென்றிருக்க வேண்டுமென்று தோற்றுகிறது.

(பி - ம்) 1 'வைகையினிற் போகாதெனினுங் கடல்' (எஎ)

213. பொற்பங்கன லிற்புகு மேடுறவும்
புனலிற்புகு மேடெதிர் போகவுமேழ்
வெற்பும்பிள வோட வொலித்தனவால்
வேதங் களுமைம் பூதங்களுமே.

எ - து ஆளுடையபிள்ளையாருடைய மாகேசுவர மந்திரசத்தியாலே எழுதின பனையோலையோடு நெருப்பிலிடக் குற்றமற்ற பொன்போலப் பசுமைபெற்று அழகுமிகாநிற்கவும் கிழக்குநோக்கிப்போகின்ற ஆற்றிலிட்ட பனையோலையின் ஓரிதழை ஆளுடையபிள்ளையார் எழுதின மந்திரசத்திக்குச் சலசத்திதோற்றுக் கூடக்கொண்டு போகமாட்டாதொழிய இம்மந்திரசத்தி ஏட்டுக்கும் பலங்கொடுத்து மேற்குநோக்கிக்கொண்டுபோகவும் கண்டு அறியாதார்க்குச் சொல்லுவனபோல ஆரவாரித்தன, வேதங்கள் நான்கும் பூதங்களைந்தும். இவை ஆர்த்தசத்தங்களாலே பருவதங்களும் பிளந்தன எ - று.

(வி - கு.) மூ. கனலில் புகும் ஏடு பொற்பு உறவும் என இயைக்க. (எஅ)

214. மேனின்ற சுராசுர ரார்த்தனரே
திருமாலும் விரிஞ்சனு மார்த்தனரே
பானின்ற சராசர மார்த்தனவே
பதினாலுல கங்களு மார்த்தனவே.

சுராசுரர் - தேவரும் அசுரரும். விரிஞ்சன் - பிரமா. பால் - பக்கம். சராசரம் - சரமும் அசரமும்; உலகிற்பொருளெல்லாமென்றவாறு. (எகூ)

215. வாராயிவ ராகம துல்லபமும்
வருமெங்கள் சிவாகம வல்லபமும்
பாராய்வழு தீயிது பாருருவத்
திருவிக்ரம மின்று படும்படியே.

பாண்டியனைநோக்கிப் பிள்ளையார் அருளிச்செய்தது இது.

வருமெங்கள் சிவாகமமென்றது, ஈசுவர மூலம்பற்றிவருகிற சிவாகமமென்றவாறு. துல்லபம் - அருமை; குறிப்பு. வல்லபம் - வலிமை.

(வி - கு.) மூ. விக்கிரமம் - வெற்றி. (அ0)

216. ஒருகூன்மிசை வைத்த திருக்கைபுறத்
தொருகூன்மிசை வைத்தனர் [1]வைத்தலுமே
இருகூனு நிமிர்ந்தன தென்னவர்கோன்
[2]முதுகுந்தட மார்பு மிடம்பெறவே.

முன்னும் பின்னும் ஒக்கநிமிர்ந்தவாறே தடமார்பும் அழகிய முதுகும் ஆயின. இவ்விடத்துத் தடம் பெருமை.

இதன்கருத்து: பிரத்தியட்ச சத்தி காட்டுகை. அன்றியேயும் இந்திரனுமல்ல, பிறவுமல்ல, ஈசுவரனே வடிவுகளைப்படைத்தானென்பது பிரகாசித்தபடி.

(வி - கு.) மு. இருகூனும்......பெறவே: "வண்புகலி, வேந்தரா லாருயிர்க்கூன் மெய்க்கூன் றவிர்ந் தருளே, சேர்ந்துவாழ் நின்றசீர்த் தென்னவனும்" (சொக்கநாதருலா.)

(பி - ம்) *1 'வைத்தளவே' 2 'முதுகுந்திரு' (அக)

217. ஆதிச்செழி யற்கொரு [1]கைம்மலர்பொன்
னடையப்புக லிக்கிறை வெப்பழலால்
வேதிக்க வுடம்பொரு [2]பொன்மயமா
யொளிவிட்டு விளங்கினன் மீனவனே.

எ - து பண்டொரு பாண்டியன் பிறனுடைய பெண்டாட்டி யகத்திற் கதவை அறியாமல் தட்டிய தன்கையைத் தானேதறித்துக்கொண்டு பொற் கைபண்ணிச் செறிப்ப அத்திருக்கை உயிர்பெற்று வழங்கிய தென்னும் புராணத்தால் அவனுக்கு ஒருகையே பொன்னாயிற்றென்று தெரிகிறது. இக்கூன் பாண்டியனுடம்பை ஆளுடையபிள்ளையார் திருக்கைகளால்தடவச் சரீரம் முழுவதும்பேதித்துக் கனகமயமாயிற்று எ - று.

இவன்தான்கொண்ட வெதுப்புஷ்ணம் மெய்யுடம்பான இரும்பை உருக்கப் பிள்ளையாருடைய திருக்கைமலரான சித்தரசம் படக் காணிகோடியைப்பேதித்தாற்போலச் சுவர்ணமயமாய்த்தென்றவாறு.

(வி - கு.) உரை. பாண்டியன் தன்கையைக் குறைத்துப்பின்பு அதனைப் பொன்கைப்பெற்ற வரலாறு, "நாடுவிளங் கொண்புகழ் நடுதல் வேண்டித் தன், ஆடுமழைத் தடக்கை யறுத்துமுறை செய்த, பொற்கை நறுந்தார்ப் புனைதார்ப் பாண்டியன்" (குணநாற்பது), "எனக்குத் தகவன்று லென்பதே நோக்கித், தனக்குக் கரியாவான் றானாய்த் தவற்றை, நினைத்துத்தன் கை குறைத்தான் பாண்டியன் கானூர், எஃச்செய்யார் மாணு வினை" (பழ. 102), "உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி, புதவக் கதவம் புடைத்தன னொருநாள், அரைச வேலி யல்ல தியாவதும், புரைதீர் வேலி யில்லென மொழிந்து, மன்றத் திருத்திச் சென்றீ ரவ்வழி, இன்றவ் வேலி காவா தோவெனச், செவிச்சூட் டாணியிற் புகையழல் பொத்தி, நெஞ்சஞ் சுடுதலி னஞ்சி நடுக்குற்று, வச்சிரத் தடக்கை யமரர் கோமான், உச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை, குறைத்தசெங்கோற் குறையாக் கொற்றத் திறை" (சிலப். 23 : 42 - 53), "கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தால், எய்யுஞ் சிலைக்கை யிரங்கேசா" (இரங்கேசவெண்பா), "மையிலாள் கடை தொட் டுயர்கரங் குறைத்த மாசறு தேசுடை நீதி, ஐயனே" (திருவால. 57 : 4), "தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ" (திருவிளை. பழியஞ்சின. 17), 'செங்கோலை முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான் கண்ணும் தன்கைகுறைத்தான் கண்ணுங்காண்க' (குறள். 547, பரிமேல்), "கொற்கையான் மாறன் குலசேகரன் வழுதி, பொற்கையா னகதை போதாதோ" (தனிப்பாடல்) என்பவற்றால் விளங்கும்.

இரசவாதஞ் செய்வார் இரும்பு முதலியவற்றை உருக்கிப் பின்பு சித்த ரசத்தால் வேதிப்பார் : "கருமருவு குகையனைய காயத்தி னடுவுட் களிம்பு தோய் செம்பனையயான், காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே கனிவுபெற வுள்ளுருக்கிப், பருவமதறிந்துநின் னருளான குளிகைகொடு பரிசித்து வேதிசெய்து, பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட பட் சத்தை யென்சொல்லுகேன்" (தாயுமானவர்.) காணி - சிற்றெண்களில் ஒன்று ; "முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை, இந்திரனு வெண்ணி விடும்" (நாலடி. 346.)

(பி - ம்) 1 'பொன்மலைகை' 2 'பொன்மலையா' (அஉ)

இனிப் பாண்டியகுலபதி அருளிச்செய்வான்.

## வேறு

218. வேதப் பகைவர் தம்முடம்பு
வீங்கத் தூங்கும் வெங்கழுவிற்
கேதப் படுமெண் பெருங்குன்றத்
தெல்லா வசோகு மெறிகெனவே.

வேதப்பகைவரென்றது, வேதமந்திரசத்தி தனக்கேறவுணர்ந்த பாண் டியன் அமணர்க்குப் பெயரிட்டபடியெனவுணர்க. எண்ணுயிரமரம் கிடையாவென்று துக்கப்படேமென்றவாறு ; ஏதம் - துக்கம். எண்பெருங் குன்ருவன, யானைமலையும் நாகமலையும் நீலமலையும் சுணங்கமலையும் செப்பு மலையும்............வெள்ளிமலையுமென மதுரையைச் சூழ்ந்திருப்பன வென வுணர்க.

இராசாவைநோக்கி ஈது ஆகாதென்று பிள்ளையார் விலக்கியருள இராசா வையும் பிள்ளையாரையுங் கூடவைத்து மாகேசுவர கணபதித் தொண்டர் கள் அருளிச் செய்வார்.

(வி - ரு.) உரை. இங்கேகூறிய எண்பெருங்குன்றப்பெயர்கள் பிற வகையாகவும் வேறிடங்களிற் காணப்படுகின்றன ; "பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி, அருங்குன்றம் பேராந்தை யானை - இருங்குன்றம், என் றெட்டு வெற்புமெடுத் தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" (ஒரு பழையசைனநூல்), "அஞ்சனங் கவுஞ்சங் கோவத் தனந்திரி கூடங் காஞ்சி, குஞ்சர சைய மேம கூடமே விந்த மென்னு, மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர்" (திருவிளை. யானை. 7.)

'ஈது ஆகாதென்று பிள்ளையார் விலக்கியருள' என்ற வாக்கியம் சம்பந்தமூர்த்தியினுடைய பெருங்கருணைத்திறத்தை நன்கு புலப்படுத்து கின்றது. அவர் சமணரைநோக்கிக் கூறிய செய்தியை "பவங்கணீக்கும் வெம் பாதக மாற்றுநம், றவங்க ணல்குந் தலைமை தருந்தொழும், சிவந்த தாணிழல் சேர்த்திடுங் காத்திரத், துவந்து பூணினுருத்திர சாதனம்", "நினை வினை முடிக்குந் தூய்மை யாக்கும்வெம் பாவ நீக்கு, மனவிடர் விடம்பேய் தெவ்வு மறலிவா ராமற் காக்கும், புனையற மின்பம் வீடு பொருண்முத லெலவையு நல்கும், வினைகடி நால்வே தத்து மிக்கமந் திரவெண் ணீறு", "குலந்தரு நீதி மிக்க குணந்தரும் வேதஞ் சொல்லும், பலந்தரு முயர்ந்த சாயுச் சியந்தரும் பழுதி லாத, தலந்தரு மெல்லாம் வல்ல சயந்தரு நிறைந்த செல்வ, நலந்தரும் பெருமை குன்ரு நயந்தரு நமச்சிவாய", "நாணிலீர் மன் னன் முன்னு நல்லசொல் கின்றேன் கண்டி, பூணும்வெண் ணீறு பூசும்

போற்றியஞ் செழுத்தை யோதும், காணொணுமுத்தி யின்பங் காணலாம்" (திருவால. 38 : 29 - 32) என்னும் பாடல்கள் வலியுறுத்துகின்றன. கணபதித்தொண்டர்கள் - இங்கே சிவனடியார்களின் தலைவர்கள்.

இதன்பின் சில தாழிசைகள் இருந்து இறந்திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. (அக)

219. மண்ணு வுடம்பு தங்குருதி
மண்ணக் கழுவின் மிசைவைத்தார்
எண்ணு யிரவர்க் கெளியரோ
நாற்பத் தெண்ணு யிரவரே.

மண்ணுவுடம்பு - கழுவாஉடம்பு.

(வி - கு.) மூ. மண்ணுவுடம்பு : "காருடற் சமண்குழாம்" (தக்க. 373) என்பதன் உரையைப் பார்க்க; "மாசுகொண் மேனியாரும்" (திருஞா. தே.); "கழுவாவுடலம்" (ஆளுடையபிள்ளை. திருவந். 6, 28), "காயமு மனமு மாசு கழுவுதல் செய்யார்." (பெரிய.) இங்கே கூறப்பட்ட நாற்பத்தெண்ணுயிரவரென்னும் சிவகணத்தார், மதுரையிற் பண்டைக்காலத்தில் இருந்து சிவகைங்கரியம் செய்துகொண்டு விளங்கினார்களென்பது பின்னுள்ள துதியால் தெரிகின்றது : "பலந்தரு தவத்தான் மிக்கோர் பத்திவை ராக்கியத்தோர், புலங்களுங் கடந்தோ ரீசன் றனையலாற் போற்ற லில்லோர், நலந்திகழ் சரியை யாதி நான்குமார்க் கத்தோர் நீற்றால், இலங்கிய நாற்பத் தெண்ணு யிரவர்தாள் போற்றி போற்றி" (திருவால. கடவுள். 22.) நாற்பத்தெண்ணுயிரவரென்பது தில்லைமூவாயிரவர், திருப்பெருந்துறை முந்நூற்றுவர், திருவாக்கூர் ஆயிரவர், திருவீழிமிழலை ஐந்நூற்றுவரென்பன போன்ற குழூஉப்பெயரென்றும், இக்குழுவினர் சிதம்பரம் முதலிய தலங்களிலும் இருந்து திருத்தொண்டு புரிந்துவந்தார்களென்றும் தெரிகின்றன ; "எதிரின்றியநாற்பத் தெண்ணு யிரரும்" (திருவானைக்காவுலா, 159), "எப்பற்றுந் தீர்நாற்பத் தெண்ணு யிரவரெனும், ஒப்பற்ற வேடத் துயர்ந்தோரும்" (திருப்பூவணநாதருலா, 90), "எண்ணுமொரு நாற்பத் தெண்ணு யிரவரெனும், புண்ணிய வேடப் புனிதரும்" (ஸ்ரீ ஏகாம்பரநாதருலா, 69.) (அச)

220. கொன்று பிள்ளை யூர்புக்கார்
குண்டர்நரகக் குழிபுக்கார்
என்று சொல்லி [1]யகிலகலா
வல்லி யிறைஞ்சி யிருத்தலுமே.

பிள்ளையார் கொன்றாராகச்சொல்லியது, படைசெய்த பராக்கிரமம் இராசாக்களதாமெனவேயுணர்க. அமணர்கள் நரகக்குழியிற்புக்கது, பிராமணச்சிறுபிள்ளை தேசாந்தரத்தில்நின்றும் வந்து மதுரைக்குப் புறத்தே ஒரு மடத்திலேவிட அம்மடத்தின்வாசலிலே அநியாயமாக நெருப்பிட்ட பாவத்தாலெனவுணர்க. அகிலகலாவல்லியென்றது ஞானங்களுக்கு முதல்வியான சரசுவதியையெனவுணர்க.

(வி - கு.) மூ. பிள்ளை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். அகிலகலாவல்லி - கலைமகள் ; சகலகலாவல்லியென்றும் பெரியோர் கூறுவர்.

(பி - ம்) 1 'சகலகலை' (அரு)

221. தெம்முன் சென்று நம்பிள்ளை
செய்த தொருபோர் செப்பினையால்
நம்முன் தவள முளரிமிசை
யிருக்கப்பெறுநி நாமகளே.

இஃது, இக்கதையெல்லாம் விண்ணப்பஞ்செய்த சரசுவதியைநோக்கிப் பரமேசுவரி அருளிச்செய்து பிரசாதஞ்செய்தருளினபடி.

(வி - கு.) மூ. "தெவ்வுப்பகை யாகும்" (தொல். உரி. 48.) "தெம்முனை தேய்க்குவர்" (58) வெண்பாமாலை. இம்முடிபுணர்க.

உரை. தேவி முன்னிருத்தல் எளிய செயலன்றாதலின் கலைமகள் அவ்வாறு இருக்கப்பெற்றது தேவிபிரசாதம் என்றார். (அசு)

6.—கோயிலைப்பாடியது முற்றிற்று.

---

## எ. பேய் முறைப்பாடு

[இதில், உணவுபெறாது பலராலும் வஞ்சிக்கப்பட்டதைப் பேய்கள் முறையிடுதலும் தாங்கள் கண்ட கனாக்களைக்கூறுதலும், யுத்தத்திற்குச் சென்றிருந்த பேய்களில் ஒன்று ஓடிவந்து பேய்களையெல்லாம் தன்னுடன் வரக்கூவி மிக்க விரைவாக மீண்டும் ஓட அதனைப் பிடித்துக்கொண்டு வரச் செய்து தேவி, தேவர்கள் அழிந்தவிதத்தைச் சொல்லும் வண்ணம் கட்டளையிடுதலும் கூறப்படுகின்றன. முறைப்பாடு - தங்கள்குறையை நீக்கிக் கொள்ள விண்ணப்பித்தல்.]

222. என்றிறைவி நாமகட்குத் திருவுள்ளஞ் செய்யக்கேட்
டிருந்த பேயில்
[1]ஒன்றிறையுங் கூசாதே யுறுபசிநோய் விண்ணப்பஞ்
செய்ய லுற்றே.

நாமகள் - சரசுவதி. இறை - அற்பம். இவ்விடத்துச் சரசுவதியை அனுக்கிரகித்தகாலத்திலே நம்மையும் அனுக்கிரகிப்பளென்று பேய்கள் தங்கள்காரியஞ் சொல்லத்தொடங்கின வெனவுணர்க. உறுதல் - மிகுதல்.

(பி - ம்) 1 'ஒன்றிறைவியையுங் கூசாது' (க)

### வேறு

223. ஒற்றைத் தலைவெட் டுண்டதுகொண்
டோடிச் சென்றான் சென்றுலென்
மற்றைத் தலையுந் தானுமாய்
வணங்கி நின்றான் மலரோனே.

இதன்பொருளுணர்க.

(வி - கு.) மூ. பரமசிவன் பிரமதேவன் தலையைக்கிள்ளித் தாமே எடுத்துச்சென்றார்; எமக்குக்கொடுக்கவில்லையென்பது குறிப்பு. (உ)

224. உலகிற் பெரிய கபாலத்தே
யொருவ ருதிர மேற்றூற்றி
விலகிற் பிழையாச் சூலத்தே
கொண்டார் கணவர் வெற்றுடலே.

எ - து இவ்வுலகத்திலும் பெரியதொரு தலையோட்டிலே ஒருவருடைய உதிரத்தை ஏற்று ஊற்றிக்கொண்டு பின்னை உதிரமூற்றின உடம்பையும் திருக்கையிற் சூலத்தே ஏற்றுக்கொண்டருளினர், நின்னுடைய கணவனர் எ - று.

உலகிற்பெரியகபாலம் பிரமசிரம். ஒருவரென்றது விஷ்ணுவை ஏற்று - உடலைவளைத்துக் களேபரமாக்கி. விலகுதல் - எறிதல். எங்களுக்குப் பிணத்தையும் தந்திலரென்றவாறு.

(வி - ரு.) மூ. கணவரென்றது சிவபெருமானை. உரை. களேபரம் - பிணம். விலகுதலென்றதற்கு, 458, 646 - ஆம் தாழிசையுரைகளிலும் இவ்வண்ணமே பொருளெழுதுவர். (௩)

225. கூறுக் குதற்கு வாளிலரோ குத்தி நூக்க வேலிலரோ
நீறுக் குவதென் முப்புரத்தி லுள்ள வெள்ள நிருதரையே.

இதன்பொருளுணர்க.

(வி - ரு.) மூ. கூறுக்கினும் குத்திநூக்கினும் திரிபுரத்திலுள்ள அசுரர்களின் உடம்பினால் எங்கள் பசியைத் தீர்த்துக்கொள்வோம். அதற்கிடமின்றி எரித்துச் சாம்பலாக்கி விட்டார். இஃது என்ன அநியாயமென்பது கருத்து. (௪)

## வேறு

226. குழம்படியேம் புகவிழுந்து [1]பொருப்படியிற் கொள்ளாமே
பழம்படியே தசமுகனை விட்டார்தம் பாட்டறிவே.

எ - து பத்துத்தலையுடையானொரு ராட்சதன் வந்து திருமலையை யெடுக்கத் தாம் அவனை ஸ்ரீபாதத்தில் திருவிரலாலூன்றியருள அவன் சரீரம் நெரிந்துபோக அவ்விடத்தில் அவன் சரீரத்தினுதிரக்குழம்பை நாங்கள் புகுந்து கொள்ளைகொள்ளாமே அவனை அனுக்கிரகித்துப் பிழைக்க விட்டருளினர், அவன்பாடினபாட்டுக்கேட்டருளி. அவர்தம் பாழான பாட்டறிவு இருந்தவாறு என்னே! எ - று.

பழம்படியேவிடுதல் அவனைச்சிட்சியாதே போகவிடுதல். அதனாலன்றோ அவன் விஷ்ணுவினுடையதேவியை வஞ்சித்துக்கொண்டுபோய்ச் சிறைவைத்தானென்பது கருத்து. பாட்டறிவேயென்றது எங்களிலும் பாடவல்லனோ இராவணனென்றவாறு.

(வி - ரு.) மூ. குழம்பு அடியேம் - மனங்கலங்குகின்ற அடியேம்.

உரை. திருமலை - கைலை; தக்க. 309, 336.

(பா - ம்) 1 'மலையடியிற்' (௫)

## வேறு

227. வைய முண்ணோங் கடன்மடோ
மற்றும் புவன முற்றும்போய்
ஐய முண்ணோங் கடனஞ்சு
குடியோ முங்க ளடியோமே.

எ - து தேவி, பரமேசுவரி, நின்னுடைய அம்சமான விஷ்ணுவைப் போலப் பூமியெல்லாம் வாரிவிழுங்கோம்; நின்புலவனைப்போலக் கடலேழும் ஒருக்காலே குடியோம்; நின் சுவாமியைப்போலத் திரைலோக்கியங்களெங் கும்புக்குப் பிச்சையுண்ணோம்; எல்லாலோகங்களையும் கடல்களையுமொக் கச் சுடவற்றாய்ப் பெருத்துக்கறுத்திருக்கும் ஆலகாலத்தைக்குடியோம்; இதற்குக்காரணம் நினக்கும் நின்சுவாமிக்கும் அடியோமான தாழ்வல்லது இவைசெய்யமாட்டாதேமல்லேம். இவை செய்யின் அடிசிற்பானையைத் தொட்டோமாவோம் எ - று.

புலவன் - அகத்தியன். கடனஞ்சென்றது கடல் கடைகிறகாலத்துத் தோன்றியநஞ்சு; வாசுகியென்னும் மகாநாகத்தின்நஞ்சு; மற்றது மகாமேரு வைப் பன்னிரண்டுசுற்றுக்கொண்டு மறுத்துப் படத்தாலே தலையையும் மறைத்தது, மகாமேருவுக்குள் இராமல்.

(வி - கு.) உரை. நின்புலவனைப் போலக் கடலேழும் ஒருக்காலே குடியோமென்று ஈண்டுக்கூறியது, "முழுதுமெனவெழு புணரிதன்னை முகந் தவும்" (தக்க. 40) என்றதை நோக்கி; 233 - ஆம் தாழிசையையும் பார்க்க. அடிசிற்பானையைத் தொட்டோமாவோமென்பது சூளுறவு வகையுள் ஒன்று. மகாமேருவைப் பன்னிரண்டு சுற்றுக்கொண்டென்றது, "பொன்னெடு மலையைப் பன்னிரு வடங்கொடு, புணரியைக் கடைந்தநாட் புணர்த்த பன்னக, அரசன்" (தக்க. 645, மேற்.) என்னும் பழைய செய்யுளைநோக்கி. மகாமேருவை மத்தாகக் கொண்டது 30 - ஆம் தாழிசையின் குறிப்பால் உணரப்படும். (சு)

## வேறு

228. கார்மலையச் சந்தனமும் [1]வடவிமயக் காரகிலும்
போர்மலையக் கடவதொரு பிள்ளைக்குப் போக்குதியே.

எ - து கருநிறத்தையுடைய பொதியின்மலைச் சந்தனக்காடெல்லாவற் றையும் வடதிசை இமயபர்வதத்து அகில்வனமெல்லாவற்றையும் எடுப்பித்து நீபெற்ற பிள்ளையாய் என்றும் யுத்தோன்முகனாயிருக்கும் தேவசேனாபதிப் பிள்ளையார்க்கே போகவிடுவை எ - று.

இதன்பயன் இளம்பிள்ளையென்றவாறு. சந்தனத்தையும் அகிலையும் காடென்று விருத்தியிட்டது; நீ எழுந்தருளியிருக்கும் அவ்வனத்தில் ஒன்று விருட்சமில்லை.

(வி - கு.) மூ. மலயமெனற்பாலது எதுகைநோக்கி மலையமென நின் றது. உரை. விருத்தி - சீவிதம்; கவலையின்றிச் சீவிக்கும்படி பெரியோரால் விடப்படும் சருவமானியம்; "வீடிலைத்தரைக் கோடி விருத்தியுமல், காடி யாயிர நாடொறு நங்கைமார்க், காடுசாந்தடி சிற்புற மாக்கினான்" (சீவக.

2577) ; " விருத்தியமைத்த " (பெருங். 2-10 : 92) என்பதாலும் இது நன்கு விளங்கும். சந்தனமும் அகிலும் : அகநா. 2 : 6 ; புறநா. 108.

(பி - ம்) 1 'வடமலயக்' (எ)

229. எப்பயறு மெக்கனியு
மெக்கிழங்கு மெத்தேனும்
தொப்பையொரு பெருவயிற்றுப்
பிள்ளைக்குச் சுமத்துதியே.

சுமப்போம் நாங்கள், நினக்குப்பயப்பட்டுத் தேனிலும் ஒருதுளிநக்கோ மென்றவாறு.

(வி - கு.) மூ. தொப்பையொரு பெருவயிற்றுப் பிள்ளையென்றது விநாயகக் கடவுளை. "வித்தகத்திப் பவளதொப்பையப்பற்கிளைய வெற்றி சத்திக் கரக முருகோனே" (திருப்.) (அ)

230. மிக்கள்ளுங் [1]கறியநந்த மிடாப்பலவுந் தடாப்பலவும்
எக்கள்ளு மொருபிள்ளை [2]மடுத்தாட வெடுத்துதியே.

ஏ - து உன் மிடாக்களிலும் அநந்தம் தடாக்களிலும் உலகத்தில் எல்லாக்கறியும் எல்லாக்கள்ளும் பெய்து நீபெற்ற பிள்ளையொருவற்கு எங்களையிட்டுச் சுமப்பித்துப் போக்குவையே. நாங்களும் நின் ஆக்கினையிலே கள்ளின் நாற்றமுங்கொள்ளோம் ; பசிக்குச்சகிக்கமாட்டாது பிள்ளையாதலிற் பதறியள்ளும், அவன் எ - று.

இந்தப்பிள்ளை மகாதேவர்க்கு விஷ்ணு மோகினியானகாலத்திலே அவர்வயிற்றிற்பிறந்த மகாசாத்தரென்று கொள்க. இது வங்கிசத்தாழ்வால் வந்தகுணம்.

(வி - கு.) மூ. தடா : " அண்ட கடத்தடா " (தக்க. 769.)

உரை. வங்கிசத்தாழ்வால் வந்த குணமென்றது கள்ளும் கறியும் உண்ணுவது குறித்து.

(பி - ம்) 1 'கறியடங்கு' 2 'மடுத்தூட்ட' (க)

## வேறு

231. சூரொடும்பொர வஞ்சிசூடிய பிள்ளையார்படை தொட்டநாள்
ஈருடம்பு மிசைந்திரண்டுதி ரப்பரப்பு மிறைத்தனம்.

ஏ - து சூரபன்மாவான அசுரசேனாபதியுடன் பொருதற்குமேற்செல்ல வஞ்சியென்கின்றபூமாலை சூடியருளிய சுப்பிரமணியப்பிள்ளையார் தம் வேலைத் தீண்டியருளினநாள் அசுரசேனாபதி பட்டுவிழ அவனுடைய குதிரையும் அசுரனுமான இரண்டுவடிவும் அடையத்தின்று அவ்வுடம்பின் உதிர வெள்ளத்தையும் இறைத்துக் குடித்தோம் எ - று.

(வி - கு.) மூ. வஞ்சி - பகைமேற்செல்வோர் அணியும் மாலை. பேய்கள் யுத்தத்தில் இறந்தோர்களுடைய தசைமுதலியவற்றை உணவாகப்

பெறுதலன்றிப் பிருண்டு-உணவு பெறுவென்பர் ; **காஞ்சிப்.** வயிர வீசப். 37 ; **கந்த.** மேருப். 21; காசிகாண்டம், அல்கை தேவனுகிய. 10; **புறநா.** 11, **உரை.**

**உரை.** குதிரையும்......வடிவும் : 162, குறிப்பு. (கo)

232. அசும்புதூர்வயி றுரமுன்பவர் செற்றதானவ ரற்றநாள்
விசும்புதூர விழும்பிணங்க [1]ணிணங்களூற மிசைந்தனம்.

**எ - து** பசைதூர்ந்து உலர்ந்த எங்கள்வயிறு நிரம்பும்வகை ஆகாசத்து வெளியடங்க விழும் பிணங்களின் நிணங்களை ஊறத்தின்றேம், முன்பு சொன்ன பிள்ளையாரே அசுரரைப்பொருத அன்று எ - று.

அவ்வசுரர் மாவின் இராசாக்களெனவுணர்க.

**(பி - ம்)** 1 'ணிணங்கடுய்த்து' **(கக)**

233. அறந்தவாமல யப்பொருப்பி லகத்தியற்கமு தாகநீர்
வறந்தவாரிதி யேழின்மீனு மெடுத்துவாயின் மடுத்தனம்.

அறந்தவா மலயப்பொருப்பில் அகத்தியனென்றதனுல், **அவன் கடலே** ழிலும் உள்ள மச்சியங்களை விரோதியேனென்றும், **உண்டால் என்னு** டைய விரதம் அழியுமென்றும் விட்டான் ; கடல்குடிக்குங்கோபம் வரவும் கருத்தில் அறிவுகலங்கிலனென்று கூறியவாறும். (கஉ)

## வேறு

234. மிடையப்போய் நரம்புடலும் வெறுந்தலையே தலையாகி
அடையப்போ யடியோமு மாண்டலையா யற்றனமே.

**எ - து** சரீரத்தில் மிடைந்துநிற்கும் நீர்மைபோய் நரம்பும் உடலும் அடையப்போய் வெறுந்தலையாய் நாங்களும் நின்னுடைய **கோயிற்குருவி** களான ஆண்டலைப்புள்ளானேம் எ - று.

நரம்பும் உடலும் அடையப்போயெனக் கூட்டுக.

**(வி - கு.)** மூ. ஆண்டலை - பாலை நிலத்தில் இருக்கும் ஒருபறவை ; ஆண்களுடைய தலைபோன்ற உருவையுடையது ; "**ஆண்டலை** வழங்கும் கானுணங்கு கடுநெறி" (**பதிற்.** 25 : 8), "**ஆண்டலைக்** கீன்ற பறழ்மகனே" (**கலி.** 94 : 6), "அழுகுரற் கூகையோ **டாண்டலை** விளிப்பவும்" (**பட்.** 258), "ஊண்டலை துற்றிய **வாண்டலைக்** குரலும்" (**மணி.** 6 : 77), "கூகையோ **டாண்டலை** பாட" (**காரைக்.** திருவாலங்காட்டுமூத்த. 3), "யாமத் தீண்டிவந் **தாண்டலை** மாண்பில வழைக்கும்" (**நீல.** தரும. 3), "நீண்ட பலி பீடத்தி லரிந்து வைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தன் னினமென்றெண்ணி, **ஆண் டலைப்பு** ளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" (**கலிங்க.**), "நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன......**ஆண்டலை** நிகர்த் தன" (**கம்ப.** 6, அதிகாயன்வதை. 118.) (கங)

235. வற்றியே யுடம்பிழந்தோ மற்றொருமா னிடவுடம்பு
பற்றியே நின்றடியோம் பணிசெய்யப் பணிவாழி.

மற்றொருமனுஷ்ய சரீரத்தைப்பற்றியுண்டுநின்று நின்பாடு திரிதற்குப் பணித்தருளென்று தேவியைவேண்டுதற்குக்காரணம் அக்காலத்து இராசா மகாவரதனுதலால் மனுஷ்யரைப் பேய் பற்றுதென்பது. (கச)

236. [1]வில்லவனைத் திறைகொண்ட [2]வேற்றண்ட காபதியைப்
பல்லவனைப் பாடாதார் பசியனைய பசியினமே.

தண்டகமாவது தொண்டைநாடு; தண்டகாபதியென்றது தொண்டை நாட்டுக் குளத்துளார்குடிப்பிறந்த பல்லவராயனை நம்பிப்பிள்ளையை யென வுணர்க.

இதன்பயன், வேளாளரையடையாதார் பசிப்பாரென்பது. வில்லவன் - சேரன்.

(வி - கு.) மூ. பசியினம் - பசியையுடையேம். தண்டகாபதியைப்பாடு வார் பசியற்றிருப்பாரென்பது இதனாற் போந்தபொருள்.

**உரை.** குளத்துளார்குடிப்பிறந்த பல்லவராயனை நம்பிப்பிள்ளை: இவன்பெயர் சாஸனங்களில், 'சயங்கொண்ட சோழமண்டலத்து (தொண்டை நாட்டு) ஆமூர்க்கோட்டத்துச் சிறுக் குன்றநாட்டு காரிகைக்குளத்தூருடையான் குளத்துளான் திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பி' என்று காணப்படுகின்றது. இவனுக்குப் பல்லவராயனென்ற பட்டமுமுண்டு. இவன் இரண்டாம் இராசராச சோழனுடைய காலத்தில் ஒருபெரிய அதிகாரியாகவும் படைத் தலைவனாகவும் இருந்தான். இராஜாதிராஜ வளநாட்டுத் திருவிந்தளூர் நாட்டுக் குளத்தூர் ஸ்ரீஇராஜராஜேசுவரமுடையார் கோயிலைக் கட்டுவித்தான். அந்த ஊர் இவனுடைய பெயரால், 'பல்லவராயன் பேட்டை' என்று வழங்கிவருகின்றது. இரண்டாம் இராசராச சோழனுடைய இறுதிக்காலத்தில் அவ்வரசன் நோய்வாய்ப்பட்டிருக்கையில் அரசாங்கத்தை முற்றுங்காத்துவந்ததன்றி அவன் இறந்தபின்னரும் அவனுடையமக்கள் சிறுவர்களாக இருந்தமையின் நாட்டையும் அவர்களையும் காத்துவந்து ஒரு புதிய அரசனை நியமித்துப் பின்னர் இரண்டாவது இராசராசன் குமாரனாகிய மூன்றுங்குலோத்துங்க சோழனுக்கு முடிசூட்டினானென்று தெரிகிறது (Annual Report of South Indian Epigraphy, 1924.) இரண்டாம் இராசராசனுடைய காலத்தில் அரசனையொத்த நிலையிலிருந்தது பற்றியும் தம்மை மிக ஆதரித்ததுபற்றியும் இந்நூலாசிரியர் இங்கே இவனைப் புகழ்ந்தனர்போலும். குளத்துளார் குடியிற் பிறந்த வேளாளர் தொண்டை வளநாட்டில் எயிற்கோட்டத்துள்ள தண்டகநாட்டிலும் புலியூர்க்கோட்டத்துள்ள குன்றத்தூர்நாட்டிலும் வையூர்க் கோட்டத்துள்ள சேனூர்நாட்டிலும் பிறகோட்டங்களுட் சிலநாடுகளிலும் உள்ளாரென்று காஞ்சீபுரம் பெரிய நாட்டுமடத்துத் தாம்பிரப் பட்டயப் பிரதியொன்றதனால் தெரியவருகின்றது. இத்தாழிசையினாலும் உரையாலும் இந்த நம்பிப்பிள்ளை தொண்டைநாட்டு வேளாண் மரபிற் பிறந்தவனென்றும், சிறந்த கொடையாளியாக இருந்தானென்றும், சேரனை வென்றானென்றும் தெரிகின்றது. சேரர்களோடு இராசராசசோழன் பொருது வெற்றியடைந்தது, இந்நூல் 800 - ஆம் தாழிசையாலும், "உதியர், இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியிலிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர்" என்ற இராசராசசோழனுலாக் கண்ணியாலும் அறியப்படுகின்றது.

வேளாளரை யடையாதார் பசிப்பரென்றதனால் அவர்களை யடைந்தவர்கள் பசியாரென்பது பெறப்பட்டது. இது, "கார்நடக்கும்படி நடக்குங் காராளர் தம்முடைய, ஏர்நடக்குமெனிற் புகழ்சா லியலிசை நாடகநடக்கும், சீர்நடக்குந் திறனடக்குந் திருவறத்தின் செயனடக்கும், பார்நடக்கும் படை நடக்கும் பசிநடக்க மாட்டாதே" (ஏரெழுபது, 18), "வாசங் கலந்த மறை ஞானநூலின் வகையென்பதென்னை மழையென்,றூசங்கைகொண்ட கொடை மீளியண்ணல் சரராமன்வெண்ணெ யணுகும், தேசங்கலந்த மறைவாணர்

செஞ்சொ லறிவாளரென்றிம் முதலோர், பாசங்கலந்த பசிபோலகன்ற பதின்றுரந்த வுரகம்" (கம்ப. நாகபாசப். 263) என்பனவற்றாலும் உணரு கின்றரும்.

(பி - ம்) 1 *'வில்லவனைப்புறங்கண்ட' 2 *'வெற்றண்டத்தார் பதியை' (கரு)

237. கட்டரணம் வல்லவனை நடைகொண்டார் காவிரிப்பூம்
பட்டினமும் பாடாதார் பசியன்ன பசியினமே.

இதன்பொருளறிக.

(வி - கு.) மூ. கட்டரணம் : கட்டரணம் வல்லவன் என்றது வல்லான் என்னும் வீரனுக இருத்தல் வேண்டுமென்று தோற்றுகிறது. அவன் வரலாறு ஈட்டி எழுபது முதலியவற்றில் காணப்படும் ; இத்தாழிசையினல், காவிரிப்பூம்பட்டினம் சோழனுடைய தலைநகர்களில் முக்கியமானதொன்றென்றும், அங்கே சோழனுக்கு வெற்றியைத் தந்த சில வீரர் இருந்தனரென்றும் தெரியவருகின்றது. இரண்டாம் இராசராச சோழன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டிருந்தானென்பது, "தென்மாடக் கூடற் சிறைமீட்ட கார்புகார்ப், பொன்மாட வீதிப் பொடியடக்க", "கூடற்பெரும் பெருமாள்", "பரவி விறலியரும் பாணருந் தற்சூழ்ந், திரவி புகார் பாடு மெல்லை", "பட்டினஞ் சூழ்ந்த பொன்னிக்கும்" (இராசராச.) என்பவற்றால் உய்த்துணரப் படுவதன்றியும், "கூடல், நராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக், கோராயிரம்பொ னீந்தவுலாவும்" (தமிழ்விடு தூது) என்பதனாலும் அறியப்படும். கூடல் - காவிரிப்பூம்பட்டினம். (கசு)

## பேய்களின் கனக்காட்சி

### வேறு

238. விரைந்திருந்து தின்பதற்கு முண்பதற்கு மேமிகக்
கரைந்திருந்து கண்டுயின்று காணுநற்க னவமே.

கனவமென்றது கனவினையுடையேமென்றவாறு ; இதனை, 'இன்ன வூரேம் இன்னபுடையேம்' என்றாற்போலக் கொள்க.

இனிப் பசாசுகள் தாந்தாம் காணும் கனவைச்சொல்லத் தொடங்கின.

(வி - கு.) பேய் கனவுகண்டதாகக் கூறல் : "நங்கள் கணிதப் பேய் கூறு நனவுங் கனவுஞ் சொல்லுவாம்", "கனவுரைத்த பேயினைக் கழுத்தினிற் கொடாடுமே" (கலிங்க. 213, 297) ; "என்வினைப்பெலாம் விளம்ப விரவுகண்ட தொருகன, நனவெனத் திகழ்ந்ததென்ன வொன்றுமின்று நவிலுமே" (மோகவதைப். 226.) (கஎ)

239. கடன்முகந்து [1]தனியெழுந்த முகில்விழுந்த கனவுகண்
[2]டடன்முகந்த திகிரிமொய்ம்ப னமளிமண்டி யறிதுமே.

எ - து சமுத்திரசலத்தை முகந்தெடுத்ததொரு கருமேகம் தனியே பூமியில் விழுந்ததாகக் கனக்கண்டு கனவிடுக்கும்படியுணர்ந்து மேகவர்ண மகாவிஷ்ணுவேயெனவெண்ணி வலியைமுகந்தெடுத்த திகிரியையுடைய அழகனை நினைந்து அவனுடைய படுக்கையான திருப்பாற்கடலளவுஞ் சென்றோடியறிவோம் எ - று.

திகிரி - சக்கரம். 'முகுந்த திகிரிமொய்ம்பன்' என்றால் முகுந்தனும் அவனே, திகிரிமொய்ம்பனும்அவனே; 'ஆயன்சாத்தன்' என்பதைப் போல; முகுந்தன் - விஷ்ணு. இவற்றில் வலியைமுகந்தெடுத்த சக்கர மொய்ம்பனென்பது அழகிது. அன்றெனிற் சத்தம் புனருத்திப்படும். கனைக் கனவானபடி: "குறியத னிறுதிச் சினைகெட வுகர, மறிய வருதல் செய் யுளு ளுரித்தே" (உயிர்மயங்கு. 32); இது தொல்காப்பியம்.

(வி - கு.) உரை. கனவிடுத்தல் - கனவிற் கண்டவற்றை விளங்கச்செய் தல். புனருத்தி - கூறியது கூறல்.

(பி - ம்) 1 'கனமெழுந்து' 2 'டடல் புகுந்த' 'டடன்முகுந்த' (கஅ)

240. [1]கடைபயின்ற பவனமண்ட முகடுகொண்ட கனவொடும்
புடைபெயர்ந்து தனை [2]விரிஞ்சன் முளரிசென்று புகுதுமே.

எ - து உகாந்தங்களைச்செய்து பழகிய மகாவாதம் ஆகாசத்தின் முகட்டையிடித்துப் பொடிசெய்ததாகக் கனக்கண்டு இக்கனவிடுக்கப்பார்த் தெழுந்திருந்து தனியே ஓடிப்போய்ப் பிரமாவினுடைய இருப்பான தாமரை யிலே சென்றுபுகுவேம் எ - று.

பவனம் - காற்று. புடைபெயர்தல் - எழுந்திருத்தல். தனியென்றது தனித்தனி கனக்கண்டு தனித்தனியே போயினேமென்றவாறு. தனி விரிஞ்ச னென்று பிரமாவின்மேலே ஏற்றுவாருமுளர்; அது பொருளன்று. முளரி யென்பதனைப் பிரமலோகமெனினுமமையும்.

(வி - கு.) உரை. முளரி......அமையும்: "தாருடைத் தனிமல ருலகின் றுதையும்" (கம்ப. பிணிவீட்டு 17.)

(பி - ம்) 1 'கடைபெயர்ந்து' 2 'விரிஞ்சனமளிசென்று' (ககூ)

## வேறு

241. என்றுபேயடைய நின்றுபூசலிட
விங்குநின்றுபடை போனபேய்
ஒன்றுபேருவகை சென்றுகூறுகென
வோடிமோடிகழல் சூடியே.

எ - து இப்பிரகாரமே தேவிக்குப் பசாசகணத்தார்களெல்லாம் முறை யிட்ட அவசரத்திலே பண்டு இங்குநின்றும் ஈசுவரனருளால் யுத்தத்துக்குப் போன பேய்ப்படைகளில் ஒன்று அங்குநின்றும் உவகையாக ஓடித் தேவி யுடைய ஸ்ரீபாதங்களை நமக்கரித்து எ - று.

படைபோகையாவது படையொடுபோதல், படைக்குப்போதல், படைக் கட்போதல், படையாய்ப்போதல்; பிறவுமுணர்க. மோடியென்றது பெருமையுடையாளென்றவாறு; எல்லாரையும்பெற்ற வயிற்றையுடையா ளென்றுமாம்.

(வி - கு.) மூ. படைபோன: "விடைபோ மனங்கன்போல் வேல்விழி கடாமும், படைபோய் வருவனபோல்" (விக்கிரம. உலா.) உரை. மோடிது... என்றுமாம்: "உயரமும் பெருமையும் வயிறுமோ டெனல்" (பிங்கலந்தை, 4001.)
(உ0)

242. இரைத்தகூர்பசி யுழந்தபேய்களினி
யென்பின்வாருமென முன்புசென்
றுரைத்ததோவதுவு மில்லையோதிரிய
யாகசாலைபுக வோடவே.

எ - து தேவியின் ஸ்ரீபாதத்தை நமக்கரித்தபேய் எழுந்துநின்று, பேராசையால் வீங்கியபசிமிக்கு வருந்தியபேய்களெல்லாம் இனி என்பின்னே வாருமென முன்னேபுக்குச் சொல்லிற்றோ இல்லையோ தெரியாது, பின்னையும் யாகசாலையிற் புக ஓட எ - று. இரைத்தல் - வீங்குதல்.

(வி - கு.) உரை. யாகசாலை என்றது தக்கன் யாகசாலையை. (உக)

243. ஓடுகின்றதனை நின்றபேய்தொடர
வோடியோடியுளை யப்பிடித்
தாடுகின்றகொடி மாடமுன்றில்விட
வையைகண்டருளி யதனையே.

எ - து சம்பிரமித்து யாகசாலையிற்புக ஓடுகின்றபேயை நின்றபேய் தொடர்ந்து ஓடிப்பிடித்து வருந்தும்படி மகாகாளிதிருக்கோயிற் றிருமுற்றத்துக்கொண்டுவர அதனைத் தேவிகண்டருளி எ - று.

ஆடுகின்ற கொடிமாடமுன்றில் - திருக்கொடியேறி அசைகின்ற அலங்காரத்தையுடைய வாயில்மாடத்திருமுற்றம்.

(வி - கு.) மூ. ஆடுகின்ற கொடி மாட முன்றில் : "தேவர் புகுதரூஉஞ் செழுங்கொடிவாயிலும்" (மணி. 6 : 40), "கூடஞ்சூழ் மண்டபமுங் குலாய வாசற் கொடித்தோன்று, மாடஞ்சூழ் கோயிலே" (திருஞா. தே.), "பூங்கொடி வாயி னண்ண" (பெரிய. மனுநீதி. 29.) (உஉ)

244. அஞ்சலென்றுதிரு [1]வாய்மலர்ந்தயனு
மம்பரத்தவனு மும்பரும்
எஞ்சலின்றியுட னின்றவிந்தபடி
[2]யெம்படைக்குரைசெய் கென்னவே.

எ - து அங்குநின்றுவந்த பேயைப்பார்த்துப் பயப்படவேண்டாமென்றருளிச்செய்து பிரமனும் தேவேந்திரனும் தேவர்களும் குறையாமே நின்றுபொருது இறந்துபோனபடியை நம்படைக்குச் சொல்லுவாயாக வென்ன எ - று.

அம்பரம் - ஆகாசம். எஞ்சல் - குறைதல். அவிதல் - சாதல். செய்கவென்னுஞ்சொல் செய்கென்றாயிற்று, செய்யுளாதலால்; அகரந் திரிந்து உகரமாயிற்று ; "வருகென வந்து போகெனப் போகிய, கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமும்" (8 : 82 - 3); இது சிலப்பதிகாரம்.

(பி - ம்) 1 'வாய்மலர்ந்தருளி' 2 'யெம்படைக்கு முரையென்னவே', 'நம்படைக்கு மொழிகென்னவே' (உங)

எ.—பேய்முறைப்பாடு முற்றிற்று.

## அ. காளிக்குக் கூளி கூறியது

[இதில் தக்கயாக சங்காரம் கூறப்படுகின்றது]

245. பாவியார்சிறு தக்கனொரொரு
பக்கமாய [1]பரம்பரன்
தேவியான்முனி வுண்டுபட்டது
கேண்மினென்றது செப்புமே.

பாவியாரென்றதைப் பதித்துச்சொல்லி எளிமையிற்கொள்க. சிறு தக்கனென்றது அறிவுசிறிய தக்கனென்றவாறு ; தக்கன் - தட்சன். ஒரு பக்கமென்றது பெண்பக்கமென்றவாறு.

இது சருவலோகமெனினுமாம்; ஈசுவரனிடப் பக்கமென்னுமாம். இப் பொருள் நல்லமாகேசுவரம். போதத்தியாக காருணியத்தையுங்கடந்தது இது; இதனை வாதுளமென்னும் சிவாகமத்திற்காண்க. இது கருதியே ஈசுவரனை நினையாதே ஒருபக்கமென்றது.

இப்பாட்டின் ஈற்றில் 'செப்புவாம்' என்னும் பாடமுமுண்டு.

(வி - கு.) மூ. 'அது' என்றது படைபோன் பேயை. உரை 'இது' என்றது ஒரு பக்கத்தை. (பி - ம்) 1 'பரம்பரத்' (க)

### தக்கன் யாகம்

246. எல்லைநாயக ராசராச
புரேசரீச ரிதற்கெனும்
தொல்லைநான்மறை நிற்கமற்றொரு
கேள்விவேள்வி தொடங்கியே.

ஏ - து எல்லையென்பது மனுஷ்யலோகம். இதற்குநாயகனை சோழனுடைய இராசராசபுரத்தின் ஈசுவரனை இராசராசேசுவரமுடையார் யாகத்துக்குக் கர்த்தாவெனச்சொல்லுகின்ற புராணவேதங்களான சாத்திரம்நிற்க வேறொருசாத்திரத்தைப்பற்றி யாகத்தைத்தொடங்கினான் தட்சன் எ - று.

எல்லையென்றதனால் வரம்புடையார் மனுஷ்யரென்வுணர்க. எனவே மனுஷ்யருடைய வரம்பழியாமற்காப்பவன் சோழனென்பது. இதற்குக் காரணம் நரபதியென்னும்பெயருடையனாதல். இதற்கென்றது, "சுட்டு முதலுகர மன்னொடு சிவணி, ஒட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே" (தொல். உருபு. 4) என்பதனாலும், "னஃகான் றஃகா னன்க ளுருபிற்கு" (தொல். புணர். 21) என்பதனாலும் கொள்க. "பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும், பொருள்வேறுபடாஅ தொன்று கும்மே" (கிளவி.சூ. 37); இது தொல்காப்பியம்.

[தொல்லைநான்மறையென்றது, மாகேசுவர சாங்கியமுதலாக் வேதாந்தமீட்பட்ட நைஷ்கர்ம்மியசித்தி பிரம்மசித்தி தியான்சித்தியீான் சித்தித்திரயங்களைப்பிடித்து ஞானமீமாங்கிச சாத்திரமாகிய நியாயவைசேஷிகங்களைக் குத்திரவாதமென வேறுபடச்சொலிப்பித்து ஈசுவரனிலனென நிரீசுவரசாங்கியம்பற்றிக் கர்மண்யசாத்திர விவாதத்தால் தொடங்கினான் ; மீமாங்கிசா

தரிசனனைக்கண்டபற்றி வேறொருவழியான யாகத்தைத்தொடங்கினென்றன் ஸார். இதற்குக்கேடுப்பாரில்லை.]

பிறவும் உணர்க. எனவே மகாதேவனையொழிய வேறுயாகஞ்செய் யத்தொடங்கினன் தட்சனென்றவாறுயிற்று.

(வி - கு.) மூ. தக்கன் சிவபெருமானைப் புறக்கணித்து வேள்விசெய்யத் தொடங்குதல் இதனுற் கூறப்படுகின்றது.

உரை. இதற்கு - வேள்விக்கு. சிவபெருமான் யாகத்திற்குக் கர்த்தா : "புங்கவ ரெவர்க்கு நல்கும் புவிபுக ழவிகொள் வானும், அங்கியின் முதலும் வேள்விக் கதிபனு மளிக்கின் றானும், சங்கரன் றனே வேதஞ் சாற்றுமான் மகத்துக் காதி, இங்கொருதேவுண் டென்னி னெழுகென வுரைத்தி மாதோ" (கந்த. ததீசிப். 19) ; "எச்சமெனு யாவர்களு மியம்புவார் மாயவனை, யெச்ச வதி பதிசிவனே யெனப்புகலு மெம்மறையும்" (திருநாகைக்காரோணப். புண்ட ரீகமுனிவர் முதற்காட்சியுரைத்த. 29.) கர்த்தா : "கர்த்தா வெனுந்தெய்வ மம்பலத் தேநிற்க" (காளமேகத்தின் பாடல்.) சோழன் நரபதியென்னும் பெயருடையான் : 9, குறிப். 275, உரை ; "குடைநர பதியிவன் மரபு", "அருளு நரபதி முதல்வ பணிமணி முத்தமே" என்பன குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ். (உ)

247\. கங்கைமாநதி வீழ்புறத்தது
கனகலத்தொரு களனிழைத்
தங்கண்வானவர் வருகவென்றனன்
முனிவர்தன் படையாகவே.

[இதில், தக்கன் கனகலத்தில் யாகசாலை சமைத்துத்தேவர்களை அழைத் தது கூறப்படுகிறது.]

ரெ - று கங்காதீர்த்தமான மகாசலம் ஆகாசத்தினின்று மூற்பட வந்து விழுந்தவிடத்துக்குப்புறமாகக்கனகலமென்னும் பெருமையையுடைய ஆரா மத்தில் யாகத்தானம் சமைத்து அவ்விடத்தே தேவர்களெல்லாம் அவிர்ப் பாகங்கொள்ளவருகவென ஆக்வானம்பண்ணினன், முனிவர் தனக்குப் படைத்துணையாகநிற்க எ - று.

(வி - கு.) மூ. கனகலம் : "இனிதென விறைஞ்சியே யேகிக் கங்கையம், புனனதி யதனெரு புடைய தாகிய, கனகல மென்பதோர் கவின்கொள் வைப்பிடை விணபுரி கம்மியன் விதித்தன் மேயினன்" (கந்த. சாலைசெய். 8.) உரை. ஆராமம் - சோலை; "இவற்கு முகிலூர்தி, அந்தப் புரத்தி லாராம மந்தப் புரத்திற் காராமம்" (வி. பா. திரௌபதிமாலையிட்ட 41.) ஆக்வானம் = ஆஹ்வானம் - அழைப்பு. (௩)

248\. அழைத்தவானவர் பயணமென்றனு
மவுணர்நின்றில ராசையால்
[1] இழைத்தயாக விபாகமுற்பட
வுண்ணலாமென வெண்ணியே.

[இதில், அசுரர்களும் யாகத்திற்குப்புறப்பட்டமை கூறப்படுகின்றது.]

ரெ - று ரிஷிகளால் ஆக்வானஞ்செய்யப்பட்ட தேவர்கள் சுவர்க்கத்தில் நின்றும் கனகலபூமிக்குப் பயணமென்னுமளவில் இரணியாட்சன் முத

லாகிய தானவதயித்தியரான அசுரர் தங்களுடைய சோணிதபுரத்துநின்றும் புறப்பட்டுப்போந்தார், ரிஷிகளாற்செய்யப்பட்ட யாகத்தில் அவிர்ப்பாகங் கொண்டு அநுபவிக்கலாமென்னும் எண்ணத்தால் எ - று.

இதனாற்பயன், மந்திரங்களால்அழைத்திலர் அசுரரை ; அவர் தேவர்கள் பயணத்தால் அறிந்துவந்தாரென்பது.

(வி - ரு) உரை. பயணம் : பிரயாணம்என்பதன் மரூஉ ; 261 ; "பரி வேட்டை யாடுதற்குப் பயணமென்றே", "விட்டவதி கைப்பதியி னின்றுபய ணம்பயணம் விட்டு" (கலிங். 265, 287); "நன்றுட் கொண்டு பெரும்பயண மெழுகவென்று நலஞ் சாற்ற", "கழறிற்றறிவார் தாமும் பயணமுடன்" (பெரிய. சேரமான். 46, 129) ; "பயணம் புறப்படு வித்து" (ஷை. வெள் ளானை. 18.) ; "வல்லவலத்திசையாகிற் பொருளேசேரும் வருபயணம் போதலரும்" (நூடிநூல்). உரை. சோணிதபுரம் : அசுரர்நகரத்தின்பெயர் ; "அவுணர் கோமான், சோணித புரத்துக்கேளிர் தொகையொடுந் தொடர்ந்து சென்றான்" (கந்த. சாலைசெய். 43.)

(பி - ம்) 1 'இழைத்தபாக' (சு)

## தக்கன்யாகத்திற்குத் தேவர்முதலியோர் வருகை

### திக்குப்பாலகர்

249. [1]பாவகாதிகள் லோகபாலர் பரந்துவந்து புரந்தரன்
[2]சேவகாதிகள் போலநாலிரு வேழமேறினர் சேரவே.

எ - து தேவர்களில் உலோகபாலகரான எண்மரும் எட்டானைமேலே றித் தேவேந்திரனுடைய சேனைத்தலைவரைப்போல வானத்துத் தங்களிற் சேர்ந்துவந்தார்கள் எ - று.

பாவகாதிகள் - அக்கினிதேவன் முதலாகவுள்ளோர் ; பாவகன் - அக் கினிதேவன். பாவகாரிகளென்பது பாடமாயிற் பாவஞ்செய்தவர்களென்று பொருளாம்.

(வி - ரு.) இது முதல், 253 - ஆம் தாழிசைமுடியத் திக்குப் பாலகர், துவாதசாதித்தர், ஏகாதசருத்திரர், அசுவினிதேவர்கள், மருத்துக்கள், விசுவ தேவர்கள், அட்டவசுக்கள், சுக்கிரபிரகஸ்பதிகள் முதலியவர்களும், ஏனை யோர்களும் தக்கன் யாகத்திற்கு வருகை கூறப்படும்.

மூ. புரந்தரனென்றது மகேந்திரனை. உலோக பாலர்களுக்குத் திக்க யங்களே வாகனமென்பது, "திசைக்களி றூர்தித் திக்கிற் காவல ரெண் மர்" (கம்ப.) என்பதனாலறியப்படும். உரை. பாவகாரி : "சோய் செய்த பாவ காரியிற் பிறந்த பாவியேன்" (கம்ப. கிளைகண்டு. 99.)

(பி - ம்) 1 'பாவகாதிகளும்' 2 'சேவகாரிகள்' (ரு)

### துவாதசாதித்தர்

250. திங்கள்வெண்குடை மேலெறிப்ப
அருக்கர்பன்னிரு தேரினும்
தங்கள்வெங்கதிர் நடுவெறித்தன
ருடுவெறிப்பொளி தவிரவே.

திங்கள்போலும்வெண்குடை திங்கள்வெண்குடை. அருக்கர்-ஆதித்தர். உடு - நக்ஷத்திரம். (சு)

## ஏகாதசருத்திரர்

251. ஏறுகளிறென வேறியெரிவிழி யீசர்பதினொரு [1]தேசரும்
[2]கூறுபடுபிறை யாறுசுழல்சடை யோடுமுடுகினர் கூடவே.

இதன்பொருளறிக.

(வி - ரு.) மூ. ஏகாதச ருத்திரர்களுக்கு எருதுகள் வாகனமென்பதை இந்நூல் 461, 580 - ஆம்தாழிசைகளாலும் அறியலாகும்.

(பி - ம்) 1 'நீசரும்' 2 'கூறுபடவிடை' (எ)

## அச்சுவினி தேவர்கள்

252. [1]விண்மருங்கமரர் தம்முடன்பழகி
வேள்வியாவுதி யுண்ணவோ
புண்மருந்திட வெண்ணியோகடி
தாயுள்வேதியர் போதவே.

ஆயுள்வேதியர் - அசுவினிகள்; இவர்கள்கோயிலார்.

(வி - ரு.) மூ. ஆவுதி - ஆகுதி; "புக்கா வுதிகள் பலவேற்றும்" (தக்க. 46) என்பதன் குறிப்பைப் பார்க்க. உரை. கோயிலார் - இந்திரன் அரண்மனையிலுள்ளவர்கள்.

(பி - ம்) 1 'விண்பொருந்த மரர்தம்மொடும் பழைய வேள்வி யாகுதிகளுண்ணவோ' (அ)

## மருத்துக்கள் முதலியோர்

253. மருக்கணங்களும் விசுவதேவரு மற்றையட்ட வசுக்களும்
குருக்களும்பிற ருங்கடாவு விமானகோடிகள் கூடவே.

மருக்கணங்கள் - மருத்துக்களும் அவர்கள்கணங்களும்; கணங்கள் - கூட்டங்கள். விசுவதேவராவார் பிராமணர்பூசைக்கு முற்பட்டுநிற்குந்தேவர்களுள் அன்னக்கொடியர். அட்டவசுக்களாவார் பஞ்சலோகங்களுங் காத்தற்குரியோர். குருக்கள் - சுக்கிரபிரகஸ்பதிகள். பிறர் - மற்றுந்தேவர்கள். விமானகோடிகளென்றது, கோயிற் பரிகரங்களின் விமானங்களையுமுளப்படுத்தி. (க)

## இந்திரன்

254. சோதிநேமியும் [1]வச்ரமாலையு மருளிநின்று துளும்பவே
யாதுகற்பகம் யாதுமேரு [2]வெனத்தெளிந்திலர் யாதுமே.

எ - து சோதிச்சக்கரமும் வயிரமாலைகளும் தம்மில் மயங்கிச் சோதி விடுதலின் யாதுகற்பகம் யாதுமகமேருவென யாதும்உணர்ந்திலர் எ - று.

வச்சிரமாலை - இந்திராதிகளின் தோரணமாலை. சோதிச்சக்கரம் - நட்சத்திரதாரகாகணங்களைக் கோத்துநிற்பதொரு மகாசோதிமண்டலம். யாது மென்பதனை யாருமென்று பாடஞ்சொல்லுவாருமுளர்.

(வி - ரை.) இதுமுதல் 259 - ஆம் தாழிசை வரை இந்திரன் வருகை கூறப்படும். மூ. வச்ரமாலை : " நகைசெய் வச்சிர நாயக மாலையும் " (தக்க. 280.) யாதும் - சிறிதும்.

(பி - ம்) 1 ' வச்ரபாணியும் ' 2 ' வெனத்தெளிந்திலம் ' (கo)

255. [1]வேய்திரைக்கட லேழுமம்புத மேழுமையல் [2]விளைக்கவெம்
மாதிரக்களி றெட்டுமாதி விலங்கலெட்டு [3]மயங்கவே.

வேய்திரைக்கடல் - திரைவேய்கடல். அம்புதம் - மேகம். மேகமேழா வன : காளமேகமே நாளப்பிரியனே காஞ்சனபரியே புட்பதனே வானதனே நிருசகாயனே மேகநாதனேயென்பன. மாதிரம் - திசை. வெம்மை யானைக்கு அடை. மலையெட்டுமென்றது மகாமேருவின் எட்டுக்கூடங்களை ; குலபருவதங்களென்றுமாம்.

(பி - ம்) 1 ' வார்திரைக் ' 2 ' விளைக்கவே ' 3 ' மழுங்கவே ' (கக)

256. குரத்துரங்கமும் வெய்யகாலு
மனத்தின்மையல் கொளுத்தவே
அரக்கர்வெள்ளமு முள்ளதீயு
நிகர்ப்பயாரு மயர்ப்பவே.

குரம் - குதிரைக்குளம்பு. துரங்கம் - குதிரை. கால் - காற்று. நிகர்ப்ப - தம்மிலொப்பன. அரக்கர்குழாமும் நெருப்பும் தம்மிலொப்பன, கடுமையும் கொடுமையும் ; இதற்கு எல்லாரும் மயங்குவரென்பது பொருள். (கஉ)

257. [1]மீதுபோநதி யும்பதாகையும் வேறுபட்டில விண்ணிலே
ஆதபத்ரமு மண்டகோளமு மொத்துமம்ம ரளிக்கவே.

மீதுபோம் நதி - ஆகாசகங்கை. பதாகை - கொடி. ஆதபத்திரம் - குடை ; இது காரணப்பெயர் ; வெயில்நீக்கி என்பது ; ஆதபம் - வெயில், த்ரம் - நீக்குதல் ; புத்திரசத்தம்போல ; புத் - நரகம், த்ரம் - நீக்குதல் ; நரகத்தில்நின்றும் பிதாவைநீக்குவான் புத்திரனென்பது பொருள். அண்ட கோளம் - பிரமாண்டம். மம்மர் - மயக்கம்.

(வி - ரை.) மூ. மீது போநதியும் பதாகையும் வேறுபட்டில : " வெண் கொடி யார்மால்.........கங்கையு மென்னவே " (தக்க. 634) ; " மங்குறவழ் வெண்கொடியும் வானதியு மணியால், வெங்கதிர்செய் மாடமிசை வேற்றிய லாகா" (நைடத. நகரப். 23) ; "வாடைதொறு மாடுகொடி மாகநதி மானும்", " துறைகொள் கங்கையின் பெருக்கமோ......மாடமேற் செழுமணிக் கொடியிட்டம் " (திருக்குற்றாலப். திருநாட்டுச். 36 ; திருநகரச். 9.) பதாகை - பெருங்கொடி யென்பாருமுளர். (பி - ம்) 1 ' மீது பொன்னதி ' (கங)

258. விட்டகார்முகில் யாவையாவர் சுரேசரென்று வியக்கவே
இட்டகார்முகம் யாவையாவை யெடுத்தகார்முக மென்னவே.

விட்டகார்முகில் - ஏறிவந்து மீளவிட்டமேகங்கள். சுரேசர் - தேவ ராசாக்கள் ; தேவலோகம் பலவென்க ; இப்பொருளை வேதத்திலும் உரப

ணன் கதையிலும் கண்டுகொள்க. எடுத்தகார்முகம் - தேவராசாக்கள் எடுத்த விற்கள்; அவை பொன்னும் இரத்தினமுமெனவுணர்க. (கஎ)

259. அலங்கையிற்படை யுடைய[1]நம்பியொ
டெதிர்பயோததி யனையதோர்
இலங்கெயிற்றயி ராபதத்தொடு
கடிதுவந்தன [2]னிந்திரன்.

எ - து கலப்பையைக் கையிற்படையாகவுடைய ஸ்ரீபலதேவனையும் பாற்கடலையுமொத்த வெண்ணிறத்தினையுடைத்தாயிருக்கும் ஐராபதத்தை ஏறிவந்தான் இந்திரன் எ - று.

ஸ்ரீபலதேவருடனே ஒருபாற்கடல் வருவதாயின், அதற்கு எதிர்போது வெள்ளானையென்பதுபொருள். இலங்கெயிறு-விளங்குகின்ற கொம்பு; கையும் மத்தகமும் கொம்பும் கலப்பைக்கு ஒப்பென்பது. 'எதிர் பயோததி' எனவும் பாடம்.

(வி - கு.) மூ. அலங்கையிற் படையுடைய - அலத்தைக் கையில் படையாகவுடைய. பயோததி - பாற்கடல்; இது வெள்ளையானைக்கு உவமை; 274.

உரை. கையும்......ஒப்பு: "பிடிவாயன்ன மடிவாய் நாஞ்சில்" (பெரும்பாண். 199), "உறளூறு கமழ்கடாஅத் தொல்கிய வெழில்வேழம், வற னுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர" (கலி. 8 : 4 - 5), "யானைத், தூம்புடைத் தடக்கை வாயொடுதுமிந்து, நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள" (புறநா. 19 : 9 - 11), "வெள்ளிவெண் ணாஞ்சிலான் ஞால முழுவனபோல், எல்லாக் களிறுநிலஞ்சேர்ந்த" (களவழி. 40), "அலப்படை யனைய தூங்கு வாய் நெடுங்கை யலைசெவி வாரணம்" (விநாயக. திருநகரப். 21.)

(பி - ம்) * 1 'தம்பியொடெதிர்பயோததியன்னதோர்' 2 'னிந்த்ரனே' (கஅ)

## பிரமதேவர் வருகை

260. மைந்தரான சுரேசரோடசு ரேசர்முன்வர [1]மதிமருண்
டந்தணாளு மலரில்வந்தனன் முனிவர்[2]தன்புடை யாகவே.

அசுரரும் பிரமபுத்திரராயிருக்கச்செய்தே தேவர்களே மக்களாகியா ரெனச்சொல்லியது, வேதஞ்சொன்னபடி அசுரர்செய்திலரென்பதனால். சுரர ஈசர்=சுரேசர் - தேவேந்திரர். அவர்கள் இரண்டு திறத்தாரும் முன்புவர வந்தான் பிரமன். மலரிலேறுகையாவது புட்பவிமானத்தி லேறுகை. அஞ்சவிமானத்தைத் தவிர்ந்தது, மதிமருண்டு; கடுகவரு தற்கு அன்னங்களைப் பூட்டவேண்டும், மலர்பூட்ட வேண்டாவெனக் கொள்க.

(வி - கு.) உரை. இருக்கச் செய்தே: 'சொல்லச் செய்தே' (தக்க. 391 - உரை) என்றதைப்போன்ற ஒரு தொடர்மொழி; இருக்கச் செய்தே: இது 'இருக்கச்சே' எனவும் வழங்கும்; இதை, திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களி லும் சிலப்பதிகார அரும்பதவுரையிலும் காணலாம். அஞ்சவிமானம்: "அன்னத்தேரயன்" (திருவா. தே.) "அன்னத்தே ரேறியயன் வலப்பாற்கை போத" (ஆதியுலா.) "அன்னத்தேரின் னயன்வலப் பாங்கரும்" (திருவிளை. திருமணப். 113.) (பி - ம்) 1 'மதிவெருண்' 2 'தன்படை' (கசு)

## திருமால் வருகை

261. ஆதிநான்முக னொடுசுராசுரர் வரவுசொல்லி யமைந்ததோ
சோதிநேமி [1]வலத்தினொரு பயணநின்றது சொல்லுவாம்.

ஆதிநான்முகன் நான்முகனாதி யென்க.

ஏ - து பிரமாமுதலியவருடன் கூடித் தேவர்கள் வரவுசொல்லவே இக் காரியம் தீர்ந்ததில்லை; மகாவிஷ்ணுவின்வரவுமுண்டு; அதுசொல்கின்றோம் எ - று.

வலத்தினன் வலியனென்றுமாம்.

(வி - ரு.) இது முதல் 286 - ஆம்தாழிசை வரையில் திருமாலின் வரவு கூறப்படும். மூ. பயணம் : 248 - ஆம் தாழிசையின் குறிப்புரை முதலிய வற்றைப் பார்க்க.

(பி - ம்) 1 'வலத்தினன் வருபயணமென்றது' (கஎ)

## குதிரைகள்

### வேறு

262. மரகத மேயென லாய வனப்பின
குரகத மேபதி னாயிர கோடியே.

குரகதம் - குதிரை ; குரம் - குளம்பு ; கதம் - நடக்கை.

(வி - ரு.) இது முதல் 267 - ஆம்தாழிசைமுடியத் திருமாலொடு வந்த குதிரைகளின் சிறப்புக்கள் கூறப்படும்.

இத்தாழிசையிற் பச்சைக்குதிரைகள் கூறப்படுகின்றன. (கஅ)

263. [1]ஏறிய தாமிவை போகில மெனவே
கூறிய கற்கிக ளேசத கோடியே.

கற்கிகள் - கற்கியென்னும் வர்க்கக் குதிரைகள். தாமென்றது, இவற்றின்மேலேறின வாசிவாரியர்களை. 'இக்குதிரைகளின்மேலேறுதற்குப் போகிலம் நாம்' என்று அவர்களாற் கூறப்பட்டன நூறுகோடிகுதிரைகள்; "ஏவ லிளிவெனக் கண்ணிப் பாகன் மனக்க ணியக்கம் பூண்டமா னத்து." இஃது உதயணன் கதை.

(வி - ரு.) இதிற் கூறப்படுவன கற்கிகள்.

உரை. வாசிவாரியர் - குதிரைகளைத்தடுத்து நடத்துவோர் ; "வாய்ந்த மா னுகைத்த வாசி வாரியப் பெருமா னெங்கே" (திருவால. 29 : 17.)

(பி - ம்) * 1 'ஏறிய நாமிவைபோல் கிலமென்றே' (கக)

264. கவனமுவப்பன கரியவனப்பின
பவனம்வியப்பன பற்பல கோடியே.

கவனம் - கால்கொள்கை முதலாயின தொழில். கரியவனப்பினவென்றது கரியவுமாய் அழகியனவென்பது; விஷ்ணுக்கள் தம்மை யொப்பன வென்றவாறு. பவனம் - காற்று.

(வி - ரு.) இதிற் கரிய குதிரைகள் கூறப்படுகின்றன.

ஒ. கரியவனைப்பின : " அல்லியாண்டமைந்த மேனி யழகனும் " (கம்ப. குகப். 42); " கறுப்பிலழகனடி " (திருக்குற்றாலக்குறவஞ்சி.) (உ0)

265. [1]தரங்க நிரைத்தன தரளநிரைத்தன
துரங்கமெனைப்பல கோடிதொகுத்தே.

எ - து முத்தை நிரைத்தாற்போன்ற தோற்றத்தையுடையவாய குதிரைகள் ஒன்றன்பின்னொன்று வாராதேநிரைநிரையாக வருகின்றவை, கடலிற் றிரை அளவுபடாது அமையாதுவருகின்றனபோலும்; அவை கணக்கின்றிப் பலகோடியுள்ளன எ - று.

'தாழநிரைத்தன' என்றுபாடஞ் சொல்லுவாருமுளர்; தரங்கநிரைத்தனதாழவென்றுகொள்க; தாழ - தாழ்த்து.

(வி - ரு.) இதிற் கூறப்படுவன வெண் குதிரைகள்.

ஒ. தரங்க நிரைத்தன : " ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோக மாக்கள் " (திருவிளை. திருமணப். 11.) எனைப்பல : " எனைப்பல வுமே " (தக்க. 729.) (பி - ம்) 1 'துரங்க' (உக)

266. [1]வெய்யனசெக்கர் விசும்புவெளுக்கச்
செய்யனவாயிர கோடிதிரண்டே.

செச்கர்விசும்பு - மாலைப்பொழுது.

(வி - ரு.) இத்தாழிசையிற் சிவப்புக்குதிரைகள் கூறப்படுகின்றன.

ஒ. செக்கர் விசும்பு வெளுக்கச் செய்யன : இது, " மதிகரு கக்காயு நிலாவின " (தக்க. 270) என்பது போன்றது. செக்கர் விசும்பு : அன்மொழித்தொகை.

(பி - ம்) 1 'மெய்யன' (உஉ)

267. பைத்துரகங்கள் விசித்த படைப்பரி
கைத்துரகங்கள் கலந்திடை யிட்டே.

எ - து படமுடைய பாம்புகளை வாராக விசித்துக் கட்டப்பட்ட கலனையையுடைய குதிரைகள் முன்புவந்த குதிரைகளின் இடையிட்டு வந்தன எ - று. பரிகை - காவல்.

(வி - ரு.) ஒ. பாம்புகள் கயிறாக விசிக்கப்படுதல் : 382, 411. (உ௩)

## தேர்கள்

### வேறு

268. திரையைத்தோய்வன நாவிரு
திசையைச் சூழ்வன சூழ்வரு
சிலையைப்போல்வன தானவர்
திரளைப்போழ்வன வேழ்குல

வரையைப்பாய்வன சூன்முதிர்
மழையைக்கீள்வன [1]கால்கொடு
மதியைக்காய்வன பேரொளி
வயிரத்தேர்சத கோடியே.

[இது முதல் மூன்று தாழிசைகளால் திருமாலொடு வந்த தேர்களின் பெருமை கூறப்படும்.]

திரையைத் தோய்தல் - நீர்மேலோடுதல்; இது நொய்ம்மை. எட்டுத் திசையையுஞ்சூழ்கை: இது கடுமை. சூழ்வருசிலையைப் போல்வனவென்றது ஒருசக்கரவாளபருவதத்தை ஒருதேரே அளவொப்பதென்றவாறு. தானவர்திரளைப்போழ்தல் - அசுரரைக்கெடுக்கை. வரையைப் பாய்கை - மலையைக் கிடாய்போல முட்டுகை; தேர் முட்டும். மழையைக் கீள்கை - கருமுற்றின மேகத்தைப்பிளத்தல்; அவற்றின் செறிவைநீக்குதல் எனவுமாம். கால்கொடு மதியைக் காய்வன - தம் உருளையைக்கொண்டு சந்திர வட்டத்தையொப்பன. வயிரத்தேர் சதகோடியே - வயிரக்கால் சமைத்த தேர் நூறுகோடி.

(வி - கு.) மூ. சூன்முதிர் மழையைக்கீள்வன: "கார்வயி றுடைக்குங் கூம்புடைத் தடந்தேர்" (கூர்ம.) காய்வன - ஒப்பன; காய்: உவமவுருபு; தொல். உவம. சூ. 16. உரை. தேர் நீர்மேலோடுதல்: "நீத்து நீர்ப்பரப்பினி வந்து சென்மான்றேர்" (தொல். செய். 15, பேர். மேற்.)

(பி - ம்) 1 'காரொடு' (உச)

269. பவனப்போர்விர வாதன
பருவத்தீயுறை யாதன
பரவைக்கால்குளியாதன
பறியப்பேரிடிபோல்வன
கவனத்தாலெழுவாரிதி
கழியப்பாய்பரி மாவின
கமலத்தோன்முடிதாழ்வன
கனகத்தேர்சதகோடியே.

வாயுவின்பூசலைச்சேராதன; எனவே உகாந்தவாயுவால் அழிக்கப்படாதன. பருவத்தீக்கும் அப்படியே. கடலிற் றேர்க்கால் புகாதன; எனவே நீர்மேலோடுவன. பறியப்பேரிடி - உலகம்பறியும்படி இடிக்குமிடி; இது தேர்முழக்கம்; "அர்ச்சுனன்தேர் கடலொத்தது; ஆசாரியன்தேர் மழையொத்தது" என்னும் ஒப்புணர்க. ஒருதாவுகையால் எழுகடலையுங் கடக்கவல்ல குதிரைகளாற் பூணப்பட்டன; வாரிதி - கடல். பிரமா நமக்கரிக்கை பிதாத்தானத்தாலெனக்கொள்க. இப்படிப்பட்ட பொற்றேர் நூறுகோடி.

(வி - கு.) உரை. பிதாத்தானத்தாலென்றது, இத்தேரினையூரும் விஷ்ணுவை நினைத்து. (உரு)

270. கடையிற்காயெரி [1]போல்விரி
கனலிக்கே[2]குளிர் கூர்வன
கதுவிச்சீதக லாமதி
கருகக்காயுமி லாவின

சடையிற்பாய்புனல் வானவர்
தறுகட்டீயொடு மூள்வன
தமரச்சேனைய ருதன
தரளத்தேர்சத கோடியே.

உகாந்தகாலத்தில் ஆதித்தர்களைக் குளிர்விப்பன. சந்திரனைச் சென்று கதுவிச் சீதத்தால் அவனும் கருகும்படி நிலாவிடுவன. சீதத்துக்குக் கருகுகையாவது, மாம்பூ பனிக்குக் கருகுகின்றது போல்வது. ஈசுவரருடைய திருக்கையில் நெருப்புடன் பகைகொள்வன; இது சீதமிகுதி. ஆரவாரதந்திரமெப்போதும் உடையன. அவை முத்தாற்சமைத்த தேர் நூறு கோடி. (பி - ம்) 1 'போல்வன' 2 'களி கூர்வன' (உசு)

## யானைகள்

### வேறு

271. என்று மாதிர மெட்டினுஞ் சென்றுசென்
றெவ்வெட் டாவண்டம் யாவுஞ் சுமப்பன
சென்று தம்பிரான் சேக்கை விரும்பிய
[1]சேடன் றெவ்வைத் தனித்தனி தீர்ப்பன.

எ - து உகாந்தகாலத்து ரட்சாமூர்த்தியின் யானைகளாதலின் அவனேவலாலே ஓரானையே சென்று எட்டுத்திக்கயங்களாகி உலகடையச்சுமக்க வல்லன, அவை மாய்வனவாதலின். போய்த் தம்மையுடைய விஷ்ணுவின் படுக்கையாக விரும்பின சேடனை மகாநாகம் வந்தெதிர்க்கின் இவையிற்றில் ஓரானை தனியேசென்று சேடன்சுமக்கும் பூமியெல்லாம் சுமப்பன எ - று.

[இதுமுதல் நான்கு தாழிசைகளால் திருமாலுடன் வந்த யானைகளின் பெருமை கூறப்படும்.]

(வி - கு.) மூ. என்றும் மாதிரம். உரை. ரட்சாமூர்த்தி - திருமால்.

(பி - ம்) 1 'சேக்கைதோறுந் தனித்தனி தீர்ப்பன' (உஎ)

272. விலங்க லேழிற் றடத்துங் [1]குலநதி
வேலை யேழினு நீர்க்கு விடுவன
பொலங்கன் மேரு கிரிச்சிக ரந்தொறும்
போக விட்டசிந் தூரப் பொடியன.

எ - து குலபருவதங்கள் ஏழிலுள்ள தடங்களினின்றும் புறப்படும் குலவாற்றினும் கடலேழினும் நீர்க்குவிடுவன. மகாமேருவின் சிகரந்தோறும் போகச்செய்த சிந்தூரப்பொடியையுடையன எ - று.

(வி - கு.) மூ. விலங்கலேழிற்றடம் : "முதற் கிரிகளேழினுமரு நளினி" என்பர் பின்; தக்க. 397. உரை. குலபருவதங்கள் : ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி, சிகரியென மலைகள் ஆறு உண்டென்பதும் அவற்றில் முறையே பத்மை, மஹா பத்மை, திங்கச்சை, கேசரி, புண்ட

ரீகை, மஹா புண்டரீகையென ஆறுபொய்கைகள் உளவென்பதும் சைன நூல் வழக்குக்கள். (பி - ம்) 1 'குலகிரி' (உஅ)

273. மழவிற் பாற்கடன் மாந்தி வளர்ந்தன
[1]மதத்தி லக்கடற் பான்முடை மாற்றின
முழவிற் பூரித்த குப்ப குடந்தொறு
மூரி யேழ்கட லுந்தரு மூக்கின.

எ - து இளங்காலத்திற் பாலாகப்பருகுவது பாற்கடலை. வளர்ந்த காலத்துத் தாம்பட்ட மதத்தினாலே பாற்கடலின் முடைநாற்றத்தை மாற்றின. குடமுழாப்போலவிளங்கின கும்பகுடங்கள்தோறுஞ் சிறுதிவலைநீர் விடுமிடத்துக் கடலேழினீரும் ஒருக்காலே போதவிடும் மூக்கினையுடையன எ - று.

கையும் மூக்கும் ஓரிடத்தன வெனவுணர்க. "மழவுங் குழவு மிள மைப் பொருள" (தொல். உரி. சூ. 14.) கும்பகுடமென்றது குடங்கவித்தாற் போன்றிருத்தலை.

(வி - ரு.) மூ. மழவிற்பாற்கடல் மாந்தி வளர்ந்தன : " குழவி பால்குடிப் பது கடல் குடிப்பது " (பிரபு. கைலாய.) 'மதத்திலக்கடற் பான்முடைமாற் றின' என்றதனால், மதம் மணமுடையதென்பது பெறப்படும் ; தக்க. 3, உரை பார்க்க. மூக்கு - துதிக்கை ; " மாதிரக் களிற்றின் வரிக்கைவாண் மூக்கிடை மடுப்ப " (கம்ப. நிந்தனை. 2.) உரை. கையும் மூக்கும் : " நெடுமூக்கிற்கரியி னுரி மூடிக்கொண்டார் " (தே. திருநா. பொது.), " பெயர்க்குறு கால்கள்கை யாகப்பெற்றவும், உயிர்க்குறுதி நாசிகையாக வுள்ளவும், மயக்கறு தீயினை வளர்த்து வான்புனல், பயக்குறு முனிவரர்பணிகள் செய்யுமால் (பிரபு. முனிவர், 13), "கமழ்கந்தங் கையான்மோக்கு மண்ணு " (திருவானைக்காப். கடவுள்.) (பி - ம்) 1 'மதத்திலிகற்கடற்' (உகூ)

274. ஓடு நான்கு பரூஉத்தா ளுடையன
வுருத்தனித்தனி பாற்கட லொப்பன
கோடு நான்கின செக்கர் முகத்தின
[1]குஞ்ச ரம்பதி னுயிர கோடியே.

இதன்பொருளுணர்க.

(வி - ரு.) மூ. உருத்தனித்தனி பாற்கடலொப்பன : தக்க. 259.

(பி - ம்) 1 'குஞ்சரத்திரளாயிர' (௩0)

## வீரர்கள்

275. அப்பெ ரும்புர வித்தொகை[1] மேலுநீ
டாட கக்கொடி யாடுபொற் றேரினும்
எப்பெ ருங்களிற் றீட்டத்தின் மேலினு
மெண்ணில் கோடிநா ராயண ரேறவே.

மனுஷ்யலோகத்திலுள்ளா ரெல்லாரும் சோழனைப்போலிருப்பார் அவன்நரபதியாதலால் ; அதுபோல விஷ்ணுலோகத்தாரெல்லாரும் விஷ்ணு வைப்போன்றிருப்பாரெனவுணர்க.

(வி - ரு.) உரை. சோழன் நரபதியென்பதை, 9, 246 - ஆம் தாழிசை களின் உரையாலும் உணரலாகும்.

(பி - ம்) 1 'மேலுமோரா டகக்கொடிவீடு' (௬௧)

276. முகடு விண்ட பழவண்ட கோளமு
முன்னை மேருவு மிட்டுருக் கிப்பெரும்
தகடு செய்துகொண் டொப்பமு மிட்டன
சாத்தும் பீதக வாடை தயங்கவே.

முகடுவிண்டபழவண்டகோளம் - ஆதித்தன் புறப்பட்ட பழமுட்டைப் பிளப்பு; அல்லவாயின் பிரமாண்டம். இரணியகர்ப்பனென்பது பிரமாவின் பெயர். ஆதித்தன் பிறந்த முட்டையிலே திக்கயங்களெட்டும் பின்னைப்பிறந் தன என்னுங்கதையுமுண்டு. அம்முட்டைச் சிவப்பாலே ஆதித்தனைச் செங்கதிரோன் செய்யோனென்பர். "பருதிக் கருவின் முட்டைக் கதிர் விடும் பெருங்குறை வாங்கி வலங்கையிற் பூமுதலிருந்த நான்முகத் தனிச் சுடர் வேதம் பாடிய மேதகப் படைத்தன வெண்பெரு வேழம்." இஃது இரும்பல்காஞ்சி. முன்னைமேருவென்றது, மகாதேவர்க்கு வில்லாதற்குமுன்னை மகாமேருவென்றவாறு. எனவே வில்லாக்க மகாமேரு சிறிதுசெதுக்கப் பட்டதெனவுணர்க.

[இதுமுதல் 282 - ஆம் தாழிசை முடியத் திருமால் ஆடையையும் அணி களையும் புனைந்து வருதல் கூறப்படும்.]

(வி - ரு.) மு. பீதகவாடை - பொன்னுடை. உரை. செய்யோன் - சூரி யன்; சீவக. 2322, உரை. (௬௨)

277. பொங்க லங்கல் வருண னுரம்புகப்
பொருப்பு மத்தம்[1] திரித்த பொழுதெழும்
செங்க லங்கல் பரந்தெனப் பாற்கடல்
சேப்ப வந்த கவுத்துவஞ் சேர்த்தியே.

பொங்கலங்கல் - பொங்கிய அலங்கல்; என்றது நுரைமாலையை. சேப்ப - சிவக்க.

(வி - ரு.) மு. மத்தம்-மத்து : "மத்தம் புல்லிய கயிற்றின்" (சீவக. 423.) பாற்கடல் சேப்பவந்த கவுத்துவம் ; "கொட்குங், கடல்சேப்ப வந்த கவுத்து வம்" (குலோத். உலா. 236.) (பி - ம்) 1 'திரித்த வந்நாளெழும்' (௬௩)

278. அரிசெய் நாட்டத் [1]தரவிந்த வாணுத
லம்ம ணிக்கெதி ராகவந் தாகத்தில்
எரிசெய் தாமரைப் பூவிட் டிலையிலே
யிருந்த தென்ன வெதிர்வீற் றிருப்பவே.

அரி - செவ்வரியும் கருவரியும். நாட்டம் - கண். அரவிந்தம்-தாமரை. வாணுதல் : அன்மொழித்தொகை. இலை மகாவிஷ்ணுவின் திருமேனியிற் சோதிக்கு ஒப்பு; "அக்கமலத் திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே" (9. 7 : 3) என்பது திருவாய்மொழி.

(வி - ரு.) மூ. 'அரவிந்த...தாமரை': "அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை" (பரி. 13 : 50.) (பி - ம்) 1 * 'தரவிந்தநாயகி' (கச)

279. காலை சூழ்செங் கதிர்முத லாயின
கமலக் காடன்ன கண்ணன் கமழ்துழாய்
மாலை சூழ்முடி சூழ்வரு தற்கொளி
மழுங்கி மேரு கிரிசூழ் வருவதே.

காலை - சிறுகாலை. செங்கதிர் - ஆதித்தன். இது காலையைச்சூழும் கதிரென்றல்லது பொருளாகாது; சூழல் - செய்தல். செங்கதிர் : பண்புத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; முதலாயின - வெண்கதிர் முதலியவை. கமலக்காடன்ன கண்ணனென்றது இரண்டு கமலத்தால் தீரா அழகும் பெருமையும் பிறவுமெனவுணர்க. இவன் திருமுடியில் இரத்தினச் சோதியாலே அவை தம்முடையசோதி மழுங்கின.

(வி - ரு.) மூ. காலை சூழ் செங்கதிர் முதலாயின : "பகற்செய்யுஞ் செஞ் ஞாயிறும், இரவுச் செய்யும் வெண்டிங்களும்" (மதுரைக். 7 - 8); குமரகுருபர. 548; சூரியனுக்குத் திவாகரனென்னும் பெயருண்மையும் இங்கே அறியற் பாலது. கமலக்காடன்ன கண்ணன் : "கருமுகி ருமரைக் காடு பூத்து" (கம்ப. திருவவதாரப். 13); "கரியமால் வரைமுளரிக் காடன்று கிடந்தாங்கு" (திருவரங்கக். 1.) (கரு)

280. நதிக்குப் போத வொழுகுமுத் தாரமும்
[1]நகைசெய் வச்சிர நாயக மாலையும்
மதிக்குப் புன்மறு [2]வாய்த்தெனத் தன்றிரு
மரக தப்பெருஞ் சோதிமெய் வாய்ப்பவே.

நதி - ஆறு. ஆற்றுக்குத் தாமம் ஒப்பு. போதவொழுகுதல், மாயோன் மார்பிலாரம் போலவெனவுணர்க. நகை - ஒளி. வயிரம் இரத்தினங்களின் நாயகம்; இதற்குக்காரணம் வயிரச்சாணையாலே எல்லா இரத்தினமும் கடையப்படுதல். அன்றியும் வலாசுரன் எலும்பு வயிரமென்பர். இவை யெல்லாம் சந்திரனையொத்தன; சந்திரனிடத்து மறுவையொத்தது மரகதச் சோதி. மரகதமென்றது இரத்தினத்தையன்று; திருமேனியை.

(வி - ரு.) மூ. நதிக்குப் போத வொழுகுமுத் தாரம் : தக்க. 106, குறிப் பைப் பார்க்க. உரை. ஆற்றுக்குத் தாமம் ஒப்பு : "இறுவரை யிழிதரும் பொன்மணி யருவியின், நிறனெடு மாறுந்தார்", "மராமலர்த் தாரின் மாண் வரத் தோன்றி, அலங்கு மருவி" (பரி. 13 : 3 - 4, 15 : 20 - 21.) மாயோன் மார்பிலாரம் : "மாயோன் மார்பி லாரம் போல...ருவி" (தொல். பொருள். பேர். மேற்.) வயிரச்சாணையாலே...கடையப்படுதல் : எல்லா இரத்தினமும் என்றதனால் வயிரமும் கொள்ளப்படும்; வயிரம் தன்னையும் ஏனை இரத்தி னங்களையும் சாணைபிடித்தற்குக் கருவியாகுமென்பது "வயிர வூசியு மயன் வினை யிரும்பும், செயிரறு பொன்னைச் செம்மை செய்யாணியும், தமக் கமை கருவியுந் தாமா மவைபோல், உரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே" (அகத்தியம்), "மாமணி மரபுக் கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதி, ஆமென வுரைப்பர் நூலோ ரதிகம்யா தென்னி லேனைக் காமரு மணி கட்கெல்லாந் தமரிடு கருவியாமத், தூமணி தனக்குந் தானே துணையிடுங்

கருவியாகும்" (திருவிளை. மாணிக்கம்விற்ற. 61) என்பவற்றால் அறியலாகும். வலாசுரன் எலும்பு வயிரம்: "பரியவாளென்புவயிரம்" (திருவாத. 25 : 10), "மாசறுதவத்தோனென்பும் வலாசுரனென்பும் வீழ்ந்த...மேம்படுவ யிரம்" (திருவிளை. மாணிக்கம்விற்ற. 59.)

(பி - ம்) 1 'நகைசெயும் வச்ர' 2 'வாய்த்ததன்றுமென' (கசு)

281. அந்திச் சேயொளி முச்சுடர் [1]முக்கணு
மாதிக் காதல்கூ ராயிரம் பேரிதழ்
உந்திச் செந்தனித் தாமரை நாண்[2]மல
[3]ரூடி ருந்த குருசிலோ டோங்கவே.

அந்திச்சேயொளியென்றது வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. முச்சுடர்முக்கணுமென்றது சோமசூரியாக்கினிகளாகிய திருநயனங்களை. இம்மூன்றுதிருக்கண்மலர்க்கும் முற்பட்ட மோகத்தை ஈந்த தொப்புள் விஷ்ணுவினுடைய திருநாபியாதலால் விஷ்ணுவே சத்தியெனவுணர்க. குருசில் - பிரமா.

(வி - கு.) மு. அந்திச்சேயொளி : "அந்திப்போதனையான்" என்பர் பின்; தக்க. 315. அந்திச்சேயொளியென்றது சிவபெருமானை.

உரை. மூன்று திருக்கண்மலர் என்றது இறைவன்திருக்கண்களை.

(பி - ம்) 1 * 'முக்கணெம்மாதி காதல்கூர்' 2 'மலரோடிருந்த' 3 'ரூடெழுந்த குரிசில்' (கஎ)

282. திறத்து மாலைத் திருமுடிப் பக்கமே
சென்ற கன்ற பணங்களுஞ் சேடனும்
புறத்து மாயிரம் வெள்ளித ழாலொரு
புண்ட ரீகமு மண்ண லும் [1]போலவே.

எ - து திறந்தோறும் ஒருபூமாலையையுடைய திருமுடியிடத்தில் விரிந்தகன்ற பணங்களுடன் நாகராசன் கவித்துநின்றபடி, புறம்பும் ஆயிரம் வெள்ளை யிதழையுடையதொரு வெண்டாமரையையும் அதிலிருந்த பிரமாவையும் போல் தோன்ற எ - று.

சகசிரபத்திரம் ஆயிரம்படத்திற்கும் உவமை. புண்டரீக மென்று வெண்டாமரைக்கே பெயர்.

(வி - கு.) மு. புறத்தும் : உம்மை இறந்தது தழீஇயது.

உரை. புண்டரீகமென்றசொல் வெண்டாமரைக்கு ஆதல், "புண்டரீகத்தனி முதற்கும்" (கம்ப. கிளைகண்டு. 77), "அன்றுதொட்டனைய தீர்த்த மரும் புண்டரீக தீர்த்தம்...ஒன்று வெண்கமலம்...னல்லாய்" (திருநாகைக். புண்டரீக முனிவர் காட்சி யுரைத்த. 47) என்பவற்றாலும் அறியப்படும். ஆதிசேடன் வெண்ணிறமுடையவனென்பது 154 - ஆம் தாழிசையாலும் உணரப்படும். திறம் முடிக்கு உறுப்பாகக் கூறின ஐந்து : இஃது "ஐவேறுருவிற் செய்வினை முற்றிய முடி" (முருகு. 83 - 4) என்பதனாலும் 'ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய செய்யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடி' என்னும் அதனுரையாலும், "தாமமகுடம் பதுமங்கிம்புரி..." என்னும் அதன்மேற்கோளாலும், "உவமைநீங்கியவை வகைத்

தாய வேற்றுருவின்மவுலி" (கந்த. முதனாட்பானு. 252) என்பதனாலும் அறியப்படும்.

'திருமுடியிடத்தில்...தோன்ற': ஆதிசேடன் வெண்ணிறமுடையவனாத லால் ஆயிரம்படங்களையுடைய அவனுக்கு ஆயிரம் இதழ்களையுடைய வெண்டாமரையையும் அப்படலங்களினிடையே தோன்றும் திருமுடிக்குப் பிரமதேவரையும் உவமை கூறினார். பிரமதேவர் வெண்டாமரையில் இருத்தல், "சாமவெண்டாமரை மேலயனும்" (திருவக்கரைத் தேவாரம்), "வெண் மலரான் பாற்கடலான் செப்புவபோல், எம்பெருமான் றேவர்பிரா னென்று" (திருவா. திருத்தசாங்கம், 1), "வெண்ணிறக்கமலமேல்...அண்ணல்" (திருக்காளத்திப். பதிகம், 15), "புண்டரீகமென்...புத்தேள்" (திருக்காளத்திப். தாருகாவன. 75) என்பவற்றால் விளங்கும்.

(பி - ம்) 1 'போலுமே' (கஅ)

283. பெயர்த்த தோரடித் தாமரைத் தாள்விடப்
பெரும்பொற் கோளகை பண்டு பிளந்ததற்
குயர்த்த தோர்வெள்ளி யண்ட கபாலமொத்
தொருத னிக்கொற்ற வெண்குடை யோங்கவே.

பொன்னுக்கு ஈடு வெள்ளி. பிளப்பு - தாள்செய்தபுழை. (கக)

284. [1]திரண்டு வந்த [2]வராமிர்த சீகரஞ்
சிதற வீசித் திருப்பாற் கடற்றிரை
இரண்டு வந்தன வெங்கும் விடாவென
இரும ருங்குங் கவரி யிரட்டவே.

வராமிர்தம் - வரிட்டமான அமுது. அமிர்தம் வந்தது பாற்கடலிலல்ல; அமிர்து கடைந்தது லவணசமுத்திரத்தெனவுணர்க. அமிர்தம் போலுந்திவலையை வீசியெனக்கொள்க. சீகரம் - திவலை.

(வி - கு.) மூ. கவரிக்குப் பாற்கடற்றிரை உவமை: "பாலின் வெண்பரவைத்திரை.........பரந்தெனச் சாமரை பதைப்ப" (கம்ப. நிந்தனை. 16.) உரை. அமிர்து கடைந்தது......உணர்க: 'பாலசந்திரன் பிறந்தது லவண சமுத்திரத்தென வுணர்க' (தக்க. 633, உரை) என்பது இங்கே அறிதற்பாலது; "பொங்குமா கருங்கடனஞ்சுண்டான்", "அப்புறத்த கடனஞ்ச முண்டான் றன்னை" (திருநா. தே.), "காரூர் கடலில் விடமுண்டு" (சுந்தர. தே.) "நீல மார்கடல் விடந்தனையுண்டு" (தே. திருப்புன்கூர்), "வஞ்சக்கருங் கடனஞ் சுண்டார்போலும்" (தே. திருவாக்கூர்) என்பவற்றால் அமுதமும் கருங்கடலிற் பிறந்ததென்பது உய்த்துணரப்படும்; "உவரி வாயன்றிப் பாற்கட லுதவிய வமுதே", "தாழி தரையாகத் தண்டயிர் நீராக......ஆழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தாய்" (கம்ப. சித்திரகூடப். 5, சரபங்கர். 29.)

(பி - ம்) 1 'திரண்ட வராமிர்த சீகரமானது' 'திரண்டவாயிர சீகரமானது' 2 'வராமிறுத சீகரம்' (௪0)

285. வாளும் வில்லுந் திகிரியுந் தண்டமும்
வளையு மென்ற [1]கிளைபுறஞ் சூழ்வர

ஆளு [2]மைம்படை யும்படை சூழுவந்
தம்ப ரப்பரப் பெங்கு மடைப்பவே.

எ - து வாளும் வில்லும் சக்கரமும் தண்டும் சங்குமான பஞ்சாயுதங் களும் புறத்தே சூழ்ந்துவர, அவைகளையுடைய பஞ்சப் பிரதாப தந்திரத் தினால் ஆகாசம் வெளியடங்க எ - று.

(பி - ம்) 1 'கிளைப்புறஞ்' 2 'மைம்படையும் புறஞ்சூழுவந் தம்பரப் படைப்பெங்கும்' (சுக)

286. வயங்கு மீருரு [1]வண்ணக் கலுழன்மேல்
வளரும் பாற்கடல் பாழ்பட வந்தனன்
இயங்கு மேரு கிரிச்சிக ரத்திலோ
[2]ரிந்த்ர நீல கிரிபோன் றிருப்பவே.

வளர்தல் - உறங்குதல். மகாமேருவுக்கொப்புக் கருடபகவான். இந்திர நீலகிரிக்கு உவமை விஷ்ணு.

(வி - கு.) மூ. ஈருரு - புருடவடிவமும் பறவை வடிவமும். உரை. மகா மேரு......பகவான் : "செம்பொற் குன்றின்மேல், வருவபோற் கலுழன் மேல் வந்து தோன்றினன்" (கம்ப. திருவவதாரப். 13.)

(பி - ம்) 1 'வண்ணல் கருடன்மேல்' 2 'ரிந்த்ரநீலப் புயல்' (சுஉ)

## உமாதேவியார்செயல்

### வேறு

287. இப்பரிசு வேள்விபுரி தாதைசெய லெல்லாம்
ஒப்பரிய நாயகி யுணர்ந்தன ளுணர்ந்தே.

இதன்பொருளுணர்க.

[இதுமுதல் 294 - ஆம் தாழிசைகாறும் தன்தந்தை வேள்வி செய்வதை யறிந்த உமாதேவியார் சிவபெருமானிடம் விடைபெற்று யாகசாலைக்குச் செல்வது கூறப்படும்.] (சுக)

288. எந்தைபுரி வேள்வியிடை யானும்விடை கொள்ளத்
[1]தந்தருளு கென்றனள் பணிந்திறைவர் தாளே.

இதன்பொருளுணர்க.

(வி - கு.) மூ. யானும் கொள்ள விடை தந்தருளுக என இயைக்க.

(பி - ம்) 1 'தந்தருள்க வென்றனன்' (சுச)

289. விண்ணவர் கண்மேலுமயன் மேலுமரி மேலும்
கண்ணுதன் முதற்கடவு ளுங்கருணை வைத்தே.

எ - து மேல்வருவனவெல்லாம் உணர்ந்தருளி இந்திராதி தேவர்கள் படக்கடவன உணர்ந்து கண்ணுதல் கருணை வைத்து எ - று. (சுரு)

290. அழைத்தில னதற்ககல்வ தென்கொலென வையன்
பிழைத்தன [1]பொறுத்தருளு கென்றனள் பெயர்த்தே.

**ஏ - து** விடைதந்தருளுகவென்று தம்மை வேண்டியருளிய பரமேசுவரியைநோக்கி ஈசுவரன், "நின்பிதா நின்னை அழைத்திலன்; அங்குப் போகின்றது என்?" என, பரமேசுவரியும் அவரைநோக்கி, "என்பிதா செய்த பிழையைச் சகித்தருளவேண்டும்" என்றனள் எ - று.

(**வி - கு.**) மூ. ஐயன் 'என்கொல்' எனப் பெயர்த்து 'அருளுக' என்றனள் என்க. பெயர்த்தும் - பின்னும்; **தண்டி.** சூ. 90.

(**பி - ம்**) 1 'பொறுத்தருள் செயென்றனள்' (சுசு)

291. என்றலு [1]முகிழ்த்தகுறு முறுவலொடும் [2]ரசதக்
குன்றவர் கொடுத்தனர் கொடுக்கவிடை [3]கொண்டே.

**ஏ - து** பரமேசுவரி, 'என்பிதாசெய்த பிழையைச் சகித்தருளவேணும்' என்ன, 'இவள்தானே நாம் சகிக்கவொட்டாதே கோபித்திடுவள்' என மேல் வருவதறிந்து அற்பமே சிரித்தருளி வெள்ளிமலையையுடையவர் விடைகொடுப்ப அவர்பால் விடைகொண்டாள் பரமேசுவரி எ - று.

(**வி - கு.**) மூ. குறுமுறுவல் - புன்னகை. **உரை.** வேணும்: வேண்டுமென்பதன் மரூஉ; "**வேணுமாகில்வேணு**மன்றி" (**வி. பா.** சூதுபோர். 165); "**வேணும்** பாணபோ", "வேணுமோ நினைத்திடினென்ன" (**திருவால.** 54 : 5, 59 : 9.)

(**பி - ம்**) 1 'முகிழ்த்த திருமூரலொடும்' 2 'வெள்ளிக்குன்றினர்' 3 'தானே' (சுஎ)

292. பங்கனக லத்திறைவி வேள்விபழு தாகத்
தங்கனக [1]லத்தமர்செய் தாதைமனை புக்கே.

**ஏ - து** ஈசுவரனுடைய திருமார்பிலுள்ள பரமேசுவரி விடைகொண்டு போய்த் தட்சனுடைய மனையிலே புக்கருளினள் எ - று.

பங்கன் - ஸ்ரீமங்கலிபங்கன். இதன்பயன்: ஈசுவரன் தனக்கு ஒருவடிவுடையனல்லன்; பரமேசுவரியுடைய திருமேனியிற்பாதியே அவனென்றவாறு. வடிவுடையமங்கையென்பது பரமேசுவரியின்பெயர்; அஃது அழகைப்பற்றின் துரோகமாம்; ஆதலால் தோற்றப்பட்ட ரூபமெல்லாம் பரமேசுவரியின் வடிவெனக்கொள்க; எனவே தோற்றுதனவெல்லாம் ஈசுவரன் வடிவெனவுணர்க.

(**வி - கு.**) **உரை.** தோற்றப்பட்ட ரூபமெல்லாம் பரமேசுவரி வடிவு: **தக்க.** 116 - ஆம் தாழிசையின் குறிப்பைப் பார்க்க; 'யாவையுமாம் ஏகம் - பராசத்தி' (**திருச்சிற்.** 71, உரை) என்பதும் இங்கே அறியத்தக்கது. "மெல்லியலை மல்லற் றன்னிற மொன்றி விருத்திநின்றோன்" (**திருச்சிற்.** 58.)

(**பி - ம்**) 1 'லமரர்தாதை' (சுஅ)

293. காதலனை விட்டவ ளெழுந்தருள வுங்கண்
டேதில ரெனத்தம ரிருந்தன [1]ரிருந்தே.

'காதலனைவிட்டு' என்றதனால் உமை ஒருமுகூர்த்தமும் இறைவனைப் பிரியாளெனவுணர்க.

இதன்பயன் : "ஒருபக்கமாய பரம்பரன்றேவி" (245) என்ற முன்னைப்பாட்டின் பொருளை விளக்கியவாறு. இதனாலே சகத்தில் வடிவெல்லாம் பரமேசுவரிவடிவும் அல்லாதவடிவெல்லாம் பரமேசுவரன்வடிவுமெனக் கொள்க.

(வி - கு.) மூ. ஏதிலர் - அயலார்.

(பி - ம்) 1 'ரிகழ்ந்தே' (௪௯)

294. தன்னையிகழ் தாதையொடு தங்கைய ரொடுந்தன்
அன்னையை முனிந்துலகி னன்னையருள் செய்வாள்.

தங்கைய ரென்றது பிரமாவினுடைய தேவிமாரான இருபத்தெண்மரையும் பிறரையும். உலகினன்னையெனவே தட்சனுக்கும் வச்சலப்பிராட்டிக்கும் இவள் தாயெனவுணர்க.

(வி - கு.) மூ. உலகினன்னை : "அகிலலோக மாதாவே" (தக்க. 103.)

உரை. வச்சலப்பிராட்டி - தக்கனுடைய மனைவி ; வேதவல்லி யென்று வேறுநூல்கள் கூறும். (௫0)

## வேறு

295. பின்னோர் பெறுங்கண் [1]பெறேஎன்
என்னோ [2]விவன்பட்ட தின்றே.

எ - து என்தங்கைமார் இவனாற்பெற்ற அனுக்கிரகம் பெறேன். இவன் என்பட்டானோவெனத் தன்பிதாவைப் பரமேசுவரி நினைத்தனள் எ - று.

கண்ணென்றது கண்ணோட்டம் ; "கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார், கண்ணோட்ட மின்மையு மில்" (குறள், 577.) தங்கைமாரிலும் என்னையிகழ்ந்தது என்னென்பதற்குப்பொருள் மூத்தாரைப்பிதா விரும்பலும் இளையாரைத் தாய்விரும்பலும் உலகவழக்கெனவுணர்க. பெறேஎனென்றவிடத்து அளபெடையிட்டு ஓசைகூட்டிக்கொள்க.

[இது முதல் 304 - ஆம் தாழிசை முடியக் கோபத்தால் தேவி கூறுவன கூறப்படும்.]

(வி - கு.) உரை. மூத்தாரைப்பிதா...விரும்பலும் : "பெற்றவைவன்கே ...னென்றான்" (கம்ப. மிதிலே. 121) ; "மூத்தமகனிடத்தார்வ...முதிரும்" (விநாயக. கடவுள். 6.)

(பி - ம்) 1 'பெற்றேனென்னே' 2 'விவள்பட்ட' (௫௧)

296. இமைப்பா [1]யிமைப்பா யினியாகம்
பிமைப்பாய் பிமைப்பாய் பிதாவே.

பிதாவென்றது கோபமெனவுணர்க.

(பி - ம்) 1 'யிமைப்பாய் நின்பாகம்' (௫௨)

297. [1]யாயுங் கொடியேற் கிரங்காய்
நீயுங் [2]கெடவோ நினைப்பே.

நீயுமென்றதற்குப்பொருள் : பெண்பிறந்தார் தாய்மாராலே சிநேகிக்கப்படுதலொருதலையென்பது.

(வி - ரை.) உரை. ஒருதலை - துணிவு. (பி - ம்) 1 'ஆயும்' 2 'கெடவே நினைவே' (ருக)

298. எங்கை [1]மீரே னென்கிலீர்
நங்கைமீ [2]ரீதோ நலனே.

எ - து என்னுடன்பிறந்து எனக்கு இளைய தங்கைமீர், நுமக்கு நலம் இதுவோ? எ - று.

நங்கைமீரீதோ நலனேயென்றது பிராமணிகாள்! உறவிலீரென்ற வாறு.

(வி - ரை.) மூ. ஏனென்கிலீர் : "ஒருவா ரணமழைப்ப நீயோவந் **தேனென் றுய்** " (**கம்ப**. விராதன். 49), "**ஏனென்று** கேட்பவ ரில்லாத் தமிழை" (**தனிப்**.)

(பி - ம்) 1 'மீரென் கொலென்கிலீர்' 2 'ரிதுவோ' (ருச)

299. எம்படைப்புத் தானும் [1]யாயும்
கும்பிடப் போலுங் குறிப்பே.

எ - து எங்களுடைய படைப்பு எனக்குப் பிதாவானதானும் எனக்குத் தாயான அவளுமாலுல் தங்களை நமக்கரிக்கவோ எ - று.

இஃது இப்பொழுது புகுந்ததல்ல; தட்சன்வரப் பண்டு பரமேசுவரி நமக்கரியாதொழிய அவன் இகழ்ந்தகதை.

(வி - ரை.) உரை. பண்டு...கதை : கந்தபுராணம், தக்கன் கைலைசெல் படலத்தில் உள்ளது.

(பி - ம்) 1 'யாவும்' (ருரு)

300. தந்தையார் தாயார் தலைவருக்
கெந்தையார் [1]யாயா ரெமக்கே.

இதன்கருத்து : ஈசுவரனல்லாத எல்லாரும் தகப்பனும் தாயுமுடையர்; நாமகோத்திரங்களையுமுடையர். மகாதேவர்க்கோ அக்கினிகோத்திரந்தான் சொல்லலாவது.

(வி - ரை.) மூ. தந்தையார் தாயார் தலைவருக்கு : "எந்தையா யெம்பிரான் மற்று மியாவர்க்கும், தந்தைதாய் தம்பிரான் **றனக்கஃதிலான்** ", "**தாயுமிலி தந்தையிலி** தான்றனியன் காணேடீ" (**திருவா**. திருச்சாழல், 3.)

(பி - ம்) 1 'தாயா' (ருசா)

301. எனக்கு மெவற்கு மிறைவன்
தனக்கு மெவனோ தவறே.

எனக்கென்றது லோகத்துக்கு முற்பட்டது பிற்பட்டது தெரியாதே என்றும் மயக்கிவருகிற மாயாசத்தியான எனக்கென்றவாறு. எவற்கு

மிறைவனென்றது யாவர்க்குமிறைவனென்றவாறு; "ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும், வருவகை தானே வழக்கென மொழிப" (பொருளியல், சூ. 28), "இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கும், உரியவையுரிய பேர்வயி னான" (பெயரியல், சூ. 7); இவை **தொல்காப்பியம்**; இச்சூத்திரங்களால், எவன், எவள், எவர், எது, எவை; யாவன், யாவள், யாவர், யாது,யாவை யென எல்லாங்கொள்க. எவனோவென்றது என்னோவென்றவாறு. எவனோ தவறு - குற்றமில்லை; எங்களுக்கு முதலிகளுளரோ குற்றமுண்மையாய வென்பது கருத்து; "தானே யுலகாள்வான் றன்கண்ட தேவழக்காம், ஆனான்மற் றரிதனை யன்றென்பார் - வானோர், களைகண்டா னைய்நின்ற காளத்தி வாழ்வான், வளைகொண்டான் மாலை கொண்டுவந்து" (**கைலைபாதி காளத்திபாதியந்தாதி**, 82.) இது **நக்கீரர்வாக்கு**; இஃது ஒருதலைக்காமக்கைக் கிளைப் பொருளதெனவுணர்க. இதனால் யாகமழித்தற்கிஷ்டமென்பதை உணர்த்தினாளாயிற்று. இது நாடகாலங்காரம்.

(**வி - கு.**) **உரை.** மாயா சக்தியான எனக்கு: 168 - ஆம்தாழிசையின் உரை பார்க்க. முதலிகள் - முதல்வர்கள்; தலைவர்கள்; 'திருவிற்குக் காவலான **முதலியே**' (**தக்க.** 180, உரை.) (௩௭)

302. [1]இரையாசை யால்வந்த யஞ்ஞா
உரையா யுறுமோநின் னாணே.

இரையாசை - ஊணாசை. யஞ்ஞன் - அக்கினி.
இப்பாட்டு அக்கினிபகவானைநோக்கிக் கூறிற்று.

(**வி - கு.**) மூ. யஞ்ஞா: "செய்த வேள்விவா **யஞ்ஞர்** தஞ்சிரம்" (**தக்க.** 344.) (**பி - ம்**) 1 'இரையாசையான் மாயு மென்ன' (௩௮)

303. வான்வந்த மண்வந்த வேள்விக்
கியான்வந்த வெளிவந்த வாறே.

**எ - து** தேவர்களும் பூமியும் ஒக்கப்புகுந்த யாகத்துக்கு யான்வர எளிவரவும் உடன்வந்தது என்னே! எ - று.

வான் மண்ணென்பன ஆகுபெயர்; பிறந்தவழிக்கூறல்.

(**வி - கு.**) **உரை.** பிறந்தவழிக்கூறல்: **தொல்.** வேற்றுமை மயங்கு. சூ. 31. (௩௯)

304. தீக்குப் பிறந்த வில்லென்னும்
வேய்க்குச் சிறப்பென்கொல் வேறே.

இப்படி இவ்யாகத்துக்கு யானும் நெருப்பு; வேய் இதற்குஉவமை; அவ்வேய்கள் தாமே தம்மில் தேய்த்துத் தீயையெழுப்புகையானென்று எச்சங்கொள்க; "வையெயிற், றரிமதர் மழைக்க ணம்மா வரிவை, மரம்படு சிறுதீப் போல, அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே" (349); இது **புறம்புநானூறு** (புறநானூறு.)

(**வி - கு.**) மூ. தீக்குப்பிறந்த இல்லெனனும் வேய்: "வான்றொடர் மூங்கிறந்த வயங்குவெந் தீயி தென்னத், தான்றொடர் குலத்தை யெல்லாந் தொலைக்குமா சமைந்து நின்றாள்", "அமைத்தரு கனலென" (**கம்ப.** கரன்வதை, 66, திருவடி. 40), "மூங்கிலிற் பிறந்து முழங்குதீ மூங்கின் முத

லற முருக்கு மாபோல" (உத்தரராமாயணம், இலவணன்வதை. 29); கந்த. 2 : மகாசாத்தா, 17, மகாகாளர், 11.

உரை. இவ்யாகத்துக்கு யானும் நெருப்பு : "மாய் குடிக்கு நிமித்தமாக மகட்பெறும்" என்பர்பின் ; தக்க. 768. (சுO)

305. இவ்வா றுரைத்திங்கு நின்றும்
செவ்வாய் மடப்பாவை சென்றே.

இதன்பொருளுணர்க. (சுக)

306. [1]விற்சாரு மேருப் பொருப்பின்
பொற்சாரல் சாரப் புகவே.

விற்சாரும் - வில்லேச்சாரும், வில்லாகச்சாரும். பொற்சாரல் - அழகிய சாரல்; இதற்குஅழகு ஸ்ரீகைலாசத்தைச்சேர்தலால் எல்லாரும் நன்மை பெறுவரென்பது. பொன்னென்பது வெள்ளியுலோகத்திற்கும் பெயர்.

(பி - ம்) 1 'விற்சாரன்' (சுஉ)

## வேறு

307. விதிநன்கமைத்து [1]வழிபாடுசெய்து
மடவாயமாகி யிடையும்
பதினெண்கணத்து மடவாருமன்னே
முனிவாறுமாறு பகர்வார்.

எ - து இன்னர் இன்னபணிசெய்கவென்னத் தரத்துக்குத்தக்கபடி விதித்தமைக்கப்பட்ட விளையாட்டுக்கூட்டமான பதினெண்கணத்துத்தெய்வப்பெண்களும் பரமேசுவரியுடைய கோபமாறும்படி விண்ணப்பஞ்செய்வார் எ - று.

(பி - ம்) 1 'வழிபாடு செய்யுமடவாய மாதின்' (சுஙூ)

## வேறு

308. விழிவழிகருணைப் பச்சைவிளக்கே மின்னேநின்
வழிவழியடியே [1]நீரரமகளி ரோம்யாமே.

[இதுமுதல் 321-ஆம் தாழிசை முடியப் பதினெண்கணத்து மடவாரும் கைலைமலையில் இருந்த காட்சிகளின் சிறப்பையுணர்த்தித் தேவியின் முனிவை யாற்றுதல் கூறப்படும்.]

விழிவழிகருணை - திருநயனத்தைக்கருதி இடங்கொள்ளாது வழிந்து புறப்படும் காருண்யம் ; பச்சைவிளக்கு : அபூதம். மின்னென்றது இடைக்குவமையல்ல ; பிடிக்கப்படாதா ளென்றவாறு. வழிவழியடியேமென்றது நினக்கு வழிவழியடிமையேமென்றவாறு. நீரரமகளிரோமென்றது திவ்ய நதியிலுள்ளோமென்றவாறு.

(வி - கு.) மூ. பச்சை விளக்கே : தக்க. 166, உரையைப் பார்க்க.

(பி - ம்) 1 'நீரரமங்கையர் யாமே' (சுச)

309. இதுதிருமலையிது [1]திருவடிமலர்தோய் மலர்வாவி
இதுதுறைவருமிவ டிருமகளிவள்பார் [2]மகள்பாரே.

திருமலை - வெள்ளிமலை. திருவடிமலர்தோய் மலர் வாவி - மானச தீர்த்தம். இது துறை - இது தேவிக்குத்திருமஞ்சனத்துறை. இவள் திருமகள், இவள் பூமிதேவி ; இவர்களைப்பார்த்தருள்.

எனவே திருமஞ்சனமாடும் மானசகோட்டகத்துச் சதுர்வேததீர்த்தத் துறையில் நின்திருவடிமலர்தீண்டுவாள் லட்சுமி, திருமேனிதீண்டுவாள் பூமி தேவி யென்றவாறு.

(வி - கு.) மூ. திருமலை : " திருமலை வலஞ்செய் திறைஞ்சியே " (தக்க. 336), " நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே, தேரூர்தரு மரக்கன் " (தே. திருச்சுழியல்.) உரை. மானசகோட்டகம் : கோட்டகம் - குளம் ; " படைநெடுங்கண்ணுற், குவளைக் கோட்டகங் கடுத்தது " (கம்ப. ஊர்தேடு. 33), " கோட்டகக் கமல நாப்பட் கொட்டிபூத் தலர்வ தாமால் " (திருக்குற்றாலப். அவை. 12.) (பி - ம்) 1 'திருமலரடி தோய்வாவி' 2 'மகளே'. (சுரு)

## வேறு

310. [1]மேனிற்பன வுலகம்பொதி வெள்ளம்பொதி கள்ளச்
[2]சேனிற்பன விடுநீர்புனை தெண்ணீர்படு சுனையே.

எ - து உலகத்துக்கு மேல்நிற்பனவாகிய ஆகாசலோகமேழினையும் அடக்கும் உகாந்தப்பிரளயகால வெள்ளமெல்லாவற்றையும் பொதிந்து கொண்டு ஒரு செலுவிலே அடக்கவல்ல மாயச்சேல்பலவும் நிற்பனவாக விட்ட நீங்களிருவீரும் திருமஞ்சனமாடும் தெளிந்தநீரினையுடைய சுனைகள் இவை எ - று.

இச்சேல்களைப் பரிகரமாகப்பிடித்துவிட்டுவைத்தாள், பரமேசுவரியென வுணர்க. புனைதல் - குளித்தல். கள்ளச்சேலென்றது பெருவெள்ளத்தை அடக்கிக்கொள்ளுஞ்சேலென்றவாறு. விடுநீரென்பதற்கு வேறு பொருளுரைப்பாருமுளர் ; அது பொருளன்று.

(வி - கு.) உரை. உகாந்தப்.........மாயச்சேல் : " பலகடலுஞ் செதிளடங்கப் பசுந்துழாய் பரிமளிக்கப், பலகடமீன் வடிவெடுத்தாய் " (அழகர் கலம், 1.) செலு - மீனின்புறத்தேயுள்ளமுள் ; " உளையாழி யோரேழுமொரு செலுவி னடங்குதலால், விளையாட நீர்பெறு மீனுருவம் பரவுதுமே " (தொல். செய். 149, பேர். மேற்.), " சூழிக்களிறுய்ய...ஊழிப் பொழுதொரு சேலா யொருசெலு வுட்கரந்த, ஆழிப் பெரும்புனல் காணது தேடுவ ரவ்விடத்தே " (திருவரங்கத்துமாலை, 22) என்பவற்றாலும் மச்சாவதாரத்தின் செலுவில் ஊழிவெள்ளம் அடங்கினமை விளங்கும். செலு செதிளென்றும் வழங்கப்படும்.

(பி - ம்) 1 'வேய்நிற்பன' 2 'சேய்நிற்பன' (சுசு)

311. அடையப்பில நதிகீழ்வீழ [1]வண்டத்தடி யிடைபோய்
உடையப்புடை பெயர்வெள்ள முடைத்திக்குளிர் தடமே.

புடைபெயர்தல் - கற்பம்பெயர்தல்.

(வி - கு.) மூ. பிலநதி - பாதாளகங்கை ; " குதலைமொழி யருள் பேதை பிலநதி மட்டுவார்...வளமலி கச்சியாய் " (சிவஞான பாலையர் பிள்ளைத் தமிழ். முத்தப். 9.) (பி - ம்) 1 'வண்டத்திடை' (சுஎ)

312. [1]அலரோடளி தோயாதன விவ்வாவி யணங்கே
[2]மலரோனுல கடையப்புடை பெயர்கார்களின் வைப்பே.

கார்களின்வைப்பென்றது, அம்மேகங்களும் அக்காலத்து இங்கே வந்து முகக்குமென்றவாறு; கடலேழும் வற்றினும் இது வற்றாதென்பது.

(வி - கு.) மூ. தெய்வீகவாவியாதலின், 'அலரோடளி தோயாதன' என்றார். (பி - ம்) 1 'அலரோதளி', 'அலரோதரி' 2 'மலரோனுல குடைய' (சுஅ)

313. மண்முழுவது மேல்வான்முழு வதுங்கொண்டது போல
வெண்மதிதின பதிதாரகை விழுவெழுசா யையதே.

எ - து பூமிமுழுவதுங் கொண்டதுபோல ஆகாசம் முழுவதுங்கொண்டதுபோலச் சந்திரனையும் ஆதித்தனையும் நாண்மீன்களையும் மறைக்கும் நிழலுடைத்து எ - று.

பூமியைமறைப்பது பரப்பால்; ஆகாசத்தைமறைப்பது நெடுமையால். எழு சாயை - மேலேசெல்லும்சோதி.

(வி - கு.) உரை. பரப்பு, நெடுமை யென்றது நிழலின் தன்மைகளை. (சுகூ)

314. [1]நடுவேவரு நானுவித ரத்னங்களி னுன்மேல்
உடுவேய்தரு ககனுகர ரூரொத்துள வொளியே.

எ - து இத்திருமலையின் நடுப்படவுண்டான வெகுவித இரத்தினச் சோதிகளால் மேலுள்ளநட்சத்திரங்கள் சூழ்ந்தன, சந்திரர்கள்பலரையும் பரிவேடமிட்டாற்போலும் எ - று.

மேலேசோதிசெல்லுதல் இங்குமாம். ககனுகரர் - ஆகாசவிடத்தர்; இவர் சந்திரர். ஊர் - பரிவேடம்.

(வி - கு.) மூ. நானுவிதம் - பலவிதம்; "நானுவித நினைவார்தமை நலியார் நமன் றமரே" (தே. திருச்சுழியல்); "நானே நானுவித நரகம்புகும் பாவஞ் செய்தேன்" (பெரியதிரு. 1. 9 : 2); "நானுவிதமா நளிமாதிர வீதியோடி" (கம்ப. நகர. 70.) (பி - ம்) 1 'நடுவே யொரு' (எo)

315. அந்திப்போ தனையானுட னுடுந்திரு வேநின்
உந்திப்போ திவ்வாவியி[1]னூடேயொரு மலரே.

அந்திப் போது அனையானுடன் - அந்தியம்பொழுதிற் செக்கர் வான நிறத்தை ஒப்பானவனுடன்; ஆடுதல் - அனுபவித்தல்; அன்றியே விளையாட்டென்பாருமுளர்.

நீ விஷ்ணுமூர்த்தியாதலால் நின்திருநாபியிற் பிறக்கும் பிரமாவைப் படைக்கும் தாமரை இவ்வாவியிலுள்ள புட்பங்களில் ஒருபுட்பம்; இதனையே இவ்வொரு பூவென்பாருமுளர்.

(வி - கு.) மூ. அந்திப் போதனையான் : "அந்திச்சேயொளி" (தக்க. 281.) (பி - ம்) 1 'னூடே யொளிர்போதே' (எக)

316. படைக்குந்[1] திரி புவனம்பின் [2]பாழாக வெழுந்தங்
குடைக்கும்பெரு வெள்ளங்களி னுற்பத்திய திதே.

உற்பத்தி - பிறப்பு.

(பி - ம்) 1 'திரிபுவனதிகள்' 2 'பாழாக வெழுந்தே' (எஉ)

317. இவ்வாவியி லிவைசெங்குவ ளைகளேயிவை யிவைநின்
மைவார்திரு நயனங்களின் வலிபட்டன மிகவே.

[இதனால், தேவி திருக்கண்களின் அழகு சொல்லப்படுகிறது.]

இதன்பொருளுணர்க.

(வி - ரு.) மூ. விழிகளின் கறுப்பாற் செங்குவளைகள் கருங்குவளைகளா யினவென்பது கருத்து. வலிபட்டன - மாறுபட்டுத் தோன்றின; 'மறுத லைப்பட்டமை கருதி வலிமுகமென்னப் பட்டதுபோல' (நன். சூ. 272, சங். உரை) என்பது இங்கே அறியற்பாலது. (எங)

318. நிரையேறிய குமுதங்களில் வெள்ளென்பன விவைநின்
விரையேறிய திருவாய்மலர் மீதூர்வன [1]வுறவே.

எ - து நிரைநின்ற அரக்காம்பல்களில் இஃவதாம் வெள்ளாம்பல் போன்றன, நின்திருவாய்மலர்ச்சிவப்பைத் தீண்டுவனபோல நின்றனவாத லின் எ - று.

மீதூர்கை - மெய்தீண்டுதல்.

[இதில், தேவியின் திருவாய் மலர்ச்செவ்வி கூறப்படுகின்றது.]

(வி - ரு.) மூ. முன்பு வெள்ளாம்பல்களாக இருந்தவை திருவாயின் சிவந்தஒளிபடச் செங்குமுதங்களாயின. (பி - ம்) 1 'வெனவே' (எச)

319. வேதங்கவர் கிளவித்திரு [1]மின்னேவிரை கெழுநின்
பாதங்கவர் செந்தாமரை வெண்டாமரை பண்டே.

எ - து வேதங்கவர்தலாவது இவள்திருவார்த்தைகளை வேதங்கள் கொள்ளைகொள்ளுதல். கிளவி - வார்த்தை. பாதங்கவர்தல் - பாதத்தை விரும்புதல்; "கவர்வு விருப்புமாகும்" (தொல். உரி. சூ. 64, பி - ம்.)

(வி - ரு.) மூ. முன்பு வெண்டாமரை மலராக இருந்த இவை நின்பாத ஒளியால் செந்தாமரையாயினவென்பது பொருள்.

(பி - ம்) 1 'மின்னே யிவை கேழ்நின்'

317-9 : இம்மூன்று தாழிசைகளின் கருத்துக்களோடும், "நீணிறத்தாற் சோலைநிறம்பெயர நீடியதன், தாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப" (நள. சுயம்வர.) என்பது ஒப்புநோக்கற்பாலது. (எரு)

320. குளிப்பாரில ரஞ்சாதிது கொண்டோதி முடிக்கட்
டௌிப்பார்கலை மகள்பார்மக ளிருவென்பவ ரிவரே.

குளிப்பாரெவரென்று பாடஞ்சொல்லுவாருமுளர்; அதுதமிழன்று.

இனி இதிற் குளிப்பவர் நீயும் நின்கணவனுமே. நின்முடியென்று எச்சங் கொடுக்க.

(வி - கு.) மூ. இதுகொண்டு... ..தெளிப்பார்: சுமங்கலிகள் கூந்தலை எப்பொழுதும் நீரில் நனைப்பதில்லை யென்பதும், ஸௌபாக்கியவதி யென்னுந் தெய்வம் அதில் தங்குகின்றதென்பதும், தீர்த்தத்தைக் கூந்தலில் தெளித்துக்கொள்ளல் மரபென்பதும் பெரியோர் கொள்கை; "கோதையர் குஞ்சியுட் புகத், தெளிக்குந் தீர்த்த மருத்திரு வாரூர்" (திருநா. தே.); பெருங்கதை, 1. 42 : 128 - ம் அடியின் குறிப்புரையைப் பார்க்க. (எசு)

321. அலம்வந்தன வேதங்க ளரற்றத் திருமலையே
வலம்வந்தனண் [1]மழுவார்திரு நெடுமங்கல மகளே.

வேதங்களலம் வந்தது, தேவி பூதலமேல்வருவதையறிந்து. நெடுமை - கால நெடுமை. மகளென்றது மனுஷ்யப்பெண்களுக்கும் இவளேமுதல்வி யென்றவாறு. முதலடியிறுதியில் ஐகாரந்தொக்கது.

(வி - கு.) மூ. மழுவார் - சிவபெருமான்.

(பி - ம்) 1 'வழுவந் தொளிர்' (எஎ)

## தேவி கைலைக்குச் செல்லுதல்

### வேறு

322. என்றென்று வணங்கி வணங்கிவிடா
தெல்லாரு மிரப்ப விரப்பவதற்
கொன்றுந்தணி வின்றி விரைந்துபிரா
னுறைகோநகர் புக்கன ளொண்ணுதலே.

இதன்பொருளுணர்க.

(வி - கு.) மூ. ஒன்றுந்தணிவின்றி - சிறிதும் கோபம் தணியாமல். கோநகர் - திருக்கோயில்; நகரென்பதற்குக் கோயிலென்னும் பொருளுண்மை, 92 - ஆம் தாழிசையாலும் உணரப்படும். (எஅ)

## தேவி விண்ணப்பஞ்செய்தல்

323. புக்குப்[1]பெரு மானடி சேவடியிற்
பொன்மாமலர் கொண்டு புனைந்துபொலஞ்
செக்கர்ச்சடை யானெதிர் நின்றருளிச்
செய்தாளடை யத்தமர்செய்தனவே.

பெருமானடியென்றது மகாதேவர் திருநாமம். இதிற் கள்ளென்பது தொக்கதென்பாரும் இல்லையென்பாருமுளர்; "பேய்பேயென்ன வருவா ரவரெம் பெருமானடிகளே" (திருஞா. தே. திருக்கடவூர் மயானம்.) இத் திருப்பாட்டுணர்க. பெருமானும் அடிகளும் அவரே. பெருமானென்பது பெம்மானென்றுமாம்; "பிரமபுரத்துறை பெம்மான்" (திருஞா. தே. சீகாழி) என்னும் ஏகபாதத்திற்கண்டுகொள்க. பெம்மானென்றது பிராகிருதபாஷை; சிதைந்ததமிழ். பெருமானடியென்றதில் அடியென்றது முதல்; சேவடி யென்றதில் அடியென்றது திருப்பாதம்.

(வி - கு.) உரை. திருப்பாட்டு - தேவாரம்; நச்சினார்க்கினியரும் தேவாரத்தைத் திருப்பாட்டென்றே வழங்குவர். (பி - ம்) 1 'பெருமானடி தன் முடியில்', 'பெருமா னிருசேவடியிற்' (எகூ)

### தேவியின் சினம்

324. தாய்தந்தை யெனத்தடை செய்வளினித்
தானேயென வேள்வி தகர்ப்பதுமேல்
நாதன்றிரு வுள்ள மெடுத்திலன்மற்
றதுகண்டு முனிந்தன ளுயகியே.

ஏ - து இவ்வார்த்தை கேட்டருளின மகாதேவர் பரமேசுவரியைநோக்கி நாம் கோபிக்கின், தன்னுடைய தாயுந்தந்தையுமென்று சொல்லி நாம் கோபிக்கையை ஒழிக்கவும் வல்லளென நினைத்துத் திருவுள்ளத்தில் எடுத்துக்கொள்ளாதொழிய, பரமேசுவரி மிகக்கோபித்தாள் எ - று.

(வி - கு.) மூ. திருவுள்ளமெடுத்திலன் - எண்ணங்கொண்டிலன். (அ0)

### தேவியின் முனிவு

### வேறு

325. வேலெடுத்தில [1]ரம்புதொட்டிலர்
முயலகன்பெரு வெரிந்மிசைக்
காலெடுத்தில ரகிலமுஞ்சுடு
[2]கையெடுத்தில ரையரே.

வேல் - சூலம். வெரிந் - முதுகு. முயலகன் முதுகிற்காலெடுத்தல் பிரளயகால தாண்டவமாடல். அகிலமுஞ்சுடு கையெடுத்தல் திருக்கையில் அக்கினியைக் கிளர்த்துதல்.

(வி - கு.) மூ. 'முயலகன்பெருவெரிந்மிசைக் காலெடுத்திலர்' என்றது, சிவபெருமான் முனிந்து இப்பொழுதே பிரளயகாலத்தை உண்டாக்கவில்லையென்று குறிப்பித்தபடி.

(பி - ம்.) 1 'ரம்பெடுத்திலர்' 2 'கையெடுத்திலர் கணவரே' (அக)

326. விழித்ததில்லை நுதற்றிருக்கண் மிடற்றிலாலமு [1]மேலெழக்
கொழித்ததில்லை [2]யிருந்தவாவிது வென்றுநாயகி கூசியே.

கொழித்தல் - கிளர்ந்தெழுதல். கூசுதல் - லச்சித்தல்.

இதற்குப்பொருள் என்னைமதித்தருளினாரில்லை யென்பது.

(பி - ம்.) 1 'மீதெழக்' 2 * 'யிருந்தவா விவரொன்று காயகி கூறவே' (அஉ)

### தேவி பிரிந்துசெல்லல்

327. கரந்தபாகமு நின்றபாகமும் வேறுகொண்டமை காதலாள்
புரந்தபாகமு மவற்குவிட்டிம [1]யம்புகத்தனி போகவே.

பண்டு ஈசுவரனது திருமேனியிற்புக்கு அடங்கின தன் வலப்பாகமும் அடங்காதே புறம்புதோற்றிநின்ற தன் இடப்பாகமுமான இவ்விரண்டு பாகத்தையும் ஈசுவரனது திருமேனியினின்று வேறுபடக்கொண்டு மற்றதற்கு அமைந்துபோக நினைத்தாள், பரமேசுவரி.

அமைகாதலாள் - காதலமைந்தவள் ; ரமித்தகாதலையுடையாளென்பாரு முளர் ; நல்லதறிக. தனிபோக வென்றதன்பொருள், வலப்பாகங் கொண்டு போகாதே தன் இடப்பாகமே கொண்டுபோனாளென்பது. இதனாற்பயன் : திருமேனிக்குச் சலனம்பண்ணினள்.

இது தகுதிமொழி.

(வி - கு.) மு. நின்ற பாகம் : "கூடியதன் னிடத்தா னுமையா ளிடத்தான்" (**பொன்வண்ணத்**. 60.)

இத்தாழிசையுடன், "ஆகத்தி லேயொரு பாதியென் னம்மைக் களித்தவடன், பாகத்தி லேயொன்று கொண்டா யவண்மற்றைப் பாதியுமுன், தேகத்திற் பாதியுஞ் சேர்ந்தா லிருவருண் டேசிவனே, ஏகத் திராம விருப்பாய் களந்தையு மென்னெஞ்சுமே" (**களந்தை இரட்டைமணிமாலை**) என்பது ஒப்புநோக்கி ஆராயற்பாலது.

**உரை.** தகுதிமொழி : **தொல்**. கிளவி. சூ. 17. வலப்பாகமென்றது சிவபெருமான் திருமேனியை. இத்தாழிசைக்கு உரையாசிரியர் எழுதியுள்ள அரிய பொருள் கூர்ந்தறிந்து மிக இன்புறற்பாலது. இக்கருத்தை "ஒற்றை வார்கழற் சரணமும்...நோக்கும், பெற்ற தன்வலப் பாதியைத்தடாதகைப் பிராட்டியு மெதிர்கண்டாள்" (**திருவிளை**. திருமணப். 42) என்னும் அருமைச் செய்யுள் நன்கு விளக்குகின்றது.

(**பி - ம்.**) 1 'யந்தனித்தவள் போகவே' (அங.)

## சிவபெருமானுடைய சினம்

328. விட்டபாகம் [1]வலிந்துகண்டனர்
வேறுகண்டிலர் [2]மெய்ப்படப்
பட்டபாக மிரண்டுமங்கவ
[3]ரில்லையன்று படாதவே.

**ஏ - து** பரமேசுவரியால் விடப்பட்டுத் தம்முள் புக்க பரமேசுவரியுடைய வலப்பாகமான தம்முடைய பாகத்தை யோகபலத்தாற் கண்டருளித் தம்வடிவு வேறுபட்டுப் பண்டைவடிவுகாணாது மெய்ப்படும்படி யுண்டான தம்மிரண்டுபாகமும் கண்டிலர். இவைநிற்க, அன்று மகாதேவர் படாதன இல்லை எ - று.

மெய்ப்படப் பட்டபாகமிரண்டுமென்றதில், படுதல் கெடுதலாக்கிப் பொருள்கொள்வாருமுளர்.

(**வி - கு.**) மு. மெய்ப்படப்பட்ட பாகம் இரண்டும் வேறு கண்டிலரெனக் கூட்டுக.

(**பி - ம்.**) 1 'வியர்ந்து கண்டிலர்' 2 'மெய்மடப்' 3 'ளில்லையென்று பரந்ததே' (அச)

329. இந்தனுடவி முன்சிவக்க வெரிந்ததொத்த திருண்டதண்
சந்தனுடவி வேறுபட்டது தம்மலைக்குளிர் சாரலே.

**ஏ - து** மரக்காடான விறகுகாடு எரிந்ததொத்தது, திருமலையிற் சீதலமான சந்தனக்காடு ; ஸ்ரீகைலாசபருவதச்சாரலும் உட்டினத்தால் வேறுபட்டது எ - று.

இந்தனம் விறகு. இருண்ட சந்தனடவியென்றது இருளடரச் செறிந்து தமக்கென விளையாடச் சமைந்த சந்தன நந்தவனமென்றவாறு.

(வி - ரு.) மூ. இந்தன அடவி. சந்தன அடவி. இருண்ட தண்சந்தனடவி எரிந்ததொழிந்ததென்க. சாரல் வேறுபட்டதென முடிக்க. (அரு)

330. பைத்தபூணு முயிர்ப்பழன்றன பண்டையுண்டியு மவ்வழிக்
கைத்ததாழியி லாடுமஞ்சன முங்கிளர்ந்து கனன்றதே.

பட மெடுத்திருக்கும் ஆபரணமான மகாநாகங்களும் கோபித்து நிசுவாசங்களை விட்டன; எனவே பண்டு திருமேனியைச்சார்ந்து கோபமும் கொலையும் கொடுமைக்குணமும் ஆசையும் நீங்கியிருந்தன வெனவுணர்க. பண்டொருகாலம் அமுதுசெய்தருளிய ஆலகாலமும் திருக்கழுத்தின் வட்டத்திலே நின்று கைத்தது. இதற்குக்காரணம்: திருவமுதுகைத்தல் பித்த தோஷத்துக்குப் பால்கைத்தாற்போல; எனவே அவருக்கு அமுதாகிய நஞ்சு கோபத்தாலே கைத்ததென வுணர்க. உகாந்த காலத்தில் திருமஞ்சனமாடக் கடவ உகாந்தாக்கினியும் எழுந்து கோபித்தது. பண்டு நெருப்புநீராதற்குக் காரணம்: லோகத்தின் வத்துக்களெல்லாம் ஈசுவரன் வேண்டியருளின போது தம்முடையகுணங்களும் வேறுபடுமென வுணர்க.

(வி - ரு.) மூ. 'பண்டையுண்டி' என்பதனுடன், "ஆலமொன்றுமமுதென்று பண்டமுது செய்யுமையர்" (தக்க. 650) என்பது ஒப்புநோக்கத்தக்கது. ஆடு மஞ்சனம்: சிவபெருமான் ஊழியிறுதியில் வடவாமுகாக்கினியே மஞ்சனமாக ஆடுவாரென்பது, "ஆடுமஞ்சன முங்கொதித்தது", "மேருவில்லி மஞ்சனச் சாலைவாய் வெதுப்பி", "அடிப்பெருங் கடவுளூழியீறுதொறு மாடு மஞ்சனம்", "ஊழித் தீயுவந் தாடுவ தோர்ந்ததோ" (தக்க. 332, 379, 656, 673) என்பவற்றாலும் அவற்றின் உரைகளாலும் அறியப்படும். இதன் கருத்து, அடங்கியிருந்த பாம்பு முதலியவைகளும் கோபிக்கத்தொடங்கின வென்றபடி; பின்னுள்ளவற்றையும் இவ்வாறே கொள்க. உரை. பால் கைத்தாற்போல: திருச்சிற். 215. (அசு)

331. மதியுமன்றொரு தீவிளைந்து வளைந்துகொண்டது கங்கைமா
நதியும்வீசிய சீகரங்களின் வந்துவந்து நலிந்ததே.

மதியுமென்ற உம்மையால் திருச்சடையில் உள்ள மற்றவையும் கொள்க. கங்காதீர்த்தமும் சிறிது உஷ்ணத்திவலை விட்டதெனவுணர்க. சீகரம் - திவலை. (அஎ)

332. [1]சூடுமஞ்சன வாறுசுட்டது கண்ணிசுட்டது [2]பண்டுதாம்
ஆடுமஞ்சன முங்கொதித்த திருப்பரோதனி யையரே.

எ - து கங்கைசுட்டது; சந்திரன் கொன்றை முதலாயின புட்பங்களும் கொதித்தன. அன்றியே அக்கினிதேவனும் கோபித்தான். இனி மகாதேவரும் கோபியாதே தனியே இருப்பரோ எ - று.

இக்கவியின்பொருள் விரித்துத்தொகுத்தல்.

ஆடுமஞ்சனம் அக்கினி; "அங்கமே பூண்டா யனலாடினாய்" (திருநா. தே. திருப்புகலூர்) என்னுந்திருப்பாட்டிற் கண்டுகொள்க. தனியையரென்றது சமானமிலரென்றுமாம்.

(வி - ரு.) உரை. சந்திரனையும் கண்ணியாகக் கூறுதல் மரபு; "உச்சியிற் பனி வீசுகண்ணி' (தக்க. 625) என்பதன் உரையைப் பார்க்க;

'பசுங்கதிர்க் குழவித்திங்களைக் குறுங்கண்ணியாகவுடைய அழலவிர்சோதி யருமறைக் கடவுள்' (இறை. 1, உரை), "மேக மொடோடுதிங்கண் மலரா வணிந்து", "திங்கட் குறுந்தெரி யற்றிகழ்கண்ணியன்" (தே.) "கங்கை சூழ் சடையிற் கதிரிளம்பிறை நறுங்கண்ணி யையர்", "வளரிளந் திங்கட் கண்ணி மன்றுளார்", "கதிரிளம்பிறைக் கண்ணியர்", "புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார்", "கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல்" (பெரிய.)

(பி - ம்.) 1 'ஓடுமஞ்சன' 2 'வந்துதாம்' (அஅ)

## வீரபத்திரதேவர் தோற்றம்

333. அன்றுவானவ ருய்யவையர்
மிடற்றடக்கிய வாலமே
சென்றுவானவ ருயிர்கொளத்திரு
வுள்ளம்[1]வைத்தமை தெரியவே.

இ - து பண்டு தேவர்அசுரர்முதலாக எல்லாரும் எல்லாமும் பிழைக்கத் திருமிடற்றில் அடக்கியருளிய ஆலகாலத்தையே அவர்பட விடவமையு மென்று நினைந்தருளிய குறிப்பை அறிந்தருளி எ - று.

தெரியவென்றது தெரிந்தென்பதன் திரிபு.

திருமிடற்றுக்கறுப்பொழியின் ஒருவரோடொருவர் உருத்தெரியாது ருத்திரலோகம் கெடுமெனநினைத்து வந்து திருமுன்னேநின்றனர், வீரபத்திர ரெனக்கொள்க. (பி - ம்.) 1 'வைத்தது' (அகூ)

334. காலைநெற்றியி னகிலமுஞ்சுடு கனலிகுறைபட விறைவர்தம்
மேலைநெற்றி விழிக்கவந்து பணிந்துநின்றனன் வீரனே.

காலை - பகல்; நெற்றி - நடு; பகல் நடுவாவது மத்தியான்னம். நெற்றியை முதலெனக்கொண்டு விடிவென்பாருமுளர்; அப்பொழுது உஷ்ணமில்லை. மேலையென்றது கண்கள் நிற்கும் நிலைமையைத்தவிர மேலே யென்றவாறு. நெற்றியென்றது நேரேயான நெற்றியெனவுணர்க. இது யோகாப்பியாசத்தால் வந்த திருநயனமாதலால் கோதண்டவெளியென் றும் கோதண்டவெள்ளமென்றும் புருவத்துமேலதென்றும் கூறப்படுவதை ஞானயோகங்களிலும் அட்டாங்கயோகங்களிலும் யோகபட்சசாத்திரங் களிலும் பிறவற்றிலும் கண்டுகொள்க; "இமையா முக்கண், மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்" (முருகு. 153 - 4) இமைத்த கண் விழித்ததுபோல விழிக்கவெனச்சொல்லியது: விழித்தலாவது பிரச்சு வலித்தல் (நன்றாக ஒளிர்தல்.)

இவ்வவசரத்துக்கு மகாதேவர் திருமுன்னேவந்துநின்றார், மகாவீர பத்திர தேவரென்னும் கணநாதரென்றவாறு; विचित्रक्कणोसन्तोषो वीरभत्रो महाबलः என்றது அநந்தாகமம்; இதனை யுணர்க.

இதனைப்போலும், "கூறுமடற் கூறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி, மாறுப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி" (கலி. கடவுள். 3-4) என் பதும், ஸ்ரீ மகாபாரதத்தில் ஸத்தியவதி நினைக்க ஸ்ரீ வேதவியாசர் வந்தா ரென்பதும்.

(வி - ரு.) உரை. இது யோகாப்பியாசத்தால் வந்த திருநயனம் : "முக்கண்ணொன்றது......ஒன்று யோகத்தைப்பற்றி......மேனோக்கியும்" (தக்க. 454, உரை.)

'ஸத்தியவதி நினைக்க...வந்தார்' : "வழுவற மனஞ் செய்யக், கனக்கருங்குழன் மகிழ்வுற முதற்பெறு காதன்மைந் தனும்வந்தான்" (வி-பா. சம்பவச் சருக்கம், 9.) (கூ0)

## சிவபெருமான் கட்டளை

335. நின்றவீரனை மாமன்வேள்வி தகர்க்கவென்று நெடுஞ்சிலைக்
[1]குன்றவீரர் பணித்தலும்பணி யாமல்வந்தன கூளியே.

நெடுஞ்சிலைக் குன்றவீரர் - மகாமேருவை நெடுஞ்சிலையாகக்கொண்டவர்.

(வி - ரு.) மு. 'பணியாமல் வந்தன கூளியே' என்பதும், "கூருமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி" (தக்க. 334, மேற்.) என்ற கலித்தொகையடிகளுக்கு இவ்வுரையாசிரியர் கொண்ட பொருளும் ஒத்திருத்தல் காண்க. (பி - ம்.) 1 'குன்றவில்லி' (கூக)

## வீரபத்திரதேவர் புறப்பாடு

336. திரண்டபூத பசாசமாயிர
கோடிகோடி திறத்தவாய்
இரண்டுபாலு [1]முடன்செலத்திரு
மலைவலஞ்செய் திறைஞ்சியே.

ஆயிரகோடிகோடியென்றது ஆயிரகோடி ஒருதிறனைகை யெனவுணர்க ; திறம் - தரம். பூதகணம் பதினெட்டுத்திறம் ; பசாசகணம் நாற்பத்தெண்ணாயிரந்திறம் ; இவற்றைப் பெருக்கிக்கொள்க.

(பி - ம்.) 1 'முடன்வரத்திரு' (கூஉ)

## வேறு

337. உலகு மூழியுங் கொண்ட மைந்ததோர்
இலகு [1]வைதிகத் தேரி லேறியே.

உலகென்ற உவமையால் பரப்பும் சிறப்பும் செறிவும் திண்மையுமுதலாயின கொள்க. ஊழியென்ற உவமையால் செல்லும் உலகங்கள் எல்லாவற்றிலும் சென்று உலாவித் தான்அழியாமைநிற்றல் கொள்க. அது காலமென்கிற பொருள் ; "கழிந்துவளர் கிழமையி லொழிந்த ஊழி, ஒன்பதிற் றிரட்டி யொருமூறை செல்ல, நன்கென மொழிவன நான்கே நான்கிலு, முதலது தொடங்கிய நுதல்விழிப் பெரியோன், கடகக் கங்கணப் படவரவு, பூட்டி மலைச்சிலை வளைத்த பொழுதே". இது மாடலம்.

(வி - ரு.) மு. "மறில் காலமு ஞாலமுங்கொடு செய்த தேர்மிசை யேறியே" (தக்க. 626) என்பது இதனோடு ஒத்திருத்தல் காண்க. வைதிகத் தேர் : "வைதிகத்தேர் நின்றார்", "வைதிகத்தேரின் மேருத், திண்சிலை குனிய

நின்றூர்". (**பெரிய.** விறன்மிண்ட. 6, குங்குலியக். 30.) (**பி - ம்.**) 1 'வைய கத்தேரி' (கூ௩)

**338.** மாக சந்த்ரமண் [1]டலமழுங்கநின்
றேக சந்த்ரமண் டலமெறிப்பவே.

மாகம் - ஆகாசம். ஏகசந்திரமண்டலமென்றது அன்றைக்கன்று பல வாய்த்தோன்ருது ஒன்றியே வட்டப்பட்டு நிற்கும் சந்திரமண்டலமென வறிக. இஃது ஆதபத்திரத்தின் பெயர். எறிப்ப - விளங்க.

(**வி - ரு.**) **உரை.** ஆதபத்திரம் - குடை ; 257 - ஆம் தாழிசை பார்க்க.

(**பி - ம்.**) 1 'டல முழுங்கிநின்' (கூ௪)

**339.** மழைத்த தென்றலால் வாடையால்வகுத்
திழைத்த திவ்யசா மரையிரட்டவே.

மழைத்தல் - தழைத்தல் ; சீதலித்தற்கும் பெயர். வாடைக்குத் தழைப்பும் சீதமும் சொல்லவேண்டா. இழைத்தல் - செய்தல். இழைத்த போலுமென உவமைதொக்கது. திவ்வியமென்றது விசுவாமைத்தோற்ரு தொழிகை. (கூ௫)

**340.** கொள்ளையிற்படுங் [1]குலவராகமான்
வெள்ளெயிற்றுமுத் தாரமின்னவே.

குலவராகமென்றது ஆதிவராகத்தை : இஃது ஒன்று ; கொள்ளையிற் படுகையாவது : விஷ்ணுக்கள் பூமிவிழவிழ எடுக்குந்தோறும் பிறக்கும்பிறவி ஆயிரத்தெட்டுக்கொண்டது வீரபத்திரதேவருக்கு ஒருநாழிகை யென வுணர்க ; "ஊழியூழிக்க ணிருநிலமுருகெழு, கேழலாய்மருப்பி னுழுதோய்" (23 - 4) என்பது **பரிபாடல்** மூன்றும்பாட்டு.

வராகமான் - பன்றிமிருகம். இதனையே **லிங்கபுராணத்தி** லேற்றிப் பொருள்கொள்ளினுமாம். முத்துப்படும் அட்டத்தானத்திலும் பன்றியின் கொம்பும் ஒன்ருமெனவறிக. முத்தாரமென்றது முத்திறைசமைக்கப்பட்ட ஆரமல்ல ; முத்து நிரப்பமெனவுணர்க. இஃது ஏகாவலிவடம்.

(**வி - ரு.**) மு. கொள்ளை - மிகுதி ; "கழுநீர்க் **கொள்ளை**" (**கம்ப.** நாட்டுப். 2.) **உரை.** லிங்கபுராணம் - சிவபெருமான் பெருந்தேவரிருவரும் அடிமுடிதேட இலிங்கவடிவமாய் நின்ற பழங்கதை ; இதனை '**இலிங்க புராணக் குறுந்தொகை**' என்பதும் அறிவிக்கும். நிரப்பம் : "நிலவிற்கமைந்த நிரப்பம்" (**பெருங்.** 2. 6 : 78.)

(**பி - ம்.**) 1 'கொலை வராகமால்' (கூ௬)

**341.** காத்தவாமையோ டுங்கபாலமும்
[1]கோத்தசன்ன வீரங்குலாவவே.

காத்த ஆமையென்றது, இரட்சாமூர்த்தியான ஆமையென்பதல்ல ; கடல்கடைகிற காலத்து மந்தரபருவதத்துக்கு அடைகல்லாய்நின்ற கூர்ம ராசன்விழ ஆமைவடிவாய்ப் புகுந்து கடலிலே ஆகாசமேநின்று மந்தரபரு வதத்தை முதுகில் தாங்கி ரட்சித்த ஆமையென உணர்க. கபாலமென் றது பிரமகபாலத்தை. இவையிரண்டும் சன்னவீரம் ; வீரக்குறியாரமென்

பாரும், வாகுவலயமென்பாரும், பதக்கமென்பாருமுளர். அவை பொரு ளல்ல; வீரசங்கிலிக்குப்பெயர். ஆமையோடும் பிரமகபாலமும் பலவென வுணர்க.

(வி - கு.) மூ. சன்னவீரம் - மார்பில் அணியப்படும் ஓர் அணி; "சன்ன வீரந் திருமார்பில் வில்லிலக" (ஆதி. 18 - 9); "சன்ன வீரமிடை மின்னுதட மார்பினெடும்", "சன்னவீரத்த கோவை......பொலிய' (கம்ப. விராதன். 12; நிந்தனை. 8); "கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக்கோடு, துண் டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்றோல், தண்டைச் செயல் பொங் கிய சன்னவீ ரந்தயங்க" (பெரிய. கண்ணப்ப. 59.)

(பி - ம்.) 1 'கோத்தவீர சின்னம்' (கூஎ)

342. வந்தவந்தமா [1]யவர்கண் மாய்தொறும்
தந்ததந்தசங் கந்தழுங்கவே.

ஒற்றைச் சங்கு மகாதேவர் தமக்கே உரியது.
(பி - ம்.) 1 'யவர்கள் வாய்தொறும்' (கூஅ)

343. திருக்கொண்மார்பன் றிரிவிக்ரமஞ்செய்த
உருக்கொணீள் [1]குரற் காளமூதவே.

எ - து நாராயணன் உலகத்தைத் தாட்கொண்டு பிரமாண்டத்தளவும் சென்று நெடுகியதிருமேனியைக் காளமாக ஊதிவர எ - று.

தசைகழன்று எலும்புநின்றுழும் ஊதலாம்; அன்று காசியபருக்கு அதிதிப்பிராட்டிபால் அவதரித்தருளியது.

(பி - ம்.) 1 'சுடர்' (கூகூ)

344. செய்தவேள்விவா யஞ்ஞர்தஞ்சிரம்
பெய்த சிங்கசின் னம்பிடிக்கவே.

எ - து பண்டுசெய்த அக்கினிகோத்திரயாகத்திடத்து யக்ஞமூர்த்தி யான அக்கினி தேவனுடைய கொம்புகளைச் சிறுசின்னமாகப் பிடிக்க எ - று.

இது தாருகாவனத்திற் கங்காளவேடம்கொண்டகதை.

அக்கினிதேவனும் விஷ்ணுமூர்த்தியே. பெய்த சிங்கம் - வரவிட்ட கொம்புகள். இது சிறுதுத்திரி; இரட்டைச்சின்னம்.

(வி - கு.) சிங்கம்: சிருங்கம் என்பது சிங்கமெனவழங்கும்; "சிங்கநாதங் கிடந்தசையச் சித்தவடிவா யெழுந்தருளி" (திருவிளை. உலவாக்கிழி. 7.) (௪00)

345. ஓடியோடிவீழ் தருமரூர்தியின்
கோடிகோடிகொம் புகள்குறிக்கவே.

ஓடிஓடி விழுகையாவது பிறந்திறந்துவருதலும், உதைக்கஉதைக்க வீழ் தலும். தருமன் - யமராசன். ரகரவீற்றால் அநந்தகோடி யமராசரைக் கொள்க. தருமரூர்தி - எருமைக்கடா; "நிர்ப்பயமஹிஷம்." இது தூரிய சத்தம்.

அவையிற்றின்கொம்புகள் குறிக்குங்கொம்புகள்.

(வி - கு.) உரை. சூரிய சதகம்: சூரியனுடைய தோத்திரமாக அமைந்த ஒரு வடமொழி நூல்; மயூரசதகமென்றும் கூறப்படும். 7 - ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஸ்ரீஹர்ஷனுடைய அரசவையிற் புலவராக இருந்தவரும் பாணபட்டருடைய மாமனுமாகிய மயூரகவி யென்பவரால், தாம் இழந்த கண்களைப் பெறும்பொருட்டுப் பாடப் பெற்றதென்பர். (கOக)

346. [1]கொண்ட சூலவேல் விடுபொறிக்குழாம்
மண்டவானமீ னிரைமயங்கவே.

எ - து திருக்கையில் எடுத்துக்கொண்டருளிய சூலமான ஓராயுதம் விடுகிற நெருப்புப்பொறிக்கூட்டங்கள் சென்றுமண்டுதலால் ஆகாசத்து நட்சத்திரங்கள் மதிமயங்க எ - று.

(வி - கு.) 337 - ஆம் தாழிசைமுதல் இதுவரையிற் கூறப்பட்டவை சிவபெருமானுடைய செயல்கள். வீரபத்திரர் சிவபெருமானுடைய கூறாதலின் சிவபெருமானுடைய செயல்களெல்லாம் அவருடையனவாகக் கூறப்பட்டன. (பி - ம்.) 1 'கொண்டகொண்ட வேல்' (கOஉ)

347. அற்றவில்லின்வா னடையவுந்திருக்
கொற்ற[1]வில்லினாண் விழிகொளுத்தவே.

எ - து வானிற்சோதி அடையவும் அற்றன, திருக்கொற்றவில்லில் ஏற்றின நாணனபாம்பின்கண் நெருப்புக்கொளுத்த எ - று.

வில் மகாமேருவல்ல, பிநாகம்; வில்லின் நாணும் வாசுகியல்ல, தட்சகன். இப்பொருள் வாதுளதந்திரத்திற் கண்டுகொள்க.

(வி - கு.) மூ. விழி கொளுத்த வானின்வில் அடைய அற்றவென்க. 'நாண்விழி கொளுத்த' என்றமையால், நாணாகிய பாம்பு நச்சுவிழியரவாதல் அறியப்படும். உரை. இதனால் பிநாகத்தின் நாணும் தட்சகனென்னும் பாம்பென்று விளங்குகிறது.

(பி - ம்.) 1 'வில்லிநாணெலி' (கOங)

## பூதகணங்களின் செயல்கள்

348. பூதநெற்றியிற் புண்டரம்புகுந்
தியாதுதானர்நெய்த் தோரிழுக்கவே.

எ - து பூதகணநாதருடைய திருநெற்றியில் திரிபுண்டரமிட்ட திருநீறுகுழைப்பவேண்டி அசுரர் தங்களுடைய ரத்தங்களையெல்லாம் இழுக்க எ - று.

யாதுதானராவார் அசுரரிலே சிறப்புடையார்; திதியின்மக்கள் யாதுக்களும் தனுவின்மக்கள் தானவருமாகிய அநந்தகோடி அசுரர்கள். (கOச)

349. கூளிநாயகக் குலம்விடுந்திருத்
[1]தூளிசாகரா திகள்சுவற்றவே.

கூளிநாயகராவார் பேய்க்கணத்தலைவர்; அவர்கள் ஸ்ரீபாதங்களில் திருத்தூளிக்கே கடல்களேழும் சுவறின.

சாகராதிகளென்றதனால் சகரர்களால் அகழப்படாத கடல்களும் கொள்க.

(வி - ரு.) **உரை.** சகரர் தோண்டியகடல் கீழ்கடலென்று பழைய நூல்கள் கூறும்; இதுபற்றியே அக்கடல் தொடுகடலென்று கூறப்படும்; "குணஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்" (புறநா. 6 : 3) என்பதும் அதனுரையும் இங்கே அறியற்பாலன.

(பி - ம்.) 1 'தூளிசாகரத்தின்' (கoரு)

350. ஏனையோரிருந் தினையதென்னவே
சேனைவல்லபஞ் செய்தசெய்தியே.

ஏனையோரென்றது வேறுசிலர்; ஸ்ரீ வேதவியாசாதி பிரமரிஷிகள்.
(கoசு)

351. கொம்மைமுலைமருங் [1]கெழுவர்குமரிமார்
[2]தம்மையிடுகபே யென்றுசாடியே.

கொம்மை - வீக்கம்; மருங்கு - வீங்கா வெறுமருங்குல்; குமரிமார் - வாழ்க்கைப்படாதார். பேயிடுகவென்றது அமஞ்சி வெட்டிக்கு ஆளிடுக வென்றவாறு.

எனவே, தேவி, நீ ஈசுவரனுடைய திருவுள்ளம் உணர்ந்தருளி முன்னமே படைபோகவிட்டருளினய்; அவற்றில் யானும் ஆளன்றேவென்பது கருத்து.

(வி - ரு.) மூ. எழுவர் குமரிமார்: "தெய்வமகளி ரெழுவரும்" (தக்க. 168.) **உரை.** அமஞ்சி: அமஞ்சி, வெட்டியென்பன கூலியின்றிச் செய்யப்படும் வேலையின் வகைகள்; "இப்பூங்கோதைப் பூண்டியில் குடிகளை **வெட்டியும் அமஞ்சியும்** இறையும் எப்பேர்ப்பட்டனவும் கொள்ளப்பெருதோமாகவும்" (**உத்தரமேரூர்ச் சிலாசாஸனம்**, South Indian Inscriptions, Vol. VI. p. 150), "இந்நிலத்துக்கு நீர்விலை அந்தராயக் காசென்றும் உப்புக் காசென்றும் **வெட்டி அமஞ்சி** எச்சோறு கூற்றுநெல்லென்றும் மற்று எப்பேர்ப்பட்டனவுங் கடவனல்லாதாகுகவும்" (**திருவல்லத்துச்சிலாசாஸனம்**, South Indian Inscriptions, Vol. VI, p. 175).

(பி - ம்.) 1 'கொழுகு' 2 * 'தம்மைவிடுகபடை' (கoஎ)

352. படைவிடாவிசும் பாளரைப்பறித்
திடைவிடாவிமா னங்க[1]ளேறியே.

விசும்பாளர் - தேவர்கள்; விசும்பாளரென்கைக்குக் காரணம் விமான மோட்சத்தலமான ஆகாசத்திலிருக்கை; அதிலிருப்பார் சுவர்க்க வாசிகளிலும் பெரியவரான அகதிக்ஷேத்திரத்தார்; அவர் லோகாக்கிரசித்தரெனச் சொல்லப்படுவார். அவர் படைவிடாமை வீரபத்திர தேவர்க்கல்ல; யாகத்துக்குப் போன தேவர்கட்குக் கூட்டுப் படை விடாதாரென்பது. அவர் படைவிடாமைக்குக்காரணம்; ஆகாசத்துக் காணியாளர் அவர்கள்; அல்லாத தேவர்களெல்லாம் புண்ணியத்தால் வலிந்து புகுந்த புகலிகளென உணர்க. அவர்களைப்பறித்தலாவது அவர்களிருந்த இடத்தைப்பறித்தல்; அவர்களிருந்த இடம் ஈசுவரன் படைக்கு எளிமைப்படும் இடம். இது வன்றி மோட்சமாவது சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சிய மென்னும் நான்குமேயெனவுணர்க. விமானங்களென்றது அவர்களிருப்பான இடங்களை யல்ல; அவரவரால் விடப்பட்ட விமானங்களை. இடைவிடா - இடங்கொடாத.

(வி - கு.) உரை. லோகாக்கிரம் - உலகங்களின் உச்சி.
(பி - ம்.) 1 'ளேற்றியே' (௩0அ)

353. இடியிருந்தகட் பதினொரீ சர்தம்
குடியிருந்தவூ ரெரிகொளுத்தியே.

இடி - அக்கினி. ஏகாதசருத்திரர் இருந்த ருத்திரலோகத்தை ஊரென்றது. அது மோட்சத்தலத்துக்கு நேரே கீழாக வுள்ளது.

(வி - கு.) மு. இடி : தண்டி. சூ 54 - மேற். 'பண்டுபு'. (௩0௯)

354. அகலிடந்தொழுந் துவாதசாதித்தர்
புகலிடம்[1]பொடி செய்துபோகியே.

அகலிடந்தொழுமென்றதற்கு ஆதித்தியபதத்துக்கு மேலுள்ள ருத்திரலோகத்தார் ஆதித்தனை நமக்கரியாரென்பது கருத்து.

(வி - கு.) மு. அகலிடந்தொழுந் துவாதசாதித்தர் : " பலர்தொழத் தோன்றி, ஏமுறவிளங்கிய சுடர் " (நற். 283) ; முருகு. 2 அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.) 1 ' பொடிச்செய்துபோக்கியே ' (௩௧0)

355. போழுமின்னின்முன் [1]புகுந்தெழுந்துகீழ்
வீழுமுன்பிடித் [2]திடிவிழுங்கியே.

எ - து மின் மறைவதன்முன்பு புக்கு மேகத்துநின்றுங் கீழ்விழும் உருமேறுகளைப் பிடித்து விழுங்கி எ - று.

போழ்தல் - பிளத்தல்.

(வி - கு.) மு. கீழ் வீழுமுன் பிடித்து இடி விழுங்கியே : " வானவேறு செவ்வியோடு கவ்வியே " (தக்க. 383.) (பி - ம்.) 1 'புகவெழுந்தகீழ்', 'முகம் விழுந்துகீழ்' 2 'திடாவிழுங்கியே' (௩௧௧)

356. பூதர்யாவையும் [1]புகவிழுங்குமா
ஓதம்யாவையுந் தேடியோடியே.

தேடியது, உகாந்தகாலத்துப் பிரளயோததி எல்லாப்பொருளையும் மறைத்துக்கொண்டு காக்குமெனநினைத்து. ஓடியது இரண்டுதொழில் செய்யமாட்டாமையின்.

(வி - கு.) உரை. இரண்டு தொழில் - தேடுதலும் யாகசாலைக்கு ஓடுதலும். (பி - ம்.) 1 'புகவிழுங்குமால்' (௩௧௨)

வேறு

357. இந்துகாந்தக் கிரியை யிடக்கணால்
வந்துகாந்தக் கடல்செய்து மாந்தியே.

இந்துகாந்தம் - சந்திரகாந்தம். இடக்கணென்றது சந்திரனை கண்ணை. வந்து - மற்றைக்கண்ணை மறைத்துவந்து.

மலையைக்கடலாக உருக்கியெனவுணர்க.

(வி - கு.) மூ. வந்து உகாந்தம் கடல் எனப்பிரிக்க. சந்திரனுடைய நிலவினால் சந்திரகாந்தம் உருகுமென்பது இங்கே அறியற்பாலது. உரை. 'சந்திரனைகண்' என்றதனால், இச்செயலைச்செய்தவை சாரூபம்பெற்ற பூதங்களென்பது அறியப்படும். (கககூ)

## வேறு

358. முதியவானமீன் வாரிமுக்கிவான்
நதியவானமீன் முழுகிநாடியே.

முதியவானமீனவன பண்டே உண்டாயிருக்கும் நட்சத்திர தாரகா கணமெனவுணர்க. வான்நதிய ஆனமீன் - ஆகாசகங்கையில் உண்டான மீன்.

(வி - கு.) மூ. முக்கி - விழுங்கி : "மலைகள்வாரியன வேழு முக்கி" (தக்க. 410); சகோரத்தை நிலாமுக்கியென்பர் (தக்க. 605, உரை) ; "பாசவன் முக்கித் தண்புனற் பாயும்" (புறநா. 63); "முத்தைக், கொக்கு முக்கிக் கக்கிவிக்குமச் சோலைக் குறுங்குடியே" (தனிப்.) ; "கங்க முக்கின சிறுமீனெல்லாம்" (திருவிளை. இந்திரன். 56.) (ககச)

359. கடவுணீலியூர் யாளிகைப்படுத்
[1]தடவிவாரிமால் யானைவாரியே.

அடவி வாரி - அடவியைவாரி, அடவியில் யானைவாரி, அடவியான யானைவாரியென்பனவும் பிறவும் உள்ளன.

துர்க்காபரமேசுவரி வாகனமான யாளியினமெல்லாம் ஒருவிரோதப்படாமற் பிடித்துத் தம் கைப்பட வைத்தாரெனவறிக.

(வி - கு.) மூ. கடவுணீலியூர்யாளி : "ஆளியேறி", "புங்கவாளி", "யாளி யூர்தி" (தக்க. 613, 617, 729.) (பி - ம்.) 1 'தடவிவாடு மாத்தானை' (ககரு)

360. [1]செலல்விலங்குதேன் மடைதெவிட்டியேழ்
குலவிலங்கலும் [2]பாதிகுன்றவே.

செலல்விலங்குதேன் - தன்னைவிட்டுப்போகையை விலக்குந்தேன். இத்தேன்களை மடுத்துத் தெவிட்டினால் அம்மலைமரமும் முழையும் அடிவாரமும் சிகரங்களுமான உறுப்புக்குறையுமாதலிற் குலபருவதங்களும் குன்றவென்றார். இதனையே தேன்மடைதெவிட்டி அம்மலையை விழுங்குவரென்றுசொல்வாருமுளர் ; அது பொருளன்று.

(வி - கு.) உரை. 'அம்மலை மரமும்......உறுப்புக்குறையும்' என்றது, தேனையுண்ட களிப்பினால் மரமுதலியவற்றை அழிப்பரென்று குறிப்பித்தபடி ; கம்ப. திருவடிதொழுத படலத்தைப் பார்க்க. (பி - ம்.) 1 'செலவிலங்கு' 2 'பாடுகுன்றவே' (ககசு)

361. கார்கிழித்தமரர் [1]நாடுகண்டுடன்
பார்கிழித்துரகர் பூமிபற்றியே.

கார்கிழித்து - சுவர்க்கத்தைக் காத்துமூடிக்கொடு கிடந்த மேகங்களைக் கிழித்து. அமரருடைய நாட்டைக்காண்கையாவது அதன்வலியை ஒழித்

தல். பூமி நாகலோகத்தைக் காத்தது; மேகஅடுப்பமும் பார்அடுப்பமும் ஒத்தன பேய்க்கணங்கட்கு. உரகர்பூமி - பாதாளலோகம். பற்றுதலாவது சுவர்க்கத்தாற் பசி தீராலமயின் நாகங்களையும் பற்றித்தின்றன வென்பது. (பி - ம்.) 1 'நாடு கண்டெனப்' (கசஎ)

362. குடத்தெடுத்துநல் [1]லமுதுகொண்டவர்
படத்தெடுத்தசூ டிகைபறித்துமே.

பாதாளலோகத்தைப் பற்றிச்செய்த பணி இதுவென்பது.

குடத்தெடுத்த அமுதாவது தேவர்கள் உண்டுமிஞ்சின அமிழ்து; இது கருடன் கொண்டுபோய்வைத்தது. சூடிகை - முடியின்மணி.

(வி - கு.) மூ. நாகலோகத்தில் அமுதகுடங்கள் உண்டென்பதும், அவற்றைப் பூதகணங்கள் குடித்தனவென்பதும், "நாகர்தங்கள் திவ்யபானம் வைத்தபோற் சாலெடுத்து", "கலத்தமிர்தப் பரப்படையக் கவுட்படையிற்கவிழ்த்து" (தக்க. 387, 479) என்று பின்னுங் கூறப்படும்; "வாசுகி தனக்கிலன் வரவு ணர்த்தலும், ஆசுகன் மதலையென் றறிந்து மற்றவன், தேசுறு பொற்குடந் தெரிந்து பத்தினல், ஏசறு மமுதெலா மினிதி னூட்டினன்" (வி. பா. வாரணாவத. 15) என்பதனாலும் நாகலோகத்தில் அமுதகுடங்க ளுண்மை பெறப்படும். (பி - ம்.) 1 'லமுத முண்டவர்' (கசஅ)

363. கடித்துமென்றுரகர் நஞ்சுகருதியோ
குடித்துமென்றமிழ்து கொண்டுபோயுமே.

கடித்து மென்று என்பன இரண்டும் செய்தென்னும் வினையெச்சம். கருதியோவென்றது, பாம்பின்விஷம் தங்களை நலியாவாயினும் என்பது. குடித்தும் - குடிப்போம்; உயர்திணைப்பன்மை உளப்பாட்டுத்தன்மைச் சொல். (கசகூ)

## வேறு

364. எழாதவாறு மெழுந்த சுராசுரர்
விழாதவாறும் [1]விசும்பற வீசியே.

முன்னே சிலரை ஆகாசமேபோக எடுத்துவீசினால் அவர்கள் பூமியிலே விழுவர். அவர் விழுந்தால் அவர்கள் எழுந்திருத்தல் மரித்து மீண்டுபிறந்தல்; இதற்குப்பரிகாரம், கீழ்விழாதே நட்சத்திரங்களுடன் காணவொண்ணாமல் ஆகாசமேசரித்து அவைமாய்ந்தால் ஒக்கமாயும்படி வீசுகை; அஃதாவது விழாதபடி வீசுகை. 'விழுந்த' என்றபாடமுமுண்டு. வீசல் எழுந்தாரை நோக்கிற்று. சுராசுரர் - சுரர் அசுரர்; தேவர்களும் அசுரர்களும். விழாதவாறு விசும்பறவீசியென்றது: எடுத்துச்சுழற்றி வீசினவிசைமேல் ஆகாசமுள்ளளவும் செல்லவீசுதல்; அப்பாற்போம் இத்தனையல்லது கீழ் விழக் காலம் இல்லை, ஆகாசம் அறாதாதலால். எனவே அவர் விபுத்தியும் சத்தியும் இவ்விரண்டும் கூடின யுத்தி இது. விசும்பறவென்றது விசும்பு அறுவதல்ல; விசும்பற விசை அறுகையென்றவாறு. இது மந்திரசத்தி. இராமனால் வடக்குநோக்கிப் போகவிட்ட குரங்கு இன்னும் மீளத்தொடங்கிற்றில்லையென்னும் பொருள் இது.

(வி - கு.) மூ. இத்தாழிசையுடன் 418 ஒப்புநோக்கற்பாலது. உரை. சரித்து - இயங்கி. (பி - ம்.) 1 'விசும்புற' (கஉ0)

365. [1]பேர்த்துநின்ற வயிற்றின் பெருவெளித்
தூர்த்துநின் றுவிசும்பெதிர் தோன்றவே.

ஆகாசத்து மிடைந்துநின்ற தேவர்கள்சரீரங்களை அவ்விடத்தினின்றும் வாங்கித்தின்று தங்கள்வயிற்றில் ஒன்றுமின்றி வெளியாகக்கிடந்த பெரும் பாழ்களை அடைத்தன ; அடைத்தபின்னை முன்புதோன்றுதேநின்ற ஆகாசம் இவையிற்றிற்கு எதிராய்த்தோன்றிற்று.

இவர்கள் பரோதரர் ; ஆகாசம் வயிறெனப்படும் விதூஷகதூஷணநாத ரென்றறிக. இது தந்திரயுத்தி ; எச்சமன்று.

(வி - கு.) உரை. ஆகாசம் வயிறெனப்படும் விதூஷகதூஷணநாதர் ; "மாகமேயனையர் தம்மகோதரமும்" (தக்க. 421.) (பி - ம்.) 1 'பொருந்த நின்ற வயிற்றுப்பெறு வெளிதுறந்துநின்ற' (கஉக)

366. வருதரைக்குன் று வாழுங் குழிவழி
நிருதரைப்புக நூக்கி நிரப்பியே.

வரு நிருதரையெனக்கூட்டுக. தரைக்குன்றுவாழுங் குழி யென்றது பறக்குங்குன்றுகளை நினைத்தெனவுணர்க. குழிநிரப்புகையாவது முன்னிற் பாட்டில் ஆகாசத்தை ஆக்கினதுபோல இங்கும் பூமியை ஆக்குகை. மலைக் குச் சமானர் அசுரரெனவுணர்க.

(வி - கு.) உரை. மலைக்குச் சமானர் அசுரர் : "நீல வரைநிரைகள் போலு மவுணர்" (தக்க. 57.) (கஉஉ)

## வேறு

367. ஓதமும் பொருப்புமண்ணும் விண்ணுமற்று [1]முள்ளவெப்
பூதமுந்த்ரி சூலமிட் டுடன்கலந்து [2]போதவே.

திரிசூலமென்றது ஒருகழுவல்லவென்பது. சூலம் - கழு. ஓதம் - சல சாதி. பொருப்பு - பருவதசாதி. மண் - பசு பட்சி நர மிருகசாதி. விண் - தேவ தானவ தைத்திய சித்த வித்தியாதர யட்ச கந்தருவ கின்னர கிம்புருஷ கருடாதியான தேவயோனி. மற்றுமுள்ள எப்பூதமாவன, சக்கரவாளத் துக்கு அப்பாலுள்ள மிலேச்சகண்டங்களில் கொலைகடியாவாய்ப் புண்ணிய மென்பதை யறியாத பிராணிசாலங்களெல்லாம்.

எல்லார்தோள்களிலும் திரிசூலம் இடப்பட்டன. போத இட்டு என்க.

(வி - கு.) மூ. சூலமுத்திரை இடுகை - சைவராக்குகை ; "மழுப்பொ றித்தே" (தக்க. 487) என்பதற்கு, 'மழுவைப் பொறித்து மாகேசுவரராக் குகை' என்றெழுதிய உரையும், "மின்னுரு மூவிலைச் சூலமென் மேற் பொறி" (திருநா. தே.) என்பதன் சம்பந்தமான திருநாவுக்கரசு நாயனர் சரித்திரமும் இங்கே அறியத்தக்கன.

(பி - ம்.) 1 'முள்ளவைம்' 2 'போகியே' (கஉங)

## பூதகணங்களின் சட்டை

368. வெம்மையே புரிந்தபே [1]ரலாயுதத்தர் வெள்ளையோர்
தம்மையே யுரித்தமைத்த சட்டைமெய் தயங்கவே.

[இதுமுதல் 373 - ஆம் தாழிசை முடியப் பூதகணங்களின் ஆபரணங்கள் கூறப்படும்.]

அலாயுதம் - கலப்பைப்படை. வெள்ளையோர் - பலதேவர்; இவர்கள் அநந்தருளர், பிறவிதோறும்.

(வி - கு.) உரை. வெள்ளையோர் : "புகர்வெள்ளை நாகர்தங்கோட்டம்" (சிலப். 9 : 10.)

(பி - ம்.) 1 'ஏலாயுதத்தின் வெள்ளியோர்' (கஉச)

369. துற்றெழுந்த பேய்நிரை துளங்குதம் முடம்புவிட்
டற்றெழுந்த தோன்முழுச் சளம்பமீ தலம்பவே.

துற்று - உண்டு.

பண்டுமெலிந்திருத்தலின் அற்றதோல் உண்டலால் நிறம்பெற்று எழுந்து பருத்துச் சளம்பச்சட்டை இட்டனபோன்றன.

(வி - கு.) மூ. துற்று : "தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளிலேபோல்" (சீவக. 232.) சளம்பமீதலம்ப : "கஞ்சுகமலம்ப" (தக்க. 33); மலைநாட்டில், பனியுள்ள இடத்திற்குச் சளும்பு என்ற பெயர் வழங்குதலால், சளம்பச்சட்டையென்பதற்குப் பனிச்சட்டையென்று பொருள் கூறுதலும் பொருந்தும். (கஉரு)

370. மலைப்பிடித்த சீயவே றுடன் [1]பிணைத்து வாரிநீர்
அலைப்பிடித்த மீனவேறு பெய்தகா தலைப்பவே.

மலைப்பிடித்த - மலைக்கட்பிடித்த. சீயவேறு - இராசசிங்கம். அலைப்பிடித்த - கடலுட்பிடித்த; ஏழாம்வேற்றுமைத் தொகை. மீனவேறு - ஆண்மீன்; ஏறு - சுறு; கொம்புடைமகரம்.

இவை இரண்டுசாதியையும் ஒன்றுகப்பிடித்துத் தூங்கக் காதுகளில் இட்டனவென்பது பொருள்; மலையினும் கடலினும் உண்டான இரத்தினக் குழை இவை.

(வி - கு.) மூ. சீயவேறு......பெய்த காது : "கோளரி யைக்கொடு தாழ் குழை யிட்டாள்" (கம்ப. அயோமுகி. 48.) உரை. சிங்கவேறும் மீனேறும் குண்டலங்களாக அணியப்படுதல் : 106-ம் தாழிசை பார்க்க.

(பி - ம்.) 1 'பிணித்து' (கஉசு)

371. பள்ளிவெற்பின் மாறுகோள் பெருது[1]விஞ்சை மன்னர்பாழ்
வெள்ளிவெற் பெடுத்திடுங் குதம்பைகாதின் மின்னவே.

பள்ளி - கோயில்; "பள்ளி மாட்டும் பற்பல பிறுண்டும்" என்பது உதயணன் கதை. பள்ளிவெற்பு - ஸ்ரீ கைலாசம். பாழ்வெள்ளிவெற்பென்பது நாயகமில்லாத வெள்ளிமலை, தன்னரசுநாடாதலால். தென்சேடி வடசேடியென்னும் வெள்ளிமலைஇரண்டும் இரண்டுகாதிற்குதம்பை.

(வி - கு.) மூ. குதம்பை - காதணி. உரை. தென்சேடி, வடசேடி முதலியவை இந்நூல் 19-ம்தாழிசையாலும் அதன் உரையாலும் விளங்கும்.

(பி - ம்.) 1 'விஞ்சையர்வாழ்' (கஉஎ)

372. குஞ்சிவேர் பறித்தகுண்டர் செம்பொனிற் குயின்றபேர்
இஞ்சிவே ரகழ்ந்துகாறி லிட்டதோ டெறிப்பவே.

குஞ்சி - ஆண்மக்கள் தலைமயிர். வேர்பறித்தலாவது மயிரைப்பறித்தல் அல்ல; அலங்காரத்தைப் பறித்தல். எனவே குஞ்சிமுதலான அலங்காரம் களைந்தாரென்க; "குஞ்சி யழகு" (நாலடி. 131), "மயிர்வனப்பு" (சிறு பஞ்ச. 37) என்பனவும் பிறவும் கண்டுகொள்க. செம்பொனிற்குயின்ற பேரிஞ்சி - பொன்னெயில்வட்டம்; இஃது அருகதேவருடையது; ஐந்துநூறு யோசனைவட்டமும் நீளமும் உடையது; இதுபோலும் பூதகணநாதர்க்கு ஒருகாதில் ஓலை. வேரகழ்ந்து - அடியை அகழ்ந்து.

(வி - ரு.) மூ. குஞ்சிவேர் பறித்தகுண்டர்: "தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பார்", "பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணரும்", "தலைபறித்த கையர்", "தலைபறி செய்து தவமுயல்பவர்", "முகடூர் மயிர்கடிந்த செய்கை யாரும்", "குஞ்சியைப் பறித்துத், திரளைகையிலுண்பவரும்" (திருஞா. தே.) உரை. குஞ்சி ஆண்மக்கள் தலைமயிரென்பது, "தீயெழுக் கொழுந்தியன்ன குஞ்சி" (தக்க. 121) என்பதனாலும் அதன்உரையாலும் விளங்கும். இது கூந்தற்கும் சிறுபான்மை வழங்கப்படும். 760-ஆம்தாழிசையையும் அதன் உரையையும் பார்க்க. பொன்னெயில் வட்டம்: இது சமவசரணமென்று ஜைன சம்பிரதாயத்தில் வழங்கும். (கஉஅ)

373. பாரிடக் குலங்கள்பேய் நெடுங்கைகால்க ளிற்படக்
காருடற் சமண்குழா மநேககோடி கட்டியே.

பாரிடக்குலங்கள் - பூதகணங்கள்.

இவற்றோடு பேய்கள் தங்களுடைய நெடுங்கைகளிலும் நெடுங்கால்களிலும் அமணருடைய கூட்டங்களைக் கட்டிக்கொண்டன.

காருடலென்றது குளியாதாரென்றவாறு. பேய்நெடுங்கை நெடுங் காலெனவே பூதகணங்களுடைய குறுங்கை குறுங்கால்களையும் கொள்க. இவ்வமணர் பொன்னெயில்வட்டத்திருக்கும் அரிட்டநேமிநாதர் முதலாயினோர்.

(வி - ரு.) காருடல்: மண்ணுவுடம்பு என்றூர் மூன்றும்; 219; "அலையாரும் புனறுறந்த வமணர்," "மாசுகொண்மேனி யமணர்" (தே.) (கஉக)

374. [1]படர்ந்தபார மேகவர்ந்து தின்றுபாழ் படுத்தின
கிடந்தகுண்டர் மெய்ந்நரம்பு மென்புமே [2]கிடப்பவே.

படர்ந்த பாரமாவது அட்டமே போகப்படர்ந்த அமணர்களின் உடம்பு. அவையிற்றை அமுதுசெய்தன, அவர்களுடைய எலும்பும் நரம்பும் கிடக்கவென்றவாறு. (பி - ம்.) 1 'படர்ந்த பாகமே' 2 'கிடந்தவே', 'கிடைத்தவே' (கஙo)

375. ஏறுநாலு திக்கிலும் புதுப்புலால் கமழ்ந்தெழும்
தாறுநா லமண்பிணங் கிடந்தெயிற் றலைப்பவே.

புதுப்புலாலென்றது மரித்தபின்னிற்புதுப்புலாலை; எனவேமுன்னேயும் புலால் நாறுவரென்றவாறு. ஆறுநாலமண்பிணமாவன இருபத்துநாலு தீர்த்தங்கரருமெனவுணர்க; அவர்கள்: விருஷபர், அஜிதர், சம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மப்பிரபர், சுபார்சுவநாதர், சந்திரப்பிரபர், புஷ்பதந்தர்,

சித்திபட்டாரகர், சிரேயாம்ஸர், வாஸுபூஜ்யதேவர், விமலர், அநந்தஜித் பட்டாரகர், தர்மர், சாந்திநாதர், குந்துபட்டாரகர், அரதேவர், மல்லிஸேன தேவர், சதாநந்ததேவர், நமிபட்டாரகர், அரிட்டநேமி, பார்சுவநாதர், ஸ்ரீ வர்த்தமானரென்பார். (கஎக)

376. தாழியிற் பிணங்களுந் தலைப்படா வெறுந்தவப்
பாழியிற் [1]பிணங்களுந் துளப்பெழப் படுத்தியே.

தாழி - முதுமக்கட்சாடி; வைகுண்டத்துக்கும் பெயர். தாழியிற் பிண மென்றது, ஆருகதரிலே ஆசீவகர் பெருமிடாக்களிற்புக்குத் தவம்செய்வ ராதலின் அவரைச்சுட்டிநின்றது. பாழி - அமண் பாழி. வெறுந்தவமென் றது முதலில்லாத்தவமென்றவாறு. துளப்பு - வயிறு.

(வி - கு.) உரை. முதுமக்கட்சாடி - மிக முதிர்ந்தவர்களை இட்டுவைக் கும் மிடா; "ஓடி மறலி யொளிப்ப முதுமக்கட் சாடி வகுத்த தராபதியும்" (விக்கிரம. உலா), "பதுமக் கடவுள் படைப்படையக் காத்த, முதுமக்கட் சாடி முதலோன்" (குலோத். உலா), "சித்தமகிழ்ந் தின்பமுறச் செங்கோ னடத்த நமன், உத்தமனென் றந்நா ளுயிர்கொடுபோ காமையினுன், மொய்த்த முதி யோர்க்கு முதுமக்கட் சாடிபல, வைத்தகுல தீபகனே மன்னுகோ மன் னுகோ" (திருவெண்காட்டுப். சத்தியநல்விரத. 9.) ஆசீவகர்மிடாக்களில் புக்குத் தவம்செய்வர்: "தாழி கவிப்பத் தவஞ்செய்வார் மண்ணுகை, வாழிய நோற்றனை மால்வரையே" (தொல். புறத். சூ. 5, ந. மேற்.) என்பதும் இச்செயலைப்புலப்படுத்துகின்றது. அமண்பாழி - சமணர்கள் தங்குமிடம், அவர்கள் தவஞ் செய்யுங் குகை; "அமணர் சேரும், பாழியு மருகன்மேவும் பள்ளியும்", "எங்குமமணர் பாழிகளாய்" (பெரிய. திருஞான. 871, தண்டியடிகள். 4.) (பி - ம்.) 1 'கணங்களுந் துளக்கெழப்படுத்தியே' (கஎஉ)

377. பாலெழுங்கொல் பண்டுபோல வன்றியே பசும்புணீர்
மேலெழுங்கொ லென்றுதேரர் தேவடங்க வெட்டியே.

பாலெழுங்கொல்பண்டு போலவென்றது: "வன்பசிக்கடும்புலிக்குடம் பளித் துடம்பின்மேல் வாளெறிந்த வாயினூடு பால்சுரந்து" என்றது கவி ராசராசன் வாக்கு; "துன்னூர்க்கு மீர்ம்பால் சுரந்தான்"; இது குண்டலகேசி. இதனைப்பற்றி ஆட்சேபம். தேரர் - புத்தர். தேவென்பது தேவர்கள்; "ஒன்றுந் தேவு முலகு முயிரும்" (4. 10. 1) என்பது திருவாய்மொழி. புத்த தேவர்க்குக் கணக்கில்லை; "இறந்தகாலத்தெண்ணில் புத்தர்கள்" (மணி. 30 : 45.) அநந்த புத்தரென்பது அவர்கள் ஆகமம். (கஎந)

378. தடந்தொறும் படிந்துகைத்ரி தண்டுமேக தண்டுமாய்
மடந்தொறுங் கிடந்தசோரர் கொத்தடங்க வாரியே.

தடம் - பொய்கை. இதன்கருத்து சந்நியசித்தோமென்று சொல்லியே குளித்துத்திரிகை. ஏகம் - ஒன்று. திரி - மூன்று. சோரர் - கள்ளர்; என்றது, சாங்கியத்திலும் வேதத்திலும் சைவத்திலும் பௌத்தத்திலும் லோகாயதத்திலும் வாங்கினபொருளையுடையரல்லது தமக்கென ஒருசமய மும் பொருளும் இலராயிருத்தலின்.

(வி - கு.) மூ. திரிதண்டுடையவராக ஒருவகைத்துறவியர் உண்டு; அவர் முக்கோற்பகவரெனவும் கூறப்படுவர். (கஎச)

379. வேலைவா யரக்கர்தம்மை மேருவில்லி மஞ்சனச்
சாலைவாய் வெதுப்பிவா ளெயிற்றினிற் சவட்டியே.

வேலைவாயரக்கர் - சமுத்திர ராட்சதர்.

**எ - து** அரக்கர்களை நன்னீரால் உப்புப்பொருளைக்கழுவினதுபோல மகாதேவர் திருமஞ்சனமான வடவாமுகாக்கினியிலே வெதுப்பித் தங்களுடையவாய்களில் எயிற்றிலிட்டு மென்று குதட்டி எ - று.

இதிலே அநேககாலம் நீரிலேகிடந்தவர்களைச் சிறிது வெதுப்பிக் கொண்டதெனினுமாம் பற்கூசாமைக்கு. (கசரு)

380. காவிவண்ண னூர்தியுந்த்ரி வேதபோத காரணன்
தூவியன்ன முங்கலந்து சுட்டுவாயி லிட்டுமே.

காவி - நீலோற்பலம்; "காவிநோய் செய்த கருங்கயற்கண் மாதராள்" (1967) என்பது **சிந்தாமணி**. விஷ்ணுக்களின் ஊர்தி கருடன்; கருடலோகத்துள்ளனவெல்லாம் பிடித்துக்கொண்டார். திரிவேதபோதகாரணனுவான் பிரமா; திரிவேதமென்றது : மூன்றே வேதம்; நாலாவது மந்திரசாகையான அதர்வவேதம்; "திரைவேதா" என்பது **ஹலாயுதம்**. பிரமாவினுடைய வாகனம் அன்னம்; பிரமலோகத்துள்ளனவும் எங்குமுள்ளனவும் கொள்க. கலந்துசுடுதலாவது சூட்டுக்கோலிற் கலந்து சுடுதல்; சுட்டநெருப்பு ஈசுவரனுடைய திருமஞ்சனமெனவுணர்க.

(**வி - கு.**) மூ, த்ரிவேதம் : "மும்மறை யாலும் வணங்கப் படுகின்ற முக்கணக்கன்" (**பொன்வண்ணத்**. 87); "சிறந்த வேதம் விளங்கப் பாடி" (**மதுரை**. 468) என்பதனுரையில், 'அதர்வம் தலையாயவோத்தன்மை பொருளிற் கூறினும்' என்பர் **நச்சினார்க்கினியர்**.

**உரை**. "காவி......மாதராள்" : மாதராள் என்பதற்குப் பதிலாக, **சிந்தாமணியில்** 'பூங்கொடி' என்று உள்ளது. ஹலாயுதம் - ஒரு வடமொழி நிகண்டு. (கசசு)

381. சங்கெடுத் துடைத்தயின்று தன்றுணைத் தனிப்பெரும்
கொங்குடைச் சரோருகக் கிழங்ககழ்ந்து கொண்டுமே.

[இதிற் கூறப்படுவன சங்கநிதியும் பதுமநிதியும்]

**எ - து** சங்குச்சாதிகளை எடுத்துத் தகர்த்து உடைத்து அவற்றின் அகத்து இறைச்சிகளைத் தின்று அவையிற்றினுடன் எண்ணப்பட்ட பத்மங்களின் கிழங்கை அகழ்ந்து தின்று எ - று.

கொங்கு - கந்தம். சரோருகம் - தாமரை.

சங்கின்இறைச்சியும் தாமரைக்கிழங்குமெனவுணர்க. இவை வைசிரவணன் உலகத்துள்ளன.

(**வி - கு.**) **உரை**. வைசிரவணன் - குபேரன். (கசஎ)

382. கைவழிக் குலப்பொருப்பொ ரெட்டுடன் கலந்துகொண்
டவ்வழிப் புயங்கமெட்டு மம்புயத் திருத்தியே.

கைவழிப்பொருப்பு ஓரெட்டாவன மகாமேருவின் சிகரங்களாக அதன் எட்டுத்திக்கிலுமுள்ள எட்டுமலைகள்.

அம்மலைகளெட்டையும் பாம்பையும் கலந்துபிணைத்துத் தங்கள் தோள்களில் ஆபரணமாக இட்டுக்கொண்டாரென்பது.

புயங்கம் - பாம்பு. அம் புயம் - அழகிய புயம்.

(வி - ரு.) உரை. மலைகளைப் பாம்புடன் பிணைத்து ஆபரணமாக இட்டுக்கொண்டமை, 41-ஆம் தாழிசையிலும் வந்துளது. (கஅஅ)

383. நீர்கலக்கி மீனவே றெடுத்தயின்று நீனிறக்
கார்கலக்கி வானவேறு செவ்வியோடு கவ்வியே.

நீரென்றது சலாங்கிசமெல்லாமெனவுணர்க. வானவேறு செவ்வியோடு கவ்வுகையாவது நெருப்பு அவியாமற் கவ்வுகை. நெருப்பு அவியின் உருமேறென்னும் பெயர்கெடும்; சுருவும் செவ்விகெடிற் புன்மீனும்; உருமேறும் செவ்விகெடின் வெறுமேரும். (கஅகூ)

384. ஆழிமால் வரைப்புறத் திறைத்துவாரி யற்றபின்
பாழிமால் கடற்பெருந் திமிங்கிலங்கள் பற்றியே.

ஆழிமால்வரை - சக்கரவாளவெற்பு. அதற்கு அப்பாலுள்ள சமுத்திர சலங்களை இறைத்து அற்றபின்னென்றது மீனற்றபின்னையென வுணர்க. பாழிமால்கடல் - பெருங்கடல். திமிங்கிலங்கள் - மச்சியராசகுலங்கள்; இவையிற்றை யானையைவிழுங்கும் மீனென்பர். யானையைவிழுங்கும் மீன்கள் இக்கடலிலும் உள; அவை பனைமீனென்றும் யானைமீனென்றும் மோங்கிலென்றும் அனுவிஷமென்றும் பெயருடையன; அவை இவற்றின் எளியனவெனவுணர்க.

(வி - ரு.) உரை. சக்கரவாளத்திற்கு அப்பாலுள்ள சமுத்திரம் பெரும் புறக்கடலெனப்படும். பனைமீன்: "**பனைமீன்** வழங்கும் வளைமேய் பரப்பின்" (**மதுரை**. 375); "ஒள்ளிய **பனைமீன்** றுஞ்சுந் திவலைய", "**பனைமீன்** றிமிலோடு தொடர்ந்துள்ள" (**கம்ப**. கடறுவு. 23, 50.) யானையை விழுங்கும் மீன் திமிங்கிலமாகும்; **பிங்கலந்தை**. (கசo)

385. அடவிமுற்று மசலமுற்று மவனிமுற்று மதிர்படத்
தடவிமுற்று முயிர்தொலைச்சி வயிறுவேட்கை தணியவே.

தொலைச்சி - விட்டு; உயிர்நித்தியமாதலால் தொலைச்சியென்றார்.

(வி - ரு.) உரை. உயிரைநீக்கி உடலைத் தின்றார் என்றவாறு. (கசக)

386. பிடிப்பிடித் துணித்துணிப் பிணிக்கெனப் பெயற்புலத்
திடிப்பிடித் [1]தெருத்திறத் தெயிற்றரைத் திறக்கியே.

எ - து பிடிப்பிடி முறிமுறி பிணிக்கவெனச்சொல்லும் ஓசை வருஷா காலத்து இடிஇடித்தாற்போன்று ஆரவாரித்துத் தாங்கள்பிடித்த பிராணிகளுடைய இறைச்சிமுதலாயினவெல்லாம் தங்கள் எயிற்றினாலே அரைத்து வயிற்றிலே இழித்து எ - று.

எருத்திறமென்றது இறைச்சித்திறமெல்லாவற்றையும்; எனவே உயிர்த்திறம் இங்கும்விட்டார்; "எருத்துவ்விய புலிபோன்றன" (4 : 9) இது **புறநானூறு**. (**பி - ம்**). 1 'தெருத்திறுத்' (கசஉ)

387. வாலெடுத்து நாகர்தங்கள் திவ்யபானம் வைத்தபொற்
சாலெடுத்து வாய்மடுத்து வெவ்விடாய் தணித்துமே.

வாலெடுத்தென்றதற்குப் பாம்பின் வால்களையெடுத்தமாத்திரத்திலே அமுதகலசம் எடுக்கலாயினவென்பது பொருள்.

(வி - கு.) மூ. நாகங்கள் அமுதகுடங்களை வாலால் வலித்திருக்குமென்று தெரிகிறது. (கசங)

388. கொண்டல்கோ ளறுத்துவான யாறுகோ ளறுத்துமேல்
அண்டகோள கைப்புறத் தருதநீ ரறுத்துமே.

கோள் - கோட்பாடு. கொண்டல்கோளென்றது மெய்பிறிதாகிடத்தியற்கையானது ; (தொல். தொகை. சூ. 15.) வானயாற்றுக்கோளென வேண்டுவதனை வானயாறுகோளென்றது மிகற்கைமருங்கினியற்கை தோன்றுதல். அண்டகோளகைப்புறத் தருத நீரென்றது மகாதேவர் திருச்சடாபாரம் போல இந்நீர் அருததென்றவாறு. இஃது அருமையைபோலும்.

(வி - கு.) இதுமுதல் 396-ஆம்தாழிசைமுடிய பூதகணங்கள் முறையே பெரும்புறக்கடல், பாற்கடல், தயிர்க்கடல், உப்புக்கடல், நெய்க்கடல், நன்னீர்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், கட்கடல் முதலியவற்றைக் குடித்து அழித்தமை கூறப்படும்.

உரை. அருமை : மகாதேவர் திருச்சடாபாரம்போல் அண்டகோளகைப்புறத்தும், நீர்அருது இருத்தல் அடாதென்ற எண்ணம். மகாதேவர்...... அருதது : " நீரறவறியாக்கரகத்து " (புறநா. 1 : 12.) (கசச)

### வேறு

389. மண்ணிற்செந்தீ [1]யடுப்பவுடுப்பல [2]மாய்ந்தன
கண்ணிற்காய்ச்சிக் குடித்தனநாற்பாற் கடலுமே.

பூமியிலுள்ள நெருப்பெல்லாம் நட்சத்திரங்களோடே அற்றன. நாற்பாற்கடல் காய்த்தத் தங்கள் கண்களான நெருப்பைக்கொண்டாரெனவுணர்க. மாய்ந்தனவென்னுஞ் சொல்லை நட்சத்திரத்திலும் நெருப்பிலும் ஒக்கக்கொள்க.

(வி - கு.) மூ. கண்ணிற் காய்ச்சிக் குடித்தனநாற்பாற் கடலுமே : " சுட்டவிழியிலெழு கடலும்வற்றி " (தக்க. 414) என்பர்பின்.

(பி - ம்.) 1 ' மடுப்பவுடுப்பலமாய்ந்த தால் ' 2 ' மாய்ந்தற ' (கசரு)

390. உயிர்ப்பெரும்பசி தீர்ந்தகொலில்லைகொ லுண்டுவெண்
தயிர்ப்பெருங்கடன் மாய்த்தனபூதவே தாளமே.

இவையெல்லாம் உண்டும் பசி தீர்ந்தனவில்லையென்பது கருத்து.
தயிர்க்கடல்மாய்க்கையாவது விடாய்மாத்திரம் ஆற்றுகை. (கசசு)

391. அப்புளித்தயிர்க் [1]கடலினுப்புக்கட லடையவே
கொப்புளித்தவை யிரண்டுமொன்றாக்கிக் குடித்தவே.

இக்கதை சொல்லச்செய்தே ஒருபசாசு தயிர்க்கடல் காலப்பழமையாற்புளித்ததன்றோ ? குடிக்க அரிதல்லவோ ? குடித்தவாறெப்படி யென்ன, இப்பசாசு சொன்னபடி இது.

அப்புளித்தயிர்க்கடலென்றது முன்னஞ்சொல்லப்பட்ட புளித்தயிர்க்கடலை. அதில் உப்புக்கடலைக்கலந்து புளிநீக்கிக்குடித்தனவென்பது.

(வி - கு.) உரை. சொல்லச்செய்தே - சொல்லும்பொழுது. இது சொல்லச்சே எனவும் வழங்கும். (பி - ம்.) 1 ' கடலையுப்புக் கடலடையக் ' (கசஎ)

392. [1]பொய்க்கடற்புறத் தெய்வங்களைப் [2]பொரித் துத்தின்
நெய்க்கடற்பசை யற்றதெங்குண் டினிநெய்யே.

பொய்க்கடற்புறத்தெய்வங்களாவன பரசமயதெய்வங்கள்.
பொரிக்கப்போந்த அத்தனையே நெய்க்கடல்.

(வி - கு.) மூ. பொய்க்கடலென்றது புறச்சமயங்களின் மிகுதியை.
(பி - ம்.) 1 'பொய்க்கடத்துறைந்த தெய்வங்களை பொரித்தயின்று' 2 'பொரித்துத்தின்று' (கஅ)

393. வடியவாங்கி மடுக்கவெங்கேயுள வந்துதாம்
[1]படியவன்றள ருயினதண்ணீர்ப் பரவையே.

வடியவாங்கி மடுத்தலாவது கைம்மண்டை ஏற்றுக்குடித்தல். அஃதில்லது கடல்கொள்ளும் கலம் பிறிதில்லை. வந்து தாம்படிய - ஒத்துவந்து உடம்பு கழுவ.

(வி - கு.) மூ. பூதகணங்கள்படிந்த அளவிலேயே தண்ணீர்ப்பரவை சேருயின ; எனவே குடிக்க வேறுநீரில்லையென்றபடி. உரை. மண்டை - வாயகன்ற ஒருவகைப்பாத்திரம்; "மண்டை கைப்பிடிபெரும்பேய்" (தக்க. 771), "கணங்கள் குருதி மண்டை சுமந் தாடவும்" (தகடூர்), "ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை" (புறநா. 179 : 2.) (பி - ம்.) * 1 'படியவே வறளாயின தெண்ணீர்ப்பரவையே' (கசக)

394. கருப்புச்சாற்றுக் கடலன்றுபிழைத்ததோ கழுது
விருப்புச்சாற்றிற் குடித்தனகிடந்தன வெடித்தே.

கழுது - பேய். விருப்புச்சாற்றின் - விருப்பமுடைய விழாக்கோள் போல; சாறு - விழா; "சாறுகழி வழிநாட் சோறுநசை யுறுது" (2); இது பொருநராற்றுப்படை. நெட்டெழுத்தும்பர் ஒற்றுமிகத் தோன்றிற்று. வெடித்தல் - கடல்வயிறு வெடித்தல்.

(வி - கு.) உரை. நெட்டெழுத்தும்பர் ஒற்றுமிகத் தோன்றல் : தொல். உருபு. சூ. 24. (கருO)

395. மட்பெரும்பழங் கலத்தொடுமடுத்தன வெடுத்துக்
கட்பெருங்கடல் குடித்தனதடித்தன கழுதே.

மட்பெருங்கலம் - பூமி.
எனவே கிராதர் வேட்டைபோய் விடாய்த்து ஏரியில் தண்ணீர்குடிக்கும் தகுதிபோலத் தலைமடுத்துக்குடித்தனவெனவுணர்க.

மட்கலமுடிவுணர்க : "ணகர விறுதி வல்லெழுத் தியையின், டகர மாகும் வேற்றுமைப் பொருட்கே" (தொல். புள்ளி. 7); "மட்கலத் துண்ணு மக்கட் பாக்கியம்"; இஃது உதயணன் கதை. கட்கடல்முடிவுணர்க : "ளகர விறுதி ணகர வியற்றே" (தொல். புள்ளி. 101.) மெய்தடித்தல் விசேஷ மெனவுணர்க.

(வி - கு.) உரை. விடாய்த்து - விடாய்கொண்டு. மெய்தடித்தல் விசேஷம் : மற்றைக்கடல்கள் இவற்றிற்குப் போதியனவல்லவாயிருக்க இக்கடல் இவற்றின் உடம்பைத்தடிக்கச் செய்யும் வன்மையுடையதாயிற்று ; இஃது இதன்சிறப்பு என்றபடி. (கருக)

### வேறு

396. வேலின்மாயன்மாய் வுறவிடும்பலி
மேவுநாயகன் விடுபடைக்
காலின்மாய்வன வல்லவோ[1]வொரு
கையின்மாய்வன கடலுமே.

ஏ - து வேலான சூலத்தாலே மாயும்படி விஷ்ணுக்களாலே இடப்பட்ட பலிகொண்டருளிய மகாதேவர்தந்திரமான பூதபசாசுகளின் காலினால் மாயா திருப்பனவோ, பண்டு அகத்தியனென்னும் ஒருபிராமணனுடைய ஒருகையி லே மாய்ந்த கடல்களேழும்? எ - று.

விடும்பலியென நரம்புவிட்ட உதிரப்பலியெனலுமாம்.

(பி - ம்.) * 1 'முனிகையின் மாய்பல' (கருஉ)

### வேறு

397. நதிக ளேழினு முதற்கிரிக ளேழினுமரு
நளினி யேழினும் வலம்புரியு நல்லனமகோ
ததிக ளேழினு மெடுத்தடைய [1]வுள்ளனவெனும்
சங்க கோடிகள் குறித்தகில முந்தகரவே.

[இத்தாழிசையிலும் வருந்தாழிசையிலும் இப்பூதகணங்களின் வன்மை யைக்கண்டு பிரமா துயருறுதல் கூறப்படும்.]

நதிகளேழாவன கங்கைமுதலாயின ஏழாறு. முதற்கிரிகளேழினு மரு நளினி - ஏழுகுலபருவதங்களிலுமுள்ள சுனைகளான தாமரைத்தடாகங்கள்; ஏழுமலைகளையும் கொள்ளின் மலையில் வலம்புரியும் சங்கும் இல்லையென வுணர்க. நளினத்தையுடையது நளினி; அவிநயத்தால் உடைப்பெயர்ச் சொல் ஈறுதிரிந்தது.

இவையிற்றில் உண்டான நல்லவலம்புரிகளையும் கடலேழினுமுள்ள சங்கினங்களையும் எடுத்துக்கொண்டு வாய்வைத்து ஊதின அவ்வளவில் எல்லாலோகங்களும் பொடியாயின. இதற்குமுன்னே அவையிற்றிற்சலாங் கிசமான நீர்க்கூறெல்லாம் வற்றக்குடித்துப் பின்பு அங்குக்கிடந்த சங்கினங் களை எடுத்தனவெனக்கொள்க.

இதிலே நல்லனவென்னுஞ்சொல் சலஞ்சலங்களைக்காட்டுமென்பாரும் உளர்; அதன்பயன் அவை தாமே முழங்குவன.

(வி - கு.) மூ. முதற்கிரிகளேழினுமரு நளினி: 272-ஆம் தாழிசையைப் பார்க்க. மகோததி - சமுத்திரம். குறித்து - ஊதி.

உரை. உடைப்பெயர்ச்சொல் ஈறு திரிந்தது: தொல். பெயர். சூ. 11. நளினத்தையுடையது நளினி; நேமி. சூ. 22, உரை. (பி - ம்) 1 'வுண்டன வெனுஞ்' (கருஙு)

398. சக்க ரக்கிரியு மெக்கிரியு மெப்புடவியும்
சமைய வந்துதக ரத்தழுவி னுந்தழுவுமின்
[1]றக்க ரத்துலகு டைக்கினு முடைக்கு மிதிலோ
ரலகை யேயென விரிஞ்சனலம் வந்தலறவே.

சக்கரக்கிரி - சக்கரவாளபருவதம். எக்கிரியும் - இவையல்லாத எல்லாப்பருவதங்களும். புடவி - பூமி.

இவையெல்லாம் உடைந்துபோக ஒருகையாலே தழுவினும் தழுவவல்லதாய்த் தழுவினகைதன்னாலே உலகமெல்லாவற்றையும் தகர்க்கவல்லதாயிருந்தது இப்பேய்ப்படையில் ஒருபேயென்று பிரமா துக்கப்பட்டுக் கதறப் படையெழுந்தது.

'இது' என்றது குழாத்தைப்பற்றி. தழுவுகை கையின்நீளம். உடைக்கை தழுவின கையின்தொழில்.

இதிற்போந்த பயன் : தன்னாற் படைக்கப்பட்டமலைகளும் உலகமும் ஒருபேயின் ஒருகைக்குப் போதவில்லையேயென்பது பிரமாவின்கருத்து. பிரமாவின்படைப்பல்ல பசாசலோகமும் பிரமலோகமும் ; அவை இரும்பும் பொன்னுமெனவுணர்க ; சத்தியும் இப்பெற்றியவே.

இத்தாழிசையில் 'எக்கிரியுமெப்புடவியும்' என்றது சொல்லதிகார உபதேசத்தாலல்லது உணரலரிது.

(வி - ரு.) மூ. சமைய வந்து தகரத்தழுவினுந்தழுவும் : "தழுவிச் சமைத்தே" (தக்க. 483) என்பதும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன. சமைதல் - அழிதல் ; "ஐவர் தலைவருஞ் சமைந்தார்" (கம்ப. பஞ்ச சேனு. 67.)

உரை. அவை இரும்பும் பொன்னுமெனவுணர்க : 'இந்திரலோகம் பசாசலோகமாகை பொன் இரும்பாகை' (தக்க. 565, உரை); 'இஃது இரும்பு பொன்னுகை' என்பர் பின்னும் ; 566, உரை.

(பி - ம்.) 1 'றக்கணத்துலகு' (கருச)

399. ஓரெ யிற்றினும் வயிற்றினொரு பாலு மிடவே
யுள்ள தெவ்வுலகு மல்லதொரு பூதமொருபேய்
ஈரெ யிற்றினும் வயிற்றினிரு பாலுமிடவே
றில்லை யேயென வெறித்தயன் மறித்திரியவே.

ஒருபூதம் ஒருபேயென்றது ஒருபூதத்தினது ஒருபேயினதென்க ; ஒருபூதத்துக்கு ஒருபேய்க்கென்றுமாம். வெறித்து - பயப்பட்டு. மறித்திரிதல் - மீண்டுபோகை. (கருரு)

400. சுடர்கிளைத்தனைய செய்யசுரி பங்கிவிரியச்
சுழல்விழிப்புகை பரந்துதிசை சூழவருபேய்
கடல்குடித்தவனி தின்றுலகு மண்டமுமெழக்
கதுவுமூழிமுடி விற்கன லெனக்கடுகவே.

எ - து அக்கினிச்சுவாலை மேனோக்கிப் பல கிளைகொண்டெழுந்தாற் போன்ற சிவந்த இடையிடை சுழன்ற தலைமயிர்விரியவும் எப்பொழுதும் சுழன்றுவரும் கண்களிற் புகை பரந்துவரத் திக்கனைத்தையும் சூழவருவதொருபேய் உலகத்திற்கடல்களைக் குடித்துப் பூமியைத்தின்று உலகும் அண்டமுமான எல்லாவற்றையும் எரிந்துபோம்படி சுடவல்லதான ஊழிமுடிவின் வடவாமுகாக்கினிபோலக் கடுகவர எ - று.

ஊழிவடிவென்னும் பாடத்திற்கு ஊழிக்கடலின் வடிவென்றுர், ஊழிக் கடல் வற்றினவிடத்தென்றும் பொருள்கொள்க.

இது சருவமும் கெடுகை.

(வி - ரு.) மூ. சுடர் கிளைத்தனைய செய்ய சுரிபங்கி: "எரிதலை" (தக்க. 58) என்பதன் உரையைப் பார்க்க.

பூதங்களின் தலைமயிர்க்குத் தழலும், விழிப்புகைக்கு ஊழித்தீயின் புகையும், கடலையும் அண்டத்தையும் அழித்தலுக்கு வடவாமுகாக்கினியின் செயலும் உவமை. (கருசு)

401. யானை யானசில பாய்புரவி யானசிலவா
ளடவி யானசில தேரசல மானசிலநேர்
சேனை யானசில [1]நிற்பவெவ னிற்பதெனவிச்
செல்லு நாலணியி லுந்தலைவ ரானசிலவே.

வாளடவியாகையாவது ஆயுதவனமாகை; அவை யானைமேல் வில்லும் குதிரைமேல் வாளும் தேர்மேற் பலபடையும் ஆளின்கரத்து வில்முதற் படைகளுமாகை. வாளென்பது கூர்மையும் சோதியும் வார்த்தையும் பிறவுமான பலபொருள் ஒருசொல். சேனைக்குச் சேனுபதிகளும் தாமே யென்றறிக.

இதனலேயறிக, ஈசுவரபத்தர் வேண்டியபொழுதே வேண்டியவடிவு கொள்வரல்லது கர்ப்பக்கிரகத்திற் புக்குப் பிறவாரென்பது.

(வி - ரு) மூ. ஒப்பு : 432. உரை. ஆயுதவனம் : "வாளின்வனம் வேலின் வனம் வார்சிலை வனந்திண், டோளின்வனம்" (கம்ப. கரன்வதை. 166.) கர்ப்பக்கிரகம் - கருப்பை. (பி - ம்.) 1 'நிற்பதென நிற்பதென' (கருஎ)

402. அங்க ணரணர் பயோததியு மில்லைமகனு
ரம்பு யாலயமு மில்லையவர் கட்கரியராம்
எங்க ணயகர் திருக்கயிலை வெற்புமுளதோ
இல்லை யோபிற [1]புலங்களை யியம்புகிலமே.

அங்கணென்பதற்கு அவ்விடமென்பது பொருளன்று; அழகிய கண் எனவுணர்க. பயோததி - பாற்கடல். மகனென்றது பிரமாவை; இங்குச்சொன்ன உபசாரம் இழித்துரை; இவர் பெரிதும் கருமம்செய்து வந்தார் தேர்த்தொண்டனாக. அம்புயம் - தாமரை.

அவர்கட்கு அரியராமெங்கணயகரென்றது இப்போது இக்கதை சொன்ன பேயின்கூற்றெனவுணர்க. ஸ்ரீ கயிலாசம் உளதோ இலதோ என்று சிவத்துரோகம்படச் சொல்லியது ஆளுடைய பரமேசுவரியுடைய அடிமைப்பேயெனவுணர்க.

(வி - ரு.) மூ. அவர்கட்கரியரா மெங்கணயகர் : "இருவரேதெரிய வரியர்" (தக்க. 423.) (பி - ம்.) 1 'புலங்களையு மென்புகல்வதே' (கருஅ)

403. காலெ ழுந்தபொழு தோகட லெழுந்தபொழுதோ
கனலெ ழுந்தபொழு தோகயிலை யாளிகடகம்
மேலெ ழுந்த[1]பொழு தும்பிரம [2]ரண்டகடகம்
விண்டு டைந்தில பெருந்திகிரி வெற்புடையவே.

கால் - மகாவாதம். கடல் எழுகையாவது பிரளயோததியாகி எழுகை. கனல் - வடவாமுகாக்கினி. கயிலையாளி - மகாதேவர்; "ஊராளி" என்றாற்போல. கடகம் - படை. மேலெழுகையாவது அடங்கிக்கிடந்தது கிளர்கை. பிரமரண்டகடகமென்பது பிரமாண்டப்பெரும்படை அனைத்தும். பெருந்திகிரிவெற்பென்றது எல்லைச்சக்கரவாளத்துக்கும் அப்பாலைச் சக்கரவாளத்தை யெனவுணர்க. (பி - ம்.) 1 'பொழுதோ' 2 'ரண்டமுழுதும்' (கருகூ)

404. புத்தர் போதியரு கந்தர்க ளசோகுதிருமால்
புகுது மால்சத மகன்சுர தருக்கள்பொருளோ
எத்த ராதலமு நீழலிடு மேழ்பொழிலுநே
ரெழுவி லங்கல்களு நேரடி யெழுந்திடறவே.

எ - து வீரபத்திரதேவருடைய பெரும்படை எழுந்துபுறப்பட்ட பொழுது அப்படைகளின் ஸ்ரீ பாதங்கள் இடறவே ஸர்வக்ஞருடைய மகாபோதியான அரசவிருட்சங்களும் அருகபரமேஷ்டிகளுடைய திருநிழலான அசோகவிருட்சங்களும் திருமாலான விஷ்ணுதேவர்தமக்கொன்றுற்றால் ஒதுங்குதற்கு இடமான வடவிருட்சங்களும் இந்திரனுடைய இட்டத்தைப் பிரசாதிக்கும் பஞ்சதருவான கற்பகவிருட்சங்களும் இவையெல்லாம ஒருபொருளல்ல; எல்லாலோகங்களிலும் நிழலிடவல்லனவாயிருக்கும் ஏழு சோலைகளும் நேராய்ப்போயின; சத்தகுலபருவதங்களும் நேராய்ப்போயின எ - று.

(வி - ரு.) உரை. ஸர்வக்ஞர் - புத்ததேவர்; எல்லாமறிந்தவரென்பது இதன்பொருள். இதுபற்றியே அவரை "முழுதும் பொய்யின்றுணர்ந்தோன்" (மணி. 25 : 45) என்பர்; ஏழுசோலைகள்: "ஏழுடையான் பொழில" (திருச்சிற். 7.) (கசாO)

405. விண்ணில் வந்தமழை யும்பனியு மெவ்வடவியு
மிடைய வந்ததளி ருந்துணரும் வெற்பினடுவேழ்
மண்ணில் வந்தமண லும்பொடியும் வீரனவனோர்
வடிவின் வந்தகழு துங்குறளு மானபரிசே.

விண் - ஆகாசம். எவ்வடவியும் மிடையவந்த தளிரும் துணருமென்பது எல்லாக்காட்டிலும் மிடையும்படி வரப்பட்ட முறியும பூங்கொத்துக்களுமென்றவாறு. வெற்பினடுவேழ் : ஏழ்வெற்பின் நடுவென மொழி மாறிக் கூட்டுக. மண்ணில்வந்த மணலென்பது பூமியணுவினால்வந்த மணலென்றவாறு. பொடியென்பது மணலால்வந்த தூளி. வீரனவனோர் வடிவில்வந்தவென்றது வீரபத்திரதேவருடைய திருமேனியில் ஒருறுப்பிற் பிறந்தவென்றவாறு.

எனவே, பேயும் பூதமும் இவையெல்லாமாயின. இதன்கருத்து: வீரபத்திரதேவர் முப்பத்திரண்டுறுப்பினும் ஒருறுப்பிற்பிறந்தன இவையெல்லாம்; இவைகளில் ஒருபூதமும் ஒருபேயுமே தனித்தனி எல்லாமாகவல்லன; அழிந்தனவென அஞ்சவேண்டாமென்பது பொருள்.

(வி - ரு.) உரை. ஒருபூதமும்......எல்லாமாகவல்லன: "ஒருவரேயகில லோகமும்புதைய வேறுவேறுடம் புடையரே" (தக்க. 423.) அழிந்தனவென்றது இதுகாறுங் கூறப்பட்ட மலை கடல் முதலியவற்றை. (கசாக)

406. பூத மும்பழைய [1]வாமனன் வளர்ந்ததனையும்
புடைபெ யர்ந்தெழ [2]வளர்ந்துபெயர் போனகழுதின்
சாத முங்கழு தெனும்பெயர் தவிர்ந்தனநிணத்
தசைமி சைந்துடல் விசும்புபுதை யத்தணியவே.

பூதங்களும் புராணவாமனரூபன் வளர்ந்த அளவும் வளர்ந்து குறளென்னும் பெயர் தவிர்ந்தன. வாமனனைப்போலக் குறளாகி நெடியவானமை உவமை. இது சம்பிரமம். புடைபெயர்ந்தெழ வளர்ந்தென்றது அட்டம்வளராது நெட்ட நெடுமைகொண்டனவென்றவாறு. இனிப் பசாசுகளும் நெய்யுடைய மாங்கிசத்தைத்தின்று தடித்து ஆகாசமெல்லாம் தாமாயின ; நெடுமைவளர்ந்து அட்டமும் வளர்ந்தன.

இதன்கருத்து பூதம் பேயாயினவென்பது.

(வி - ரை.) மூ. தனையும் : தனை, அளவென்றபொருளில் வந்தது ; அத்தனை இத்தனையென்பனபோல ; " தினைத்தனைப்பொழு தும்மறந் துய்வனோ" (திருநா. தே.) சாதம் - பிறப்பு.

உரை. அட்டம் - குறுக்கு ; " அட்டமாளித்திரள்வந்தனையு மண்ணுமலையாரே " (தேவாரம்); " அட்டமே பாயநின் றுடுமெங்க ளப்பன் " (காரைக். திருவாலங்காட்டுமூத்த. 6), " அஞ்சுவித் தடர்க்குநாய்க ளட்டமாக விட்டு " (பெரிய. கண்ணப்ப. 76) ; " அட்டமேசெல்வார் " (திருவிளை. மண்சுமந்த. 40) ; இது கொங்குநாட்டுவழக்கு. (பி - ம்.) 1 'வாமனமளந்ததனையும்' 2 ' வளர்ந்துபுடை.' (கசுஉ)

407. கார டங்கியன தாரகை யடங்கியனகோள்
[1]கதிய டங்கியன மூவர்சிலர் தேவர்ககனத்
தூர டங்கியன பின்னுமெழு கின்றவனிகத்
துள்ள டங்கியன வுள்ளபதி னாலுலகுமே.

கோள் கதியடங்கியன - நவக்கிரகங்கள் செலவொழிந்தன ; கதி - செலவு. மூவர்சிலர் தேவர் ககனத்தூரடங்கியன - பிரமலோகமும் விஷ்ணுலோகமும் புரந்தரலோகமுமாகிய ஆகாசத்து ஊர்களான பிரமபுரமும் வைகுண்டமும் அமராபுரமும் அடங்கியன. இப்படிப்பட்டுப் பின்னையும் எழுகின்ற வீரபத்திரதேவர் தந்திரத்தினுள்ளே அடங்கியன சதுர்த்தசபுவனமும்.

எனவே படை உலகங்களின் அப்புறத்தும் சென்றனவென உணர்க.

(பி - ம்.) 1 ' அரவடங்கியன.' (கசுங)

408. வானு மின்றிமக ராலயமு மின்றிநடுவேழ்
மண்ணு மின்றிவட வானலமு மின்றியனிலம்
தானு மின்றியற நின்றதனி மூலமுதல்வன்
றன்னை யொத்ததினி யென்னையிது தானைநிலையே.

வானென்றது பரமாகாசமான அவ்வியக்தத்தை. மண்ணென்றது பிருதிவி அங்கிசத்தை. வடவானலமென்றது இவையெல்லாம் போனாலும் போகாத வடவாமுகாக்கினியை. அனிலந்தானுமென்றது சொல்லப்பட்டவையெல்லாவற்றுக்கும் பிராணனானவாயுவை.

இவையெல்லாமின்றிக் கெட்டுப்போக வீரபத்திரதேவர் திருப்படை எழுச்சியாய் நின்றபடி. : சகமெல்லாம் கெட்டகாலத்திலும் கெடாதேநிற்கும் மூலமாய் அவிகாரியாய்ப் பிரமாணப்பிரமேயரகிதமாய் ஏகமாய்ச்சத்தாய்ச் சிச்சுரூபசிவமாத்திரமான மகாதேவர்தாமே நிற்கும் தன்மைபோல் இப் பெரும்படை தானலது பிறிதொன்றின்றி நின்றது.

எனவே மகாதேவரை ஒத்தது படை ; படையை ஒத்தார் மகாதேவ ரென்றவாறு.

(வி - கு.) மூ. வானுமின்றி......முதல்வன் : "வான்கெட்டு மாருத மாய்ந்தழ னீர்கெடினும், தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையன்" (திருவா.) படைக்கு உவமையாக மகாதேவர் 425 - ஆம் தாழிசையிலும் கூறப்படுகிறார் ; "ஈசன் மேனியை யீரைந்து திசைகளை யீண்டில், வாசில் சேனையை......யாவரே முடிவெண்ண வல்லார்" (கம்ப. தானைகாண். 35.) உரை. அவிகாரி - விகாரமில்லாதவர். பிரமாணப்பிரமேய ரகிதம் - பிரமாணமும் பிரமேயமும் அற்றது. ஏகம் - ஒன்று. சத் - என்றும் நிலைத்துள்ளது. சிச்சுரூபம் = சித் ஸ்வரூபம் - அறிவு வடிவு. சிவம் - மங்களம் பொருந்தியது ; இன்பவடிவு. (கசுச)

## வேறு

409. கொண்டகோடிசத கோடிகூளிகள்
குளிக்கவன்றவை தெளிக்கவே
அண்டகோடிக ளநேககோடிகளு
முடையநீர்சுவறு மடையவே.

கொண்டகோடியென்றது ஒருகோடி ஒன்றுக்கக்கொண்டு எண்ணப்பட்ட ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் பத்துநூறாயிரம் கோடியென்றவாறு. சதகோடியென்றது நூறுகோடியையயல்ல ; பல கோடியை.

இவையிற்றுக்குக் குளிக்கநீர்போதா, தெளித்துக்கொள்ளவே ஆம். அப்பொழுது அண்டகோடிகளிலுள்ள அநேககோடி சலாங்கிசங்கள் அடையச் சுவறி வற்றிப்போயின ; அடைய - எல்லாம்.

(வி - கு.) உரை. சலாங்கிசங்கள் - நீர்நிலை வகைகள். (கசுரு)

410. மலைகள்வாரியன வேழுமுக்கியவை
விக்கியுடுவொடு மடுத்தெடுத்
தலைகொள்வாரிதிக ளேழுநக்கிநட
மாடியையைகழல் பாடியே

மலைகள் வாரியன - மலைகளை வாரிக்கொண்டன. ஆடி, பாடியென்பவற்றை ஆடியன பாடியன வெனக்கொள்க.

எ - து குலபருவதங்களேழையும் நட்சத்திரங்களையும் ஒக்க எடுத்து முக்கிவிக்கினவாறே திரைவிரிகடலேழும் தண்ணீர்குடித்து விக்குகை தீரப்போதாமையாற் சிறிது நக்கிப் பின்னையும் அதிலடங்காமையால் உடம்பை அசக்கி ஆடின ; பின்னைப் பரமேசுவரி ஸ்ரீபாதங்களைப்பாடின எ - று.

இவை பரமேசுவரிபக்கல் நின்றும் படைபோன பேய்களெனவுணர்க. ஆடியென்றது கூத்தல்ல ; விக்கினதற்குப் பரிகாரமாக உடம்பை அசக்கிக் கொடுத்தது. ஐயைகழல்பாடுகையாவது தாங்கள் பிழைத்ததற்குப் பரிகாரம். ஐயை - ஆரியை, இதன்பொருள் உயர்ந்தோளென்பது ; ஆரியையாவது சங்கிருதம் ; அஃது ஐயையென்று பிராகிருதமாய்த் திரிந்தவாறு ; மாகதமென்னலுமாம். ஐயர்கழலெனப் பாடம்சொல்லுவாருமுளர்.

(வி - கு) மூ. முக்கி - உண்டு ; 358-ஆம்தாழிசை யுரையைப் பார்க்க ; இது மொக்கியெனவும் வழங்கும் ; " சர்க்கரை மொக்கியகை " (கந்தரலங்.) உரை. ஆடியென்பது கூத்தல்ல : குலோத். கோவை, 257. 'ஐயைகழல் பாடியே' என்றது கொண்டு, 'இவை பரமேசுவரி........பேய்களென வுணர்க' என்றார். ஐயை - ஆரியை ; 170, உரை. சங்கிருதம் - ஸம்ஸ்கிருதம் ; 'சங்கிருத சத்தம்' என்றார் முன்னும் ; தக்க. 82, உரை. மாகதம்- வடமொழிச்சிதைவுகளுள் ஒன்று. (கசுசு)

411. எயிறுவெட் டுவன சக்ரவாளமுத
லேழ்பொருப்புமெட் டெண்பணிக்
கயிறுகட் டுவன வண்டகோடிபுனை
கையகாலன கழுத்தவே.

ஏ - து சக்கரவாளவெற்பும் குலபருவதங்களேழும் ஆகிய எட்டுப் பருவதங்களையும் ஓரொன்றுக்கு ஒவ்வொன்று கொண்டு நாகராசாவங்கிசம் எட்டுமாகிய கயிற்றாற்கட்டி இவையே ஆபரணமாகக்கொண்ட கைகளையும் கால்களையும் கழுத்துக்களையும் உடையன, பூதபசாசுகள் எ - று.

கை அண்டகோடி புனைதலாவது மற்றை உறுப்புக்களை ஒப்பிக்கவல்ல கைகளால் உலகம் அடங்கக் கட்டியொப்பித்தலெனவுணர்க.

எயிறு வெட்டுவனவென்னும் சொல்லை இடமறிந்திட்டுக்கொள்க. பணி - பாம்பு. பாம்பு கயிறு, மலைகள் மணி, அண்டகோடிகள் பாம்பாற் கட்டுண்பன. கை கால் கழுத்துக்களின் ஒப்பனை அண்டகோடிகளென உணர்க.

(வி - கு) உரை. ஒப்பனை - அலங்காரம். கட்டியொப்பித்தல் - தழுவிக் கைகளை அலங்கரித்தல் ; தழுவுகையே கைக்குஅணியென்று கொள்க ; " சக்கரக்கிரியு மெக்கிரியு மெப்புடவியும், சமைய வந்துதக ரத்தழுவி னுந் தழுவும் " (தக்க. 398) என்றதும் இக்கருத்தை வலியுறுத்தும். (கசுஎ)

412. படம்பெறுமணி [1]விசும்பிறந்துலகு
பகல்பெறுபவன மடையவோர்
இடம்பெறுவெளி யிழந்துநடுவுடு
வெழுப்பெறுகன மெங்குமே.

ஏ - து நாகங்களின் படங்களெல்லாம் மாணிக்கங்களைப் பறியுண்டிழந்தன. ஆகாசமின்றி உலகங்கள் ஆதித்தியன் எங்கும் எழப்பெற. காற்றும் அவ்வண்ணமே. நட்சத்திரங்களும் அவ்வண்ணமே எ - று.

பவனம் - காற்று. (பி - ம்.) 1 'விசும்பெழுந்துலகு' (கசுஅ)

413. இடும்இடும்பத யுகத்துவீழ்[1]கதியி
லேழ்பிலங்களு மிறங்கவே
விடும்விடுங்கர தலத்தெழுந்துகிரி
[2]சக்ரகிரிகிழிய வீழவே.

பதயுகம் - காலிரண்டு. அவையிடுந்தோறும் ஏழ்பாதாளங்களும் கீழ் வீழும்; கைவீசுந்தோறும் மலைகளெழுந்து போய்ச் சக்கரவாளகிரியைப் பிளந்து அப்புறத்துப்போய்விழும்.

விடுகை - வீசுகை.

(வி - ரு.) மூ. இதனால், பூதகணங்களின் பாதவன்மையும் கைகளின் நீளமும் வலிமையும் விளங்குகின்றன. (பி-ம்) 1 'கதிகளேழ்' 2 'சக்கரவாள கிரி கிழியவே' (கசுகூ)

414. விட்டகுலகிரிக [1]ளெட்டுமும்பர்திசை
யானையெட்டும்விழ வீழவே
சுட்டவிழியிலெழு கடலும்வற்றியெழு
தீவுமொக்கமிலை சுவறவே.

விட்டகுலகிரிகளென்றது உலோகத்தை விட்டகுலகிரிக ளென்றவாறு; உலோகத்தைவிடுதலாவது மிகவும் உயர்தல். விழவீழ்தல் - பொன்றக்கெடு தல். சுட்டவிழியென்றது இவையிற்றைச்சுட்ட கண்ணென்றவாறு.

அவ்விழியாலே கடலும் தீவுகளும் பொடிபட்டன.

(வி - ரு.) உரை. பொன்றக்கெடுதல்-முற்றும் அழிதல்.

(பி - ம்.) 1 'ளெட்டுமுட்டதிசை' (கஎo)

415. சங்குநேமியொ டுறங்குமேகமு
மிறங்கு[1]மேகமுந் தப்புமே
பொங்குநேமியுடன் [2]வேவவெந்துபொரு
பொரியுமேசகல கிரியுமே.

உறங்குமேகமென்றது விஷ்ணுபகவானை; மேகம்போல்வானை மேக மென்றது. சங்கும் நேமியுமென்றது அவன்படைகளை. இறங்குமேக மூமென்றது மேகத்தையல்ல; இறங்கும் ஏகமுமென்க; ஏகம் - ஒன்று; ஒன்றுமென்றவாறு; ஆகாசத்தினின்றும் இழிவனவற்றுள் ஒன்றும் தப்பாதென்றவாறு. பொங்குநேமி - சக்கரவாளம். பொருபொரியுமென் றது அனுகரணவோசை; இரட்டைச்சொல்லு. சகலகிரியும் - எல்லாமலை களும்.

(வி - ரு.) மூ. பொருபொரியும்: ஒலிக்குறிப்பு. கண்களால் மலைகள் பொரிந்தன. மலைகளைக் கண்களாற் பொரித்தல், 542, 584-ஆம்தாழிசை களிலும் கூறப்படுகின்றது.

(பி - ம்) 1 'மேகமரி' 2 'வேவவேழுலகு பொரியுமேபகில' (கஎக)

416. விழும்விழுஞ்சிலா தலஙிலம்பகிர்ந்
[1]துரகர்விடர்நடுவு வீழவே

எழுமெழும்பாறு மணிகளவ்வழியி
[2]னிரவிகள் வருவ தெனவே.

எ - து எடுத்தெறியக் கீழே விழுமலை பாதாளத்தின்முழைகளின் நடுவே வீழ அவைவிழுந்த நாகராசர்க்கள் படத்தின்மாணிக்கங்கள் எழுந்தோறும் அப்பாதாளத்தினின்றும் எழுகின்ற ஆதித்தர்களைப்போன்றன எ - று. (பி - ம்) 1 'துரகர்பிடர்நடுவு' 2 'னிரவி யெழுவதெனவெறியவே'
(கள௨)

417. கரங்களால்ரவிகள் யாவரும்பெரிய
கால்களாலுரிய கங்கையும்
சிரங்களாலரசு பணியுமாகிமுதல்
பூதநாதர்பலர் செல்லவே.

கரங்களென்பது கதிர்க்கிரணங்களுக்கும் கைக்கும் பெயர். பூதநாதர் கைகளும் ஆதித்தகிரணமும் ஒக்கும், சோதியாலும் நீளத்தாலும். அன்றியும் ஆயிரம் கரதலத்தால் ஆதித்தரெனக்கொள்ளலுமாம் ; ஆயிரங்கைகளையுடைய பூதங்களும் உள. கால்களாற் கங்கையெனவே சகசிரபதகங்கையுமுண்டு. பணியரசு ஆயிரந்தலையுடையது. பூதநாதர் - கணநாதர். முதலென்றது மகாதேவர் திருநாமம் ; அது பூதங்களின் மேற்செல்லின் லகரம் றகரவொற்றாதல்வேண்டும் ; முதற்கண்ணெனினும் அவ்வாறுதல்வேண்டும் ; ஆதலால் முதலினுடைய பூதநாதரெனவுணர்க. ஒருதலையும் ஆயிரங்கையும் ஆயிரங்காலும், ஆயிரந்தலையும் இரண்டுகையும் இரண்டுகாலும் உடையவான பூதங்களுமுள ; சகசிரபாகு அர்ச்சுனனுக்குத் தலையொன்று ; திரிசிராவுக்குக் கை இரண்டும் கால் இரண்டும். ரவிகள் யாவருமென்றதனாலே பன்னிருவர் ஆதித்தரும் பன்னீராயிரம் கைகளுங்கொண்டு தோற்றினருமுளரென்க. கங்கைகளில் சகசிரமுகமும் திரிபதாமுகமும் ஆயிரம்காலுங்கொண்டு தோற்றினருமுளர். உரியகங்கையென்றதனால் கங்காதேவியையே கொள்க, உயர்திணையாக ; " கங்கையாளோ வாய்திறவாள் " (தே. சுந்தர.) என்பதை உணர்க. நாகங்களில் எட்டுவடிவும் எண்ணாயிரம்தலையும் கொண்டாருமுளரெனவுணர்க.

(வி - கு.) உரை. சகசிரபாகுஅர்ச்சுனன் - கார்த்த வீரியார்ச்சுனன் ; " ஆயிரந்தடக்கையான்...வைத்ததூயவன் " (கம்ப. நிந்தனை. 58); "அன்னவன்...ஆயிரந்தோ ளருச்சுனன் " (உத்தர. கார்த்தவீரியார்ச்சுன. 18.) பன்னிருவர் ஆதித்தர் : 78, 141 உரை. கங்கைகளில் சகசிரமுகம் : " கங்கை துறைகளாயிர முகமுஞ்சுழல" (கல். 18 : 8–9) ; " கங்கையாகிய அழகிய பெரியயாறு ஆயிரமுகமாகக் கடலிலேசென்றாற்போல ' (மதுரைக். 696, ந.)
(களங)

418. விழவிடுங்கிரிகள் கீழுமுள்ளபில
மேழுமூடுருவ வீழவே
எழவிடுங்கிரிகள் சூழுமண்டமுக
டேழுமூடுருவ [1]வேறவே.

எ - து கீழேவிட்டமலைகளும் இன்னும் வீழாநின்றனவல்லது இருந்தனவில. மேனோக்கி எழுந்தமலைகளும் இன்னும் கீழேவிழுந்தனவில்லை ; ஏறுகின்றன எ - று.

இது விசைப்பெருமைக்கு அளவில்லாமையை உணர்த்தியது. சூழு மண்டமென்றதனால் எல்லாஅண்டங்களையும் கொள்க.

(வி - கு.) மூ. ஒப்பு : 364, உரை. (பி - ம்) 1 'வெறியவே' (கஎச)

419. ஓமகூடகிரி நின்றெடுத்தெரிய
வண்டகூடமுரு விப்புறத்
தேமகூடமொடு சித்ரகூடமெரி
கனககூடமென [1]வெரியவே.

எ - து தட்சனுடைய யஞ்ஞாலயமாகிய ஓமகூடமானமலையைஎடுத் தெறிய அது பிரமாண்டகூடத்தை உருவிப்போக மேனின்ற ஏமகூடபருவத மும் சித்திரகூடபருவதமும் இவ்வெரியினகத்தில் பொற்பருவதகூடம் எரிந் தாற்போல வெந்துபோயின எ - று.

உருவி - உருவ. இருகனககூடமென்று பாடஞ்சொல்லின் இரண்டும் பொன்னாற்சமைக்கப்பட்டன வென்க. ஏமகூடம் இந்திரன் விடாயாற்றி மலை. சித்திரகூடம் அவனுடைய ஓலக்கமலை. ஏமம் - பொன்.

(பி - ம்) 1 'வேறவே' (கஎரு)

420. [1]எயிறிரண்டருகு வெண்பிறைக்கிவை
யிரண்டுடுத்[2]தொடைகொ லென்னலாய்
[3]அயிறிரண்டனைய பல்லொழுங்குக
ளலங்குசோதியொ டிலங்கவே.

எ - து இரண்டெயிறுகளான இரண்டுபிறைக்கு இரண்டு நட்சத்திரத் தொடை போன்றனவாகி, உலகத்தின்வேலாயினவெல்லாம் ஒக்கத்திரண்டு கூடியவற்றையொத்த பல்லொழுங்குகள் சோதியையும் கூர்மையையும் உடையவாய் விளங்கித்தோன்ற எ - று.

(வி - கு.) மூ. அயில் திரண்டனைய.

(பி - ம்) 1 'எயிறிரண்டினனி' 2 'தொகை'3 ' அயிறிரண்டுடைய '
(கஎசு)

421. மாகமேயனையர் தம்மகோதரமு
மெம்மகோததியு மாயமேய்
மேகமேயனைய ராகமேகடவுண்
மேருவேயனைய ரூருவே.

எ - து இப்பெரும்படையாளர் மகாவயிறு ஆகாசத்தையொப்பர். எல்லாக்கடலையும் குடிக்கவல்ல மேகங்களையொப்பர், மார்பும் கண்டமும் கையும் முகமும். தெய்வீகமேயான மகாமேருவேயனையர், தங்கள் துடை கள் எ - று.

மக உதரம்=மகோதரம் - பெருவயிறு. மகோததி - கடல். மேகம் மேயாதாதலால் மரபுவழுவென்பார்க்கு அஃதன்றென்க ; " இலங்க லாழியி னன்களிற் றீட்டம்போற், கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை " (32) சிந்தாமணி.

(வி - ரு.) மூ. மேய்மேகம் : "கருவி மாமழை......பருவ வெண்டிரை **மேய்ந்து"** (**நைடதம்**, நாட்டுப். 1) (கஎஎ)

422. உடுத்தநேமிகிரி [1]நெரியவொருவர்நக
முருவுமேயுலகு வெருவுமே
எடுத்தசூலமொடு காலபாசமினி
வீசயாதும்வெளி யில்லையே.

**எ - து** சகத்தைச்சுற்றிய சக்கரவாளபருவதம் நெரிந்துபோகும்படி ஒரோவொருவர் கைகளில் உகிர்களே உருவாநின்றன ; இதற்கு வெருவாநின்றன லோகமெல்லாம். இக்கைகளால் எடுக்கப்பட்ட சூலம் வீசவும் அச்சூலத்தாற் கொலையுண்டாரைக் காலபாசம் சென்றுகட்டவும் வெளியிடம் இனி இல்லை எ - று.

(பி - ம்) 1 'நெரியநின்றனர்த முருவமே' (கஎஅ)

423. ஒருவரேயகில லோகமும்புதைய
[1]வேறுவேறுடம் புடையரே
இருவரேதெரிய வரியர்தாமிவரை
யெங்ஙனேதருவ ரென்னவே.

**எ - து** இப்பெரும்படையுள் ஒரோவொருவரே இவ்வுலகமெல்லாவற்றையும் ஒக்கப்புதைக்கும் உடம்பையுடையார், ஈசுவரன் இவர்களை எங்ஙனே படைத்தானென்று சொல்லும்படி எ - று.

இருவரேதெரிய அரியரென்றது மகாதேவனை ; அவனை அன்புடையவரெல்லாருமறிவர் ; பிரமவிஷ்ணுக்களே அறியாரென்றவாறு. இதன்கருத்து, கர்விகளுக்குத்தெரிய அரியரென்றவாறு. அன்றிப் பௌத்தர் அருகரைக் கொள்ளலுமாம்.

(வி - ரு.) உரை. அவனை அன்புடையவரெல்லாருமறிவர் ; "பத்தி வலையிற் படுவோன் காண்க" (**திருவா**.); "ஆரேனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா, ணாரேனுங் காணா வரன்" (**திருக்களிற்றுப்படியார்**, 15.)
(பி-ம்.) 1 'வேறுவேறுருவமுடையரே' (கஎகூ)

424. கொண்டகோலமிவை யாகவண்டசத
கோடிகோடிநிரை [1]தானையிவ்
வண்டகோளகை வளாகமொன்றினு
ளடங்கிநின்றன மடங்கியே.

**எ - து** இது தந்திரத்தின் கோலமாக, நூறுகோடி ஒன்றாகப்பெருக்கிக் கொண்ட கோடிக்கணக்குடைய பெரும்படை இவ்வண்டகோளகை ஒன்றிலே அடங்கியன எ - று.

அண்டவளவு நூறுகோடி ஒன்றாகவந்தகோடியெனவுணர்க.

(வி - ரு.) மூ. வளாகம் - பரப்பு ; "தெண்கடல் **வளாகம்**" (**புறநா**. 189.)
(பி - ம்.) 1 'தானையாய்' (கஅ0)

425. எங்ஙனேயிறைவ ருலகுபொதிவுரு வ
மெவ்வுடம்பினு மடங்குமா
றங்ஙனேயவர்கள் விசுவரூபமு
மடங்கிநின்றபடி யதனிலே.

அநேககோடி அண்டங்களில் அடங்காப்பெரும்படை ஒருபிரமாண்டத்தில் அடங்கும்படி எங்ஙனேயென்னின், ஈசுவரன்வடிவொன்றிலே இப்பிரபஞ்சமான சர்வபதார்த்தங்களும் அடங்கிநின்றபடியே இதற்கு ஒப்பெனவுணர்க.

எங்ஙனம் அங்ஙனமென்னும் சொற்கள் எங்ஙனே அங்ஙனே யென்று வந்தன. இவர் **வில்லிபாரதியை** நினைத்தார்கவியழகுவேண்டி. "எம்மனோ மாரினி யெங்ஙனம் வாழ்குதிர்" (425) என்பது **சிந்தாமணி**; எங்ஙனமென்னும் சொல் இவ்வாறே **வில்லிபாரதியிலு**முண்டு.

(**வி - கு.**) மூ. இறைவர்......அடங்குமாறு : "எவ்வுயிரு நீங்கா துறையுமிறைசிவனென், றெவ்வுயிர்க்கு மன்பா யிரு" (**சைவசமயநெறி**, பொது. 215.) (கஉகு)

426. சாய்வதின்மையி னெருக்கி[1]மேருமுத
ருமுநின்றவவர் தாணிலந்
தோய்வதின்மையி னிடங்கிடந்தபடி
[2]தோயுமேலவையு மாயுமே.

பூதபசாசப்பெரும்படைகளெல்லாம் யுத்தோன்முக உச்சாக பரவசராதலின் திருமேனி ஒன்றிற்சாயாமையாலே மகாமேருமுதலான பருவதங்கள் நின்றன. ஸ்ரீ கயிலாசத்தொடக்கத்தன கொள்க.

ஸ்ரீ பாதங்கள் தரையில் தோயாமையால் பூதபசாசுகளையும் தெய்வசாதியெனக் கொள்க.

(**வி - கு.**) உரை. ஸ்ரீபாதங்......தெய்வசாதி : தேவர்களுடைய கால்கள் நிலத்திற்படியாவென்பது இங்கே அறியத்தக்கது; 658, உரை.

(**பி - ம்**) 1 'மேருகிரிதானும்' 2 'தோயுமேலதுவுமாயுமே' (கஉஉ)

427. நிலத்தினும்பல பிலத்தினுஞ்சுரபி
நிலையினுந்திகிரி மலையினும்
சலத்தினுங்கன கலத்தினும்[1]புடை
யடங்கி[2]நின்றதுயர் தானையே.

சுரபிநிலையென்றது சுவர்க்கலோகமென்பாரும் கோலோகமென்பாருமுளர். கனகலமாவது தட்சன் யாகம்பண்ணுகிறதானத்துக்குப் பெயர். புடையடங்குகையாவது செறிவு.

(**வி - கு.**) **உரை.** கோலோகமென்பது சிவலோகத்தின் மேலுள்ளதென்று புராணங்கள் கூறும்; இதனியல்பு **சிவதருமோத்தர**த்துள்ள கோபுரவியலாலும், **காசிகாண்டத்**துள்ள "விளங்கு நம்முலகின் மேலாம்" (2 : 29)

என்னும் செய்யுளாலும் அறியலாகும்; சங்கநூல்களில் ஆனிலையுலக மென்று வழங்கப்படும்; "மேனிலை, ஆனிலையுலகத்தானும்" (புறநா. 6 : 6 - 7); "பொன்னிறைந்த பொற்கோட்டுப் பொற்குளம்பிற் கற்றுதந், தின்மகிழா னந்தணரை யின்புறுப்பச்—சென்னிதன், மாநிலமே யானுலகம் போன்றதா வான்றுகள்போர்த், தானுலக மண்ணுலகா மன்று" (தொல். புறத். 35, ந. மேற்.) என்பவற்றாலுணர்க. கனகலம் தக்கன் யாகம்பண்ணு கிற இடம்; 247.

(பி - ம்) 1 'பொறை' 2 'நின்றதிது' (கஅ௩)

## வேறு

428. ஊழியேறுகட லீரண்ட கோளகையுடைத்
தும்பர்நீரொடு கலந்தனைய தொக்குமுடனே
பாழியேறுதிணி தோள்வீர பத்ரகணமும்
பத்ரகாளிகண மும்படை [1]யெழுந்தபடியே.

ஊழியேறுகடல் - உகாந்தகாலத்தில் ஏறுகடல். பாழி - வலிமை. பத்திரகாளிகணமென்றது படைத்துணையாகப்போன தேவிபடையென வுணர்க.

(வி - கு.) மு, உம்பர்நீர் - பெரும்புறக் கடல்.
வீரபத்திரர் படையும் பத்திரகாளியின் படையும் கலந்து சென்றமை உகாந்தகாலத்திற் கடல்கள் பெரும்புறக்கடலுடன் கலந்து பெருகுவதை யொத்தது.

(பி - ம்) 1 'எழுந்த பரிசே' (கஅ௪)

## தேவியின் படைச் செயல்கள்

429. கார்முகக்குமிர வென்னவிருள் குஞ்சிவிரிவார்
கடன்முகக்குமகல் [1]வாயன கபாலமுடையார்
பார்முகக்குமுரு [2]முக்கழு நிரைத்தபடையார்
பலமுகக்குமுத வாயிறைவி பைரவர்களே.

[இதுமுதல் 433 முடிய பத்திரகாளியின் கணங்கள் தன்மை கூறப் படும்.]

கார்முகக்குமிரவாவது மழைக்காலிருள் இராத்திரி; இஃது ஒருவர் தலைமயிர்; இப்படிக்கொத்த தலைமயிர்களை விரித்தே வருவார். கடல் முகக்கும்வாயென்க. அகலம் கடலோடொக்கும்; எனவே ஆழம் ஏழ்கட லுடனும் ஒக்குமென்க; எனவே பிரமகபாலமெனவுணர்க. பார்முகக்கும் - பூமியிற்பதணத்தை முட்டஉருவிப் புறப்பட்டுப்போகக் குத்தியெடுக்கும். எனவே ஆகாசகமனரெனக் கூறியவாறாயிற்று. பாரினைமுகக்கினும் முகக்க வல்லரெனினும் ஆம்.

(வி - கு.) மு. உருமுக்கழு : 98. பைரவர்களுடைய தன்மைகளைக் காடு பாடியதிற் கண்டுகொள்க. (பி - ம்) 1 'பைரவ' 2 'முக்கவருவிட்டபடையார்' (கஅ௫)

வேறு

430. பாரப் பணைமுலைக் கொலையினுஞ் சிலபுருஉப்
பங்கத் தினுமடுப் பனவடுப் பகவினும்
கூரப் புறவமுல் லைம்முகை நகையினுங்
கொல்லுகை தவிரா விறைவிசா கினிகளே.

புருஉப்பங்கம் - புருவமுரிவு. வடுப்பகவென்றது மாவடுவின்வகிர்; வடு வென்னும் பலபொருளொருசொல் இடம்பற்றி மாவடுவுக்காயிற்று. இது கண்ணிற்குப்பெயரானது அன்மொழித்தொகை. மடுப்பனவென்றது காமச்சுவாலையைமடுப்பனவெனத் தந்திரவுத்தி கொள்க. புறவம் - சிறு காடு.

(வி - ரு.) மூ. சாகினிகள் : தக்க. 89, 433. ஒப்பு : 81 - 3. (கஅசு)

வேறு

431. வெளிபடப்பட முகிழ்த்தெயி றெறிக்குநிலவார்
விழிபடக் குழை சுடச்சுட ரெறிக்கும்வெயிலார்
அளிவளர்த்தன வெறிக்குழ லெறிக்குமிருளா
ரறுமுகத்ரிபுர பயிரவி [1]யகம்படியரே.

நகைகளால் நிலவும் குழைகளால் வெயிலும் குழல்களால் இருளும் உண்டாக்குவார் இவர்.

குழைசுட - குழைகாய. அளிவளர்த்தன குழலென்றது வண்டினங் களுக்குக் குழல் செவிவித்தாயென்றவாறு.

(வி - ரு.) மூ. குழை...வெயிலார் : 22, 36. குழலெறிக்குமிருளார் : 25. த்ரிபுரபயிரவி : திரிபுராவென்பதும் பைரவியென்பதும் தேவியின்திருநாமங் கள். அகம்படியர் : 95, பார்க்க. (பி - ம்) 1 'யகம்படிகளே' (கஅள)

432. அடவியாகிவரு வாரசல மாகிவருவா
ரமரராகிவரு வாரவுண ராகிவருவார்
புடவியாகிவரு வார்புணரி யாகிவருவார்
புவனநாயகிதன் யாமள புராதனர்களே.

அசலம் - மலை. புராதனரென்றது புமான்களை.

(வி - ரு.) மூ. யாமள புராதனர் : "புவனிவா னடையவோர் பவனிபோது வர்களே, புகலுகோ மளவியாமள புராதனர்களே" (அஞ்ஞவதைப். 137.) தேவியின் படைகளுக்கு எந்த வடிவத்தையும் எடுத்துக்கொள்ளும் ஆற்றல் உண்டென்பது இதனால் அறியப்படுகின்றது. இதனுடன் 401 - ஆம்தாழிசை யையும் அதன் உரையையும் ஒப்பு நோக்குக. உரை. புமான்கள் - ஆண் பாலார். (கஅஅ)

433. [1]இடிபொருமலொரு பாலதிர்வர் சாகினிகளே
யெரிபொருமலொரு பானகுவர் டாகினிகளே
படிபொருமலொரு பால்வருவர் யோகினிகளே
[2]பகருமாறரியர் நாயகி பதாகினிகளே.

இடிபொருமல் - இடியைப்பொருமல். அதிர்தல் - ஆரவாரித்தல். நருகை - அட்டகாசம் செய்கை. டாகினிகளெனத் தமிழில் மொழிமுத லாகா அவ்வெழுத்திடுதற்குக்காரணம் சந்தியிசைவஞ்சியென்பாரும், சரு வஞ்ஞகவியென்பாரும் இகரமுமுண்டு செய்யுளாதலின் தொக்கதென்பாரும் அத்தொகை மனத்ததென்பாரும் பிறகூறுவாருமுளர்; நல்லதுணர்க. படி பொருமல் வருகையாவது பூமிதான் பாரம்பொருதென்று ஆகாசமே வருவா ரென்பது. பதாகினி - கொடிப்படை.

(வி - ரு.) மூ. டாகினிகள்: இடாகினிகள்; "வெண்ணிலா நகை யாளை விடாதவர், எண்ணில் கோடியிடா கினிமாதோ" (**இரணியவதைப்.** 104.) விசுத்திசக்கரத்தில் பதினாறு இதழ்களை யுடைய தாமரை யிற் செந்நிறமும் மூன்றுகண்களும் கதாயுதமும் வாளும் சூலமும் பெரியதோலும் ஒருமுகமும் பயங்கரஉருவமும் உடையவளாகவும், பாயசப்பிரியையாகவும், ஸ்பரிச தன்மாத்திரைக்கு அதிதேவதையாகவும், **அமிர்தை** முதலிய தேவதைகளாற் சூழப்பட்டவளாகவும், வீரர்களால் வணங் கப்படுகிறவளாகவும் தியானிக்கப்படுவாள் (**லலிதா ஸஹஸ்ரநாமம்**, 475 - **பாஸ் கரராயர்** வியாக்கியானம்.) **விசுவசாரதந்திர** மென்ற நூலொன்று, தேவியின் அம்சமான சண்டாளினியென்ற தேவதையின் தியானத்தைக் கூறு மிடையே, 'இடப்பக்கத்தில் **டாகினி**யுள்ளாள்; அவள் யுகாந்தகாலத்துச் சூரியன்போல் விளங்குகிறாள்; அவளுடைய சடை மின்னலையொத்தது; அவள் முக்கண்ணினள்; வெள்ளிய வளைந்த பற்களையுடையவள்; காண் பாரஞ்சும் உருவினையுடையாள்; வாயினின்றும் நீண்டு தொங்கும் நாவி னள்; தலைமாலையுடையாள்; இடக்கரத்திற் கபாலமொன்றுடையாள்; தேவியின் கழுத்திலிருந்து பெருகும் இரத்ததாரை யொன்றைக்குடித்து நிற் பாள்' என்று டாகினியைப்பற்றியும் விளக்குகின்றது. **சாக்தப்ரமோத**மென் னும்நூல் டாகினியைத் தேவியின் தாமஸகுண அம்சமென்று தெரிவிக்கும். **தந்திரசார**மென்ற வடமொழி நூலில், 'தேவிக்கு இடப்பக்கத்தில் இடத்தாளை முன் வைத்துக்கொண்டு ஒரு சக்தி யிருக்கிறாள்; அவள் கரியநிறத்தினள்; கைகளிற் கபாலமும் வாளும் உடையாள்; தேவியின் கழுத்திலிருந்துவரும் குருதிக்காலொன்றை மடுக்கிறாள்; அவள் தமோகுண வுருவினள்; அவள் பெயர் **டாகினி**. அவள் பிரளய காலத்தில் எல்லாஉலகத்தையும் அழிக்கவல் லவள்' என்று காணப்படுகிறது.

தேவியின் படைகளில், டாகினிவர்க்கமுமொன்றென்பது, "தம்மை நாடித் தலைவனை நாடுமே தலைவன் சீர்த்தி தலைபுனை தாடுமே, எம்மை யாள்கென் றிரந்திசை பாடுமே யிறைவி யைத்தொழும் **டாகினி**வர்க்கமே" (**பாசவதைப்.** 207), "வெண்ணிலா நகையாளை விடாதவர், எண்ணில்கோடி யிடாகினி மாதோ" (**இரணியவதைப்.** 104) என்பவற்றாலும் பெறப்படும்.

யோகினிகள்: இவர்களைப்பற்றிய செய்திகளைக் **காடுபாடியதிற்** காண லாம். யோகினிகள் பன்னிருவரென்றும் அவர்கள் முறையே, வித்யா யோகினி, இரேசிகை, மோசிகை, அமிர்தை, தீபிகை, ஞானை, ஆப்யாயனி, வியாபினி, மேதை, வியோமரூபை, சித்ரூபை, லக்ஷ்மி யோகினி எனப்படு வார்களென்றும் கூறுவர் ஒரு சாரார் (**ஆனந்தலகிரி**, 17 - **லக்ஷ்மீதரர்**); 'மகா சதுஷ்ஷஷ்டி கோடி யோகினீகண ஸேவிதா' (**லலிதாஸஹஸ்ரநாமம்**, 237) என்பதனால் தேவியைச்சூழ்ந்துள்ள யோகினிகணத்தார் 64-கோடியரென்று தெரிகிறது. பதாகினிகள்: **தக்க.** 89. மூ. ஒப்பு: "உருகுவா சகமெலா முடையர்சா கினிகளே, உயிரெலாம் விழியினா லயிர்வர்யோ கினிகளே, பரு கியா ரமிர்தையா டுவர்கண்மோ கினிகளே, பகருமா றரியர்நா யகிபதா கினி களே" (**அஞ்ஞவதைப்.** 135.)

**உரை.** சருவஞ்ஞகவி : இது குறிப்புச்சொல்; எம்முறையிலும் பாடும் வன்மையையுடையரென்றபடி ; பெரியகவிகள் விதிகளையும் கடந்து இலக்கியம் அமைப்பார்கள் ; "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்ப லின்" என்பதனால் அத்தகைய கவிகளுடைய இலக்கிய அமைதியே இலக் கணமாமென்பது பெறப்படும். **கம்பர்** முதலிய மகாகவிகளிடத்து இத்தகைய இயல்பைக் காணலாம் ; "நாரா யணனை நராயணனென் றேகம்ப, ேராமற் சொன்ன வுறுதியால்" என்ற **காளமேகத்தின்** பாட்டும் இதனை வலியுறுத்தும். **(பி - ம்)** 1 'இடிபெருமலொரு பானகுவர் டாகினிகளே, யிருள்பெரும லொருயாலொளிகொள் சாகினிகளே' 2 'பகருமாறரியதாய் வருபதாகினிகளே' (௧௮௯)

## தேவர்கள் இந்திரனுக்குத் தெரிவித்தல்

### வேறு

434\. இப்படையோடு[1]மையன் மகராலயத்தில்
ரவிபோலெழுந் தருளுமென்
றப்படையோடுநின்ற சுரர்சென்றுதங்க
ளரசற்கிசைத்த பொழுதே.

சுரர் - தேவர்கள். அரசன் - இந்திரன்.

**(வி - கு.)** மூ. ஐயன் - வீரபத்திர தேவர். மகராலயம் - கடல்; **தக்க.** 437. படைக்குக் கடலும் வீரபத்திரருக்குச் சூரியனும் உவமை.

**(பி - ம்.)** 1 'மையர்' (௧௯௦)

## இந்திரன் கூற்று

435\. ஆவபுகுந்த[1]ப்ரத்த மறியாதடுப்ப
தறியாததேவ ரெதிர்தன்
பாவமனங்கவற்ற வறிவின்மைகொண்டு
சிலவச்ரபாணி பகர்வான்.

ஆவ - அந்தோ. பிரத்தம் - பிரமாதம் ; அது தேவிகோபம். அடுப் பதறியாமை - பவிஷ்யம் போகாமை. பாவம் மனங்கவற்ற - தேவேந்திரன் பூருவசன்மத்திற் செய்தபாவம் படக்கடவகாலம் அவன் மனத்தைப் பற்றிக் கவற்ற. அறிவின்மையென்றது ஸ்ரீயின்மிகுதி. வச்சிரபாணி - தேவேந்தி ரன் ; இஃது அன்மொழித்தொகை.

**(வி - கு.)** மூ. ஆவ : "ஆவவெந் தாயென் றவிதா விடும்" (திருவா.); "ஆவ வென்றின் றருளுதியேல்" (ஆளுடையபிள்ளை. மும். 9.) உரை. ஸ்ரீ - செல்வம் ; "பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்" (கம்ப. மந்தரைசூழ்ச்சி, 20.) என்பதும் இங்கே கருதத்தக்கது. பிரமாதம் - தவறு; அபாயம். பவிஷ்யம் - எதிர்காலம். **(பி - ம்)** 'வத்தம்' (௧௯௧)

436\. பேதைமணந்தகௌரி யழையாமலிங்கு
வருவாளிகழ்ந்து பெரிதும்
தாதைமுகங்கொடாது விடுவானமக்கு
[1]மூலகுக்குமென்கொ றவறே.

இதன் பொருளறிக.

(வி - கு.) மு. பேதைமணந்தகௌரி - பேதையாகிய பரமசிவன் மணந்த பரமேசுவரி ; இஃது இந்திரனது உட்கோள்.

அழையாமல் வந்தவளைத் தந்தை புறக்கணித்தான், நாமும் பிறரும் என்ன பிழைசெய்தோமென்பது கருத்து. (பி - ம்.) 1 'முலகுக்கும் வந்தவரே' (கசுஉ)

## கடலின் பெருமை

437. முகடுதகர்ந்துசிந்த முரிசக்ரவாள
[1]கிரியேபிடித்து முகிலெண்
பகடுமெழுந்துபெய்யு மகராலயங்க
ளவைசெய்வதியாவர் பணியே.

[இதுமுதல் 447 முடிய இந்திரன் தன்படை வன்மையைச் சொல்வது கூறப்படும்.]

முகடென்றது உலகமுடிமுகட்டை ; மோட்சத்தலமென்றுமாம். எழுந்தென்பதற்குமுன்பும் சிந்தவென்பதைக் கூட்டிக்கொள்க. எனவே பகடு மெழுந்து சிந்தப்பெய்யு மகராலயங்களெனவுணர்க ; மகராலயம் - கடல்.

அவையும் என்பணியன்றோ செய்வனவென்றவாறு.

(வி - கு.) மு. முகடுசிந்தவும் பகடுசிந்தவும் முகில் பெய்யும் மகராலயங்களென இயைக்க. (பி - ம்.) 1 'கிரியே பிடித்துமுதலெண்' (கசுகூ)

## வடவாமுகாக்கினியின் வன்மை

438. [1]தரையையகழ்ந்துதின்று கடலேழுநக்கி
வடமேருவாதி [2]தடமால்
வரையைவளைந்துதின்னும் வடவானலத்தின்
வலியே[3]நமக்கு வலியே.

தரை - பூமி. பூமியைத்தின்றால் அக்கடல் தண்ணீராகக்குடிக்கப் போதாதென்றபடி. நமக்குமாத்திரம் போலும் இத்தனை வலியென்றவாறு. வலியேயென்றதில் ஏகாரம் வினாவல்ல ; தேற்றேகாரம்.

இதன்கருத்து, வடவாமுகாக்கினி இதுகேட்டுத் தானேவருதல்.

இஃது ஈசுவரனை அஞ்சின நினைப்பு.

(வி - கு.) உரை. 'நக்கி' என்றதைக்கொண்டு, 'குடிக்கப் போதாது' என்றார். (பி - ம்.) 1 'கரையை யிகழ்ந்துநின்று' 2 'கடமால்' 3 'எனக்கு' (கசுச)

## வாயுதேவன் பெருமை

439. அடியடையப்பறித்த குலபூதரங்க
[1]ளழியாகவூழி யறையும்
படியடையப்பிதிர்க்கு மொருவாதராச
னவனிற்கயாது பகையே.

பறித்தவென்றது பறிக்கப்பட்டவென்னும் சொல்விழுக்காடென வுணர்க. பூதரம் - மலை. குலபூதரங்கள் - குலபருவதங்கள். அழி - வைக்கோல்; "ஆளழி வாங்கி யதரி திரித்த" (26 : 233); இது **சிலப்பதிகாரம்**; "உழுது நோன்பக டழிதின் றாங்கு" (125 : 7); இது **புறநானூறு**. படியடையப் பிதிர்க்குமென்றது பிருதுவிமுழுவதும் பொடியாக்குமென்றவாறு. மலையைஅறையும் பூமியைப்பிதிர்க்கும் வாதராசனென்க. அவனென்றது சுட்டுப்பெயர்.

(**வி - கு.**) மூ. ஊழி அறையும் - ஊழியில் அறையும். பிதிர்க்கும் - பிதிர்ப்பான்; வினைமுற்று.

(**பி - ம்.**) 1 'லழியாத வூழி' (கசுரு)

## துவாதசாதித்தர்களின் பெருமை

440. [1]மாயிரநேமியாதி மலைசுட்டுவேலை
[2]நிலைசுட்டயின்று மடியா
ஆயிரமானவெய்ய கதிராறிரண்டு
மெவனேவல்செய்வ தவரே.

மாயிரமென்பது புறமானமுகம்; எனவே உலகப்புறச்சக்கரவாளமென வுணர்க. வேலைநிலையென்பது வற்றுக்கடல். ஆயிரமாவது இங்கே பன்னீராயிரம். காரியத்தால் ஆதித்தரெனவறிக. அயின்றுமென்றதில் உம்மைக்கு வடியச் செய்தபின்பும் என்பணி செய்வாராவரென்பது பொருள்.

(**வி - கு.**) மூ. மாயிரநேமி : "**மாயிர** நெடுவரை" (**கம்ப**. பஞ்சசேனா. 36.)

**உரை**. 'ஆயிரமாவது இங்கே பன்னீராயிரம்' என்றது, ஓர் ஆதித்தனுக்கு ஆயிரங்கிரணங்கப் பன்னிருவருக்கும் பன்னீராயிரமென்றபடி; "சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண் டாயிரஞ் சுடரொடுஞ் சூழ்வருவரே" (**தக்க**. 78) என்பது இங்கே உணரற்பாலது. (**பி - ம்.**) 1 'பாயிரநேமியாழி', 2 'நிலைசுட்டபடி யாறுயிரம்' (கசுசு)

## சந்திரனுடைய வன்மை

441. உம்பருமேனையோரு மலைமத்திலிட்ட
வுரகம்பிடிக்கு மமுதத்
தம்பமமைந்துடம்பு சலியாதுநின்ற
தனிமன்னன் யாவர் தமரே.

ஏனையோர் - அசுரர். உரகம்பிடித்தலாவது சந்திரனென்னும் அமுதத்தம்பத்து அராப் பிடிக்கலாயதென்பது நினைவு; பிணித்தென்னும் பாடமுமுண்டு. அமைந்தென்றது தாறுகச்சமைந்தென்றவாறு. தனிமன்னனென்றது ராசாவென்னும் பெயரைத் தனித்துடையனென்றவாறு. இது **வேதசத்தம்**; இராசா வென்னும் பெயர் நிகண்டுவிலுமுண்டு.

(**வி - கு.**) **உரை**. 1 'நிகண்டு' என்றது வடமொழிநிகண்டை; இராசா வென்பதன் பரியாயப்பெயர் தமிழ்நிகண்டுகளிலும் உண்டு; "விதுமிலை வல்லோன் வேந்தன் றண்ணவன்" (**பிங்கலந்தை**, 225); விதுகொடு குருபு ஙண்பன் சுதாகரன் வேந்தனுலோன்" (**சூடாமணி**, 1 : 59.) (ககஎ)

## நிருதியின் வீரம்

442. பருதிபடப்பரந்து புகைகண்கடப்ப
வுலகங்கண்[2] மூடு பகுவாய்
நிருதிசெருக்குறிக்கி [2] னுளரேதெரிக்கி
னினியென்படைக்கு நிகரே.

எ - து ஆதித்தியன் பட்டுப்போம்படி புகைபுறப்பட்டு உலகவிடமெங்கும் கடந்துசெல்ல அங்காந்தவாயினுடன் தென்மேலை மூலைக்குக் கர்த்தாவான நிருதியே பூசல்பொர நினைந்தானாயின் ஆராயுமிடத்து ஆருளர், என் படைக்கு மாறுபட்டுநிற்பார் எ - று.

கண்ணும் வாயும் புகையுமென்பாருமுளர். செருக்குறிக்கினென்றது குணமிக உடையன், கோபமிலனென்றவாறு.

(வி - கு.) மூ. கண்கடப்ப : கண் - இடம்.

(பி - ம்.) 1 ' பரப்பி ' 2 ' மூழ்கு ' 3 ' னுளதே ' (கசஅ)

## ஏகாதசருத்திரர்கள் பெருமை

443. மதுநுரைவார்கடுக்கை யொருகண்ணிசூடி
[1] மழுவாள்வலத்து வரநம்
பதினொரு தேவரேறு பதினொன்று[2] மேறி
னுலகங்கள்யாவர் பரமே.

மதுநுரை - தேன்மிகுதியின் பொங்கல். கடுக்கை - கொன்றைப்பூ. நம் பதினொரு தேவரென்றது ஆலகாலம் உண்ணாதே நம்முடனே அமுதம் உண்டவர்களென்றவாறு. எனவே மகாதேவர் நம்முடனுண்ணலாம் பேறில ரென்றபடி. பதினொரு தேவராவார் : मृहन्याधन्, सर्वन्, ज्ञति, अजैकवान्, अभिमबुद्धि, पिनाकि, भवनामेश्वरन्, कपालि, स्थाणु, भवन्, रुद्रन्

(பி - ம்.) 1 ' மழுவாளலேந்து வருமென் ' 2 ' மேவ ' (கசங)

## காலன், யமன் என்பவர்களின் துணைவலி

444. சொற்பலசொல்லியென்கொ லுயிர்வீசுபாசம்
விடுகாலன்யாவர் துணையே
பற்பலகோடியண்ட மொருதண்டிலெற்றும்
யமராசன்யாவர் படையே.

காலனுவான் யமதூதர்க்கு நாயகஞ்செய்வான். பற்பலவென்றது வல்லெழுத்துறழ்ச்சி. பற்பலகோடியண்டம் ஒரு தண்டிலெற்றுகை ஓரடியிலகப்படுத்துகை ; ஓரடியிலகப்படுத்துகையாவது வலையுள் அகப்பட்ட மச்சிய சாதிபோல யமதண்டின்கீழ் உலகம் அகப்படச்செய்கையெனவுணர்க.

தாரகாம்யம், தேவாசுரம், ராமாயணம், மகாபாரதம்போலப் பலகாட்கூடி இறப்பதல்லது உலகம்பேர்ந்துபோமன்று யமராசன்வேணுமென வுணர்க.

(வி - கு.) மு. பலகோடிமுட்டைகளை ஒரு தண்டத்தில் ஏற்றுவானென்னும் நயம் உணர்க.

**உரை.** சாலன் : இவன் கூற்றுவனென்றும் கூறப்படுவான் ; இவனை யமராசனுடைய ஏவலாளனென்பர் ; "தருமனு மடங்கலும்" (பரி. 3 : 8) என்பதன் உரையைப்பார்க்க : "தருமராசற்கா வந்த, கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே" (தேவாரம்.) தேவாசுரம்...உணர்க : "தேவாசுரம் ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படியுளதப்பொரு களமே" (கலிங்கத். 459) எனத் தேவாசுர முதலியவை இப்படியே ஒரு சேரக் கூறப்பெற்றிருத்தல் காண்க ; "உயிர்த்தொகை...எண்கொள" (சிலப். 27 : 8 - 10) என்பதன் அரும்பதவுரையையும் அடிக் குறிப்பையும் பார்க்க. (உ00)

**445.** கருடாரியக்கர்சித்தர் கடிபூதநாதர்
நிசிசரர்தான வர்கள்கிம்
புருடர்முதற்குலத்த பதினெண்பதாதி
புடையேபரந்த படையே.

கடி - பேய். நிசிசரர் - ராட்சதர். தானவர் - அசுரர். கிம்புருடர் - கந்தருவராசர் ; இதனைக் காதம்பரியிற் கண்டுகொள்க. பதாதிகள் நம்படையென்க.

(வி - கு.) மு. பதினெண்பதாதி : இந்தப் பதினெண்கணங்கள் வேறு ; 447 - ஆம் தாழிசையில், சிவபிரானுக்குக் கூறிய பதினெண்கணங்கள் வேறு.

**உரை.** தானவர் தனுவின் மக்களென்பர் ; தக்க. 348, உரை. (உ0க)

**446.** முனிவருமாழியானு மிமையோரும்யானு
[1]மிளையோனுநிற்க ரவிமுன்
பனிவருமென்னவிங்கு வருகின்றதென்கொ
லொருசூலபாணி படையே.

முனிவர் - ரிஷிகள். ஆழியான் - விஷ்ணு. சூலபாணி - மகாதேவர். இப்பாட்டின் கருத்து : மகாதேவர் தாம்வாராதே வீரபத்திரதேவரை ஏவுவதென்னென்பது.

(வி - கு.) மு. இளையோன் - உபேந்திரன். ரவிமுன் பனிவருமென்ன : "வீசுபனி, தானிற்கு மோவிக் கதிரவன் றோற்றத்திற் றார்மன்னனே" (தனிப்.)

(பி - ம்) 'மெனையோரு நிற்க' (உ0உ)

**447.** வறுமையெவன்கொலென்க ணொருதன்படைக்கு
வலியாவதென்கொ லிமையோர்
சிறுமையெவன்கொலென்னை மதியாதுசேனை
விடுவானெவன்கொல் [1]சிவனே.

வறுமையெவன்கொலென்கணென்றது மகாதேவர் தமக்கென ஒருடலும் உடையரல்லரென்றவாறு. மகாதேவர் தாமும் வரப்பெற்றிலோமாகாதேயென்று இன்னுமையையுடையவனாயினன் தேவேந்திரன்.

முன்னில், "முகடு தகர்ந்து சிந்த" (437) என்னும் பாட்டுத்தொடங்கி, "முனிவருமாழியானும்" (446) என்னும்பாட்டு இறுதியாகக்கூறப்பட்ட நீரும் நெருப்பும் காற்றும் ஆதித்தனும் சந்திரனும் நிருதியும் ருத்திரரும் கால பாசமும் யமதண்டமும் பதினெண்கணங்களும் மகாதேவர்க்கும் உள. அவை கங்கையும் நெற்றிக்கண்ணும் மூச்சிற்காற்றும் வலக்கண்ணும் இடக்கண் ணும் ஸ்ரீபாதமுயலகனும் ரிஷபமும் காலக்கடப்பும் திரிசூலமும் பதினெண் கணங்களுமெனக் கொள்க.

இனிச் சொல்லப்புகுகின்றது மகாதேவர் தாழ்வும் தன் ஏற்றமுமென உணர்க.

(வி - ரு.) மூ. ஒருதன்படைக்கென்றது மகாதேவர் படைக்கென்றவாறு.

உரை. மூச்சிற்காற்று : "உயிர்ப்ப வர்க்குநா மென்பதை யுள்ளியோ, செயிர்ப்பு மாருதம் போர்ந்து திரிந்ததே" (தக்க. 674.)

(பி - ம்) 1 'சிலரே' (உ0௧)

## வேறு

448. யாளுள்பதி யமராபதி யீமந்தன தெனதேழ்
காளுள்குல கிரிதன்மலை கயிலைச்சிறு கறடே.

[இதுமுதல் 454 - ஆம் தாழிசைமுடிய இந்திரன் மகாதேவர் தாழ்வை யும் தன் ஏற்றத்தையும் சொல்வது கூறப்படும்.]

எனவே என்னிற்பெரியாரும் தன்னிற்சிறியாரும் இல்லையென்ற வாறு.

ஈமம் - சுடுகாடு. இப்பாட்டிற் காளென்றது இசையை ; கானமென் னும் ஆரியச்சொல் சிதைந்ததென்பாரும் அம்மென்னுஞ்சாரியை அழிந்த தென்பாருமுளர் ; அவைபொருளல்ல. காளெனப் பிராகிருதபாஷை யிலும் கௌடபாஷையிலும் செவிக்குப்பெயர் ; எனவே காளுள் குலகிரி யென்றதற்குக் கீர்த்தியையுடைய மலையென்பதுபொருள். கறடென்றது கல்லென்பதற்கும் போதாதென்றவாறு.

(வி - ரு.) மூ. கறடு - மிகச் சிறியகுன்று ; வழக்கு.

உரை. காளென்பது கர்ணமென்பதன் சிதைவுபோலும். (உ0௨)

449. குலவெண்பணி யானேபணி கொள்வேனணி கொள்ளும்
பலவெண்பணி [1]யவையுஞ்சிலர் விடுதந்தன பண்டே.

குலவெண்பணியென்றது அட்டமகாநாகங்களை ; இது முன்சொன் னோம் (99, உரை). இவை எனக்குப்பணிசெய்வனவென்றவாறு. ஈசுவ ரன்றான் ஆபரணமாகக்கொண்டவெண்பணி வெறும்பாம்பென்றவாறு. அவையும் தாருகாவனத்தில் ரிஷிகளாலே அக்கினிகோத்திரத்துப் பிறப் பித்து விடப்பட்டன ; எனவே அதற்குமுன்பு ஒன்றுமில்லை யென்றவாறு.

(வி - ரு.) மூ குல எண்பணி. அணிகொள்ளும் : முற்று. வெண்பணி : வெண்மையென்றது வெறுமையைக் குறிப்பதொரு பண்புப்பெயர்.

(பி - ம்) 1 'யாரஞ்சிலர் விடுவித்தனர் பண்டே' (உ0௩)

450. சுரும்பூத விழும்போயொடு சூழ்பூத மறைக்கைப்
பெரும்பூதமு மெல்லீரு மெனக்கே படை பெரிதே.

சுரும்பூதவிழுகையென்றது பேய்களின் மென்மையைச் சொன்ன வாறு. ஐம்பெரும்பூதமாவன : பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாசங்களென உணர்க. இவை பூதங்களினெதிர். எல்லீருமென்றது தேவர்களை. இவர் பேய்க்கெதிர். இப்பாட்டு எதிர்நிரனிறை.

(வி - கு.) மூ. 'சுரும்பூத விழும்பேய்' என்பதனோடு "வண்டூத வம் மருங்கு ளேமென்று" (சீவகசிந்தாமணி, 1700), "ஈக்காற்றுக் காற்று விடை" (தனிப்.) என்பன ஒப்புநோக்கற்பாலன. (உ0சு)

451. கோலந்தரு தருவின்குளிர் குழைநீழல் விடேன்யான்
ஆலந்தரு வறுநீழலி னிடைவைகுவ தவனே.

கோலம் - அழகு. விடேன்யானென்றது யான் வீற்றிருப்பதும் விளை யாடுவதும் கற்பகவிருட்சத்தின் நிழலிலேதானென்றவாறு. ஆலம் - வட விருட்சம். இதற்கு, "பூல்வே லென்று வாலென் கிளவியொ, டாமுப் பெயர்க்கு மம்மிடை வருமே" (தொல். புள்ளி. சூ. 80)என்பது விதி. வறுநீழ லென்றது நிழல்கொடுப்பதல்லது மற்றொன்றும் கொடுக்கமாட்டாதென்ற வாறு. வைகுவதென்றது எங்கும்போய் இரந்துண்டுவந்து வைகுமிடம் அதுவென்றவாறு.

(வி - கு.) உரை. எங்கும்போய் இரந்துண்டு வைகும் இடம் அது : "ஐயமுண்டுதரு மம்பணித்தருளு மாதியால்" (தக்க. 646.) (உ0எ)

452. எண்கூறவ னொருபேருரு வதனிற்கன்ன் முதலேழ்
திண்கூறு மெனக்கேபடை யென்கொண்டுகொல் செருவே.

அட்டாங்கமூர்த்தியென்பது மகாதேவர் பெயர். அது பெயர்மாத் திரமேதான். அவை எட்டினும் வெறும் பாபாத்துமாவாய் நிற்பதொன்று ; மற்றை ஏழுகூறுமாவன பஞ்சமகாபூதங்களும் சந்திராதித்தருமென்பன ; இவ்வேழுகூற்றுப்படையும் என்னுடையனவென்றவாறு. செரு - யுத்தம். என்கொண்டென்றது தாம்பிடிக்கும் ஆயுதமும் தம்முடையனவல்லவென்ற வாறு. எனவே லோகத்துவத்துக்கெளெல்லாம் பஞ்சபூத சமவாயமென்ப துணர்க.

(வி - கு.) மூ. எண்கூறவனொருபேருரு : 141-ஆம் தாழிசையுரை முத லியவற்றைப் பார்க்க.

உரை. தம்முடையனவல்ல : ஆயுதங்கள் தாருகாவனத்து முனிவர் களாலனுப்பப்பெற்றன ; "பலவெண்பணி யவையுஞ்சிலர் விடுதந்தன பண்டே" (தக்க. 449) என்பது இங்கே அறியற்பாலது. லோகத்து வத் துக்களெல்லாம் பஞ்சபூத சமவாயம் ; "நிலந்தீ நீர்வளி விசும்போ டைந் தும், கலந்த மயக்க முலக மாதலின்" (தொல். மரபு. சூ. 89.) சமவாயம் - கூட்டம். (உ0அ)

453. வானேறுரு மெனதாயுத மவனாயுத மழுவாள்
யானேறுவ தயிராபத மவனேறுவ தெருதே.

எ - து ஆகாசத்தில் உருமேறான வச்சிராயுதம் எனது ஆயுதம். ஈசுவரனுக்கு ஆயுதம் மழு. அன்றி எனக்குவாகனம் ஐராபதமென்கிற யானை. ஈசுவரனுக்குவாகனம் வெறும் எருது எ - று.

எனவே, முன்னிற்பாட்டில் மகாபூதமஞ்சும் சந்திராதித்தரும் எனக்குப் படை ; தனக்குப்படையும் இல்லை ; தானும் வெறும் ஆன்மாவே யென்ன

நினைத்து இப்பாட்டில் அவன் மகாதேவருடைய திருக்கையில் மழுவும் ஏறும் வாகனமான எருதும் கண்டறியு மயக்கத்தால் நினைத்து மற்று மழுவான ஆயுதமும் இவையிற்றில் ஒன்றல்ல, ஓமமந்திரத்தாற் பிராமணர் விடுவித்தபகைப்படை யென்றுனென்றவாறு. மழுவை வாளென்றதன்று; ஆள்யான் - ஆளுகிறயானெனென்றவாறு. மழு வாளன்றென்று ஆட்சேபஞ் சொல்லலுமாம். எனவே மழு ஏந்தும் மழுவெனவுணர்க; அஃது இருப் புக்கட்டிபோலும் நெருப்புக்கட்டியென்றவாறு. எருதென்றது எருதை யன்று; தருமரூபமென்பது. தருமம் வெளுத்திருத்தலாலும் வஸ்துக்களில் வலிதாதலாலும் தருமத்தின்மேலல்லது ஈசுவரன் ஏறுனென்றுகொண டான்.

இதில் தேவேந்திரன் ஈசுவரனை இகழ்ந்தவாறுவது தருமவாகனன் யுத்தஞ்செய்யவல்லனல்ல னென்றவாறு.

(வி - கு.) உரை. எருது தருமரூபமென்பது, 'இது **தர்மரூபமாய்**...... இருத்தல்', '**தர்மரூப** ரிஷப வாகனம்' (**தக்க.** 634, 689, உரை), "ஊறி லாத் **தருமஞ்** சேவாய்" (**திருக்குற்.** தக்கன் வேள்விக். 93) என்பவற்றாலும் அறியப்படும். (உ0௯)

454. என்கண்ணினி லிவையாயிர மெதிராய்வரு மீசன்
தன்கண்ணினின் முக்கண்ணினி யார்கண்ணதுதாழ்வே.

இவையாயிரமென்றது விபரீதமின்றி அழகுடையனவென்றவாறு. முக்கண்ணென்றது விபரீதமுடையனவாய் ஒன்று குளிர்ந்தும் ஒன்றுசுட் டும் ஒன்றுயோகத்தைப்பற்றி அக்கினிச்சுவாலையாய் விலங்காதே மேனோக்கி யும் நிற்பன வென்றபடி.

எனவே தன்கண்களின் அழகுரைத்தவாறு. (உ௧0)

455. எம்மின்னுயி ரனையீர்படை யெல்லாமுடன் வரநீர்
[1]வம்மின்னென விடைநல்கின னிதுவாசவன் வகையே.

'எம்மின்னுயிரனையீர்' என்றது முதன்மைச்சொல். இனி யாகபல முண்ணத் தனியேவந்தீர்! நீங்கள்போய் நும்படைகளுடனே வருகவென்று விடைகொடுத்தான் தேவேந்திரன். இஃது இவன்கூற்று. மற்று இனி அப் படையுடன் அவர்கள் வந்தவாறு சொல்வான் தொடங்கினர்.

இனிப் படை யெழுச்சி.

(**வி - கு.**) மூ. வகை - வகுத்தல், சொல்லுதல். (**பி - ம்**) 1 'வம்மின் னென வரநல்கினன்' (உ௧௧)

## வருணன் வருகை

## வேறு

456. சிகரக்குலக்கிரிகள் சிகரத்தகர்க்குமெறி திரையாலொரோர்
[1]மகரக்களிக்களிறு மறுகக்கடற்கரசன் [2]வரவாரவே.

[இதுமுதல் 469 முடியத் தேவர்கள் தம்படைகளுடன் அணிவகுத்துவரு தல் கூறப்படும்.]

எ - து குவடுகளையுடைய குலபருவதங்களையுங்கூடச் சிதர்ந்துபொடி யாம்படி மோதவல்ல எறிதிரையொன்றால் ஒன்றுகக்களித்த சுருக் களிறு கள் ஒழுக்கறுதுவராநிற்க வருணராசன் வந்தான் எ - று.

ஒருதிரையால் ஓரோவோர் சுறுவென்றதனுல் நீளமுடைமையும், பருவ தங்களையும் தகர்க்குந்திரையுடனே வருகின்ற சுறுவென்றதனுல் வலியுடை மையும் பெறப்பட்டன. ஒருதிரைக்கொருசுறுவென்னும்படி வருதலைப் பிடித்து வாரவென்னுஞ் சொல்லிட்டது ; வார - ஒழுக.

சுறுவாகலிற் பின்வருவன முன்வந்தன பட்டன அறியா.

(வி - கு) உரை. களிறு - ஆண் சுறு ; "கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே" (பிங்கலந்தை, 2556), "கரியொடு சுறவு பன்றி களிறெனக் காட்ட லாமே" (சூடாமணி. 3 : 32.) (பி - ம்.) 1 'மகரக்களிற் றரசன்' 2 'வரலூ ரவே' (உகஉ)

## அக்கினியின் வரவு

457. கலகக்கனற்கொடிகள் ககனப்பரப்பிலெரி கதிரூடுபோய்
உலகக்கவிப்படைய வுருகக்கடைக்கனலு முடனேறவே.

கலகக்கனற்கொடிகளாவன தூமகேதுக்கள் ; அவை அட்டரூப தூம கேதுவென்பன ; எட்டுத்திக்கிலும் உற்பாதகாலங்களில் தோன்றக்கடவன அவை ; பின்னும் அக்கினிமூலமாய்த் தூமகேதுவாய் நரகாக்கினியாய் முத லுங்கடையுமின்றி நித்தமாயுமிருப்பன. அவை : "அவீசி கூர்மி அவ் வியக்தி......அராளகி மிசிரகேசி விசுவரூபி க்ஷாத்ரி இத்தியேவா அஷ்டம காச்சுவாலாக்கினி தூமகேது :"; இது மகாசாத்திரப் பிராகிருதமாகதம்.

இவை எட்டுநெருப்பும் புறப்பட்டு ஆகாசத்துச் சோதிமண்டலாக்கினி யுடன் ஊடுருவிப்போய் உலகத்தின்கவிப்பான பிரமாண்டப்புறத்துப் பரமா காசம் உருகும்படியாக யுகாந்தகாலத்தில் அக்கினியான ஊழித்தீயுடன்கூடி ஒக்கவந்து படையேறினவென்றவாறு.

கலகம் - நரகம் ; கேட்டுக்கும்பெயர். எரிகதிரென்றதை ஆதித்தனென் பாருமுளர் ; அதற்கு இஃது இடமல்ல. உலகக் கவிப்பென்னும் பெயர் சக்கரவர்த்திகள் தாம்படைத்த திரிசொல்லெனவுணர்க. பண்டு நம்பிகாளியார் கடற்குப்பெயர் மழுவென்றிட்டு எறிதலும் கூர்த்தலும் நிலைத்தலும் உடைய தென்றார் ; அதுபோலு மிதுவென்க.

(வி - கு.) மூ. உலகக்கவிப்பு : "அகிலலோகங் கவித்த வெளி" (குலோத். பிள்ளை.) அடைய - முற்றும்.

உரை. ஆகாசத்துச்சோதி மண்டலம் - துருவ சக்கரம். சக்கரவர்த்தி கள் - கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் ; 'இப்பாட்டுக் கவிச்சக்கரவர்த் திகள் வாக்கல்லவென்பாருமுளர்' என்பர்பின் ; தக்க. 536, உரை.

நம்பிகாளியார் : இவர் முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் இருந்த ஒரு புலவர் ; இவர் நெற்குன்றவாணமுதலியாரென்ற பிரபுவைப்பாடிப் பரிசுபெறச் சென்றபோது, அவர் புறத்தே சென்றிருந்தமையின், அவர் தாதி புலவருக் குரிய உபசாரங்களைச் செய்து சில பரிசளித்தாள். பின்வந்த நெற்குன்றவாண முதலியார் உவந்து இன்னும் பலவற்றை வழங்கினார். இது, "பன்னுந் தமிழ்க்கவன் மாமனைத் தாதி பரிசளிப்ப, முன்னம்பி காளிக்கு நெற்குன்ற வாண முதலியென்போன், பின்னுஞ் சிலபல பொன்னுங் கொடுத்துத்தன்

பேர்நிறுத்த, மன்னுந் தமிழ்முறைந்தா னவன் றொண்டை மண்டலமே" (83) என்னும் **தொண்டைமண்டலசதகச்** செய்யுளால் அறியப்படுகிறது; "கற்குங் கவிவல்லை யாதவர் கோனம்பி காளிக்கியாம், விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும், பொற்குன்ற மும்புகழ்க் கங்கா நதியும் பொதியமும்போ, னெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே" என்னும் அதன் **மேற்கோட் செய்யுளால்,** நம்பிகாளியார் வல்லையென்னும் ஊரினரென்பதும், யாதவ குலத்தினரென்பதும், நெற்குன்றவாண முதலியாரென்பவரிடம் மிக்க பரிசுபெற்றவரென்பதும் தெரிய வருகின்றன.

ஒட்டக்கூத்தர் ஆக்கிய சொல்லிற்கு நம்பிகாளியாருடைய ஆக்கச் சொல்லை மேற்கோள் காட்டினமையின் இவ்விருவரும் இணைத்துக்கூறப் படும் பெரும்புலவர்களென்பது விளங்கும்; "கம்பனென்றுங் கும்பனென் றும்" என்ற **தனிப்பாடலில்,** "**காளியொட்டக் கூத்தன்**" என்று இவ்விருவருடைய பெயர்களும் சேர்த்துச்சொல்லப்பட்டிருத்தல் இதனை வலியுறுத்தும்.

நம்பி காளியார் கடலுக்குப் பெயர் மழுவென்றிட்டது இன்னநூலின்கண் உள்ளதென்று இப்பொழுது தெரியவில்லை. (உகங)

## வாயுதேவன் வரவு

458. பலவெற்பெடுத்தடவி பறியப்
பறித்துநதி பலவாரிநீர்
விலகிப்புடைப்பவிட விவைகைப்படுத்
[1]தனிலன் விளையாடவே.

பறியப் பறித்தல் - வேரோடும் பறித்தல். விலகுதல் - எறிதல். புடைப்ப வென்றதை நீர்தான் தன் விசையாற் புடைப்பவெனக்கொள்க. விடவென்றது விட்டென்னும் எச்சவீறு திரிந்ததென்பாருமுளர்; **விடவி வை யெனப்** பிளந்து, விடவி - விருட்சம், வை - வைக்கோல்; இவையெல்லாம் தனது கைப்படுத்து வாதராசன் விளையாடி வரவென்றுகொள்க. அனிலம்-காற்று; அதனையுடையவன் அனிலன்; வினைக்குறிப்புச் சொல்லு.

(**வி - கு.**) விலகுதலென்பதற்கு எறிதலென்று இங்கே பொருளெழுதியவாறே, "விலகிற் பிழையார் சூலத்தே", "மாயனூர் விலக" (**தக்க.** 224, 646) என்ற இடங்களிலும் பொருள்செய்திருக்கின்றனர். விடவி - விடபி யென்னும் வடசொற் சிதைவு; விடபம் - மரக்கிளை. பிளந்து - பிரித்து.

(**பி - ம்**) * 1 'தனலன்' (உகச)

## துவாதசாதித்தர் வருகை

459. தொழின்மிக்கசெக்கரெரி சுடரிட்
டெரித்துலகு சுடுவார்கள்போல்
எழின்மிக்கிரட்டியறு வருமொக்க
[1]வர்க்கர்தம ரதமேறவே.

தொழின்மிகுகை - சாதிலிங்கம் ஊட்டினை சிவப்புப்போல்கை. செக்கர் - சிவப்பு. எரிசுடர் - நெருப்பு; வன்னத்தாலும் ஒப்பர். உலகு

சுடுவார்கள்போலென்றது உகாந்தகாலத்துத் தங்களையேபோலவென்றவாறு. எழில் - அழகு. இதில் மிருகையாவது போர்க்கோலங் கொள்கை. இது வேதத்தில் ஆதித்தன்நிற்கும்படி சொல்லும் பிரகாரமென அறிக. இரட்டியறுவர் - பன்னிருவர். ஒக்கவென்றது ஒருவர்க்கொருவர் உற்சாகித்தாரென்றவாறு. அரக்கர் - ஆதித்யர். தமரதமென்றது, "தமரத்னவாடை" என்றாற் போன்றது; தமதென்னும்பாடம் சொல்லுவார் அறியார்.

(வி - கு.) மூ. தம : அகரம் ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு; இது "போகாதம" - (குறள். 376), "ஈசன சாந்து மெருக்கு மணிந்து" (திருச்சிற். 74) என்பவற்றிற்போல நின்றது. (பி - ம்) *1 'வர்க்கரதமிசையேறவே' (உகரு)

## சந்திரன் வருகை

460. குமுதப்பரப்புமிதழ் [1]குவியப்
பனிப்பதொரு குளிர்கூருமால்
அமுதக்கதிர்க்கடவுள் ரவிகட்
கிரட்டிதனி யறைகூறவே.

குமுதவிதழ் குவிகைக்குக் காரணம் சீதமிகுதி. அமுதக்கதிர்க்கடவுள் - சந்திரன்; அமிர்தகிரணனென்பது அவன்பெயர். தனியென்னுஞ்சொல் லிற்குப் பன்னிருவரையும் என் சீதத்தாலே வெல்வேனென்பது கருத்து.

(வி - கு.) மூ. குமுதப்பரப்பும் : உம்மை உயர்வுசிறப்பு. அறைகூறல் - பொர அழைத்தல். (பி - ம்) 1 'குனியக் குளிப்பதொரு குளிர்கூருமா' (உகசு)

## ஏகாதசருத்திரர் வருகை

461. எரிகக்குமுக்கணின ரிடியொக்கு
முக்குடுமி யெறிவேலினோர்
செருவிற்[1]குருத்தெதிர்வர் சிலமுத்
தெருத்தர் பதினொருதேவரே.

எரிகக்கு முக்கணினரென்றது நிக்கிரகமல்லாது அனுக்கிரகிக்கமாட்டாத கண்ணினரென்றவாறு. முக்குடுமியெறிவேல் - சூலப்படை. முத்தெருத்த ரென்றதனால் மகாதேவர் வாகனம் இளமைநீங்காததென வுணர்க.

எனவே பதினொருவரும் ஈசுவரனைச் சாரக் காட்டும் வேடத்தரென உணர்க.

(வி - கு.) மூ. குடுமி - தலை. செருவிற்கு உருத்து எதிர்வர். சில - சின்மையை யுடைய; சின்மை - சிறுமை. முத்தெருத்தர் - முதுமையை யுடைய எருதுகளையுடையவர்; "முத்தெருத் தெற்றியே", "முத்தெருத்துப் பேய்." (தக்க. 580, 789.)

**உரை.** நிக்கிரகம் - அழித்தல். மகாதேவர் வாகனம் இளமைநீங்காத தென்பது, "மழலைவெள்ளேறணியடிகள்", "பைங்கணதொரு பெருமழலை வெள்ளேற்றினர்", "மழலையேற்று மணாளன்" (தே.), "வெண்ணூர்மழ விடையை மேல்கொண்டு" (ஆதியுலா, 34), "இணையாதுமின்றிச், சுமக்

கின்ற பிள்ளைவெள் ளேறு" (காரைக். திருவிரட்டை 19), "மழவிடைமேல் விண்ணவர்க டொழநின்றான்", "மழவிடை யுடையான்", "பழையமழ விடையேறி", "மழவிடை யுகைத்துச் சென்றார்", "மழவிடைமேல்", "மழவிடையார்", "வெற்றி மழவிடை வீரட்டர்" (பெரிய. மனுநீதி. 45, எறிபத்த. 1, மானக்கஞ்சாற. 31, அரிவாட்டாய. 21, ஆனாய. 40, திருநா. 48, 135), "மூவா வெருதும்" (தனிப். 'மேற்பார்க்க') என்பவற்றாலும் அறியப்படும். (பி - ம்) 1 'கதிர்த்தெழுவர்' (உகள)

## குபேரன் வருகை

462. மறவைத்தனித் திகிரி வளையொத்
திரட்டைநிதி [1]வரவாளிலே
பறவைக்கழுத்தில்வரு மரியொத்தி
யக்கர்குல பதிபோதவே.

மறம் - வெற்றி. வை - கூர்மை. தனித்திகிரி - திருச்சக்கரம். வளை - சங்கு. இவ்விரண்டிற்கும் உவமை பத்மநிதியும் சங்கநிதியும். ஆளென்றது நரனென்னும்பெயருடைய யக்ஷனை. ஏறிப்போதுவான் வைசிரவணன். நரனுக்கொப்புக் கருடாழ்வான்; வைசிரவணனுக்கொப்பு ஸ்ரீ விஷ்ணுக்கள்.

(வி - கு) உரை. நரன்என்னும்யக்ஷன்: "இருநிதிக்கிழவனியக்கர்வேந்தன், வடதிசைத்தலைவ னரவாகனனே" (பிங்கலந்தை, 195.) வைசிரவணன் - விச்சிரவமுனிவருடைய மகன் குபேரன்; (பி - ம்) 1 'வரவாளிலே பறவைக்குலத்தில்வரு' (உகஅ)

## யமன் வருகை

463. அரிகட்குவைத்தவெழு நரகக்குலப்
பகுதி யணியேறினே
டெரிகட்பணைத்தபட ரெருமைப்
பகட்டின்மிசை யமனேறவே.

அரிகளாவார் ஆவடதரென்பார் சிலர்; அதற்குக்காரணம் அரிசூலத்தினரென்பது. இன்னம் அரிகள் புத்தியாகர்ஷணப் பொருளை அரிப்பரென்பார் சிலர். இனி அரிகளாவார் விஷ்ணுக்களென்பாருமுளர்; கள்ளென்பது பன்மை அடைசொல். எழுநரகப்பகுதி - நரகபாலராய் நரகிற் புக்காரை வியசனப்படுத்துவார் தொகுதி. இவரில் எழுபதிற்றேழு நூற்றுத் தொண்ணூறு வெள்ளத்தார் பிரதானர். இவருள் ஒருத்தர்க்கு ஒரு வெள்ளம் சேனையுண்டு. இதனை ஆருணகாண்டமானவேதத்திற் கண்டு கொள்க. இவர்களுடன் கூடவந்தான் யமராசன். எரிகண் - எரியுங்கண். படர் - தறுகண்மை.

(வி - கு.) உரை. ஆருணகாண்டம்: வேதத்திற் சூரியனுடைய தோத்திரமாகவுள்ள ஒரு பகுதி. (உகக)

## மேகங்கள் படையாக வந்தமை

464. முடியிட்டு [1]முட்டவரு முதுகற்கு
வட்டுமலை முதல்நாறும்வீழ்
இடியிட்டுவெட்டுவன வெரியிட்டு
ருக்குவன வினமேகமே.

எ - து பூமியிலேநின்று சென்று தம்முடைய சிகரங்களான பலதலைக ளாலே தங்களை முட்டுதற்குவருவனபோலும் மலைகளைக் கீழ் அடி ஊசிவே ரளவும் விழப்பட்ட இடியுருமேற்றினாலே வெட்டவல்லனவாய் அங்குப் பிறந்த அக்கினியினாலே உருக்கவல்லவுமாயிருக்கும் மேகங்கள் இனமின மாகப்புறப்பட்டுப் படையெழுந்தன எ - று.

வருமென்றது வாராமையின வரக்கூறுதலெனவுணர்க. (தொல். எச்ச. சூ. 26.)

கிடாய்போல முட்டவருமலையைக் கிடாயை வெட்டுவதுபோல வெட்டிக்கொன்று பட்டபின்பு கிடாயைச் சுடுவதுபோல உருக்குவனவென வுணர்க.

(வி - கு.) உரை. ஊசிவேர் - மிகச்சிறியவேர். (பி - ம்) 1 'முட்டி வரு' (உஉ0)

## மலைகள் அணிவகுத்து வந்தமை

465. கரியைத்தொகுத்துழுவை கஞலப்
[1]பெருக்கியுயிர் கவர்யாளியோ
டரியைப்பரப்பியதி ரருவிக்
குலக்கிரிக ளணிகூரவே.

எ - து தம்பக்கலுள்ளயானைகளைத் திரட்டிப் புலிகளைநெருங்கப்பெருக் கிப் பிராணிகளைக் கொள்ளைகொள்ளவல்ல யாளிகளுடன் ராசசிங்கங்களை யும் பரப்பி அருவியாலே முழக்கவல்ல பருவதகுலங்கள் அணிவகுத்து யுத் தத்துக்குச் சிறப்படைய எ - று.

பெருக்கியென்றது நெல்லைப் பெருக்கியென்றாற் போலத் திரட்டியென வுணர்க.

(வி - கு.) மலைகளும் போர்செய்தமை 484-ஆம் தாழிசையால் விளங் கும். (பி - ம்.) 1 'பரப்பியெ திர்கவர் யாளியோடெரியைப்' (உஉக)

## வேறு

466. தொக்கமேக மாகவெளி சுற்றுமோடி மூடிவன
துர்க்கம்யாவும் வேவவெரி துற்றுவேறு [1]மேறுகொடு
மிக்ககோடு கோடிபல வெற்பநேக பாகைபட
வெட்டிவாரி [2]வாரிவர விட்டுவீசி மேல்விழவே.

எ - து முன்னம் என்றற்சொல்லப்பட்ட மேகமெல்லாம் திரண்டன ; திரண்டு ஆகாசவெளியைச் சுற்றுப்போய்மூடி வனதுர்க்கமுதலாகக்

கொண்டு நிரைத்து உலகிற்கோடுகளெல்லாம் வேவ நெருப்பைச்செலுத்தி முற்பட இடித்துப் பின்னை வேறுபட்ட உருமேற்றுக்களாலே மிக்க கவடுகளையுடைய கோடிக்கணக்கான பலமலைகளை வென்று அநேகம்பிளவுபட வெட்டிச் சமுத்திரசலத்தை வாரிவிட்டு மேலேவீசி மேல்விழ எ - று.

எனவே வனதுர்க்கம் கிரிதுர்க்கம் சலதுர்க்கமென்னப்பட்ட மூன்று அரணங்களையும் மேகங்களே அழித்தனவென்றவாறு.

அநேகம் பாகை யென்றன இரண்டும் ஆரியச்சொல்; ஒன்றல்லவை பலவென்பது தமிழ்நடையெனவுணர்க.

(வி - கு.) மூ. வனதுர்க்கம் - காட்டரண். பாகை : பாகம் என்ற வடசொல்லின் சிதைவு; "முகபாகை" (தக்க. 3.)

**உரை.** முன்னம் என்றது 464 - ஆம் தாழிசையை. இங்கே கூறப்பட்ட மூன்றரணங்களும், "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடையதரண்" (குறள். 742) என்பதிலும் வந்துள்ளன. ஒன்றல்லவை பலவென்பது தமிழ்நடை : "ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூ, லிரண்டல் லவைபல வென்றிசி னோரே" (யா. கா. மேற்.) (பி - ம்.) 1 'வேறு கொடு' 2 'வாரி விட' (உஉஉ)

## துவாதசாதித்தர் படையெழுச்சி

467. பைத்தசோதி யாறிருப திற்றுநூறு காயவிரை
பச்சைவாசி நாலிருப திற்றுமேலு நாலுறழ
அத்தசால மீரருகு [1]மத்ரசாலம் வீசிவர
வர்க்கத்வாத சாதிபரி ரட்டியாறு தேர்விடவே.

எ - து சோபித்தசோதி பன்னீராயிரமும் உஷ்ணஞ்செய்யக் கடுப்பினையுடைய பச்சைவன்னக் குதிரைகள் எண்பத்துநாலும் பொருதுவரக் கைகளின் விசாலம் இரண்டருகும் ஆயுதப்பரப்புக்களை வீசிவர ஆதித்தர் பன்னிருவரும் பன்னிரண்டுதேர்களை மேல்கொண்டு வரவிட எ - று.

பைத்தசோதியென்றதனைப் பசுமைநிறமெனக் கொள்வாருமுளர்; அது பொருளன்று; ஆதித்தர் சிவந்தநிறத்தர்; "பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்ப" (பொருந. 69) என்பது கொள்ளாராயின், "மலைதோன்றப் பைத்தக மெரிப்பவும்" என்பது கொள்வாராக; இது குண்டலகேசி. அத்தம் - கைகள். அத்தசாலமென்றதில் சாலமென்றது விசாலமென்பதனைத் தலைக்குறைத்தவாறு. அத்திரசாலம் - அத்திரக் கூட்டம்.

(வி - கு.) மூ. சோதி ஆறிரு பதிற்றுநூறு : "சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண் டாயிரஞ் சுடரொடுஞ் சூழ்வருவரே" (தக்க. 78.) அத்தம் - ஹஸ்தம் என்ற வடசொல்லின் திரிபு. வர்க்கத்வாதசாதிபர் : "வர்க்கலோககோடி" (தக்க. 469.)

**உரை.** கடுப்பு - வேகம். (பி - ம்.) 1 'வச்ரசாலம் வீசிவரும் வர்க்க நான்மை மூவரு மிரட்டி' (உஉக)

## அட்டலோக பாலகர் படையெழுச்சி

468. சுத்தஞான போதர்கழல் சுட்டியானை தோறுமிடு
தொட்டிதோறு மேறியிடை தொட்டகார்மு காசனியர்
[1]அத்தசாம கோடியென நிற்பராவ நாழிகையி
லப்புமாரி தூவிவரு மட்டலோக பாலகரே.

சுத்தஞான போதர் - மகாதேவர். சுட்டுதல் - நினைத்தல். இந்நினைவுக்குச் செயப்படுபொருள் கழல்; கழலென்றது வீரக்கழலை.

ஏ - து மகாதேவருடைய வீரக்கழலைநினைத்துத் திக்கயமான எட்டானைகளின் முதுகிலிட்ட இலகடவிசியிலேறி இடையேபிடித்த வில்லென்னும் இடியுருமேற்றொலியையுடையராய்ப் பொருளுடைய சாமவேதத்துத் தனுர்வேத கோடியைப்போல நிற்பர். பிறகு கட்டினஆவ நாழிகையிலுண்டான சரவருஷத்தைத்தூவிப் பொருதற்கு வரும் எட்டுலோகபாலகர்களும் எ - று.

எனவே லோகரட்சையும் தனுர்வேத வில்வலியும் அவர்கள் பெற்றது, அட்ட மூர்த்தத்தை நினைத்தெனவுணர்க. தொட்டியென்றது தொட்டி மாளிகை போல்வதென்றவாறு.

(வி - கு.) மூ. கார்முகாசனியர் - கார்முக அசனியர்; கார்முகம் - வில். ஆவநாழிகை - அம்பறுத்தூணி.

உரை. பிறகு - முதுகில். (பி - ம்) 1 'அத்தகோடி' (உஉச)

## வருணராசன் மச்சராசனோடு வருதல்

469. முற்றுமேரு வாதிகளை முக்கவாரி யூழியெரி
முத்தனீல மோலியென [1]முட்டவோத மீதெரிய
மற்றையால காலவெரி வர்க்கலோக கோடிசுடு
மத்தசாக ரேசனொடு மச்சராசன் மேல்வரவே.

மேருபருவத முதலான எல்லாமலைகளையும் முழுக்கும்படியாக முற்பட்ட உகாந்தப்பிரளயாக்கினி ஈசுவரனுடைய திருச்செஞ்சடையென அழகுபெற. எனவே ஊழித்தீயில் ஆடியருளுமிடத்துப் புகைசுற்றிச் செஞ்சடை கருஞ்சடையாயது உவமை; புகை கடல்; சடை நெருப்பு. இப்படியே தீ கடலோதநீர்க்கறுப்பு முட்டும்படி மேலெரிய. மற்றை ஆலக்கால வெரியாவது அக்கடலிற்றோன்றிய ஆலத்தைப்போன்ற வடவாமுகாக்கினி. மற்றையென்னும் சொல்லால் முன்னை ஆலமும் வடவையும் கடலோடும் சம்பந்த முடையனவெனவுணர்க; ஆலக்காலென்பதில் ககரம் தொக்கது. வர்க்கலோக கோடி சுடுதலாவது லோககோடிவர்க்கங்களைச் சுடுகை. அன்றியே வர்க்கம் பசாசுமாம்; தீயென்பாருமுளர். மத்தசாகரேசன் - உன்மத்தனாகிய கடலரசன்; அவன் வருணராசன். அவனுடனே அக்கடலில் மச்சியராசனும் மகாதேவருடைய பேய்ப்படைமேலே யுத்தோன்முகனாகி வந்தான்.

(வி - கு.) மூ. ஊழியெரி முத்தனீல மோலியென : "எரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை" (அகநா. கடவுள். 10), "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை" (புறநா. 56 : 1.) உரை. ஆலமும்.........கடலோடும் சம்பந்தமுடையனவெனவுணர்க : 284 - ஆம் தாழிசையில், 'அமிர்து கடைந்தது லவணசமுத்திரத்தென வுணர்க' என்பதற்குக் காட்டிய மேற்கோள்களுள் இவ்விடத்திற்கு ஏற்றன கொள்க.

(பி - ம்) 1 'முட்டமோத' (உஉரு)

## இந்திரன் யானையை ஊர்ந்து வருதல்

470. தக்கன்யாக சாலைவினை தப்பமாடு சாமரைகள்
 தைப்பவீசி மீதுவிரி சத்ரசாயை [1]தோயவுடன்
மக்கள்யானை சூழவர மற்றைநாலு கோடுடைய
 மத்தயானை யேறிவரும் வச்ரபாணி வாசவனே.

யாகசாலையினது தொழில் தப்புதலால் தேவேந்திரன் ஈசுவரன்மேற் படையெடுத்து வந்தானென்பது இதன் கருத்து. தைப்ப - தைக்கும்படி; தைப்ப வீசி வரவென இயைக்க. சத்திரம் - குடை. மக்களாவார் வயாந்தகனும் சயந்தகனும் வசந்தனும் விசித்தனுமுதலாயினோர் சசிதேவிமக்கள்; இனி உருவசிமுதலாயினார்மக்கள் ருசியும் ருசிதனும் உத்தமாங்கதனும் ருதியும் பூமியுமுதலாயினார் நாற்பத்தொன்பதின்மர் உளர். அந்தப்புராணம் **விஷ்ணுபுராணத்திற்** கண்டுகொள்க. மற்றைநாலுகோடென்றது பிறயானைகளுக்கு இரண்டுகொம்பென்பதை நினைந்து; "மற்றை யென்னுங் கிளவி தானே, சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே" (**தொல்.** இடை. சூ. 16) என்பதனால் உலகத்தில் யானைகளையன்றித் திக்கயங்கள் எட்டும் இதன்திறமென உணர்க. வச்சிரபாணி வாசவனென்றது இந்திரன் வச்சிரபாணியாய் வந்தானென்றவாறு; யுத்தத்துக்குரியபெயர் இது.

(பி - ம்) 1 'தோறுமுடன்' (உஉகூ)

### வேறு

## திருமால் தம்சேனையை ஏவுதல்

471. அங்கண்வாசவற் கிளையவாசவற்
 காகவாகவஞ் செய்கபோயெனத்
தங்கள்சேனையின் [1]பின்புநின்றதன்
 றானையேவினன் சக்ரபாணியே.

எ - து முன்பு புறப்பட்ட தேவேந்திரனுடைய தம்பியான உபேந்திரனுக்குப் படைத்துணையாய் யுத்தஞ்செய்கவென்னத் தங்கள் தந்திரத்துக்குப் பின்னேநின்ற கடைக்கூழைத்தந்திரத்தை ஏவியருளினன் மகாவிஷ்ணு எ - று.

தங்களென்றது ஸ்ரீ பலதேவரையும் சேனாபதியாழ்வாரையுமெனக் கொள்க.

(வி - கு.) உரை. சேனாபதி யாழ்வார் - விஷ்வக்சேனர்.

(பி - ம்.) 1 'பின்புநின்றுதன்' (உஉஎ)

## பிரமன் போருக் கெழுதல்

472. சக்ரபாணியுட னேசகத்ரயந்
 தருதசப்பிதா மகர்கடம்மொடும்
பக்கமாமுனி கணத்தர்தம்மொடுங்
 கூடிநின்றனன் பத்மயோனியே.

ஏ - து விஷ்ணுக்களுடனேகூடப் பத்துப்பிரமாக்களான தன்மக்களும் தன்பக்ஷமான ரிஷிகளும்கூட நின்றான் பிரமா எ - று.

பத்மயோனியென்றது பிறந்தவழிக் கூறல்; அதுதான் இருபெய ரொட்டு ஆகுபெயர். (உஉஅ)

## வீரபத்திரதேவருடைய படைகளின் செயல்

473. உம்பரும்பெரும் படையுமிப்படி
யுடன்றுநிற்கமற் றவரையூடறுத்
தெம்பெரும்படைத் தலைவரானகும்
போதராதிக ளிரைத்துமண்டியே.

உம்பராவார் இந்திராதி பிரமாதி தேவர்களும் விஷ்ணுக்களும். பெரும் படையென்றது அரிப்பிரமாதித் தம்பபரியந்தம் பிரபஞ்ச வத்துக்களெல்லா வற்றையு மெனக்கொள்க. உடன்று - கலகித்து. எம்பெரும் படையென் றது இது சொல்லுகின்றபசாசின் வார்த்தையெனவுணர்க. கும்போதராதி களாவார் : கும்போதரர், குண்டோதரர், மகோதரர், விசித்திரகர்ணர், வியாக்கிரமுகர், சிங்கமுகர், கசகர்ணர், பட்சபாட்சர் முதலாயினோர் ; இவர் கள் பூதகணநாதராகிய யூதபதிகளெனவறிக. இரைப்பென்றது போர்செய் யோசையை.

(வி - ரூ.) இதுமுதல் 510-ஆம் தாழிசைமுடிய வீரபத்திரதேவருடைய படைகள் யுத்தஞ்செய்து தேவர்களை அழித்தல் சொல்லப்படும்.

மூ. மண்டி - மிக்குச்சென்று : "மண்டமர் கடந்தநின் வென்று டக லத்து" (முருகு. 272.) (உஉக)

## வேறு

474. அருக்ககனப் பரப்படையப் [1]புயத்துறவிட் டடைத்தே
உருக்குமெரிப் பிழப்பொளிபுக் குழிப்புகவிட் டுளைத்தே.

மகாதேவர்க்குப்பின்பு லோகத்தில் உயர்ந்தபொருளாயுள்ளது ஆகாச மொன்றுமே. அஃது அருபியாகும்; இஃது எல்லாச்சமயிகளுக்கும் ஒக் கும் ; அருபமென்கை புத்தர்க்கும் ஒக்கும் ; ஆதலால் ஆகாசத்தை அருவென் றூர் ; எனவே அல்லாதனவெல்லாம் உருவாயின. இந்த ஆகாசம் தேவர் கட்கு வாசத்தானமாகி மச்சியத்துக்குச் சலம்போலவும் பட்சிகட்கு ஆகாசம் போலவும் எளியோர்க்கு ஈசுவரன்போலவும் அவர்கட்கு நின்றுபலஞ்செயலான இடங்கொடுப்பதென நினைத்து அதற்கு மலைதேடி மலைகிடையாதாகப் பூத கணநாதர் தங்கள் திருப்புயங்களையிட்டு அதனை அடைத்துப் பின்னை ரூப முடைய வத்துக்களெல்லாவற்றையும் ஒக்க உருக்கவற்றன அக்கினிச்சுவா லையைத்தொடர்ந்து சென்று அவை அஞ்சியோடிப்போகத் திகந்தங்களிற் புகும்படி கதறிக் கர்ச்சித்தார்.

இது சிங்கநாதம்பண்ணுகை. இவ்வோசைக்காற்றில் அக்கினி அவியும். திருத்தோளால் அடைப்பர் பரமாகாசத்தையுமெனவுணர்க.

(வி - ரூ.) மூ. அருக்ககனப்பரப்பு-அருவமாகிய ஆகாயப்பரப்பு; 'ஆகா யம் தனக்கு வடிவின்றென்னுந் தன்மை' (மதுரை. 678. ந, உரை.) ககனப் பரப்படையப் புயத்துற விட்டடைத்தே : "வானமும்......தூருமே யவன்

பெரிய தோள்களால்" (**கம்ப.** மராமரப். 80), "அடல்செய்திண்புய மெண் டிசா வெளிமுக மடைப்ப" (**திருக்குற்.** தக்கன் வேள்வியழிந்த. 11.) பிழப் பொளி - பிழம்பு ஒளி.

**உரை.** மச்சியத்துக்குச்சலம் போலவும்: "பெருநீ ரறச்சிறு மீன் றுவண் டாங்கு" (**திருவா.** நீத்தல். 26); "பங்கயப் பாசடைப் பாய்தடநீயப் படர்தடத்துச், செங்கய லன்றே கருங்கயற் கண்ணித் திருநுதலே" (**திருச் சிற்.** 203); "நீருள வெனினுள மீனும்", "வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற, மீனே யென்ன" (**கம்ப.** நகர்நீங்கு. 156, தைலமாட்டு. 64.) எளி யோர்க்கு ஈசுவரன் போலவும்: "அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்" (முருகு. 271), "எளியா வலியா மிறைவா" (**பெரிய.** எறிபத்த. 16), "எளியரை வலியர் வாட்டின் வலியரை யிருநீர் வைப்பி, னளியறத் தெய்வம் வாட்டு மெனுமுறை" (**காஞ்சிப்.** கடவுள்.); 'ஏழைபங்காளன்' என்ற பழமொழியும் இங்கே கருதத்தக்கது. பலம் செயலான இடம்: "சிறைநலமுஞ் சீரு மிலரெனினு மாந்தர், உறைநிலத்தோ டொட்ட லரிது" (**குறள்.** 499.) சிங்கநாதம் - சிங்கம்போன்ற கர்ச்சனை; 510-ஆம்தாழிசையிற் சிங்கநாதம் செய்தல் கூறப்படும்; "சிங்கமென்னு மாறெழுந்து சிங்கநாத முஞ்செய்தான்" (**வி. பா.** வாரணவத. 61); சிங்கநாதமென்னும் ஊதுகருவி வேறு. (பி - ம்) 1 *'புயத்வயம்விட்' (உகூ0)

475. தனித்துரகத் தடத்தெரியைத் தழைத்தெரியச் சமைத்தே
பனிப்பரவைப் பரப்பினிடைக் [1]கடைக்கனலைப் பழித்தே.

**எ - து** தனியே ஒன்றாகிச் சமானமின்றி இருக்கும் குதிரைத் தடத்து நெருப்பான வடவாமுகாக்கினியை எரிந்து அவிந்து எரிந்து திரிவ தனை எரிந்தேபோம்படிசமைத்துப் பின்னை ஏழாகி எழுகடலிலும் இடைக் கிடந்து ஓரம்பண்ணும் உகாந்தாக்கினிகளை உஷ்ணமில்லையெனப் பழித்து விட்டு எ - று.

எனவே முன்புசெய்த சிங்கநாதவாதமே சென்று இவையிற்றை அழித்த தெனவுணர்க.

வடவாமுகாக்கினியென்பது பெட்டைக்குதிரையின் முகம்போலும் ஓர் அக்கினி குண்டத்திலிருத்தலாற் பெற்றபெயர். வடவைத்தீயைத் தனியென் றது ஊழித்தீ ஏழாயினவற்றைக்கருதி; அக்கினிதேவனுக்கு நாக்கு ஏழென் பது வேதம்; "ஸப்தஜிஹ்வா" என்பது **சாமவேதம்.**

(**வி - கு.**) மூ. தடவு - ஓமகுண்டம்; "வடபான்முனிவன் றடவினுட் டோன்றி" (**புறநா.** 201 : 8.); இச்சொல்தட, தடாவெனவும் வழங்கும்; "தடவளர்முழங்குஞ்செந்தீ" (**சீவக.** 2373.) இதனால் வடவாமுகாக்கினியும் ஊழித்தீயும் வெவ்வேறென்று தெரிகின்றது. **உரை.** ஸப்தஜிஹ்வா: "உதவகன் றனஞ்சயன் வசுவெழுநா" (**திவாகரம்.**)

(**பி - ம்.**) 1 'தடக்கயலைப்' (உகூக)

## சுக்கிரபிரகஸ்பதிகளைப் பூதகணங்கள் அழித்தல்

476. செயிர்த்துதரத் தெரிச்சுரர்பொற் சிகைக்கதுவச் சிரித்தே
உயிர்ப்பிலிணைக் குருக்களையிட் டுருக்கிநகத் துரைத்தே.

**எ - து** கோபித்துத் தங்கள்வயிறுகளில் அக்கினி சென்று சுடர் விட்டு மேலைப்பிரமாண்டமுகட்டளவும் நின்ற தேவர்தலைகளைக் கதுவிச் சுடும்படி சிரித்தருளிப் பின்னை மூக்கிரண்டிலுண்டாகும் அக்கினிச்

சுவாசங்களாலே சுக்கிர பிரகஸ்பதிகளை ஒக்க உருக்கி வெள்ளியும் பொன்னும் ஒக்க உருக்கினால் எத்தனைமாற்றுப் போதுமென்று உரைத்தறிவாரைப்போலத் தங்களின் ஒருவிரலின் உகிரில் உரைத்துப்பார்த்து எ - று.

சிரிப்பு - அட்டகாசம். ஒருகிறென்றது இணைக்குருக்களென்றதனாற் பெற்றதெனவுணர்க. வெள்ளி அசுரகுரு. வியாழம் தேவகுரு; எனவே அசுரரும் அசுரேந்திரரும் ஒக்க யுத்தம் செய்தாரெனவுணர்க.

(வி - ரு.) உரை. வெள்ளியும் பொன்னும் என்பன முறையே சுக்கிரனுக்கும் பிரகஸ்பதிக்கும் பெயரென்றல் இங்கே அறியற்பாலது. எனவே அசுரரும்......ஒக்க யுத்தஞ்செய்தார்: 248-ஆம்தாழிசையில், வேள்வியில் அவிப்பாகம் உண்ணலாமென்று அசுரர்களும் வந்தார்கள் என்று கூறியிருப்பது காண்க. (௪௭௬)

## அசுரர்களை அழித்தல்

477. திறத்தவுணக் கணத்துருவச் செறித்துகிரைப் பறித்தே
புறத்தகிரிப் புகக்குருதிப் புதுப்புனல்கொப் புளித்தே.

எ - து பதின்மூன்றுதிறத்தினராய்க் கூட்டங் கூட்டமாக நின்ற அசுரருடைய உடம்புதோறும் திருக்கைகளின் உகிர்களைச்செறித்து அவ்வுகிர்களைவாங்கி நரம்புவிட்டு ரத்தம்வாங்கி வாய்க்கொண்டு அவர்களுடைய ரத்தம் அமுதமுண்ணுத உடம்பிலுதிரமாதலால் ரசமின்றியிருத்தலின் சக்கரவாளவெற்புக்கு அப்புறம்போக உதிரத்தைக் கொப்புளித்து உமிழ்ந்து எ - று.

உருவச்செறித்தென்றது அசுரர் உடம்பின் அருமையை நினைத்தென உணர்க. புறத்திகிரியென்றது மொழிமாற்று. அன்றியும் மலையும் மலையைச்சார்ந்த இடமும் குறிஞ்சியென்றதுபோலவும் கொள்க. அவ்வளவும் கொப்புளித்தலாற்பயன் பூதகணநாதருடைய தீர்க்காயுத்தன்மை; இது வைத்தியசாத்திரப்பொருள்.

(வி - ரு.) மூ. புறத்திகிரி : திகிரிப்புறம்.

உரை. மலையும் மலையைச்சார்ந்தஇடமும் குறிஞ்சி : " வரையே சுரமே புறவே பழனம், திரையே யவையவை சேர்தரு மிடனே, வெனவீரைவகைத் தனையிய னிலமே" (நம்பி. சூ. 9.) கொப்புளித்தலாற் பயன் : ஒருவன் உமிழ்நீர் அவன் மேலே வீழ்ந்தால் விரைவில் அவனுக்கு மரணமுண்டென்றும் அது தூரத்திற்சென்று வீழ்ந்தால் அவனுக்குத் தீர்க்காயு வுண்டென்றும் ஆயுர்வேதம் கூறும். இவை, "தப்பாது வாய்நீர்தான் றுக்கித் தன் மேல்விழினே, ஒப்பாகத் தனுமறையி னொழிந்திடுவன் மதியாறிற், செப்பாகத் தானிருக்கச் சேர்ந்தநிழ லலைந்திடினும், அப்பாகேள் சாவு நிச மறிந்துகற்பங் கொண்டிடே", "உண்மைகேள் வாய்நீரை யுமிழ்ந் திடவே நோயுள்ளோன், றண்மையாத் தூரம்போய்த் தாக்கு மெனிற் சாவில்லை" (குணவாகடத்திரட்டு, 48, 58) என்பவற்றால் அறியலாகும். (௪௭௭)

## கருடனையும் நாகங்களையும் அழித்தல்

478. கொதித்துவணக் கொழுப்பரிபொற்
கொடிக்குமுறக் குமைத்தே
கதித்துரகக் கழுத்தின்முடிக்
கவர்ப்படையக் கழித்தே.

எ - து கருடபகவானை, ஸ்ரீ விஷ்ணுவினுடைய உத்தமத் துவசமான பட்சிமாராசன் குரல்விடும்படி அவனைக்குமைத்துப் பின்னை அவனுக்கு உணவான நாகராசாக்களையும் சிறிதுகோபித்துக் கழுத்துக்களிற் பலதலைப் பரப்புக்களை அடைய வெட்டிக் கழித்து எ - று.

கொதிப்பு - மிக்ககோபம். கொழுப்பு - ஸ்ரீ ; ஆகுபெயர் ; ஸ்ரீ : அரிக்கு வாகனமும் துவசமுமாகவிருத்தல். குமுறுதல் - வாய்விடாது உள்ளேமுரலுதல். முடிக்கவர்ப்பு - பல பணத்தலைகள்.

(வி - ரு.) மூ. கொதித்து உவணம் கொழு பரி எனப்பிரிக்க. குமைத்தல் - வருத்துதல் : "கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்" (திருநா. தே.) (பி - ம்) 1 'குழைத்தே'. (உ௧௪)

## பூதகணங்களின் செயல்

479. [1]கலத்தமிர்தப் பரப்படையக் கவுட்புடையிற் கவிழ்த்தேழ்
பிலத்துருவப் பிளப்பிடியப் பிடித்துதிரப் பிதிர்த்தே.

அமிர்தகலசங்கள் நாகலோகத்திற் பண்டு கருடன் கொண்டுபோய் வைத்தன ; அவை ஆயிரங்கோடி அமிர்தகலசம் ; ஒரு பிலத்துவாரத்தில் வைத்தன ; கீழ்விழவிழ இரட்டியிரட்டியாக ஏழ்பிலத்துவாரத்திலும் வைக்கப்பட்டன. அவையெல்லாம் ஒருபூதநாதருடைய கொடிற்றின்புடைபுக்கனவென உணர்க. உதிரப்பிதிர்த்தலாவது நாகத்தவர் இருப்புச் சுவரவை ஏழும் ஒருதிரளையாகத் திரட்டிப்பின்னைப் பரமாணுக்களாகப் பிதிர்த்தல்.

(வி - ரு.) மூ. நாகலோகத்தில் அமுதமுண்டென்பதை, 362-ஆம்தாழிசையாலும் அதன் விசேடக்குறிப்பாலும் அறியலாகும்.

உரை. திரளை : "திரளை கையிலுண்பவரும்" (திருநா. தே.)

(பி - ம்.) 1 'கலித்தமிர்தப்' (உ௧௫)

## அரக்கர்களையும் வித்தியாதரர்களையும் அழித்தல்

480. அரக்கருரத் தரத்தமடுத் தழுக்கையெயிற் றரைத்தே
புரக்ககனப் பொருப்பர்களைப் பொடித்தெரிகட் பொரித்தே.

அரக்கர் - இராக்கதர். உரம் - நெஞ்சு. அரத்தம் - உதிரம். மடுத்தல் - குடித்தல். அழுக்கு - உடம்பு. எயிறு - பல். புரக்ககனப்பொருப்பராவார் வித்தியாதரர் ; புரமென்றது மலைமேல் அன்னவூர் இன்னவூரென்று நாமமிட்டிருப்பனவற்றை ; அவை சண்டிசிங்கபுரம் பௌத்தபுரம் முதலியன.

பொடித்தும் கண்நெருப்பிற் பொரித்தும் தின்றுரென்பது.

(வி - ரு.) மூ. அழுக்கு : "பொறியிலா வழுக்கை யோம்பி" (திருநா. தே.), "அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்" (திருவா. கீர்த்தி.) (உ௧௬)

481. [1]கனத்தகளக் கொளுத்திலறக் களிற்றணியைக் கடித்தே
இனத்தகுறைப் பிறக்கமெயிற் றெதிர்ப்பவயிற் றெடுத்தே.

கனம் - பாரம். களம் - கழுத்து. கொளுத்து - மூட்டுவாய்க்குரல் வளை.

எ - து குரல்வளை அறும்படியாகக் களிற்றணிகளைக்கடித்துப் பின்னை அந்தயானையினத்தின் உடற்பெருமையான மாங்கிசங்களை வாயிற்பல்லி னாலே வந்து எதிர்க்கும்படி நின்றெடுத்து எ - று.

எயிறென்பதைக் கடித்தற்கும் எதிர்த்தற்கும் ஒக்கக்கொள்க. இவை வித்தியாதர யானைகள். கனத்தகனக் கொளுத்தென்று பாடஞ்சொல்லு வாருமுளர் ; கனம் - மேகம்; கனக்கொளுத்து - மேகக் கொளுத்து ; அன்றி யேயும் கனத்தகளமென்று கொண்டு, கனம் - இரும்பு, களம் - கழுத்து ; இரும்பு போன்ற கழுத்தென்றலுமாம்.

இதன்பயன் யானைக்கழுத்தறக்கடித்தல் அருமையென்பது.

(பி - ம்) 1 'கனத்த கனகக்கொடிற்றிலற' (உ௬எ)

## சூரியனுடைய வெம்மையையும் சோதியையும் அழித்தல்

482. அழித்தமதிக் கதிர்க்குளிரிட் டருக்கருருப் பவித்தே
விழித்தவெயிற் [1]ப்ரபைக்கனலைப் பனிப்ரபையிட் டவித்தே.

எ - து உண்டு அழிவுண்ட சந்திரகிரண சீதங்களாலே ஆதித்தியரு டைய உஷ்ணத்தை அழித்துப் பின்னை ஆதித்தியர் பக்கலில் வெயிற்சோதி யைச் சந்திரனுடைய நிலாச்சோதியாலே அழித்து எ - று.

உருப்பு - உஷ்ணம். பனிப்பிரபை - நிலா.

(வி - கு.) மு. பனிப்ரபை : "பனிச்சுடர்." (தக்க. 485.)

(பி - ம்) 1 'பனிப்ரபையிற் பனிப்ரபையிட் டெரித்தே' (உ௬அ)

## வசுக்களையும் ஏகாதசருத்திரர்களையும் அழித்தல்

483. தகட்டுமுடிப் பசுக்கள்வசுக் களைத்தழுவிச் சமைத்தே
பகட்டிறுடித் துருத்திரரைத் திருக்கைமுடப் படுத்தே.

தகடு - மின்னும் பொன். பசுக்களென்றது ஓரிடத்திலும் வெற்றிக் கீர்த்தியில்லாரென்றும் ரிஷிகளாலே சாபப்படுவாரென்றும் கூறியவாறு. வசுக்கள் - அட்டவசுக்கள் ; அவர்களைத்தழுவிச் சமைத்தலாவது தழுவ லிலே சமைந்தது அவர்கள் பலமென்பது. பகட்டிறுடித்தென்றது சந்து களில் ஒடித்தென்றவாறு. பகடென்பதை எருதாக்கி, ஏகாதச ருத்திரர்க ளுடைய எருதுகளை ஒடித்து அவற்றின் கால்களென்ன அவர்கள்கைகளை யும் ஒடித்தென்பாருமுளர் ; இன்னென்பதை உவமையாக்குக. திருக்கை யென்றது ஆட்சேபம். அட்டவசுக்களாவார் : धरन्, ध्रुवन्, सोमन्, अग्नि, जलन्, प्रत्यूषन्, प्रभासन्, अनिलन् என்பார்.

(வி - கு.) மு. பசுக்கள் : "பழியஞ்சான் வாழும் பசுவும்" (திரிகடுகம், 79.) உரை. வசுக்கள் ரிஷிகளாலே சாபப்படுவர் என்பதை வி பா. குருகுலச் சருக்கம், 61 - ஆம் செய்யுள் முதலியவற்றாலுணர்க. (உ௬௯)

## மலைகளையும் நட்சத்திரங்களையும் அழித்தல்

484\. தடுத்தகுலப் பொருப்பைமுடித்
தடத்துடையத் தகர்த்தே
உடுத்தொடையற் றழைத்துநிலத்
[1] துழைப்பவுதைத் துகைத்தே.

தடுத்தகுலப்பொருப்பென்றது எதிரேவந்து போகாதேயென்று தடுத்துப் பூசல்செய்த மலைகளை. முடித்தடம் - மலைக்குவட்டிடம். உடுத்தொடை - நட்சத்திரலோகம்; இதனை நட்சத்திரமாலையென்பாருமுளர். அழைத்தல் - கதறுதல். உழைத்தல் - வியசனப்படுதல். உதைத்தல் - ஓட்டுதல்.

(வி - ரூ.) மலைகளும் யுத்தம் செய்ய அணிவகுத்து வந்தனவென்பது 465-ஆம்தாழிசையாலும் அறியப்படும்.

மூ. உடுத்தொடை : "இரண்டுடுத் தொடைகொல்" (தக்க. 420.)

(பி - ம்) 1 'துதிப்பவுதிர்த் துதித்தே' (உ௪0)

## சூரியனுடைய குதிரைகளை வருத்துதல்

485\. குனித்த[1]களந் தனக்குதிரைக் குளப்படியைக் குறைத்தே
பனிப்பகையைப் பனிச்சுடர்விட் டெறிப்பனபற் பறித்தே.

குனித்தல் - வளைத்தல்; இது முகத்தின்தொழில்; கால்கொண்ட தொழிலுமாம். களம் - கழுத்து. தளம் ஏழு; இது பஞ்சாருடபத்திரதளம்; இது மாகதம். குளப்படி - குளம்பினையுடைய அடி. பனி - சீதம். பனிப்பகை - சீதசத்துரு; ஆதித்தியன். பனிச்சுடர் - சந்திரன்.

ஆதித்தியனை நிலாப்போலச் சோதிவிடும்பற்களைப் பறித்தாரென்றவாறு; "பகல்குன்றப் பல்லுகுத்தோன்" (4); இது திருக்கோவை.

(வி - ரூ.) மூ. பனிப்பகையை......பற்பறித்தே : "அருக்கர்தம்........ மற்றை முப்பதிற் றிரண்டு பல்லும் வீழ்த்தினன்" (காஞ்சிப். தக்கீச. 37.)

(பி - ம்) 1 'கனக்குலக்குதிரைக்' (உ௪க)

## திக்குயானைகளையும் திக்குப் பாலகர்களையும் பிரமனையும் வருத்துதல்

486\. சுமப்பனதிக் கயத்துடனத் திசைச்சுரரைத் துணித்தே
தமப்பனடிக் கழுத்தடையத் தனிப்பகழித் தறித்தே.

சுமப்பனவென்றதில் லோகங்களை யென்னும் தந்திரவுத்தி கண்டுகொள்க. திசைச்சுரரென்றது திக்குத்தேவரை. அத்தேவர்களைச் சுமப்பனவல்ல திசைக்கயம். உடனென்றதனால் அத்தேவர்கள் ஏறிவந்த யானைகளையும் அவ்வியானைகளுடனே கூடத் தேவர்களையும் ஒக்கத் துணித்தாரெனக்கொள்க. தமப்பனுவான் பிரமன்; தட்சனைச் சொல்லுவாருமுளர்; அது பொருளன்று; யானைக்கும் தேவர்க்கும் தமப்பன் பிரமன். அடிக்கழுத்தெனவே நான்குதலைக்கு அப்புறம் அறுக்கும்படியைக்கூறியது.

தமப்பன் - அப்பன். தனிப்பகழி - ஓரம்பு. பகழிதறித்தென்றது மூன்றும் வேற்றுமைத் தொகை ; வேற்றுமை மருங்கிற் போற்றல்வேண்டும் (தொல். தொகை. சூ. 14.)

(வி - கு.) மு. அடிக்கழுத்தடையத்.........தறித்தே : " அடிக்கழுத்தினெடுஞ் சிரத்தை யரிவ ராலோ " (கலிங்கத். 97.)

உரை. தமப்பன் : " தாய்மார் மோர்விற்கப்போவர் தமப்பன்மார் கற்றுநிரைப்பின்பு போவர் " (பெரியாழ்வார் திருமொழி, 3. 1 : 9) ; தமப்பனென்பது புறப்பொருள் வெண்பாமாலை யுரை முதலியவற்றிலும் திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களிலும் பயின்று வருகின்றது. (உசஉ)

## சந்திரனைத் தேய்த்தலும் அக்கினிதேவன் கைகளைத் துணித்தலும்

487. நிழற்கடவுட் சுடர்த்தொகையைத் திரைத்துநிலத் தரைத்தே
தழற்கடவுட் டடக்கைகளைத் தறித்துமழுப் பொறித்தே.

நிழல் - குளிர்ந்த சோதி. நிழற்கடவுட் சுடர்த்தொகை - சந்திரன். திரைத்து அவனை நிலத்து அரைக்கை : சந்திரன் கெடியனுதலின் அவனை மடித்துக்கொள்ளவேண்டியிருந்தது ; நிலத்தரைத்ததற்கு அடையாளம் களங்கம். தழற்கடவுள் - அக்கினிதேவன் ; தடக்கைகளைத்தறிக்கையாவது ஏழுகைகளையும் தறித்தல். மழுப்பொறித்தலாவது நின்றகைகளின் குறைகளில் மழுவைப்பொறித்து மாகேசுவரனுக்குகை ; வெறும் சாம்பலாக்குகையுமாம்.

(வி - கு.) மு. நிழற்கடவுட் சுடர்த்தொகையைத் திரைத்துநிலத்தரைத்தே: " சந்திரனைத் தேய்த்தருளி " (திருவா.), " வழுவு மிந்துவைச் சினந்து தேய்த்து " (காஞ்சிப். தக்கீச. 37.)

தழற்கடவுட்டடக்கைகளைத் தறித்து : " எரியதொரு கைதறித்த விறைவர் " (தே.), " வெய்யவனங்கி விழுங்கத் திரட்டிய, கையைத் தறித்தானென்றுந்தீபற, கலங்கிற்று வேள்வியென்றுந்தீபற " (திருவா.), " செந்தீக் கடவுடன் கரதலஞ் செற்றும் " (கோபப் பிரசாதம், 31), " வன்னி நாவினேடெழுகரந் துணித்து " (காஞ்சிப். தக்கீச. 37.)

உரை. அக்கினிதேவனுக்குக் கைகள் ஏழென்பது வேதத்திற்கண்டது. மழுவைப் பொறித்து மாகேசுவரனுக்குகை : மாகேசுவரராக்குவதற்குச் சூலத்தைப் பொறித்தலன்றி மழுவையும் பொறித்தல் பண்டைக்காலத்து வழக்கு ; 367-ஆம் தாழிசை உரையைப் பார்க்க. (உசங)

## இந்திரன் சிறைகளையும் வசிட்டன் காமதேனுவையும் பறித்தல்

488. இனத்தமரர்க் கிறைக்குயிலைப் பிடித்திறகைப் பறித்தே
பனத்தியைவிட் டசட்டுவசிட் டனைப்பசுவைப் பறித்தே.

எ - து இந்திரன் அஞ்சிக் குயிலாய்ப்போக அதனையறிந்துகொண்டு இறகினைப்பறித்தார். பின்னை அருந்ததிப்பிராட்டியைவிட்டு அவளுடனே வசிட்டனையும் போகவிட்டார், சுரபியைப்பறித்து எ - று.

இதன்கருத்து : சுரபி வேறுய்விடிற் பால் அக்கினிகோத்திரப்பரப்புக்குப்போதாது ; அஃது இன்றியொழியின் அவன் உண்ணுனென்பது; அவன் வழியொழுகும் சுரபியைப்பறித்ததனுற்பயன் இது. இனி அருந்ததிப்பிராட்டியது பலம் அவனுக்குப் பலமென்பதுணர்க.

(வி - ரு.) இதன் முதலடியின் பொருள், 44 - ஆம் தாழிசையாலும் அதன் உரையாலும் நன்கு விளங்கும்.

மூ. இனத்தமரர்க் கிறைக்குயிலைப் பிடித்திறகைப் பறித்தே : "புரந் தரனு மொரு பூங்குயிலாகி மரந்தனி லேறினுருந்தீபற, வானவர்கோனென்றே உந்தீ பற" (திருவா.) "கறையடிப்பெருங் களிற்றெருடுஞ் சுழற்றலுங்கலங்கிப், பறவை யின்குயி லுருக்கொடுவாசவன் பறந்தான், மறைபு காதுவிண் மறைதலு மழுவினன் மலையைச், சிறை யரிந்தவன் சிறையையு மரிந் தனன் செய்யோன்" (திருக்குற். தக்கன் வேள்வியழிந்த. 44.) அசட்டு வசிட்டன் : "அசட்டர்க ளைவரை" (கம்ப. திருவவதாரப். 77), "அசட் டுருக்கள்" (திருப். குறித்தமணிப்.), "சளத்திற் பிணிபட் டசட்டுக்ரியைக் குள்" (கந்தரலங். 7.) (௪௮௪)

489\. அகத்தியனைத் தமிழ்ப்பொதியிற் குகைப்புகவிட் டடைத்தே
இகத்தியெனப் புலத்தியனைத் துடிக்கவடித் திழுத்தே.

அகத்தியனது பொதியின்மலையைப் புலவர்களிருப்பென நினைத்துப் போருக்கு வருவாரில்லையென எண்ணினர். குகைப்புகவிட்டென்றது மெத் தெனக் கொண்டுபோய்விட்டாரென்றவாறு. அடைத்தது ராட்சதர் அநி யாயம் செய்யாமைப்பொருட்டு. இகத்தி - கடத்தி ; என்றது சக்கரவாளத் தைக்கடக்கவென்றபடி. துடிக்க இழுத்து அடித்தது, ராட்சதரைப் பெறுமவனென உட்கொண்டு. இழுத்தல் - சக்கரவாளத்துக்குப் புறம்பாக இழுக்கை.

(வி - ரு.) இதன் கருத்து அகத்தியனைப் பொதியின்மலையிலடைத்துப் புலத்தியனைத் தகைந்தனர் என்பது.

மூ. அகத்திய புலத்தியர்களிருவரும் ஒருங்கே கூறப்படும் வழக்கு, 40-ஆம் தாழிசை உரை, குறிப்பு முதலியவற்றால் விளங்கும் ; "தகையுள வகத்தியன் புலத்தியன்" (வி. பா. அருச்சுனன் தவநிலைச். 147.) தமிழ்ப் பொதியில் : "தமிழ்க்குன்று" (தக்க. 539.)

உரை. பொதியின்மலை புலவர்களிருப்பிடம் : "தென்றமிழ்நாட் டகன் பொதியிற் றிருமுனிவன் றமிழ்ச்சங்கஞ் சேர்கிற் பீரேல், என்றுமவ ணுறை விடமாம்" (கம்ப. நாடவிட்ட. 31.) புலத்தியன் ராட்சசரைப் பெறுமவ னென்பது, "புலத்தியன்றன் வழிப்போந்து பொல்லா வொழுக்க மில் லாத, வலத்து முனிவிச் சிரவாவுக் கரக்கி வயிற்றி னிடைத்தோன்றிக், கொலைக்கை யரக்கர்", "இந்த மாநிலத் திராவண னதியா மரக்கர், முந் தையோரெலாம் புலத்தியன்வழி" (உத்தர. திருவோலக்க. 22, புலத்தியப். 29) என்பவற்றாற் புலப்படும். (௪௮௫)

## யமன்கொடியைக் கைப்பற்றியதும் பகன்கண்ணைப் பறித்ததும்

490\. இகற்றருமற் கெடுத்தகொடித் தடுத்திறைவற் றெடுத்தே
பகற்சுடரிற் [1]பகற்கிருகட் பரப்பிருளைப் படுத்தே.

இகல் - பகை. தருமன் - யமராசன். அவன்கொடி எருமைப்போத்து. இறைவன் - வீரபத்திரதேவன். இவற்குக் கொடியாக எடுத்தலாவது இடப சாதியோடு ஒத்து ஒவ்வாமாத்திரம் நோக்கியெனவுணர்க. பகற்சுடரிற் பகற்கு - ஆதித்தியர் பன்னிருவருள் ஒருவனாகிய பகனென்பவனுக்கு. இவன்பெயர் பகவனென்றும் பகவானென்றும் வழங்கும்.

கண்ணைப்பறித்தாரென்பது பொருள்.

(வி - கு.) மூ. ஒப்பு : 45.

உரை. எருமை காரானெனப்படுவதனாலும் மூவினங்களிலொன்றாதலாலும், 'இடபசாதியோடு ஒத்து ஒவ்வாமாத்திரம்' என்றார்போலும்.

(பி - ம்) 1 'பரப்பிருகட் பரப்பொளியைப்' (உசசு)

## வருணனை வருத்தலும் அவன் வாகனத்தைக் கடித்தலும்

491. சலத்தரசைக் கயிற்றிலிணைத் தடக்கைகளைத் [1]தளைத்தே
கலக்கலமுத் துகுப்பவடற் கடற்சுறவைக் [2]கடித்தே.

சலம் - கடல்; அதற்கரசு வருணன். தளைத்தல் - பிணைத்தல். ஒருசுறுவிற்குக் கலமுத்தெனவுணர்க.

(வி - கு.) மூ. கயிறென்றது வருணன் பாசத்தை; வருணனுக்குப் பாசமுண்மை, "பாசம் வீசுங் குடதிசைப்பேய்" (தக்க. 786), "வருணன்றன் கயிறு" (கம்ப. பஞ்சசேனா. 17) என்பவற்றாலும் பெறப்படும். முத்துப் பிறக்கும் இடங்களிற் சுறவும் ஒன்றென்பது இங்கே அறியத்தக்கது.

(பி - ம்) 1 'தகர்த்தே' 2 'தறித்தே' (உசஎ)

## மலைகளைத்தகர்த்தலும் கற்பகச்சோலையை எரித்தலும்

492. அடுத்தகுலப் பொருப்பையிருப் புலக்கைபிடித் தடுத்தே
எடுத்தனகற் பகப்பொழில்கட் கடைக்கனலிட் டெரித்தே.

அடுத்தகுலப்பொருப்பென்பன, மகாமேருவையும் ஸ்ரீ கயிலாசத்தையும் விட்டுப் பகையடுத்தனவாகிய ஏனைக்குலப்பொருப்புக்களெனவுணர்க. பொழிலென்றதில் ஐகாரம் தொக்கது. எடுத்தனகற்பகப் பொழிலென்றது குலபருவதத்தில் விளையாட்டுக்குப்பண்ணின கற்பகச் சோலையை. கட்கடைக்கனல் கடைக்கட்கனலென்க; என்றது தங்கள் திருக்கண்களின் கடைக்கண் நெருப்பை.

(வி - கு.) மூ. அடுத்தகுலப்பொருப்பு : மலைகளும் போர்செய்ய வந்தனவென்பது 465 - ஆம் தாழிசையிற் கூறப்பட்டது. (உசஅ)

493. குலப்பரவைப் பரப்படையக் கடைக்கனலிற் குடித்தே
சிலப்பரசைத் திருப்பரசுக் களிற்சிதையத் துடைத்தே.

குலப்பரவை - லவணசமுத்திரமும் மற்றவையும். கடைக்கனலின் : இன் ஐந்தாம் வேற்றுமை; ஒப்பின்கண் வந்தது; வடவாமுகாக்கினியைப் போலே கடலை வற்றக்குடித்தாரென்பது. சிலப்பரசென்றது மகாமேருவை. அதனை ஒன்றுஞ்செய்யாதே தேவர்களிருப்பான சிகரங்களைத் திருக்கைகளின் மழுக்களால் அழியத் துடைத்தாரெனவுணர்க; தேவர்கள் இருந்த இடங்களைச் சுத்திசெய்தாரென்றபடி. பரசுக்களின் : இன் மூன்றும் வேற்றுமை ஆனெனவுணர்க.

(வி - கு.) கடல்களைப் பூதங்கள் குடித்தன; மேருவைச் சிதைத்தனவென்பது இதன்கருத்து.

மூ. சிலப்பரசு : சிலம்பு அரசு ; சிலம்பு - மலை. மகாமேருவையும் மலையரசாகக் கூறும் வழக்குண்மை, "வரைக்கு வேந்தா யிருக்கின்ற வெரி பொன் மேரு", "வரைகளுக் கரசே யெங்கள் கைவரி சிலையே" (திருவிளை மேருவைச். 10, 24.)

உரை. ஐந்தாம் வேற்றுமை ஒப்பின்கண் வந்தது : தொல். வேற்றுமை. சூ. 16, சே. ந, உரை. தேவர்களிருப்பான சிகரங்கள் : "தெய்வதவரையே மேலைத் தேவரா லயமே" (திருவிளை. மேருவைச். 24); "சுராலயமே மேரு", (சூடாமணி. 5 : 13.) (உசகூ)

## வேறு

## அக்கினியின் வாகனத்தைப் பற்றுதல்

494. வேவினுள்வயின் வேவதீதெனப்
பாவகன்றகர் சுடாதுபற்றியே.

பாவகன் - அக்கினிதேவன். தகர் அவன்கொடி. பற்றியென்றது கிடாயினதுபெருமையால்; அழித்துச்சொன்னவாறு.

இது வேகுமாயின் வேவது உதராக்கினியிலென்று அதனைத் தின்று ரென்றவாறு.

இதன்கருத்து, அக்கினிதேவன் ஏறியும் கொடியாக்கியும் வேவாத தொன்று நம்வயிற்று நெருப்பினிலல்லது வேவாதென்பது. ஈதென்றது செய்யுண்முடிவு.

(வி - கு.) இதுமுதல் 499-ஆம் தாழிசைமுடியத் தேவர்களின் வாகன முதலியவற்றை அழித்தல் சொல்லப்படும்.

அக்கினியின் வாகனத்தைப் பற்றினரென்பது இதன்கருத்து.

மூ. பாவகன்றகர் : "செந்தீக் கடவுளு மேல் கொளுந்தகர்" (தக்க. 582.) உரை. அழித்துச் சொன்னவாறு : 'அடாவென்பது அழித்துரை' என்பர் பின் ; தக்க. 508, உரை. 'ஈது' என்றது செய்யுண்முடிபு : தொல். உயிர்மயங்கு, சூ. 36, இளம். ந. (உ௫0)

495. ஏழுமானையும் ரவியிழக்கவுள்
வாழுமானையும் மதியிழக்கவே.

[இரவியின் குதிரைகளையும் சந்திரனுள் விளங்கும் மானையும் அழித்தல் இதிற் கூறப்படும்.]

ரவி - ஆதித்தன். ஏழுமான் - அவன் குதிரை ஏழும்.

(வி - கு.) மூ. ஏழுமான் : தக்க. 467 உரை பார்க்க ; 'ஏழூர் பிறைஞ்சி" (குறிஞ்சி. 215) என்பதும், 'ஞாயிறு ஏழுகுதிரை பூண்ட தேரையேறிப் பகற்பொழுது போம்படி தாழ்ந்து' என்னும் அதன் உரையும் இங்கே அறியற்பாலன. உள்வாழுமான் : சந்திரனிடத்துள்ள களங்கத்தை மானென்பது நூன்மரபு ; "அஞ்சுமோ, மண்ணிற் புலியைமதிமான்" (நன்னெறி, 29.) (உ௫க)

496. செம்பொடிப்புரத் திக்கயங்களைக்
கொம்பொடித்தடிக் குருகு[1] துற்றியே.

[இதிற் சொல்லப்படுவது யாளிமுகப்பூதங்கள் திக்கயங்களின் கொம்புகளை ஒடித்து அடிக்குருத்தையுண்ணும் செயல்.]

செம்பொடி - சிந்தூரம். புரம் - உடம்பு. இது யாளிமுகப்பூதகணத்தின் செயல். யாளி யானையின் கொம்பிற் குருகு தின்கை பண்பு. குருகு - குருத்து. திக்கயங்களை விட்டார்.

(வி - ரு.) மூ. யாளி யானையின் கொம்பின் குருகை உண்டல்: "ஆளி நன்மா னணங்குடை யொருத்தல், மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப, ஏந்தல் வெண்கோடு வாங்கிக் குருகருந்தும்" (அகநா. 381 : 1 - 3); "வீழ்ந்துசெற் றுந்திமுற் கிறங்குவே ழுத்தின்வெண் மருப்பினைக், கீழ்ந்து சிங் கங்குரு குண்ணமுத் துதிருங்கே தாரமே" (தே. திருஞான.); "குவட்டு மால்கரிக் குருகுதே ரரிபுலிக் குவையுண், டுவட்டி யுந்திடு திரைப்புனல்" (கந்த. ஆற்றுப். 14), "கடங்க விழ்ந்திடு கரிக்குரு குண்ணுமடங்கல்" (கந்த தகரேறு. 117); "குருகுவேண் டாளி கோடுபுய்த் துண்டெனு" (யா. கா. மேற்.) (பி - ம்.) 1 'குத்தியே' (உருஉ)

## தருமன் வாகனங்களைக் குமைத்தல்

497. [1]தருமனோளியோ டிவுளியைத்தகர்த்
தெருமையோரொரோ புகழ்கெடுத்துமே.

தருமன் - யமராசன்; எருமைப்போத்துக்களையே யானையுங்குதிரையுமாகக்கடவுவனென்பதுணர்க. ஓளி - யானைப்பந்தி; ஆகுபெயர். எருமையோர் ஒரோ புகழ் கெடுத்தென்றது எருமைமுகப் பசாசகணங்களின் பிரபஞ்சச்செயல் சொன்னவாறு. இப்பிரபஞ்சம் எருமைப்பிரளயத்தை நோக்கிற்று. எருமை : "பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லாம், மயங்கல்கூடா வழக்குவழிப் பட்டன" (தொல். கிளவி. சூ. 50) என்பதனால் அஃறிணையிடத்துத் தொழிலிற்பிரிந்த பெண்மொழி மிகுசொல்லெனக் கொள்க.

(வி - ரு.) உரை. எருமைமுகப் பசாசகணங்கள் : விலங்குமுகப் பசாசகணங்களும் உளவென்பது, "புலிமு கத்தன கலைமுகத் தனவயப் புலிமான், ஒலிமு கத்தன கொய்யுளை யுத்தரி முகத்த, கலைமு கத்தன கரடியின்முகத் தன கணங்கள்" (திருக்குற். தக்கன் வேள்வியழிந்த. 17) என்பதனு லறியலாகும். (பி - ம்) 1 'தருமனூர்தியோ' (உருகூ)

## நிருதியின் ஊர்தியை வவ்வுதல்

498. வருதியென்றுபே யூர்திவௌவியே
நிருதிதன்னையே நிலைநிறுத்தியே.

எ - து நிருதியே! வருதியென்றழைத்து எங்கள்இனத்தை எங்களுடன் விடுகவென்று அவனூர்தியைத் தாங்கள் வௌவிக்கொண்டு அவனை அத்திசையிலேபோய் நிற்கச்சொன்னூர் எ - று.

வருதியென்றது வாவென்றவாறு. இவன் பேயை ஏறித்திரிவான். ஈசுவரனுடையபடை நினக்கு ஆகாதென்றபடி.

(வி - ரு.) மூ. நிருதிக்கு வாகனம் பேயென்பது தக்க. 685, 785-ஆம் தாழிசைகளாலும் உணரப்படும். (உருச)

## வருணன் வாகனங்களை மடக்குதல்

499. இருள்கடற்கடைக் கனலிலிட்டெடா
வருணன்வாகனங் களைமடக்கியே.

இருள்கடலென்றது இருண்டகடல் இருளுகின்றகடல் இருளுங்கட லென முக்காலமும் ஏற்கும்.

இக்கடலைக்கலக்கி வருணன்வாகனமான சுறுவினத்தைப்பிடித்து உகாந்தகாலத்து அக்கினியால் வெதுப்பித்தின்றுபென வுணர்க. (உருரு)

500. ஆர்வமாளுநா ரணரநேகர்தம்
மார்வமாளுமா நௌவிவவ்வியே.

ஆர்வம் - சிநேகம். ஆள்கை - ஆளுதல்; பிறவியைப் பொருளாக நினைத்தல். மாநௌவியென்றதை மா நௌவியெனப் பிரித்து, மா - ஸ்ரீ, நௌவி - மான்கன்றென்று பொருள்கொள்ளலுமாம்; பிரியாதுசொல்லலு மாமெனவுணர்க.

(வி - ரு.) இதுமுதல் 504 - ஆம்தாழிசைமுடிய முறையே திருமகள், உரோகிணி, சசி, சுவாகா முதலியவர்களையும், தக்கன் பெண்களையும், அவன் மனைவியையும் பூதகணங்கள் வருத்துதல் சொல்லப்படும்.

மூ. மார்பம், மார்வம் மார்வு எனவும் வழங்கும்; "மார்வத்துக் கண்ணினீர் வாரப் பிறர்கொள்ளும், ஆர்வத்துக் கன்றே யடியிட்டாள்" (விக்கிரமசோழனுலா, 133) "கூர்விலங்குந்திரிசூலவேலர் குழைக்காதினர், மார்விலங்கும் புரிநூலுகந்த மணவாளனார்" (தே. திருப்பிரமபுரம்); "கான் மடங்கா மார்வத்தார் காண விரும்பினார்மேல், நான்மடங்கா மார்வத்தார் நாடு" (திருவேங்கடமாலை, 45); "மார்விற் றிருவிற்பொலிமாலையினான்" (கம்ப. சரபங்க. 9.) மாநௌவியென் றது திருமகளை. (உருசு)

501. நாமராசியை யுதிர்த்துரோணிதன்
சோமராசியள கஞ்சுலாவியே.

நாமம் - பெயர்; பயமென்பாருமுளர்; இதற்கு அம் சாரியை; நாம ராசியென்றது பெயர்மாத்திரமல்லது காணவொண்ணாதராசி யென்றுமாம். இராசிகளைக் கோவைகுலைத்து நட்சத்திரங்களைச் சூட்டாகக்கட்டியென்ற வாறு. ரோணிதன் சோமராசியென்றது உரோகிணியின் முகத்தை; சந்தி ரனையல்ல.

(வி - ரு.) மூ. உரோணி: "ஒண்ணிற வுரோணி யோடு", "ஒண்ணிற வுரோணி யூர்ந்த" (சீவக. 198, 620); "நறுநுத லுரோணி" (பாகவதம், திரு வவதார. 25.) அளகம் - முன்னுச்சிமயிர்.

உரை. சூட்டு - நெற்றிப்பட்டம். (பி - ம்) 1 'நாமகள் நாசி யுதிர்த்து ரோகணி ரோமராசி யளகஞ் சுலாவியே' (உருஎ)

502. சேயமாதிரத் தேவர்தேவிமார்
மாயமேகலா பாரம்வாரியே.

சேயமாதிரம் - தூரிய திக்கு. தேவர்தேவிமார் - சசி சுவாகா முதலா யின தேவிமார். மாயமென்றது ஆட்சேபம்; மாயம் - பித்தளை. சசி சுவாகா

வென்னுந்தெய்வப் பெண்களுக்குப் பித்தளையாலே மேகலாபாரமென்பர்; இதை வைத்தியசாத்திரத்திற் கண்டுகொள்க.

(வி - ரு.) உரை. சசி - இந்திராணி. சுவாகா - அக்கினியின் தேவி. (உருஅ)

503. மையலான்மிகுந் தக்கன்மக்களாம்
தையலாரையுந் தாலிவாரியே.

தக்கன் மக்கள் : இது பெயரினுந் தொழிலினும் பிரிந்த ஆறெழுமிகு சொல்.

(வி - ரு.) உரை. பெயரினுந் தொழிலினும் பிரிந்த ஆறெழுமிகுசொல் : தொல். கிளவி. சூ. 50. (உருக)

504. [1]என்னமாமியென் றியாகபன்னியைக்
கன்னபூரமுங் காதுமள்ளியே.

என்னமாமியென்றது மகாதேவர் மாமியல்லே யென்றவாறு. கன்ன பூரமென்றதற்குக் காதிற்செருகும் பூ முதலாயின வெல்லாங்கொள்க. அள்ளுகையாவது காதறச் செய்கை.

(வி - ரு.) மூ. மாமி : "அன்புடைய மாமனு மாமியுநீ" (தே.), "தவமுறு நம்ம மாமி" (திருவால. 9 : 5), "நனிமாமிவர" (கடம்பவன. இலீலாசங்கிரக. 31), "மாமிக்குக் கடலேழும் வழங்கினீர்" (மதுரைக்கலம். 90.) யாகபன்னி யென்றது தக்கன் மனைவியை; பன்னி - பத்தினி. கன்னபூரம் : "கன்ன பூரங்கலந்த செங்கண்ணியே" (வி. பா. குருகுலச். 111.)

உரை. காதிற் செருகும் பூ : இதனைக் கன்னவதஞ்சமென்றுங் கூறுவர்; "மருவிய செவிமலர்ப்பூ மன்னுகன்னவதஞ்சம்" (சூடாமணி. 7 : 28.)

(பி - ம்) 1 'என்னமாரியென்றியாக மாமியைக்' (உகூ0)

505. பாபதண்டிதன் பசுவைவிட்டதன்
யூபதண்டுகொண் டோடவெற்றியே.

[இதுமுதல் 509-ஆம் தாழிசைமுடிய யாகத்தின் உறுப்புக்களாகிய யூபத்தம்பம், அக்கினி, பருந்து, மடாக்கள் முதலியவைகளை அழித்தல் கூறப்படும்.]

பாபதண்டி, பசுப்படுப்பானென்பாரும் குயவனென்பாரும் சித்திர சேனனென்பாரும் வசிட்டபகவானென்பாருமுளர். வசிட்டன் உபாத்தியாயன். சித்திரசேனன் எடுத்துக் கைநீட்டுவான். குயவன் வதைபண்ணுபவன்.

பாபதண்டி யென்றதற்குப் பொருள் இங்கே தக்கனென்பது; அக்கினி தேவனென்பாருமுளர். பசுவென்றது யாகப்பசுவை; சுரபியையன்று. யூபதண்டு - யாகத்தம்பம்; ஓமத்தறி. இதுவே கோலாகப் பசுவை அடித்தார்களென்றவாறு.

(வி - ரு.) உரை. எடுத்துக்கைநீட்டுவான் : 88-ஆம் தாழிசையுரை பார்க்க. யூபஸ்தம்பமே கோலாகப் பசுவையடித்தார்கள் : 'வேல் கோலாக அடித்துக்கொண்டுவந்த பசுத்திரள்' (மதுரை. 690 - 92. ந, உரை.) (உகூக)

506. விவிதமுத்தழன் [1]மீதுவெய்யநெய்
அவிதவிர்த்துநீர் பெய்தவித்துமே.

விவிதம் : வி - அழகு, விதம் - வேறுகூறுபடுதல் ; விதம்விதமென்றுமாம், முத்தழல் : தக்ஷிணாக்கினி, காருகபத்தியம், ஆகவனீயம். வெய்யநெய் - வேண்டற்பாடுடைய நெய். அவி - அவிர்ப்பாகம். தவிர்த்தல் - சிந்துதல். நீர்பெய்தலென்றதை இடக்கரடக்கிச்சொன்னாரென்பாருமுளர்.

(வி - கு.) மூ. வெய்ய : வெம்மை - விருப்பம். (பி - ம்) 1 'மீது பெய்நெய்' (உசஉ)

507. பொய்ப்பருந்துகா லொடுபறந்துபோய்
மெய்ப்பருந்துடன் விண்ணிலாடவே.

பொய்ப்பருந்தாவது யாகத்துக்குச் செய்த பருந்து. கால் - காற்று, பண்ணினகால், பரணின்கால் ; பிறவுமுணர்க. மெய்ப்பருந்து - பருந்துதான்.

(வி - கு.) உரை. பருந்துதானென்றது பறக்கும் பருந்தை. யாகத்துக்குச் செய்த பருந்து : " எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண் " (புறநா. 224 : 8) என்பதற்கு, ' பருந்து விழுங்குவதாகச் செய்யப்பட்ட இடத்துநாட்டிய யூபத் தம்பம் ' என்றெழுதியவுரையும், " பறப்பைப் படுத்தெங்கும்...சிறப்பர் " (தே. திருஞா.) என்பதும், " சுடுமனற் கலுழ னாகச் சுருதியின்படியே கோட்டி, வடுவறச் சமைத்த சாலை " (வி. பா. இராசசூய. 91) என்பதும் இங்கே அறியத்தக்கன ; இதனைக் கருடசயனமென்பர். (உசங)

508. எடுமடாநமக் கென்றுசென்றுபுக்
கடுமடாவெலா [1]மறவருந்தியே.

எடுமென்றது செய்யுமென்னும் முற்றல்ல, அடாவென்றது ஒருமையாதலால் ; நமக்காகச் சோறடாத இம்மடாக்களை எடுமெனப்பொருள்படுமாயின் செய்யுமென்பதுமாம் ; நமக்கு அடுப்பனவல்லவென்றுமாம் ; பிறவுமுணர்க. அடாவென்பது அழித்துரை. இவ்வுரையைச் சொல்லார், இவர்கள் ஸ்ரீபூதகணநாதரும் ஸ்ரீ பசாசகணநாதருமாதலால்.

(வி - கு.) மூ. மடா - மிடா : " அனந்தகோடிமடா ", " அநேக கோடிமடா " (தக்க. 766, 768.)

உரை. அடா என்பது அழித்துரை : " இவ்வழி நேர்மினடா ", " காவடா விதுவல்லையேல் ", " யாதடாவென் றியம்பினன் ", "எங்குடா போவது" (கம்ப. கரன்வதை. 18, 161, மாரீசன் வதை. 99, சடாயுவுயிர் நீத்த. 87.) (பி - ம்) 1 'மடையவாரியே' (உசச)

509. புக்கபூதவே தாளயூதமே
தக்கன்யாகமிப் படிசமைக்கவே.

யூதம் - பெரும்படை.

(வி - கு.) மூ. சமைக்க - அழிக்க ; தக்க. 398, உரை பார்க்க. (உசரு)

## வேறு

510. [1]மாலைநாக மார்பர்மேக மாகிநின் றிடிப்பவான்
மேலைநாகர் கீழைநாகர் போன்மயங்கி வீழவே.

[இதில், தக்கனது யாகத்துக்கு வாராமல் மேகபதத்துக்கு மேலேயிருந்த தேவர்கள் மயங்கிவீழ்தல் சொல்லப்படுகின்றது.]

**எ - து** நாகராசாக்களைத் தோரணமாலையாகவிட்ட மார்பினையுடைய ஸ்ரீ பூதகணங்கள் மேகங்களாகிநின்று தெழித்து உரப்பிச்சிங்கநாதம் செய்ய மேகங்களின் இடிப்புக்கேட்ட பாதாளத்து நாகராசாக்கள் பயப்பட்டு விழுமாறுபோல, மேகபதத்துக்குமேலுள்ள தேவர்கள் மயங்கிக் கீழே விழ எ - று.

நாகம் : " நாகத் தன்ன பாகார் மண்டிலம் " (367 : 1); இது **புறநானூறு** ; " நாகநீ ணகரொடு நாகநா டதனொடு " (1 : 21); இது **சிலப்பதிகாரம்.**

(வி - கு.) உரை. சிங்கநாதம் : 474-ஆம்தாழிசை உரை பார்க்க.

(பி - ம்.) 1 'மாலைநாகர் மேகமாகி நின்றிடிப்ப வானிலே' (உசுசு)

## வீரபத்திர தேவர்
## இறந்தவர்களை உயிர்ப்பித்து மீட்டும் பொரச்செய்வித்தல்

511. விழுந்த நார ணாதிகட்கு மீளவாழு நாள்கொடுத்
தெழுந்துபோர் தொடங்குகென்று குன்றவில்லி யேவவே.

**எ - து** இதற்குமுன்பு விஷ்ணுக்களும் அவர் முதலானதேவர்களும் பூத பசாச யூதபதிகளால் விழுந்து பட்டுப்போக வீரபத்திரதேவரான கணநாதர் விஷ்ணுமுதலான தேவர்களெல்லோர்க்கும் வாழ்நாள் கொடுத்து இன்னும் யுத்தம்செய்யுமென்றருளிச் செய்ய எ - று.

இதன்கருத்து : உயிர்பெய்து கூத்தாட்டுக்காண்டல். என்னைப்போன்றவர்களும் விஷ்ணுவாதிகளும் ஒப்பர் பூதகணநாதர்க்கெனவறிக ; மத்தியான்ன ஆதித்தியன் எல்லாப்பிராணிகட்கும் ஒக்கநிற்குமாப்போல.

(வி - கு.) திருமால் முதலிய தேவர்களுக்கு வீரபத்திரதேவர் மீள உயிர்கொடுத்துப் போர்தொடங்கச் செய்வித்தாரென்பது இதன் கருத்து.

மூ. குன்ற வில்லி - மேருமலையை வில்லாக உடையவன் ; மலையை இருப்பிடமாக உடையவனெனலுமாம் ; " குன்ற வில்லவன் பால் " (**வி. பா.** அருச்சுனன் தவநிலை. 25.)

**உரை.** கூத்தாட்டுக் காண்டல் : " யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு வானாகி " (**திருவா.**) உயிர்பெய்து கூத்தாட்டுக்காண்டல் என்ற அரியவாக்கியம் பின்புள்ள **தேவாரத்தை** நினைப்பித்து இன்புறுத்துகின்றது : " ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே, ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே, பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே பணிவித்தா லாரொருவர் பணியா தாரே, காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே." ஆதித்தன்......ஒக்கநிற்குமாப்போல-சூரி

யன் நடுப்பகலில் எல்லாருடைய உச்சிக்கும் நேரே இருத்தல்போல ; பு. வெ. 171. (உசுஎ)

## யுத்தம்

## வேறு

512. சிரமுஞ் சிரமுஞ் செறிந்தன
சரமுஞ் சரமுந் தறிப்பவே.

[இதுமுதல், 520-ஆம்தாழிசை வரையில் பூதகணங்களும் தேவர்படைகளும் பொருதல் கூறப்படும்.]

சிரம் - தலை. சிரமுஞ்சிரமும் செறிந்தனவென்றது இரண்டுதிறத்துப்படைவீரர் தலைகளும் தம்மிற் பொருந்தினவென்றவாறு. சரமுஞ்சரமும் தறிப்பவென்றது அம்பும்அம்பும் தம்மிற்பிணங்கி அறுப்புண்ணவென்றவாறு. (உசுஅ)

513. கனமுங் கனமுங் கனைத்தன
சினமுஞ் சினமுஞ் சிறக்கவே.

கனம் - மேகம். கனைத்தல் - கருவித்தல். ஈசுவரன்படையில் மேகங்களாகப் பூதங்களே வடிவுகொண்டன ; முன்னே (401) யானையும் தேரும் படையும் மற்றும் எல்லாமாகப் பூதபசாசுகள் தாமேவடிவு கொண்டன வென்றதை யறிக.

(வி - கு.) மூ. தேவருக்குப் படையாக மேகங்களும் வந்தமை 464-ஆம் தாழிசையால் உணரப்படும். (உசுசு)

514. கடையுங் கடையுங் கலித்தன
தொடையுந் தொடையுந் துரப்பவே.

கடையென்றது அப்புக்கடையை. தொடையென்றது அம்புதொடுக்கும் தொடையை. துரத்தல் - செலுத்துதல்.

(வி - கு.) மூ. அப்புக்கடையைக் கடையென்றது நாமைகதேசம். (உஎ0)

515. தாருந் தாருந் தழைத்தன
தேருந் தேருந் திளைப்பவே.

தார் - தூசிப்படை. தூசிப்படைக்கிலக்கணம், துன்னூசியின் முகம் போலநேர்ந்து நெடுகி இடைபரந்து கடைதிரண்டு பரந்துசுழன்று வெளிப் பட்டிருத்தல்.

தூசிப்படைகள் தம்மிற்பொருது தழைத்தனவென்றவாறு.

(வி - கு.) **உரை.** துன்னூசி - கலப்பையின் உறுப்புக்களுள் ஒன்று ; 'கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு' (**தொல்.** சிறப்பு. ந.), "அசைவிறிண் கொழுச்செல் லாறே துன்னூசி யழுகிற் செல்லும்" (**தியாகராச.** நாட்டுப். 99.) (உஎக)

516. தோலுந் தோலுந் [1]துவைத்தன
கோலுங் கோலுங் குளிப்பவே.

தோல் - யானை, வட்டணைக்கிடுகு. தோல் - அம்பு, ஆளெறிகோல்.

(வி - கு.) மூ. தோலுந் தோலுந் துவைத்தன : "தோலொடு தோல்கள் தகைந்தன" (பெரிய. ஏனாதி. 18); துவைத்தன - முழங்கின; "துவைத்தம் பிற் றுணைதோன்றுவ" (புறநா. 4 : 5); துவையென்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த முற்று. (பி - ம்.) 1 'துடித்தன' (உஎஉ)

517. தோளுந் தோளுந் [1]தொடங்கின
தாளுந் தாளுந் [2]தரிப்பவே.

தொடங்கின - போர்தொடங்கின. தரிப்பவென்றது கால் தளராதே நிலைநிற்பவென்றவாறு. (பி - ம்.) 1 'துடித்தன' 2 'தகர்ப்பவே' (உஎங)

518. கிரியுங் கிரியுங் கிடைத்தன
கரியுங் கரியுங் கடுப்பவே.

கிடைக்கை - மாறுபடுதல்.

(வி - கு.) மூ. கடுப்ப - கோபித்துப்பொர; போல எனினும் ஆம். (உஎச)

519. தலையுந் தலையுந் தகர்த்தன
சிலையுஞ் சிலையுஞ் சிலைப்பவே.
தகர்த்தல் - தம்முள் முட்டுதல். தகர்ந்தனவென்று பாடஞ்சொல்லுவாரு முளர். சிலையாவது வில்லல்ல; மலையடிவாரப் பாறை. சிலைத்தல்பொருத லும் பொருந்தலும் சத்தித்தலுமாம். (உஎரு)

520. குடையுங் குடையுங் கொழித்தன
படையும் படையும் பகைப்பவே.

கொழித்தல் - கோபகோஷ ஆரவாரம் செய்தல்; இது குடைத்தொழி லல்ல; அரசத்தொழில்; குடை : ஆகுபெயர்.

(வி - கு.) மூ. குடையுங் குடையுங் கொழித்தன - அரசர்களும் அரசர் களும் தம்முட் சினத்தால் முழங்கினர்கள். (உஎசு)

## வேறு

521. மடிந்தன குவலய [1]வலயமே
இடிந்தன குலகிரி [2]யெவையுமே.

குவலயம் - பூமி. வலயம் - வட்டம். எவையென்றது யாவையென் பதல்ல; எவையாயதுமல்ல; [யவையென்னும் ஆரியச்சொல் பிராகிருத பாஷையுடன்மருவி எகரமேறித் தமிழதாயது.]

(வி - கு.) உரை. யவை... ..தமிழதாயது : "உயர்வற வுயர்நல முடை யவன் யவனவன்" (திருவாய்மொழி, 1. 1 : 1) என்பதில், 'யவன்' என்ப தற்கு உரையாசிரியர்கள் எழுதிய விசேடவுரைகள் இங்கே அறியற்பாலன.

(பி - ம்) 1 'மலையவே' 2 'வலயமே' (உஎஎ)

522. அற்றன வெழிலியொ டசனியே
வற்றின வெழுபெரு வாரியே.

எழிலி - மேகம். அசனி - உருமேறு. அற்றனவெழிலியொடசனியே யென்றது மேகங்கள் இடிக்கைதவிர்ந்தனவென்றவாறு. வாரி - கடல்.

(வி - ரை.) மூ. எழிலியொடசனியே : ஒடு அசைநிலை; "விதைக்குறு வட்டி போதொடு பொதுள" (குறுந். 155) என்பதுபோல. எழிலிஅசனிஅற் றன என இயைக்க. (உஎஅ)

523. உதிர்வன வெழிலியு [1]முடுவுமே
அதிர்வன புடவிக ளடையவே.

உதிர்வனவென்றது அவ்விரண்டன் உடம்புகளை.

(பி - ம்.) 1 'வெழிலியொ டுடுவுமே' (உஎகூ)

524. நெரிந்தன மாசுண நெற்றியே
இரிந்தன [1]மாசுண மெவையுமே.

மாசுண - தூளியுண்ண ; இது பூமியில்விழுந்த வஸ்துக்களால் எழுந்த தூளியெனவுணர்க. நெற்றியென்றது ஆகாசத்தை. மாசுணம் - பாம்பு.

(பி - ம்) 1 'மாதிர மெட்டுமே' (உஅ0)

525. அழுந்தின குலகிரி யடையவே
விழுந்தன திசைபல மிதியிலே.

திசைவிழுகையாவது சரீரங்களால் மறைகை. (உஅக)

526. சிதைவது சூழ்வரு திகிரியே
புதைவது சிலைகொல் பொருப்புமே.

சூழ்வருதிகிரி - சக்கரவாள பருவதம். அது சிதைதற்குக்காரணம் அதனைக்கடந்து சிலர் போனமையும் போனவரைத்தொடர்ந்து சிலர்போன மையும். புதைவது சிலைகொல் பொருப்புமேயென்றது மேல் இந்திரதனு வைச்சென்று முட்டிப் பொருகின்ற மலைகள் பூமியிற் புக்கழுந்திப் புதைந்து போயினவென்றவாறு ; உம்மை மிகை. அன்றியே, சிலை - தாழ்வரை, பொருப்பு - சிகரமென்னின் உம்மையும் பொருள்பெற்றதெனவுணர்க்.

(வி - ரை.) மூ. சிலைகொல் பொருப்பு - சிலையைக்கொல்லும் பொருப்பு. (உஅஉ)

527. பறிந்தன வடவிகள் பலவுமே
மறிந்தன பலகுல மலையுமே.

பலகுலமலையென்றது சத்தகுலபருவதங்களையல்ல; தத்தம் குலமலை களை ; அவை செம்மலை கருமலை நெடுமலை குறுமலை யென்பனபோல்வன. (உஅக)

528. பெருத்தன வமரர் பிணங்களே
பருத்தன பூத பசாசமே.

மென்றுபருத்தனவென்று தந்திரயுத்திகொள்க. (உஅச)

529. அயின்றன வெருவையொ டலகையே
பயின்றன பிணமவை பலவுமே.

அயிலல் - தின்றல். எருவை - பருந்து. அலகை - பேய். பயிலல் - பழகுதல். அவையென்றது பருந்தையும் பேயையும். இதற்குமுன்பு தேவர்கள் பிணத்துடன் அவைபயப்படாதே பழகிய அத்தனையேயென உணர்க. (உஅ௯)

530. முழங்கின முகிலென முரசமே
தழங்கின வெதிரெதிர் சங்கமே.

எதிரெதிரென இரண்டுபடைக்கும் ஒக்கக்கொள்க. முகிலை முரசிற்கும் சங்கிற்கும் ஒக்கக்கொள்க; முகில்போல ஒலிபடைத்தன. தழங்கின - நடுங்கி யொலித்தன.

(வி - கு.) மூ. முரசம் - வெற்றிமுரசு. முரசத்திற்கு முகில் உவமை; "உருமிடி முரசமொடு" (முருகு. 121); "முரசதிர்ந் தன்ன வின்குர லேற் றொடு, நிரைசெல னிவப்பிற் கொண்மூ" (குறிஞ்சிப். 49 - 50); "இன்னிசை முரசி னியங்கி...........சென்மழை தழுவ" (நற். 197 : 10 - 12); "கடிப் பிகு முரசின் முழங்கி" (குறுந். 270 : 3); "முரசதிர் பவைபோன் முழங்கி யிடிபயிற்றி" (பரி. 22 : 4); "கொண்மூ...........போர்ப்புறு முரசி னிரங்கி", "இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப" (அகநா. 188 : 1 - 3, 354 : 2); "படுமழை யுருமி னிரங்கு முரசு", "விழுக்கடிப் பறைந்த முழுக் குரன் முரசம்...........அரவெறி யுருமி னுரறுபு சிலைப்ப", "கொண்மூ வாக......முரசுமுழக் காக", "உருமிசை முரச முழக்கென விசைப்ப" (புறநா. 350 : 4, 366 : 1 - 3, 369 : 2 - 5, 373 : 1); "மூரிவான முழங்கி வாய் விட்ட தொப்ப, அதிர்குரன் முரசம்" (சீவக. 543); "உருமி னிடி முர சார்ப்ப" (முத்.); "முழவதிர மழையென் றஞ்சி" (திருஞா. தே.) (உ௯௦)

## வேறு

531. [1]மாகலக்கமுள் வாரணங்கண்முன்
பாகலப்பசா சுகள்பரக்கவே.

மாவென்றது குதிரைக்கும் யானைக்கும்பெயர். மூளுதல் - பொருதல். வாரணம் - யானை. பாகலம் - யானைக்குப்பகையாகிய வெதுப்புநோய்; அஃது அசாத்தியவியாதி. அதுதானும் ஒருபசாசசாதியின்பிறப்பு.

(வி - கு.) உரை. மூ. பாகலம் : "पित्तज्वरः पाकलोऽस्य कूठपूर्वस्त्रिदोषः" என்பது வடமொழி வைத்தியநூலொன்றிற் காணப்படுவது. இது கூட பாகலமென்றும் வழங்கும்; "அயர்ந்தனன் விழுந்த கோவை யச்சுதன் பரிவோ டேந்திப், புயந்தழீஇ யெடுத்து வாசப் பூசுநீர் தெளித்து மாற்றப், பயந்தரு கொடிய கூட பாகலந் தணிந்து மெல்லக், கயந்தெளி வுற்ற தென் னக் கண்மலர்ந் தழுத லுற்றான்" (வி. பா. பதின்மூன்றும்போர்ச். 159); "காலகூட மென்னும் வெங்நோய்" (பெருங். 5. 3 : 129) என்று காணப் படுதலால், இந்நோயின்பெயர் காலகூட மென்றும் வழங்கப்படுமென்று தெரிகிறது.

உரை. மாவென்றது......பெயர் : 'மாவென்றது குதிரையையும் யானையையும்' (தக்க. 534, உரை.) (பி - ம்) 1 'மாகலக்கமுற' (உ௯௧)

532. வெள்ளிவாய்மதிக் [1]குடைவிளிந்தவோர்
கொள்ளிவாய்நெடும் பேய்கொளுத்தவே.

வெள்ளியென்றது வித்தியாதரலோகமான இரண்டுசேடியில் வெள்ளியம் பெருமலையை. வெள்ளிவாய் : வாய் - இடம். மதிக்குடை : மதிபோலுங் குடையை யுடையாரென உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை ; வித்தியாதர ராசாக்கள். விளிதல் - கெடுதல்.

ஒரு கொள்ளிவாய்ப்பேய்க்கு அமர்ந்தது இரண்டு வித்தியார்த்ர லோகமும்.

(வி - கு.) மூ. கொள்ளிவாய் நெடும்பேய் : "கொள்ளிவாய்ப் பேயை யேவினன்", "கொள்ளிவாய்ப் பேயை மாட்டி" (தக்க. 660, 746); "கொள்ளி நக்க பகுவாய பேய்கள்" (திருஞா. தே.); "சுழலு மழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்" (திருவாலங்காட்டுமூத்த. 7.)

உரை. இரண்டு சேடியில் வெள்ளியம்பெருமலை : 19-ஆம்தாழிசை யுரை பார்க்க. (பி - ம்) 1 'குடைவிரிந்ததோர்' (உஅஅ)

533. விரவிவெள்ளியிற் றெரிவிபஞ்சியிற்
புரவிவெள்ளமுற் றும்புரட்டவே.

எ - து வித்தியாதரலோகத்தையொத்து ஆராயப்பட்ட கந்தருவராச்சியத்திற் குதிரைவெள்ளத்தையெல்லாம் புரட்ட எ - று.

இதுவும் ஒரு கொள்ளிவாய்ப்பேய் கொளுத்தியதெனவுணர்க.

வெள்ளியின் ; இன் உவமையின்கண்வந்தது. விபஞ்சி - யாழ்.

'விரவிவெள்ளிவெற்பற' என்பதொரு பாடமுண்டு. இதற்கு வெள்ளி வெற்பற அதனோடுவிரவிக் கந்தருவரையும் வென்றுரென்பது பொருள்.

(வி - கு.) மூ. விபஞ்சி - யாழ் ; இஃது ஆகுபெயராய்க் கந்தருவலோகத்திற்காயிற்று. (உஅக)

534. [1]மாக்கணங்கொள்படை வானநாடரைத்
[2]தாக்கணங்குக டரைப்படுப்பவே.

மாவென்றது குதிரையையும் யானையையும். இவற்றையே படையாகக்கொள்ளும் வானநாடர் சித்தரும் யட்சருமெனவுணர்க ; இதனால், அவை சித்தாசுவமெனவும் யட்சேபமெனவும் வழங்கும் ; ஹர்ஷசரிதாதி காவியங்களிற்காண்க. இவர்களைத் தீண்டியே கொல்லவல்ல பசாசுகள் கொன்றனவெனவுணர்க. இவை மந்திரசாதனம் வல்லயட்சரும் சித்தருமான பசாசுகள். யட்சராவர் ஆலின்கீழிருக்கும் மந்திரசாதகர் ; யட்சவாசமென்பது ஆலின்பெயர். அன்றியே யட்சமென்பது நாய்க்கும் மந்திரத்துக்கும் பெயர் ; இவர்கள்சேவகமும் திறமும் உடையாரெனக்கொள்க. சித்தராவார் ஆலிற்கோயிலிலுள்ள மகாகாளியின் மந்திரசாதகர் ; சித்தார்த்தகமென்பது ஆலின்பெயர். இதனை யாமளத்திலுணர்க.

(வி - கு.) மூ. தாக்கணங்கு - தீண்டி வருத்துந் தெய்வம் ; "மூப்புடை முதுபதி **தாக்கணங் குடைய**" (அகநா. 7 : 4), "மூப்புடை முதுமைய **தாக் கணங் குடைய**" (மணி. 3 : 57.) உரை. சித்தாசுவம் - சித்த அசுவம் ; சித்தர்களுடைய குதிரை. யட்சேபம் - யட்சஇபம் ; யட்சர்களுடைய யானை. ஹர்ஷ சரிதம் : இது பட்டபாணரென்ற ஸம்ஸ்கிருதகவி இயற்றிய காவியம்,

யட்சவாசம் - யட்சர்கள் இருக்கை. ஆலிற் கோயிலிலுள்ள மகாகாளி: "அகில லோகநாயகியமர்ந்ததோ ரொப்பருங் கடவு ளாலமுண்டு" (தக்க. 139.)

(பி - ம்.) 1 'மார்க்கணங்கள் பட' 2 'தாக்கணங்கு கடலிற் படுப் பவே' (உ௬0)

## இறந்ததேவர்களைப் பிரமா மீட்டும்படைத்தல்.

535. அடப்பட¹ப்பொரு தமரர்தம்படை
படப்பட²ப்ரசா பதிபடைக்கவே.

ப - ரு பூதப்சாசகணங்கள் கொல்லத் தேவர்கள் கூட்டம் படக்கண்டு சகிக்கமாட்டாது தேவர்கள் சாவச்சாவப் பிரமா மீண்டும் மீண்டும் படைக்க என் - று.

(பி - ம்.) 1 'படாவமரர்' 2 'பதின்மரும் படைக்கவே' (உ௬௧)

## பூதகணங்களின் செயல்.

## மலைகளையழித்தல்.

### வேறு

536. பள்ளிக் குன்றும்விற் குன்றுமொழி
யச்சிறகறுப்புண்டு¹பாழ்
வெள்ளிக் குன்றுபொற் குன்றுகற்
குன்றடைய வீழவே.

பள்ளிக்குன்று - ஸ்ரீ கைலாசபருவதம். விற்குன்று - மகாமேரு. பாழ் வெள்ளிக்குன்றென்றது ஈசுவரன் இல்லாதமலையென்றவாறு; அது வித்தி யாதரலோகத்துள்ளது. பொற்குன்று - பொன்படும் மலை; இந்திரன் விளையாடுவதொரு செய்குன்று.

இப்பாட்டுக் **கவிச்சக்கரவர்த்திகள்** வாக்கல்லவென்பாருமுளர்.

(வி - கு.) மூ. பாழ்: "பாழ்படு திசையெலாம் மருண்டு பார்க்குமே" (**நைடதம்,** அன்னத்தைக் கண்ணுற்ற. 71.) பாழ் வெள்ளிக்குன்று; "விஞ்சைமன்னர்பாழ் வெள்ளி வெற்பு" (தக்க. 371.)

**உரை.** பொன்படுமலை......குன்று: 'ஏமகூடம் இந்திரன் விடாயாற்றி மலை' என்றூர் முன்னும்; **தக்க.** 419, உரை.

இப்பாட்டிலுள்ள சொற்பொருளமைதிகள் அடுத்த பாட்டின் முதலடி யில் அமைந்துள்ளமையின், 'இப்பாட்டு......உளர்' என்றூர்.

(பி - ம்.) 1 'வாழ்' (உ௬உ)

### வேறு

## பூதகணங்களின் நகப்பெருமை

537. வெள்ளிக் குலக்குன்று பொற்குன்று கல்லின்
விழுக்குன் றெனப்பட்ட ¹குன்றியாவும் வீழக்
²கிள்ளிச் சிறைப்பார ³முகிரிற் கிடப்பக்
⁴கிளர்ந்தும்பர் கோமானை மானங் கெடுத்தே.

[இதுமுதல் 545-ஆம் தாழிசைமுடியப் பூதகணங்கள் தங்கள் செயல்களினால் முறையே இந்திரன், வேல், அகத்தியன்கை, கண்ணன், துவாத சாதித்தர், வருணன், தேவாசுரர், பரந்தாமன் முதலியவர்களை வென்றமை கூறப்படும்.]

கல்லின்விழுக்குன்றென்றது உணவுவிளைத்தலானும் செருவம்விளையாமையானும்; பிறவுமுணர்க. கிள்ளியென்னும் வினையெச்சமும் கிளர்ந்தென்னும் வினையெச்சமும் கெடுத்தென்னும் வினையெச்சத்தைக் கொண்டுமுடிந்தன. மானம் - செருவம்; அளவுமாம்; "தத்த மானந் தரத்துறை போகிய, விச்சைக் கொற்ற வினைய ராகி" இஃது உதயணன் கதை.

இதன்பயன் இந்திரன்வச்சிரமும் பூதங்களின் உகிரும் ஒக்குமென்றது.

(வி - கு.) மூ. விழுக்குன்று - விழுமம் குன்று; விழுமம் - சிறப்பு; தொல். உரி - சூ. 55. (பி - ம்) 1 'வீழ்குன்றியாவும்' 2 'தள்ளிச்' 3 'மற்றுக்' 4 'தளர்ந்தும்பர்' (உகங)

## பூதகணங்களின் கைப்பெருமை

538. பொற்பூ டறக்கற்ப கக்காடு சாடிப்
புகுந்தும்பர் கோன்முன்பு பூதப் பிரான்மார்
வெற்பூ டறப்போய் வெறுங்கைக ளாலே
விழுத்தோகை யான்வாகை [1]வென்வேலை வென்றே.

பொற்பு - பொலிவு.

பிள்ளையார்மேல் உவமைசொல்லாமல் வெறுங்கைகளாலே வெற்பூடற விழுத்தென இயைத்துப் பொருள்கொள்க; பிள்ளையாரைக்கொள்ளின் இகழ்ச்சியாம்.

(வி - கு.) மூ. விழுத்து ஓகையான் - வீழச்செய்து மகிழ்ச்சியினால். வென்வேல் - வெற்றியையுடைய வேல்.

(பி - ம்.) 1 'வெள்வேலை' (உகச)

539. குமிழ்க்குங் குவட்டேழு குன்றும் பிலத்தே
குளிப்பக் குறும்பூத மொன்றே குமைத்துத்
தமிழ்க்குன்றின் வாழுஞ் சடாதாரி பேர்யாழ்
தழுங்குந் திருக்கைத் தருக்கைத் தவிர்த்தே.

அகத்தியன்கை விந்தபருவதம் ஒன்றையே குமைத்தது. இங்கு ஒரு பூதம் ஏழுபருவதங்களையும் குமைத்தது.

தமிழ்க்குன்று - பொதியில்மலை. தருக்கு - செருவம்.

இதனாற்பயன் யாழ்வாசிக்கவல்லது அத்தனையே அகத்தியன்கையென்க.

(வி - கு.) மூ. குமிழ்க்கும் - தோன்றும்; "நெடுங்கண், குமிழ்த்தெழு வெம்பனி" (பெருங். 1. 46 : 223 - 4); 'குமிழ்த்தல் என்னுந்தொழில்' (தொல். புள்ளி. சூ. 91. ந.) பேர்யாழ் - பெரியயாழ்; பேர்யாழென்றே

ஒருவகை யாழ் உண்டு ; அஃது இருபத்தொரு நரம்புகளை உடையதென்பர் ; சிலப். 3 : 26, அடியார்.

சடாதாரி பேர்யாழ் : அகத்தியமுனிவர் யாழ்வாசித்தலினும் வல்லுந ரென்பது இங்கே அறியற்பாலது ; இதனை, "மன்னு மகத்தியன்யாழ் வாசிப்ப" (திருக்கைலாய ஞானவுலா. 24) என்பதும் நன்கு புலப்படுத்து கின்றது. (உகரு)

## பூதகணங்களின் மற்போர் வன்மை

௫௪௰. கடடிக குறங்கைக் குறங்காலு மோதிக்
காதுஞ் சிறைக்கை களைக்கைக ளாலே
மட்டித்து வெற்போடு மற்போர்செய் பூத
மல்லர்க் கடந்தானை மானங் கெடுத்தே.

குறங்கு - மலையடிவாரம் ; "வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்" (84) ; இது சிறுபாணாறு. சிறை - சிறகு. சிறகுக்குக் கையென்பதைக் கொடுத்தது கோழிப்போரில் 'ஒருகை பறந்தபடி' என்னும் வழக்குண்மை யின். மட்டிக்கை - தேய்த்தல். மல்லர்க்கடந்தான் - மல்லரைவென்றான் ; "உயர்திணை மருங்கி னொழியாது வருவதும்" (தொல். தொகை. சூ. 15, இளம். ந.) என்பதனுன் ஒழிந்துவந்த ஐகாரவேற்றுமை ; இதற்கு உதாரணம் 'மகற்பெற்றான்' என்பது.

(வி - கு.) மூ. சிறைக்கைகள் : "நெஞ்சுகலங்கி யஞ்சிறையான காமர் துணைக்கரம், கொண்டு தம்வயி றெற்றியெற்றி விளிப்பபோன்றன கோழியே" (கம்ப. கைகேசி. 47), "தைய றுயர்க்குத் தரியாது வெஞ்சிற காம், கையால் வயிறலைத்து.........கூவினவே கோழிக் குலம்" (நள. கலி தொடர்.) என்பவற்றில், சிறைகளைக் கைகளாக உருவகம் செய்திருத்தல் இங்கே கருதத்தக்கது. மல்லர்க்கடந்தான் - கண்ணன் ; மல்லர்க்கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து" (ஐந்திணையம்பது, 1.)

உரை. கவான், குறங்கு என்பன துடையென்னும் பொருளன. (உகசு)

## பூதகணங்களின் தோட் பெருமை

541. அலங்கற் பணைத்தோ ளிணைக்குன் றினொன்று
லடற்பூத மொன்றேழை யாகண்ட லன்றன்
விலங்கற் குழாமாரி போய்நீறு நீறாய்
விழப்பண்டு கன்மாரி வென்றானை வென்றே

அலங்கல் - பூமாலை. பணைத்தல் - பெருத்தல். இணை - இரண்டு. ஏழை - ஏழுமலையை ; ஏழையாகண்டல னென்று கூட்டாதொழிக. 'ஏழை எடுத்து' என ஒருசொல் வருவிக்க. ஆகண்டலன் - தேவேந்திரன்.

ஏழுமலையை ஒருபூதம் ஒருகையாலெடுத்தது ; ஸ்ரீ கிருஷ்ணதேவர் கன்மாரிகாத்தருளியது ஒருகையால் ஒருமலையை எடுத்தருளிய அத் திணையே.

(வி - ரை.) மூ. அடற் பூதமொன்றேழை......விழ......வென்றே : " இச் சிலை கிடக்கமலை யேழையு மிருடோ " (கம்ப. கோலங்காண். 36.) 'விலங்கற் குழாமாரி' என்றதனால், இந்திரன் மலையை மழையாகச் சொரிந்தானென்று தெரிகின்றது. (உகள)

## பூதகணங்களுடைய கண்கள் பெருமை

542. புடைக்கால மற்றொத் துருக்குண்ண [1]வேழ்பொற்
பொருப்புங் கனற்கட் கடைச்சுட்ட பூதம்
கடைக்கால மெக்குன்ற முஞ்சுட் டுருக்குங்
கடுங்கோள்க ளீராறு நாணக் கலித்தே.

புடைக்கால மற்றொத்தென்றது யுகாந்தகாலமின்றி நடுவே புகுந்த கால மொத்தென்றவாறு. கடைக்காலம் - யுகாந்தகாலம். கடுங்கோள்கள் ஆதித்தியர்கள்.

(வி - ரை.) ஒப்பு : 415. (பி - ம்.) 'வம்பொற்' (உகஅ)

## பூதகணங்களின் வாய்ப் பெருமை

543. கைந்நாக மேமேயு மாநாக நாகக்
கணங்கூட வாரிக் [1]கவுட்கொண்ட பூதம்
மைந்நாக வெற்பொன்றை யுந்தன் வயிற்றே
மறைக்குங் கடற்கோனை மானங் கெடுத்தே.

கைந்நாகம் - யானை. கைந்நாகமே : ஏகாரம், பிரிநிலை ஏகாரம். மாநா கம் - பெரும்பாம்பு. கைந்நாகமேமேயுமாநாகமாவது ஆடு குளகுமேய்ந்தா லென யானைகளையே மேயும் பாம்பெனவுணர்க. நாகம் - மலை. கணம் - கூட்டம்.

எ - து யானையையல்லது மேயாத மகாநாகங்கள் பலவற்றையுடைய பருப்பதங்களின் கூட்டங்களை ஒருகொடிற்றடக்கியதொருபூதம் பண்டு தேவேந்திரனுக்கு அஞ்சி ஒளித்த மைநாகபருவதமான மலையைத் தன்வயிற் றிலே அடக்கிய மகாசமுத்திரராசனை லச்சைப்படுத்தியது எ - று.

எனவே கடல்வயிறு மைநாகபருவதமான மரகதமலையொன்று தங்க இடம்போந்ததத்தனையே ; மகாதேவர்பூதகணத்து ஒருபூதத்தின் ஒருகொடிறு மகாபருவதங்கள் பலவற்றையும் கொண்டு அடக்கியதென்றவாறு.

(வி - ரை.) மூ. கைந்நாகமே மேயு மாநாகம் : " மைந்துமலி சினத்த களிறுமதனழிக்கும், துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் " (மலைபடு. 260 - 61), " களிறு பாந்தட் பட்டென ", " களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்." (நற். 14 : 8, 261 : 6), " யானை, விளிபடத் துழவு மகல்வாய்ப் பாந்தள் " (அகநா. 68), " பரிய களிற்றை யரவு விழுங்கி மழுங்க" (திருஞா. தே.), "களி றென்று பெரிய மாசுணம்......பெயர்தரு பிருதியெம் பெருமானை " (பெரிய திரு. 1. 3 : 10), " புழுங்குவெம் பசியொடு புரளும்போரரா, விழுங்கவந் தெதிரெதிர் விரித்த வாயின்வாய், முழுங்குதிண் கரிபுகும் " (கம்ப. தாடகை. 11), " மதக்கத மாவடங்கு பேழ்வயிற்றரவு ", " இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும், கடிய மாசுணம் " (கம்ப. சித்திரகூட. 4, 35), " பெரிய பாந்தள், மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய் சோர்ந், துறங்கின " (கம்ப. சேதுபந்தனப். 20.)

உவீர: குளகு - விலங்கின் தழையுணவு; "மறிகுள குண்டன்ன மன்னும்மகிழ்ச்சி" (நாலடி. 16.) மைம்நாகமலை மரகதநிறமுடைய தென்பதை, "குழிதர வாய்ம டுத்துக் குறையற நாரந் தெவ்விப், பழிதபக் கறுத்து மீட்டுமீ விண்ணெழீஇப் படருந் தோற்றம், கழிதுய ரொருமை நாகங் கனவரைக் கிளர்ச்சி யோர்வான், வழியனுப் பிடவெ ழுந்த மாநீலப் பாறை போன்ற" (திருநாகைக் காரோணப் புராணம், திருநாட்டுப் படலம், 12) என்ற செய்யுளும் வலியுறுத்தும்.

(பி - ம்) 1 'கவிழ்க்கின்ற' (உகக)

544. சோரிக் கடற்சாடி யிற்குன்ற மொன்றைச்
சுழற்றித் துழாய்வெண் ணிணந்துய்த்த பூதம்
பாரித்த பௌவங் கடைந்தார்க ளென்னும்
பராவின்மை தேவா சுரர்க்குப் பணித்தே.

சோரி - உதிரம். கடற்சாடி - கடல்போலுஞ்சாடி; கடலும் அதுவே, சாடியும் அதுவேயென்னலுமாம். வெண்ணிணம் உதிரக்கடற்கு அமுதம். துய்த்தல் - உண்டல். பாரித்தல் - பரத்தல். பௌவம் - கடல். பராவு - புகழ். தேவாசுரர் - தேவர்களும் அசுரர்களும். பணித்தல் - கொடுத்தல்.

இதன்கருத்து: கடல்கடைகை பெருமையல்ல; இச்சாடியில் உதிரங் கடைதல் பெருமை.

(வி - ரு.) மு. சாடி - தாழி. துழாய் - துழாவி. பராவின்மை - அபகீர்த்தி. (௩00)

545. மேலாழி யார்வெள்ளி வேதண்ட லோகம்
விழிக்கே யுருக்குண்ண வெள்ளஞ்செய் பூதம்
பாலாழி யுந்தாழ வவ்வாழி வைகும்
பரந்தாம னுந்தாழ வுட்பள்ளி கொண்டே.

மேலாழியார் - வித்தியாதர சக்கரவர்த்திகள்; மேல் - வித்தை. வேதண்டம் - மலை.

உருகின வெள்ளிமலை பாற்கடலைவெல்ல அதில் உறங்கின பூதம் பாற்கடலிற் பள்ளிகொள்ளுகிற விஷ்ணுபகவானை வென்றதென்பது கருத்து. (௩0க)

546. சென்றெட்டு வெற்பும் பணிப்பத் துணிப்பச்
செயிர்த்தெண்மர் [1]கணநாத ரினமிண்டு சிகரக்
குன்றெட்டு மிட்டெண் டிசாதேவ ரேறுங்
கோல்யானை யெட்டும் [2]விழுக்குத்து வித்தே.

சென்று - திகந்தங்களினளவும் சென்று. பணிப்பவென்றது வீரபத்திரதேவர் அருளிச்செய்யவென்றவாறு. துணிப்ப: வினையெச்சம். செயிர்த்தல் - கோபித்தல். எண்மர்கணநாதராவார் - சருவன், ருத்திரன், பசுபதி, ஈசானன், பவன், உக்கிரன், மகாதேவன், மஹிமனென்பவர்கள்;

"शर्वं रुद्रं पशुपतिं ईशानञ्च भवन्तथा, उग्रञ्चैव महादेवं महिमानं गणेश्वरम्"

விழுவென்றது திக்குப் பாலகர்களைக்குறித்தது. எட்டுமென்னும் உம்மை முற்றும்மை.

பசாசகணங்களை வீரபத்திரதேவர் பணிப்பவென்று எச்சங் கொடுக்க.

(வி - கு.) மூ. துணிப்பப் பணிப்ப எனக்கூட்டுக.

(பி - ம்) 1 'கணநாதர் திரள்வீடுசிகரக்' 2 'கெடக்' (கூ௪௬)

547. தம்பூத ராதிக ளொடுங்கூடி யாடித்
தயிராக வயிரா கரக்குன் [1]றிளக்கிக்
கும்போத ராதிகள் குடித்துத் தடித்துக்
கொள்ளாத வச்ர [2]கா யங்கொண்டு கொண்டே.

தம்மென்றது திக்குப்பாலகர்களைக்குறித்தது. பூதரம் - மலை. ஆதிக ளென்றது மற்ற இரத்தினமலைகளை. இதனாலே வயிரபருவதமான வச்சிர பருவதம் தேவேந்திரனுடைய ஆயுதமெனவறிக.

வச்சிரபருவதத்தைத் தயிராக்கிக் கும்போதரரென்னும் பூதகணநாதர் முதலாக எல்லாரும் அத்தயிரைக்குடித்துத் தடித்து வச்சிரசரீரம் பெற்றார். அது வேண்டற்பாடல்லாமையாற் கொள்ளாத வச்சிரகாயமென்றார். அன் றியே தயிராற்குடிப்பதொரு மருந்துண்டு; வச்சிரகாயமென்பது; தயிரன்று மோரெனக்கொள்க. அது தக்கிர மென்னப்படும் சிக்கென்றமோருக்குப் பெயர்.

கூடியாடியென்றது விளையாட்டிற்கொள்கையும் பொருள்.

(வி - கு.) உரை. வேண்டற்பாடு - ஒருதலையாகவேண்டுவது; தக்க. 43, 506, 554, 562, 704 - உரைகள். தக்கிரம்: "ஸர்வ வ்யாதி ஹரம் தக்ரம்" (மனுஸ்மிருதி.)

(பி - ம்) 1 'றழுக்கிக்' 2 * 'காயங்கண்டு' (கூ௪௭)

548. தீவாய் வயிற்றின் பொருப்பிட் டுருக்கிச்
செவ்வாய் தொறுங்கொண்டு கொண்டும்பர் சென்மார்
வாய்வாய் தொறுங்கொப்பு ளிப்பார் களிப்பார்
மழுவாளி யார்சார [1]மாணிகளென வந்தே.

எ - து கொள்ளிவாய்ப்பேய்களின் வாய்தோறும் மலைகளையிட்டுருக்கி அம்மலை நீராயினவாறே கொள்ளிவாயல்லாதன அவையிற்றை வாய் தோறுங்கொண்டுகொண்டு சென்று யாககளத்தில் நின்றும் பிழைத்துப் போகும் தேவர்கள் வாய்தோறும் கொப்புளித்து விளையாடுவார், ஈசுவர னுடைய சாரமாணிகளைப்போல எ - று.

எனவே வாமிகள் சுரையை வாயிலேகொண்டு பிராமணர் முகந் தோறும் கூசக்கூச உமிழ்ந்தவகைபோல்வது இது.

(வி - கு.) மூ. வாய்வயின் - வாயினிடத்தே. சாரமாணி-விதூஷகன், பரி காசகன். உரை. நீராயினவாறே-நீராயினவுடனே; 'கண்டவாறே' (தக்க. 185, உரை) என்றதைப்போல. வாமிகள் - வாமாசாரத்தை யுடையவர்கள்;

இவர்கள் கௌலர்களென்றுங் கூறப்படுவோர்கள். சுரை - கள். சுரையை... பிராமணர்......கூசக்கூச உமிழ்ந்தவகை; அந்தணர் கள்ளைத் தீண்டாரென்பதும் தீண்டக்கூசுவரென்பதும் அறியத்தக்கன; "நிந்தனை நறவமும் நெறியி லூண்களும், தந்தன கண்டிலன்.........அந்தண ரில்லெனப் பொலிந்த தாமரோ" (கம்ப. விடணன். 100), 'பார்ப்பனியுங் கள்ளுண்ணுள்; பார்ப்பாருங் கள்ளுண்ணுர்' (நன். சூ. 357, மயிலை.)

(பி - ம்) 1 'மணியெனை' (௧௦௪)

549. [1]அலைகொன்று வருகங்கை வாராமன் மேன்மே
லடைக்கின்ற குன்றூ டறுக்கின்ற பூதம்
[2]மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன்
வரராச ராசன்கை வாளென்ன வந்தே.

அலைகொன்று - அலையாற்கொன்று. கங்கையைவாராமல் அடைத்தலாவது வெள்ளத்திற்குச் சிறைகோலுதல்; இது தேவர்கள் தொழில்.

ஏ - து தேவர்களால் எடுத்து அடைக்கப்பட்டமலைகளை நடுவிட்டுப் பிளந்து கங்கையை வரவிடும்பூதமானது பண்டு காவேரியைக் கிழக்குநோக்கிப்போகவொட்டாது தடுத்த [3]சையபருவதத்தை நடுவறவெட்டிய சோழன் ராசராசனுடைய திருக்கையில் பிடித்தருளின வாள்போன்றது எ - று.

கண்டனென்றது சிறப்புப்பெயர். இதனை இயற்பெயரென்று மயங்காதொழிக. ராசராசனென்பது இயற்பெயர்.

(வி - கு.) மூ. கங்கை பூதகணங்களின் சார்பானதென்று தெரிகிறது.

கண்டன்: "களகளபன்கண்டன்", "கண்டனயிராபதம்", "மானதன்கண்டன்", "கண்டனொரு பெரும்பேராகம்", "கண்டனை மேதினியாள் காந்தனை" (இராச.) கண்டனென்பது இராசராச சோழனுக்குச் சிறப்புப் பெயரென்பதைப் பின்னுள்ளவைகளும் புலப்படுத்தும்:—"கண்டன் பவனிக் கவனப் பரி", "தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற் றுலாத்திடைவண், டுழுகின்றதார்க்கண்ட னேறிய ஞான்றி னுவாமதி போய், விழுகின்ற தொக்கு மொருதட்டுக் காலையில் வேலையில்வந், தெழுகின்ற ஞாயிறொத் தான்குலதீப னெதிர்த்தட்டிலே", "களிக்குங் களிறுடைக் கண்டன்வந்தான்", "பொன்னிநன் னாடுடை வேற்கண்டனே" (ஒட்டக்கூத்தர் பாடல்.)

மலைகொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன்: "செய்கை யரிய களவழிப்பா முன்செய்த, பொய்கை யொருவனுற் போந்தாமோ - சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக், கொலைச்சிறை தீர் வேந்துக் குழாம்" (தொல். புறத். சூ. 36, ந. மேற்.) என்னும் பழம்பாட்டினுள், "சைய, மலைச்சிறைதீர் வாட்கண்டன்" என்றிருப்பது காண்க. "சுழியிட்ட காவிரிக்குச் சோணுடுவாழ, வழியிட்டவான்" (இராச.) வரராசராசன்: "அடுத்த வரராசராசன்" (இராச.)

(பி - ம்) 1 *'அலைகொண்டு' 2 'மலைகொண்டு' 3 'சையசவிந்தபருவதம்' (௧௦௫)

## பூதங்களின் விழிப்பெருமை

550. மின்வெள்ளி பொன்கொல் லெனச்சொல்லு முப்போர்
விலங்கற் குழாமோர் விழிச்சுட்ட பூதம்

பொன்வெள்ளி யெஃகென்ன வானத் [1]துலாமுப்
புரஞ்சுட்ட வீரர்க்கு மேலே பொலிந்தே.

[இதுமுதல் 556-ஆம் தாழிசைவரை முறையே புராரி, துருவாசர், கடல், வடவைத்தீ, கருடன், இராகுகேதுக்கள், கண்ணன் முதலியவர்களைப் பூதபசாசுகள் தங்கள் செய்கைகளால் வென்றமை கூறப்படும்.]

மின்னென்றதனை ஆகுபெயராக்கிப் பொன்னென்பாரும் பொன்னல்ல இரும்பென்பாருமுளர்; அவை பொருளல்ல; மின் வெள்ளி - மின்னும் வெள்ளி, மின்போலும் வெள்ளியென மின்னென்றதனை வெள்ளிக்கு அடையாக்குக. பொன்னென்றதனை இரும்பென்றுகொண்டு, அதற்கு, "பொன்புனை பகழி செப்பங் கொண்மார்" (குறுந். 16. 2), "தூண்டிற் பொன் மீன்விழுங்கி யற்று" (குறள். 931) என்பவற்றை மேற்கோள் காட்டுவாருமுளர்; அது பொருளன்று. கொல்லென்றது இரும்பை; வழக்கிடத்துள்ள கொல்லென்பதை யுணர்க. எஃகு - இரும்பு. முப்புரஞ்சுட்டவீரர் - மகாதேவர். பொலிதல் - ஒத்தல். மேலேபொலிந்தேயென்றது இஃது ஒரு கண்ணாலே சுட்டதாதலால் மகாதேவரிலும் வலியதென்றவாறு.

(பி - ம்) 1 'துலாவும்' (கூ0சு)

## பூதகணங்களின் பிறசெயல்கள்

551. [1]பொங்கக் களிற்றீ ருரிப்போர்வை கொண்டும்
புலித்தோ லுடுத்தும் படுத்தும் புயத்தே
சிங்கப் பசுந்தோல்கொ டேகாச மிட்டுஞ்
செய்யப் பெறுவல்ல பஞ்செய்து சென்றே.

பொங்க - ஈசுவரனிலும் மிகைபட. ஈருரி - உதிரம்அருவுரி; ஈர் - ஈரம். சிங்கப்பசுந்தோலென்றது, பண்டு இரணியனைச் சங்கரித்த சிங்கரூபத்தைச் சிம்புளாய் இருஞ்சிக்கொண்டு உரித்தருளிய தோலால் ஏகாசமிட்டதையை நினைந்து; "சிங்கத்துரி மூடுநிர் தேவர்கணந் தொழுநிற்பீர்" (தே. சுந்தர். திருப்பரங்குன்றம்) என்பது திருப்பாட்டு.

அரசனல்லாதோர், முடியைத் தலையில் வைக்கவும் சிங்காதனத்தே ஏறவும்பெறார்; அதுபோல, கொள்வார், உடுக்கவும் போர்க்கவும் பெறார். செய்யப்பெறுவல்லபம் சிவத்துரோகம்; அது வீரபத்திரதேவர் திருமுன் இவர்கள் கொண்டவேடம்.

(வி - கு.) மூ. மு: "தங்கிய மாதவத் தின்றழல் வேள்வியி னின்றெழுந்த, சிங்கமு நீள்புலி யுஞ்செழு மால்கரி யோடலறப், பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே, செங்கயல் பாய்கழ னித்திரு நாகேச் சரத்தானே" (சுந்தர. தே.) படுத்து - விரித்து. ஏகாசம் - மேற்போர்வை.

உரை. இருஞ்சுதல்: 630 - ஆம் தாழிசை உரையைப்பார்க்க.

(பி - ம்.) 1 'பொங்கர்க்' (கூ0எ)

552. சங்கும் பொலன்கற்ப கக்காவு மாவுஞ்
சதுர்த்தந்தி யுஞ்சர்வ முந்தேரும் வாரிப்

பொங்குங் கடற்கே புகப்போக வீசும்
பூதந் தபோவாரி கோதம் புரைத்தே.

பொலன் - பொன். மா - குதிரை. போக - கடலின் நடுவே புக. தபோவாரி - துர்வாச மகாமுனி. கோதம் - குரோதம்.

இது பண்டு மகாமேருசிகரத்தில் மானசதடாகத்தில் அகமருஷண யாதாளயோகம் பண்ணின துர்வாசர் எழுந்துநின்று தேவேந்திரனைக் கண்டு உபசாரமாக ஒருபுட்பமாலைகொடுப்ப இந்திரன் வாங்கப்புகுமளவில் அவன் அயிராபதம் அதனை வாங்கிக்கொண்டு காலிலும் நெற்றியிலும் அடிக்க ரிஷிகோபித்துச் சாபமிட்ட கதை. இவைசுட்டிப்போலும் அமிழ்ந்து குடைந்தது.

" புரையுயர் பாகும் " (தொல். உரி. சூ. 4.) அவ்விருடி கோபத்திலும் பெரிதாயிற்று ஸ்ரீ பூதகணநாதருடைய கோபம்.

(வி - கு.) மூ: தபோவாரி கோதம் : " அரம டந்தையர் கற்பக நவநிதி யமிர்தம், சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற், றொருபெ ரும்பொரு ளின்றியே புவரிபுக் கொளிப்ப " (கம்ப. அகலிகைப். 18.) கோதம் : " கோதம் படாதி " (தஞ்சை. 294.) சதுர்த்தந்தி - நான்கு தந்தங்களை யுடையது. (௧௦அ)

553\. நீரின்றி யேசென் னெருப்புண் டறுத்தும்
நெருப்பின்றி யேநீரை நேரே குடித்தும்
காரின்றி யேநின் றிடிக்கின்ற பூதங்
கடற்குங் கனற்குங் [1]கடுங்கௌவை கண்டே.

நீரைநேரே குடித்து நெருப்பைத்தின்னுமிடத்து நெருப்பு அவ்வியாதிகளைக்கெடுக்கும் ; நீர் வியாதிகளை யுண்டாக்கும் ; " व्याधीनामाकरं तोयं " என்றது வாகடம் ; தோயம் - நீர். காரின்றியே நின்றிடிக்கின்றவென்றது கடல் கார்காலத்து ஓசைமிகுமென்பதை நினைத்து. கௌவை - துக்கம்.

(வி - கு.) மூ. செல் நெருப்பு - இடியாகிய நெருப்பு. கனல் - வடவைத்தீ. உரை. நீர்வியாதிகளை யுண்டாக்கும் : குறள். 883-ஐயும் அதன் விசேடவுரையையும் பார்க்க.

(பா - பே.) 1 'பெருங்கௌவை' (௧௦௯)

554\. மஞ்சூடு வேவக் கொளுத்துங் கனற்கண்
மாநாக மோரெட்டு மட்டித் தவற்றின்
செஞ்சூடி காகோடி [1]சிந்தப் பறித்துச்
சிறைப்புட் [2]குலங்காவ லன்சீர் சிதைத்தே.

மஞ்சு - மேகம். ஊடுவேகல் - உள்ளுறவேவகை. கனற்கண்ணென்றது திட்டிவிஷத்தை.

மாநாக மெட்டுமாவன முன்னே (99 - தாழிசை) சொன்னோம்.

இவையிற்றைப்பிடித்துக் கொன்று இவையிற்றின் தலையின் சூடிகாகோடிகளான மாணிக்கங்களைப் பறித்தாரெனக் கொள்க. இது ஸ்ரீ பூதகணநாதர் கருடபகவானை வேண்டற்பாடு கெடுத்தது.

(வி - ரு.) மு. மட்டித்து - தேய்த்து; தக்க. 540, உரை. உரை. திட்டிவிஷம் - கண்ணில்விஷமுடைய பாம்பு. இது நஞ்சுவிழி யரவு, அழற்கணுகமெனவும் கூறப்படும். இதன்விழிக்கு எதிர்ப்பட்டன அழியும்; இதனை, "திட்டி விடமுணுஞ் செல்லுயிர் போனல்" (9 : 49), "திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி" (11 : 100), "திட்டி விடமுணச் செல்லுயிர் போயதும்" (21 : 40), "அழற்க ணுக மாருயி ருண்ண" (23 : 69), "நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி" (23 : 84) எனவரும் மணிமேகலை யாலும், 'புத்தன் திருஷ்டி விஷமாய்ப் பிறந்த ஜாதகத்து......கண்விழிப்பிற் பிராணிகள் சாமென்றறிந்து தன் கண் விழியாதே கிடந்தமையின்' எனவும், 'நீ திருஷ்டிவிஷமான காலத்து......அதற்கஞ்சி விழியாது கிடந்தது என்னே' எனவும் வரும் நீலகேசி விருத்தி சமய திவாகரத்தாலும், "கண்கிழித் துமிழ் விடக் கனலரா வரசு" (தாடகை. 10), "திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை" (கும்பகர்ண. 80) எனவரும் கம்பராமாயணச் செய்யுட்களா லும் அறியலாகும். நாகஅரசர்களுள் ஒருசாரார் (லிங்கவம்ச அரசர்) திருஷ்டி விஷகுல திலகரெனச் சிறப்பிக்கப்படுவர் (Epigraphia Indica, Vol. III. p. 232 பார்க்க.); தக்க. 645, உரை.

(பி - ம்.) 1 'பலகோடி சிந்தும்' 2 'குலக்காவற் சீரைச் சிதைத்தே" (கக0)

555. கட்டுக்கொள் [1]பொற்றேரின் ஞாயிற்றை யுந்தண்
[2]கதிர்க்கோளை யும்பாரி டஞ்சென்று கௌவிச்
சுட்டுக்கொல் கூசிக்கொல் விட்டும் பிடித்தும்
[3]தொடர்ந்திராகு கேதுக்கள் [4]சீலந் தொலைத்தே.

கட்டுக்கொளென்றது சோதிச்சக்கரத்தினுடனே நுகத்தினுடனே மகா மேருவுடனே கட்டுக்கொண்டவென்றவாறு. தண்கதிர்க் கோள் - சந்திரன்; சந்திரனுக்கு விமானமல்லது தேரில்லை. பாரிடம் - பூதம். சுடுவது ஆதித்த மண்டலம்; கூசுவிப்பது சந்திரமண்டலம்.

ராகுகேதுக்களுக்கு விடுவதும்பற்றுவதும் உண்டென்னும் பொரு ளுணர்க.

(வி - ரு.) மு. சீலம் - இயல்பு.

உரை. சந்திரனுக்கு விமானமல்லது தேரில்லை: "செவ்வழிக் கதிரோ னென்றுந் தேரின்மே லன்றி வாரான், வெவ்வழித் தெனினுந் திங்கள் விமா னத்தின் மேல தென்றூர்" (கம்ப. மாரீசன்வதைப். 112), "மதிகேழ்கிளரு மானத், தட்டிரவி தேரொடு தகர்ந்துமுரி வாக" (கந்த. தகரேறு. 7.) 'ராகு கேதுக்களுக்கு விடுவதும் பற்றுவதுமுண்டு' என்றது, சூரிய சந்திர கிரக ணங்கள் யாண்டுதோறும் நிகழ்தல் பற்றி.

(பி - ம்.) 1 'பொற்றேரை' 2 'கதிரோனையும்' 3 'தொடராகு' 4 'மானந்' (ககக)

556. மக்கா [1]ணுமக்கம்ம தாய்காணும் [2]யாநீர்
மறந்தீர்க ளென்றென்று வஞ்சப்பெ ணங்குப்
புக்காண் முலைக்கண்க ளாலாவி [3]யுண்டப்
பொய்ம்மாய ஞர்செய்தி போகப் [4]புணர்த்தே.

மக்கள் மக்காளென்று விளியேற்றது. "அம்ம கேட்பிக்கும்" (தொல். இடை. சூ. 28.) மக்களென்றது தேவாசுர சாதிகளையல்ல. வஞ்சப் பெண்ணுவாள் மாயாசத்தி. இவள்போலும் மாகேசுவராதிகள் மகானென்னும் மூலப்பிரகிருதிக்குப்பின் எண்ணுஞ்சத்தி. இது நையாயிக சித்திக்கும் ஒக்கும். மக்காளென்றது பொய்யே பூதப்பசாசுகளுக்கு.

பண்டு பூதனையென்னும் பசாசின் முலைநஞ்சை ஸ்ரீ கிருஷ்ணபகவான் அமுதுசெய்து கொன்றருளினபடி கூறியது.

(வி - கு.) மு. மக்காளென்றது பூதகணங்களை. 'முலைக்கண்களாலாவி யுண்ட பொய்ம்மாயனார் செய்தி' பாகவதம், பூதனையைக்கொன்ற அத்தியாயத்தால் அறியப்படும்.

(பி - ம்) 1 'ணுமக்கன்னை' 2 'யாய்நீர்' 3 'உண்ணப்' 4 'புதைத்தே' (௧௧௨)

## வேறு

557\. எயிருர வாயார மிடருர வொருகாலு மெரிதீயரு
வயிருர வாருத வடவாற விமையோரை வரவாரியே.

[இதுமுதல் 566-ஆம் தாழிசைமுடியத் தேவர்களைப் பூதகணங்கள் முற்றும் அழித்தலும், அவர்கள் யாவரும் இறந்து பேய்களாதலும் கூறப்படும்.]

வடவு - மெலிவு. ஒருகாலும் எரி தீயருவென்றது எல்லார்க்குமொக்கும்; பேய்க்கு மிக்கிருக்கும்.

(வி - கு.) மு. எரிதீயென்றது பசித்தீயை; "மொய்த்தபூதம் வயிற்றெரி மூண்டவே", "பேருதரத்தீ" "வயிற்றுத்தீயாக" (தக்க. 568, 570, 756.) (௧௧௩)

558\. அரிதின்று போரென்று கோனஞ்ச
வமிர்தோடு மமிர்துண்டெழும்
கரிதின்று பரிதின்று தேர்தின்று
முளிகூளி களிகூரவே.

கோன் - தேவேந்திரன். அமிர்தோடுமமிர்துண்டெழும் கரியென்றது சமுத்திரம் கடைகின்றகாலத்து அமிர்தத்தோடும் அதனை உண்டு எழுந்த அயிராபதத்தை. தேரென்றது ஆதித்தர் தேர்களையும் விமானங்களையும். முளிதல் - உலர்தல்.

(வி - கு.) மு. அரிது இன்று போரெனப் பிரிக்க. அமிர்தோடு மமிர்துண்டெழுங் கரி: "அமுதில் வந்த வயிராபதம்" (தக்க. 664.) (௧௧௪)

## தேவர்கள் இறந்து பேய்களாதல்

559\. தேரில்லை கரியில்லை பரியில்லை யிவைநிற்க தேவென்பதோர்
பேரில்லை சுரராசன் விடுசேனை [1]பேய்தின்று பேயாகியே.

தேவென்பதோர் பேரில்லையென்றது மனுஷ்ய சாதியிலும் தேவர்களுடைய நாமம் இட்டாரையும் கொன்றன பேய்களென்றவாறு. பேயல்லது இல்லையாகையும் பொருள்; தேவெல்லாம் பேயாகையுமாம்.

(வி - கு.) மு. தேவென்பதோர் பேரில்லை: "வானரப் பேரு மாளும்" (கம்ப. கிட்கிந்தை. 6.) (பி - ம்) 1 'போய்நின்று' (௧௧௫

## வேறு

560. பரந்தர னூர்படை யூழியி லாழியை யொத்தது
பாயெரி கொன்று படுங்கடல் போற்குறை பட்டது
புரந்தர னூர்படை வந்து [1]படும்படு மும்பர்கள்
பூதமும் வேதா ளங்களு மாயே புகுதவே.

ஏ - து ஈசுவரனுருடைய படை பரந்து யுகாந்தகாலத்துச் சமுத்திரத்தை ஒத்தது. தேவேந்திரனுடைய படை வடவாமுகாக்கினியாற் குறைபட்ட சமுத்திரசலத்தை ஒத்தது. பின்னைப் படும் தேவர்களெல்லாரும் பூதபசாசுகளாய்ப் பிறந்து ஈசுவரன்படையிற் புகுந்தனர் எ - று.

(வி - கு.) மூ. பரந்து அரனூர்படை. அரனூர்படை ஊழியிலாழியை யொத்தது : தக்க. 428. உம்பர்கள் பூதமும் வேதா ளங்களு மாயே புகுதவே: "அமரரா யுடலுண் டார்க ளலகையா யுடலுண் பாராய்ச், சமருளார் படைகண் மாய்ந்து தம்பிரான் படையாய்ச் சூழ" (திருக்குற். தக்கன்வேள்வி யழித்த. 59.)

(பி - ம்) 1 'படும்படை யும்பர்கள்' (௫௬௬)

561. தந்தடி தின்றனர் தந்தலை மூளை விழுங்கினர்
தத்த [1]முரத்துகு மாறு தடுத்து மடுத்தனர்
சிந்தடி [2]வன்குற ளாலல கைக்குல மாகிய
தேவர் பிறப்பு மிறப்பு மிலாதவர் செத்தே.

தடி - மாங்கிசம். உரம் - மார்பு. ஆறு - உதிரயாறு ; ஆகுபெயராக்கலுமாம் ; தந்திரயுத்தியுமாம். சிந்தடிவன்குறள் - பூதம் ; சிந்தடி - சிற்றடி. வன்குறள் - வலியகுறள் ; இங்கு முதற்பெயராய்ப் பொருள்படுவது. வன்குறளென்பதே சிந்தடியையுடையது. ஆலென்றது ஒடுவென்னும் வேற்றுமை ; இதனை, "யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்" (தொல். வேற்றுமைமயங். சூ. 23) என்பதனாற் கொள்ளாதே அம்பால்வீழ்ந்தான் அம்பொடுவீழ்ந்தானென்பது போலக்கொள்க. குறளாலலகைக்குலமாகிய வென்றதனை உம்மை தொக்கதாக்கிப் பூதமும் பேயுமானரென்றலுமாம். இங்குப் பிறப்பாவது கர்ப்பக்கிரகம்புகுதல். 'சிந்தடி வன்குறளோடலகைக்குலமாகிய' என்று பாடஞ்சொல்லின் உம்மைதொக்கது செய்யுள் விகாரமெனவுணர்க. செத்து - ஒத்து.

(வி - கு.) மூ. இப்பாட்டோடு, "உலந்தாருடல் கடலோடுற உலவாவுடலுற்றார், அலந்தார்நிசி சரராமென விமையோரொடு மார்த்தார்" (கம்ப. கரன் வதைப். 93) என்பது ஒப்புநோக்கத்தக்கது. சிந்தடிவன்குற ளாலலகைக் குலம் : "தேரை நடப்பன போற்குறள் சிந்திறெ, டோரு நடந்தன", "கொட்டுப் பிடிபோலும் கூனுங் குறளாமை, விட்டு நடப்பனபோற் சிந்தும் விளைந்து" (சீவக. 631, 2798) ; குறளுஞ் சிந்து மிதந்தன" (சூளா. சுயம் வர. 124) ; "சிந்தொடு குறளுங் கூனும்............சுற்ற" (கம்ப. கோலங் காண். 23.) இத்தாழிசையில் யாப்பின் அங்கமாகிய சிந்தடி குறளடி என்னும் பெயர்கள் தொனிப்பது காண்க. உரை. 'முதற் பெயராய்ப் பொருள் படுவது' என்றது, குறுமையை உணர்த்தும் குறளென்னும் பண்புப்பெயர்

பூதத்திற்காயினமையின். குறளாலலகைக்குலம்.........என்றலுமாம் : இப் பொருள் கொள்ளுமிடத்து ஆவென்பதை அசையாகக் கொள்க.

(பி - ம்) 1 'மரந்தருசோரியெடுத்து மடுத்தனர்' 2 'சென்றனவேயல கைக்' (கஎ)

562. [1]ஆடாவிழியிணை காகமிருந்து பறிப்பன
வடிபடி தோயா தனகத நாய்க ளலைப்பன
வாடா மிஞிறிமி ராமுடி மாலை துகைப்பன
வல்வா யெருவைகள் வானோர் பெருமிதம் வாழியே.

கதம் - வலி. வாடாமாலை, வண்டு இமிரா மாலை : கற்பகமாலை ; "ஆடுவண் டிமிரா வழலவிர் தாமரை, நீடிரும் பித்தை நிவப்பச் சூடி" (பெரும்பாண். 481 - 2) ; பாணுறு. எருவை - கழுகு. பெருமிதம்-வேண்டற் பாடும் கருவமும்; "பெருமை பெருமித மின்மை சிறுமை, பெருமித மூர்ந்து விடும்" (குறள். 979.)

(வி - கு.) மு. ஆடாவிழியிணை காகமிருந்து பறிப்பன : "கருட னஞ் சுறு கண்மணி காகமுங் கவர்ந்த", "அரக்கன்விழி காகங்களுண்டபோது" (கம்ப. கரன்வதைப். 88, சூளாமணிப். 15.) ஆடாவிழியிணையென்றார், தேவர் களாதலின்.

(பி - ம்) 1 * 'ஆடாவிமைவிழி' (கஅ)

வேறு

563 போர்த்தே ரிவுளி தின்றாளும்
பாகுமிசைந்து பூட்டழிந்தே
தேர்த்தே ரென்ன வரும்[1]பேய்த்தேர்
தேவ ருலகிற் றிரியுமால்.

போர்த்தேரென்றது ஐ ஒடு கு இன் அது கண்ணென்னும் இவ்வா றென்னும் ஆறுருபுமேற்கும் (தொல். புணர். சூ. 11.) இவுளி-குதிரை. ஆள்-வீரபுருஷர் ; தோராட்களென்னும் வழக்குணர்க ; ஆளுதல் தெரிதலுமாம். பூட்டழிகையாவது குதிரையும் ஆளும் பாகனு முதலானவெல்லாம் அழிகை. என்ன - என்று சொல்ல. பேய்த்தேர் - தேர்ப்பேய்.

(வி - கு.) உரை. ஆள் - வீரபுருஷர் : "சேனையாளென", "பொய்யா னையுமாளும்" (தக்க. 504, 597) ; "ஆழியும் புரவியு மாளும்", "ஆளிரண்டு நூறுள" (கம்ப. கரன்வதைப். 105, 134.) தேர்ப்பேய்-தேர்வடிவங் கொண்ட பேய்.

(பி - ம்) 1 'பொய்த்தேர்.' (கக)

564. அமையோ [1]மென்னுமலகையினங்
தின்றுவிடாப்பண் டமிர்துண்ட
இமையோ ரிமையாப் பேயாகி
யிந்த்ரலோகத் தீண்டுவரால்.

அமையோமென்றது பசி அடங்கி அமைந்திலோமென்றவாறு. அமிர் துண்ட இமையோரென்றது ஆட்சேபம். ஈண்டுதல் - நிறைதல். ஆல் : அசைச்சொல்.

(பி - ம்) 1 'மின்னமலகை' (கூ௨0)

## வேறு

565. [1]முடைகமழ்ந்து தசையிழந்து முதுநரம்பொ டென்புமாய்
அடையவிந்த்ர லோகமும் பசாசலோக மாகவே.

முடைநாறுகையும் உடம்பின்மாங்கிசமின்றியொழிகையும் பழநரம்பும் பழுவென்புமாகையும் பேய்க்கு லட்சணம்.

இந்திரலோகம் பசாசலோகமாகையாவது பொன் இரும்பாகை.

(பி - ம்) 1 'முடைதளர்ந்து' (கூ௨க)

566. [1]முடையழுங்கி யமிர்தநாறி யழகமைந்த [2]மொய்ம்பினல்
அடையவும் பசாசலோக மிந்த்ரலோக மாகவே.

உண்டுபருத்துச் சம்பிரமித்த அதனலே பொல்லா நாற்றம் நீங்கியும் தேவர்களுடைய சரீரத்தையே பலகால் விழுங்குதலால் அமிர்தம்நாறியும் தேவர்கள் அழகால் நிறமும் தேவர்கள் பெற்ற வலியால் வலியும் பெற்றன பேய்களெனவறிக.

இஃது இரும்பு பொன்னுகை ; ரசவிசேஷம்.

(வி - கு.) உரை. இஃது இரும்பு பொன்னுகை ; ரசவிசேஷம் : 'சித்த ரசம்படக் காணி கோடியைப் பேதித்தாற் போலச் சுவர்ண மயமாய்த்து' (தக்க. 217, உரை.)

(பி - ம்) 1 'முடையடங்கி' 2 'முன்பினல்' (கூ௨௨)

## பிரமா பின்னும் படைத்தலும் அமரர் எழுதலும்

## வேறு

567. பின்னையும் பிதாமகன் படைக்கப் பேரமர்
முன்னையி னெழுமடி முடுகி [1]மூளவே.

பிதாமகன் - பிரமன்.

இவன்படைப்பது முன்னைத்தேவர்கள் ஆன்மாவிற்கே சரீரங்கொடுப்பது. இப்பொருள் அருகர்க்கும் ஒக்கும் ; பௌத்தர்க்கும் சிறிது ஒக்கும். சுத்த சைவரான மாகேசுவரர்க்கு ஆன்மாப்பிறக்கின் சிவலோகத்திற்பிறத்த லல்லது முன்புள்ள சரீரமே வருகை பொருளல்ல. ஆதலால் அவர் சமய சித்தாந்தம் இந்திரஜால மெனவறிக.

(வி - கு.) எழுமடி : "எழுமடி கித்தியா" (குலோத். பிள்ளைத்.)

(பி - ம்) 1 'வீழவே' (கூ௨௩)

568. பித்த வானவ ரெங்கே பிழைப்பது
மொய்த்த பூதம் வயிற்றெரி [1]மூண்டவே.

[இதுமுதல் 590-ஆம் தாழிசைமுடிய வானவர் நான்கா முறை வீரபத்திரர் படையொடு பொருது அழிதல் கூறப்படும்.]

பித்தவானவரென்றது அவிர்ப்பாக முண்கைக்குப் பித்தேறிச் செத்துச் செத்துப் பிறந்த வானவர்களென்றவாறு.

(வி - கு.) மூ. பித்த வானவ ரெங்கே பிழைப்பது : "பின்னை யாரவர் கையிற் பிழைப்பரே" (தக்க. 590.) வயிற்றெரி - உதராக்கினியாகிய பசித்தீ ; தக்க. 557 - ஆம் தாழிசையையுங் குறிப்பையும் பார்க்க. உரை. அவிர்ப்பாக முண்கைக்குப் பித்தேறிச் செத்துச் செத்துப்பிறந்த வானவர்கள் : "சாவமுன் னுட்டக்கன் வேள்வித் தகர்தின்று" (திருவாசகம்.)

(பி - ம்) 1 'மூழ்கவே' (ருஉச)

569. மேலுங் கீழும் வெளிப்பட வான்விடும்
கோலுங் குந்தமு மேவிளை கொள்ளியே.

வானென்றது தேவர்களை ; பிறந்தவழிக்கூறலான ஆகுபெயர். ஆயுதம் விட்டபொழுது மேலுங்கீழும் மறைந்தன. அது கீழ்நின்றார்க்கு மேல் மறைகை ; மேனின்றார்க்குக் கீழ் மறைகை. அவை வெளிப்படுகையாவது ஆயுதங்களைப் பூதபசாசகணங்கள் வாரிக்கொள்கை. கோல் - அம்பு. குந்தம் - ஆளெறிகோலும் தோமரமும் ஈட்டியும் சவளமும் தொந்தமும் விட்டேறும் பிறவுமெல்லாம் கொள்க. விளைகொள்ளியாவது வயிற்றின் மூண்ட நெருப்பை விளைக்குங்கொள்ளி. அவையிற்றை விழுங்கினார், அக்கினியைப் பிரச்சுவலிப்பிக்க ; விளைகொள்ளி : வினைத்தொகை ; "மண்டு மெரியுண் மரந்தடிந்திட் டற்றால்" (பு. வெ. 1) என்பதையுணர்க.

(வி - கு.) உரை. பிறந்த வழிக்கூறலான ஆகுபெயர் ; தொல். வேற்றுமைமயங்கு. சூ. 31. பிரச்சுவலிப்பிக்க - பிரகாசிக்கச் செய்ய ; தக்க. 334, 637 - உரை. (ருஉரு)

570. விட்ட தேரெலாம் வாரி விழுங்கவோ
இட்ட பேருத ரத்தீ யெரிவதே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. உதரத்தீ - சாடராக்கினி. (ருஉசு)

571. புக்க [1]வேழம் பொரியப் புகைபுறம்
கக்க வேழு பொழிலுங் கதுவவே.

எ - து தேவர்களுடைய யானைகளெல்லாம் பூதபசாசுகளின் வயிற்றிற் புக்கன ; அவ்வயிற்றிற்றீயாலும் யானைகளுடைய உடம்பின் நெய்யாலும் அவ்யானைகள் பொரிய வாயாற் புறப்பட்ட புகை ஏழுலோகத்தையும் புகப்படுத்த எ - று.

அகத்தீடு இது. பொழில் சோலையல்ல ; பூமி.

(வி - கு.) மூ. ஏழுபொழிலும் : தக்க. 70 - ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க. உரை. புகப்படுத்த - புகும்படி செய்ய.

(பி - ம்) 1 'வேழுபொருப்பும் புகை' (ருஉஎ)

572. [1]இரிந்த தப்புற மிந்திர னேவலால்
விரிந்த தீயடை யச்சென்று விம்மவே.

எ - து தேவேந்திரன் ஏவலாற் புறப்பட்ட அக்கினியெல்லாம் ஈசுவரனது படையான பூதகணநாதருக்கு அஞ்சி இரிந்தோடிப்போய் லோகத்துக்கு அப்புறஞ்சென்று விம்மின எ - று.

(வி - கு.) மூ. இரிந்தது : முற்றெச்சம். (பி - ம்) 1 'எரிந்ததிப்புறம்'
(கஉஅ)

573. சேனை யெல்லாந் திரிய விழுந்தன
ஆனை யெல்லா மணியணி யாகவே.

திரியவென்றது முன்பு விழுந்தபடி யெனவுணர்க. அணியென்றது படைவகுப்பை. (கஉகூ)

574. ஆழ மெட்டுங்கொ லவ்வயி [1]றெண்டிசை
வேழ மெட்டும் புகப்புக வீழவே.

கொல் : ஐயம்.

(வி - கு.) எண்டிசை வேழங்களையும் பூதகணங்கள் விழுங்கின.

(பி - ம்) 1 'றுந்திசை' (கூ0)

575. வீழ்ந்த வேழங்கள் வெந்து வயிற்றுவீழ்ந்
தாழ்ந்த தண்ண லயிரா பதமுமே.

அண்ணலென்றதற்கு இந்திரனைக்கொள்ளலுமாம்; அண்ணல் அயிராபதமென்னலுமாம். ஆழ்ந்ததென்றதனால் வயிற்றின் பெருமையை யுணர்க.

(வி - கு.) மூ. வெந்து : வேவ என்ற வினையெச்சத்திரிபு. (கூக)

576. மெய்ய டங்கவெந் தார்சிலர் விண்ணவர்
கைய டங்கிய செந்தீக் கதுவவே.

கையடங்கிய தீ சாரூபம்பெற்ற பூதங்களின் கைகளிற்றீயெனக் கொள்க.

(வி - கு.) உரை. சாரூபம் - சிவசாரூபம். (கூஉ)

577. [1]சோற்றுப் பாவகன் வெந்தனன் சூழ்திசை
வேற்றுத் தேவ ரெழுவரும் வேவவே.

பாவகன் - அக்கினிதேவன். சோற்றைப் பாகம்பண்ணுமவனெனக் கொள்க. சோற்றுப்பாவகன் : "ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும், வேற்றுமை யாயி னொற்றிடை யினமிகத், தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" (தொல். குற்றியலுகரப். சூ. 6.) என்பதனாற் கொள்க. வேற்றுத்தேவர் : அல்வழி; "அல்லது கிளப்பினெல்லா மொழியும், சொல்லிய பண்பி னியற்கையாகும்" (தொல். குற்றியலுகரப். 20); இச்சூத்திரத்திற் சொல்லியவென்ற இலேசாற்கொள்க; "வேனில் வேந்தன் வேற்றுப் புலம் படர" (14 : 124); சிலப்பதிகாரம். எழுவராவார் அல்லாத திசையிற் றேவர்கள்.

(வி - ரு.) மூ. வேற்றுத் தேவரெழுவர் - அக்கினியொழிந்த ஏனைத் திசைத்தேவர்கள். (பி - ம்) 1 'தோற்றுப்' (கக௨)

578. [1]சாலத் தீயி லரக்க ருபாதிகள்
ஆலத் தீயி லறவெந் தவியவே.

அரக்கர் - இராக்கதர். உபாதி - சரீரம். ஆலத்தீ - விஷாக்கினி. இதுவும் சாரூப்பியபதம்.

(வி - ரு.) உரை. 'இதுவும் சாரூப்பியபதம்' என்றதனால், 'ஆலத்தீ' என்றது கழுத்திலுள்ள ஆலகால விஷாக்கினியையெனக் கொள்க.

(பி - ம்) 1 'காலத்.' (கக௪)

579. அடைய வெந்தனர் துவாதசா தித்தரும்
உடைய வெங்கதிர் தம்மை யுருக்கவே.

இதுவும் சிவாக்கினி.

தம்மையென்றது ஆதித்தியர்களை; "ஏனை யிரண்டு நெடுமொழிக் கென்ப" என்பதனாலுணர்க.

(வி - ரு.) உரை. ஏனை......என்ப: இஃது, "ஏனையிரண்டு நெடுமுதல் குறுகும்" (தொல். உருபு. சூ. 16) என்றதன் பாடபேதமாகவேனும் அவிநய முதலிய பழைய இலக்கண நூல்களிலொன்றிலுள்ள சூத்திரமாகவேனும் இருத்தல் கூடுமென்று தோற்றுகிறது. (ககரு)

580. [1]தடஞ்செ யேகா தசரைத் தனித்தனி
முடஞ்செய் தேயவர் முத்தெருத் தெற்றியே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. முத்தெருது: தக்க. 461-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க. (பி - ம்.) 1 'திடஞ்செய்' (ககசா)

581. திங்க டண்மையிற் றேரோ னவிந்தனன்
தங்கள் வெம்மையிற் றண்மதி வேவவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. தேரோன் - சூரியன். திங்க டண்மையிற் றேரோ னவிந்தனன்: தக்க. 482. தங்களென்றது பன்னிரண்டு சூரியர்களை. (கக௭)

582. கால்கொ ளுத்துமச் செந்தீக் கடவுளும்
மேல்கொ ளுந்தகர் வீழ்ந்துழி வீழவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. கால் - காற்று. கால் கொளுத்துமச் செந்தீக்கடவுள்: வாயுசகாயனென்று அக்கினிதேவனுக்கு ஒருபெயருண்டு. தகர் - ஆட்டுக் கிடாய்; இது தகர்த்தலால் வந்தபெயர்; தகர்த்தல் - முட்டுதல். (கக௮)

583. ஏறு தூக்கு மிடியெரி [1]தீந்தவர்
ஆறு தூக்குமம் மேக மடங்கவே.

ஏறு - எறியுந்தொழில். தூக்குதல் - செய்தல். இடியெரி : உம்மைத் தொகை. ஆறென்றது நீரை. தூக்குகை - மேனின்றும் கீழ்நாற்றுகை.

(வி - ரு.) மூ. இடியெரி - இடியும் எரியும். ஆறு : ஆகுபெயர்.

(பி - ம்.) 1 'யிந்திரன், ஆறுதூக்கிய மேகமடங்கவே' (௬௩௯)

584. காந்த மூளத் திருக்கட் [1]கதிர்க்கெதிர்
போந்த வெல்லாப் பொருப்பும் பொரியவே.

காந்த - காந்துதலைச்செய்ய. மூள - மூளுதலைச்செய்ய. கட்கதிர் - சந்திராதித்தாக்கினிகள். எல்லாப்பொருப்புமெனவே சூரியகாந்தாதி யெல்லாங்கொள்க.

(வி - ரு.) மூ. கட்கதிர் - கண்ணாகிய கதிர்.

உரை. சூரிய காந்தாதி - சூரிய காந்தம், சந்திரகாந்தம், அயக்காந்தம்

(பி - ம்) 1 'கடைக்கனல்' (௬௪0)

585. எப்புத் தேளு மிடுமெப் பணிகளும்
வெப்புத் தீயில் விரவி யெரியவே.

எப்புத்தேளும், எப்பணிகளும் : விளுமுதற்சொல். புத்தேள் - தெய்வம். இடுதல் - விடுதல். பணி - பாம்பு; ஆபரணமுமா'ம். வெப்புத்தீ - வெப்பென்னுந் தீப்பெயர். அது மூன்றுகாலையுடைத்து

(வி - ரு.) மூ. வெப்புத்தீ - ஜ்வராக்கினி ; 'வெப்பு நோயுங் குருவுந் தொடர" (சிலப். உரைபெறுகட்டுரை. 1.)

உரை. அது மூன்றுகாலையுடைத்து : சுரதேவதைக்கு மூன்றுகாலுண்டென்பர். இதனைச் சிவாலயங்களிலுள்ள சுரதேவதை வடிவங்களால் அறியலாகும். (௬௪௧)

586. அனிக மாய்வரு மாகண்ட லன்விடு
முனிக [1]ணத்தர்த முத்தழல் மூழ்கவே.

அனிகம் - படை. ஆகண்டலன் - இந்திரன். முனிகணம் - ரிஷிகள் கூட்டம். இதனை ஆகண்டலன் விடும் அனிகமாய்வருகின்ற முனிகணத்தரெனக் கூட்டிக்கொள்க. முத்தழல் - உதராக்கினியும் கோபாக்கினியும் சிவாக்கினியுமெனவுணர்க.

(வி - ரு.) மூ. முனிகணத்தர் ; "பக்க மாமுனி கணத்தர் தம்மொடுங் கூடி நின்றனன் பத்மயோனியே" (தக்க. 472.) தம்-பூதகணங்களுடைய.

(பி - ம்.) 1 'ணந்தந்த' (௬௪௨)

587. விரிமு கக்கட லேழ்பெரு வெள்ளமும்
பரிமு கத்தொரு செந்தீப் பருகவே.

திரைவிரிமுகமென்பது பெய்துகொள்க. பரிமுகத்தொருசெந்தீ-வடவாமுகாக்கினி.

இப்படி முகமுடைய பூதங்களுள்ளன. பூமியிலுள்ளனவாயின எல்லாங் கடலிலுள்ளனவாயின எல்லாம் பொன்னுலகத்துள்ளனவாயின எல்லாம் பிசாசப்பிறப்பினும் உளவெனவுணர்க. இப்பொருள் **வேதவியாசமதம்; அசிதாகமத்திற் சாதனகாண்டத்திற்** கண்டுகொள்க.

**(வி - ரு.)** உரை. 'பெய்துகொள்க' என்றது திரையென்னுஞ் சொல்லைக் குறித்ததெனக் கொள்க. இதனை இசையெச்சமென்பர். (௫௮௭)

**588.** வேட்டுத் தீவர [1]விட்டன காட்டுவெங்
காட்டுத் [2]தீயின மூண்டு கதுவவே.

வேட்டு - அக்கினிகோத்திரத்தைச் செய்து. விட்டனவற்றையெனச்சாரியையும் வேற்றுமையும் ஒக்கத்தொக்கன. காட்டுவெங்காட்டுத்தீ-பாலைநிலத்துள்ள காட்டுநெருப்பு.

**(வி - ரு.)** மூ. காட்டுத்தீ தாவாக்கினியென வழங்கும்.

**(பி - ம்.)** 1 'வீடினர்விண்ணவர்' 2 'தீயெனநின்று' (௫௮௮)

**589.** பெருக வெந்தன செந்தீப் பிழம்பெழ
உருக வெந்தன தாரகா லோகமே.

தாரகா லோகம் - நட்சத்திர லோகம்.

அவ்வுலகமெல்லாம் படையாய்ப்போய் வெந்தன. (௫௮௯)

**590.** முன்ன [1]முன்ன வடைய முளியுமால்
பின்னை [2]யாரவர் கையிற் பிழைப்பரே.

**எ - து** ஈசுவரன்படையான பூதகணம் நினைக்கநினைக்கப் படைஅடையக்கெடும். பின்னை யார் அவர் கையிற் பிழைப்பார்? எ - று.

முளிதல் - வெந்துபோதல். பின்னை - பின்பு.

**(பி - ம்.)** 1 'மூலப்படையை முனிவது' 2 'யாகவுலகம் பிழைக்கவே' (௫௯௰)

## தேவர்களைப்பத்துப்பிரமரும் மீளப்படைத்தல்

**591.** பாவ காரப் பதின்மரும் யாவரும்
வேவ வேவப் படைத்தனர் மீளவே.

பாவகாரப் பதின்மராவார் தசப்பிரமர்கள்.

**(வி - ரு.)** மூ. பாவகாரர் - பாவத்தைச் செய்பவர். இச்சொல் பாவகாரிகளெனவும் வழங்கும்; "முதல்வினைச் சிந்தியாதவப், **பாவகாரிகள்**" **(பெரியாழ். 4. 4 : 1)**, "**பாவ காரிய** ரெய்தொணுக் கழுகு சூழ் பறம்பும்" **(காஞ்சிப்.)** (௫௯௧)

## பத்திரகாளியினது படையெழுச்சி

### வேறு

**592.** படைத்துவிட்டசுரர் சேனையைத்தலைவி
பத்ரகாளிபடை கண்டுபண்
டடைத்துவிட்டபடி யன்றியேயிறைவர்
முன்புநின்றனபின் பாகவே.

[இதுமுதல், 596 - ஆம் தாழிசைமுடியப் பத்திரகாளியின் படையெழுதலும் அப்படைகளின் பெருமையும் கூறப்படும்.]

எ - து பிரமர்களாலே படைத்துவிடப்பட்ட தேவசேனையைக்கண்டு இந்தச் சகத்காரணியான ஸ்ரீ மகாகாளியுடைய தந்திரமானபூதபசாசங்களெல்லாம் முன்பு வீரபத்திரதேவருடைய பூதம்வகுத்தபடியன்றி அப் படைக்கு முதற்றூசியாக முன்னேநின்று ஸகைக்கொண்டு தேவர்களைப் பொருதற்கு ஏற்றுக்கொண்டன. கொள்ளவே வீரபத்திரதேவர்படை மகாகாளிபடைக்குப் பின்னே நின்றன எ - று.

பத்துப்பிரமர்களும் இதற்குமுன்பு பட்ட படைக்குப் பத்துப்படி படைத்தாரெனவுணர்க. இதுபோலும் தேவிபடை முன்வந்து கலத்தற்குப் பொருள்.

(வி - ரு.) இதனால், பத்திரகாளியின் படைகள் வீரபத்திரதேவர் படைகளிலும் மேன்மையுடையனவென்று தெரிகின்றது. (கூசஅ)

593. மோகமோகினிகள் யோகயோகினிகள்
[1]யாகசம்மினிகண் முலைவிடா
[2]நாகசாகினிகள் வீரபைரவக
ணதசாதகர்க [3]னண்ணியே.

எ - து பிராணிசாலங்கட்கு மோகங்களைப்பண்ணும் மோகினிகளும் ஒன்றோடொன்று சம்பந்தம்பண்ணுகின்ற சிதானந்தயோகத்துக்குக்கர்த்தரிகளான யோகினிகளும் யாககாரியமான வேதோத்தேசஅவிர்ப்பாக மந்திரகாரணிகளான சீரசுவதிகளும் அனுபோக காமசுகம் விடாத சுவர்க்க போக ராசப்பெண்களும் இவர்களெல்லோருக்கும் தலைவிமாரான பைரவவேஷதாரிகளும் ஓங்கார உங்கார சப்தப்பிரதானமான நாசக்கிருதமான மௌனஞானிகளுமாகிய ஆரணசடங்கமான மகாதந்திரம் வந்து கூடின எ - று.

முலையென்றது காமானுபோகத்தை; சகத்திரவேதி யென்னும் அதன் பெயராலுணர்க; இதற்குக்காரணம், ஒருறுப்பு சருவாங்கத்திற்கும் ரோமபுளகித கம்பித சுகானுபோகத்தைக் கொடுத்தலே; இன்னும் சுவர்க்க வேதியென்றும் குயத்திற்குப்பெயர். சம்மினிகள் - சர்மினிகள். நாகம் - சுவர்க்கம்.

(வி - ரு.) மூ. யோகினிகள், சம்மினிகள், சாகினிகள்: இவர்களைப்பற்றிய செய்திகள், முறையே 87, 88, 89-ஆம் தாழிசைகளின் உரைகளால் அறியலாகும்.

உரை. கர்த்தரிகள் - தலைவிகள். ஆரண சடாங்கமான மகாதந்திரம்: **'ஷடங்கதேவதாயுக்தா'** என்பது **லலிதாஸஹஸ்ரநாமத்**தில் 386 - ஆம் திருநாமம். சகத்திரவேதி: இதன் இயல்பை 28-ஆம் தாழிசை யுரையா லறிக.

(பா - ம்.) 1 'யாகசாகினிகள்' 2 'நாகடாகினிகள் வீரவயிரவர்கள்' 3 'னண்ணவே' (கூசகூ)

594. யானையாளிபரி [1]யேறுதேர்களென
வெண்ணில்கோடிபல பண்ணியிச்
சேனையாளென வநேகபூதமொடு
செய்தபேய்களொடு செல்லவே.

யானையாளியென்றது ஒருமிருகமென்பாரும் யானையும் யாளியுமென உம்மைத்தொகையென்பாருமுளர். யாளியென்பது படையின் சுகாசன வாகனங்களின் பெயர். யாளி வாகனமாதற்கு, "யாமாமாநீயாமாமா யாளீ" (திருஞா. தே. சீகாழி) என்பது மேற்கோள்; இது திருமாலைமாற்று. எதி - ஆயுதம். வாளென்பாருமுளர். சேனை - படையினது சமூகம். ஆள் - வீரபுருடர்.

(வி - கு.) மூ. ஆள் : 563-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க; "ஆளழி வாங்கி" (சிலப். 26 : 233.)

(பி - ம்.) 1 'யேறுதேர்களென' (கூ௯0)

## வேறு

595. கொண்டதிருக்கோ லங்களிருக்கும்
படியடியோமே கூறவிருப்பேம்
அண்டமனைத்துஞ் சூழவரும்பே
ராழிகளாமே யாழியவர்க்கே.

எ - து நாயகியுடைய மாயாதந்திரம் கொண்டதிருக்கோலங்கள் இருக்கும்படி யாங்களோ சொல்லச்சமைந்திருப்பேம்! ஈது எங்களால் முடியாது. இந்தச் சகதண்டமுழுதும் சூழ்ந்துகொண்ட சக்கரவாளபருவதங்கள் இப் படையில் ஒருவர் கையில் ஓராழியாம் எ - று.

எனவே கையோடுகூடின காலத்துச் சக்கரமாம்; விரலோடுகூடின காலத்து ஆழிமோதிரமாம்.

கூறவிருப்பேமென்றது சொல்லுதற்கு வீற்றிருப்பேமென்னும் நயமுமாம்; வாணுளின் அற்பத்தைச் சொல்லிற்றுமாம்.

(வி - கு.) மூ. இருக்கும்படி - இருக்கும் விதம். 'பேராழிகள்' என்றதனுல் சக்கரவாளங்கள் பலவென்பது பெறப்படும்; 'அனந்தசக்கரவாள முண்டென்னுங் கதையால்' (தக்க. 138, உரை.)

உரை. ஆழிமோதிரம் - ஒருவகை மோதிரம்; "வாழிமணி யாழி" (கம்ப. சூளா.) கூறவிருப்பேமென்றது......நயமுமாம் : இக்கருத்துடன், 221 - ஆம் தாழிசையில் ஆளுடைய பிள்ளையார் கதையைச் சொன்ன நாமகளைத் தேவி இருக்கச்செய்ததைப் பற்றிக் கூறியது ஒப்பிடற்பாலது. (கூ௯க)

596. உலகு [1]வகுப்பா ருலகுதொகுப்பா
ருலகுபடைப்பா ருலகுதுடைப்பார்
[2]அலகுவகுப்பா ரகிலகலைக்கூ
றடையவிடுப்பா ரவளடியாரே.

உலகு வகுத்தலாவது சுர நர மிருக கிருமிசாதி யோனிகளாக ஆன்மாக்கள் செய்தவினைகள் தோறும் சரீரம்படைத்தலும் பிறவும். உலகு தொகுத்தலாவது யோனியும் யோனிபேதாபேதங்களும் சாதியும் சங்கரசாதியும் தொழிலும் திரட்டுதல். உலகுபடைப்பாரென்றது அவாந்தர யுகாந்தங்களிலும் லோகத்தை மீளமீளப்படைப்பாரென்றவாறு. உலகு துடைப்பாரென்றது லோகமெல்லாவற்றையும் அழிப்பாரென்றவாறு.

அலகுவகுப்பாரென்றது அளவில்லாதலோகத்தை அளவிடுவாரென்றவாறு. அகிலகலைக்கூறடையவிடுப்பாரென்றது சதுசட்டி கலைஞானமான அறுபத்து நான்கு கலைஞானங்களுக்கும் விருவுத்தரம் சொல்லுவாரென்றவாறு. இவையெல்லாம் செய்வார் மகாகாளியான பரமேசுவரியுடைய அடியாரென்றவாறு.

ஏயென்றது தேற்றேகாரம்.

எனவே பிரமா விஷ்ணு ருத்திர மகேசுவர சதாசிவாதி தேவர்களும் பிறர் எல்லாரும் அவளடியாரென்றவாறு. இதனைப் **பிரமயாமளத்திற்** கண்டு கொள்க.

(**பி - ம்**) 1 'பகுப்பார்' 2 'அலகில்கொடைக்கூறடைய வெடுப்பார் அடைய மடுப்பா ரவர்தடையற்றே' (கூகூ௨)

## பத்திரகாளியின் படைகள் தேவசேனைகளோடு பொருதல்

## வேறு

597. பொய்யானையு மாளு முடன்றுபொரரா
மெய்யானையு மாளும் விழுங்கினவே.

[இதுமுதல் 603-ஆம் தாழிசைவரை பத்திரகாளியின் பொய் யுருவப் படைகளுடன் தேவர்களுடைய மெய்ப்படைகள் பொருதழிதல் கூறப்படும்.]

பொய் : ஆதிதீபம்; ஆளுக்குங் கொள்க. உடன்று - கோபித்து. பொரரா - பொருது. இவை இரண்டு வினையெச்சமும் விழுங்கினவென்றதனோடு முடிந்தன.

இப்பாட்டில் விசேடம் மெய்யைப்போலப் பொருதனவென்பது.

(**வி - ரு.**) **உரை.** ஆதிதீபம் - ஓர் அணி; இது முதனிலைத்தீவகமெனவும் வழங்கப்படும்; **தண்டி.** சூ. 38. (கூகூக)

598. பொய்யாளியி லாளிடு மெஃகிடைபோய்
மெய்யாளியொ [1]டிற்றனர் விஞ்சையரே.

**எ - து** பொய்யாளியை வாகனமாக ஏறின வீரர் எறிந்தவேல் மார் பிடைப்புக்குப் புறப்பட்டுப்போக மெய்யானயாளிமேலேறிய வித்தியாதரருங்கெட்டு வீழ்ந்தார் எ - று.

இப்பொருள் **ஸ்ரீ அரிவம்சத்திற்** கண்டது; பொய்யான மரத்தால் அமைத்த சிங்கத்தை யுணர்க.

போயென்னும் வினையெச்சம் செய்தென்பதாயினும்செயவென்பதாகக் கொள்க.

(**வி - ரு.**) **மூ.** விஞ்சையர் - வித்தியாதரர். **உரை.** அரிவம்சம் : ஒருவட மொழிநூல். (**பி - ம்**) 1 'அற்றனர்' (கூகூச)

599. பொய்த்தேரணி முட்ட வெறும்பொடியாய்
மெய்த்தேரணி யற்றனர் விண்ணவரே.

தேரணிமுட்ட - தேரொடு தேர் தாக்க. (கூகூரு)

600. [1]பொய்வாரி பரந்து புகப்புரளும்
[2]மெய்வாரி பிறங்கி விசும்புறவே.

பொய்வாரி - பொய்க்கடல்; ஆவது ஈசுவரிபடை. புரளல் - இரு கரையும் புரண்டுவருதல். பிறங்கல் - பெருத்தல்; இது விளக்கு அவி தொழில்.

மெய்க்கடல் பொய்க்கடலைக்கண்டு பின்னேக்கிச் சுருண்டு சென்றது; விசும்புற்றான் வருணராசனென்றபடி.

(வி - கு.) உரை. விளக்கு அவிதொழில்: அவிதற்கு முன் விளக்குப் படர்ந்தெரிந்து பின் அவிதலைக் குறித்துநின்றது; "அவியுறு சுடர்போலே" (திருப். திருவிடைமருதூர்.)

(பி - ம்.) 1 'பொய்வாசி' 2 'மெய்வாசி யிறங்கிவிழப்பெறவே', 'மெய்வாரி யிறங்கி' (கூருசு)

601. பொய்வந்த பதாதியு ளாவிபுகா
மெய்வந்த பதாதி விழுந்தறவே.

பதாதி - பெரும்படை. இப்படைக்குள் ஆவி புகுகையாவது இவர்கள் ஆவியைக்கொள்கை; இது 'நின்பிராணனைக்கொள்கின்றேன்' என்னும் வழக்கு. மெய்வந்த - மெய்யேவந்த: ஏகாரம் தொக்கது. (கூருஎ)

602. பொய்யாயுத வாயுமிழ் பொங்கழலால்
மெய்யாயுதம் யாவையும் வெந்தறவே.

உமிழ்தல் - புறப்படவிடுதல். ஆயுதவாய் ஆயுதத்துவாயெனக்கொள்க; மகரவொற்று இயல்புகணத்துக்கண் அத்துக்கொண்டது.

(வி - கு.) மூ. ஆயுத வாயுமிழ் பொங்கழல்: "செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன" (கம்ப. குகப். 14.)

உரை. 'உமிழ்தல்' என்பதற்கு, 'புறப்பட விடுதல்' என்று இங்கே உரை யெழுதியவாறே 110 - ஆம் தாழிசையிலும் எழுதியிருக்கின்றார். இயல்புகணம் - உயிர்க்கணம், மென்கணம், இடைக்கணம். (கூருஅ)

603. பொய்ந்நின்ற பதாகினி தந்ததுபோய்
மெய்ந்நின்ற பதாகினி மெய்கெடவே.

பொய்யேயென்னும் ஏகாரம் தொக்கது. பதாகினி, ரத கச துரகபதாதிகளும் படைவகுப்பும் பிறவுமெனவுணர்க. தந்ததென்றது படர்க்கையினும் செல்லும்; 'கண்டது' என்னும்பாடத்திற்குச் செய்ததென்று பொருள் கொள்க. மெய்க்கண்ணென ஏழாவது தொக்கது.

(வி - கு.) உரை. தந்ததென்பது படர்க்கையிலும் செல்லும்: தொல். கிளவி. சூ. 28, இளம். ந. (கூருக)

## பட்சிசாதிகணங்களின் செயல்

### வேறு

604. நுங்கள் கூறுகொள் றீரினி நொய்யகூ
றெங்கள் [1]கூறெமக் கேவிடு மென்னவே.

[இதுமுதல் 612 - ஆம் தாழிசை முடியச் சகோரம், சாதகம், கபோதம், கிளி, மயில், கின்னரம், சக்கரவாகம், கருடன் முதலிய உருவங்களை முறையே கொண்ட பசாசகணங்கள் தேவர்களுடன் பொருது அவர்களை அழித்தமை கூறப்படும்.]

இது பட்சிசாதிகணங்கள் உரைத்தது.

அவைதாம் பசாசகணங்களை நோக்கி, 'நீங்கள் நும்முடைய கூருன மாயாசக்தியையுடைய தேவாசுரரைக் கொன்றீர் ; இனி நொய்யபடை எங்களுக்காம்' என மேற்கொண்டன வென்றவாறு.

இதனை, 'உங்கள் கூறுகொன் றீரினியுள்ள கூறு' என்று பாடஞ் சொல்லின், தமிழன்று.

(வி - கு.) உரை. உங்கள்.........தமிழன்று : உங்களென்று வருவது தமிழிற் பழைய வழக்கன்று. (பி - ம்) 1 'கூறெமக்கே விடுக்கவே' (௬௯௦)

605. பானி லாவைப் பசுங்கதிர்க் கொத்தொடு
மேனிலாவுஞ் சகோரங்கண் மேயவே.

பானிலா - பால்போலும்நிலா. பசுங்கதிர் - பச்சைக்கதிர் ; பசுமைநிறத்திற்சென்றதன்று ; இளமையிற்சென்றது. சகோரம் - நிலாமுக்கி.

இதன்கருத்து, சந்திரனை நிலாமுக்கியான பூதகணங்கள் உட்கொண்டன வென்பது. இவையும் ஈசுவரனதுபடையான பேய்க்கணத்தே புள்ளீடென்னும் பசாசகணம்.

இதனை வைத்தியசாத்திரத்தில் யோகமணிமாலையில் பாலக்கிரியையி லுணர்க. இது மந்திரவாதம்.

(வி - கு.) இத்தாழிசை முதல் "திருடனிந்திரன்" (612) என்னும் தாழிசை யிறுதியாக உள்ளவற்றிற் சகோரம் முதலிய பறவைகளின் இயற்கையைக் கவி புலப்படுத்தி யிருத்தல் அறிந்து இன்புறற்பாலது.

மூ. பால்நிலா : நிலவிற்குப் பாலை உவமை கூறுதல் கவிமரபு ; "பங்குசெறிந் தன்ன பல்கதி ரிடையிடைப், பான்முகந் தன்ன பசுவெண்ணிலவின்" (நற். 196 : 1 - 2) ; "பாலெனப் பரத்தரு நிலவின் மாலை" (அகநா. 259 : 9) ; "பானிலா வெண்கதிர் பாவைமேற் சொரிய, வேனிற் றிங்களும் வேண்டுதி யென்றே" (சிலப். 13 : 27 - 8) ; "ஆசற விளங்கிய வந்தீந் தண்கதிர், வெள்ளிவெண் குடத்துப் பால்சொரிவதுபோல், கள்ளவிழ் பூம்பொழிலிடையிடைச் சொரிய" (மணி. 6 : 6 - 8); "தீம்பால் கதிர்மணிக் குடத்தினேந்தி, வீழ்தரச் சொரிவதே போல் விளங்கொளித் திங்கட் புத்தேள், சூழிருட் டொகுதி மூழ்கத் தீங்கதிர்சொரிந்து", "பானி லாக்கதிர் பாய்தரு பள்ளியே" (சீவக. 1541, 2669) ; "திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப், பைங்கிள்ளை பாலென்று வாய்மடுப்ப" (தண்டி. சூ. 54. மேற்); "உக்க பால் புரைநிலா", "தெரிந்தொளிர் திங்கள்வெண் குடத்தி னுற்றிரை, முரிந்துயர் பாற்கடன் முகந்து மூரிவான், சொரிந்ததே யாமெனத் துள்ளிமீனொடும், விரிந்தது வெண்ணிலா மேலுங் கீழுமே", சொரிந்தபா லொத்தது நிலவின் றோற்றமே", "பாலுகுத் தாலென நிலவு பாய்ந்ததால்" (கம்ப. உண்டாட்டு. 8, ஊர்தேடு. 55, 56, இலங்கைகேள்வி. 8.) சகோரங்கள் நிலவை உண்ணும் இயல்பின; "அல்லார் மதிய நிலவுண் சகோரம்" (திருவெங்கைக்கோவை, 18.) பசுங்கதிர்க் கொத்து : "பசுங்கதிர்வெள்ளைச் சிறுபிறைக்கே"

(திருச்சிற். 67.) உரை. பசுமை.........இளமையிற்சென்றது: "பெற்ற பச்சிளங்குழவி" (பாகவதம், திருவவதார. 17.) நிலாமுக்கி - நிலாவை உண்பது. (கசுக)

606. கோனம் போதரங் கும்போ தரம்புக
வானம் பாடியே [1]கூடி மடுப்பவே.

கோன் - தேவேந்திரன். அம்போதரம் - கடலும் மேகமும்; பலபொருளொரு சொல். கும்போதரம் - கும்பம்போலும் உதரம்; உதரம் - வயிறு. வானம்பாடி - சாதகப்புள்.

இவையும் பேயினமெனவுணர்க, கும்போதரமென்றதனால்.

(வி - கு.) மூ. வானம்பாடி மழைத்துளிகளை உண்ணும் இயல்பினையுடையது. இங்கே இவை பேயினமாதலின் மேகங்களையே உண்டன; "தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி" (பட். 3 - 4), "தண்டாமரைச்சுனையிற் சாதகமும்......விண்டாரை நாடுகின்ற வேங்கடமே" (திருவேங்கடமாலை, 97.) கும்போதரம்: எண்வகைப் பூதகண நாதருள், கும்போதரர் என்ற பெயருடையவர் ஒருவர் உண்டு; "கும்போதராதிகள்" (தக்க. 547), "கும்போதரன் முதுகின்மேற் சரணம் வைத்து" (திருவிளை. திருமணப். 102), "மருவடிசி லுண்டுவரு பொழுது கும்போ தரனையொத்துவருவர் மாதோ" (சித்திரச்சித்திரப். 61.)

(பி - ம்) 1 'வான்மீன்மடுக்கவே' (கசுஉ)

607. ஏறு மேறு மலைகளெல் லாம்புக
வேறு வேறு கபோதங்கண் மேயவே.

ஏறுமேறுமலைகள் - ஏறுகின்ற ஏறுகின்ற பருவதங்கள். கபோதங்கள் - மாடப்புரு.

(வி - கு.) மாடப்புருச்சாதிகள் பருக்கைக் கற்களை உண்ணுவனவாதலின் பூதகணங்களாகிய மாடப்புருக்கள் தம்முடைய தகுதிக்கேற்ப மலைகளை உண்டனவென்றார். இதுபற்றியே மாடப்புரு தாதுணம்புருவென வழங்கப்படும்: தாது - பருக்கைக்கல்; "ஒண்டுதை யுண்புற வீர்மறந் தார்" (மறைசையந்தாதி, 25.) (கசுக)

608. [1]பதங்கர் வெங்கதிர் பன்னிரண் டாயிரம்
கதங்கொ ணீலிகைக் கிள்ளை கவரவே.

பதங்கர் - துவாதசாதித்தியர். கதம் - வலி. நீலி - துர்க்காபரமேசுவரி. கிள்ளை - கிளி.

இவள் திருக்கையிற்கிளி தெய்வக்கிளியாதலின் தெய்வக்கதிரல்லது கொறியாதென்பது. கதிரென்றவிடத்துக் கிளிசென்று பாய்கை தொழில்; ஆதித்தனைப்பழமென்றுபாய்ந்த ஸ்ரீ அனுமானை நினைக்க.

(வி - கு.) மூ. பதங்கர்வெங்கதிர் பன்னிரண் டாயிரம்: தக்க. 78, குறிப்பு; கதிர்: சிலேடை. உரை. ஆதித்தனைப்பழமென்று அநுமன்பாய்ந்தது: "செழும லர்த்திரு வனையதாய் செழுங்கனி நாடிப், பழுவ முற்றிடப் பசியினாற் பதைபதைத் திரங்கி, அழுதரற்றிய பாலகனன்னைமுன் னுரைத்த, பழமக்கிது வாமெனப் பருதிமேற் பாய்ந்தான்" (இராமாயணம், உத்தரகாண்டம், அனுமப். 12.) (பி - ம்.) 1 'பதங்கொள்' (கசுச)

609. [1]பூத நாயக ரோடுர கேசரை
வேத நாயகி தோகை விழுங்கவே.

உரகம் - பாம்பு.

**எ - து** பாம்புப்படைக்குத் தலைவரான பூதபதிகளோடு நாகராசரைப் பரமேசுவரியுடைய மயில்கள் விழுங்கின எ - று.

**(வி - ரூ.)** மூ. பூதநாயகர் - படைத்தலைவர். உரகேசர்=உரக ஈசர் - நாகராசாக்கள். **(பி - ம்)** 1 'பூத' (கககூ)

610. [1]முன்ன ரம்பினு முத்தர் மிடற்றினும்
கின்ன ரஞ்சுரர் நெஞ்சங் கிழிக்கவே.

முன்னரம்பென்றதைச் சத்தசுரமாக்கித் தமிழால் எழுநரம்புமான அவையிற்றில் முதநரம்பென்பாரும் 'மூந்நரம்பு' எனப்பாடங்கொண்டு வலிவு மெலிவு சமனெனத் தமிழிலும் மந்த உச்ச ஸமமென ஆரியத்திலும் வழங்கப்படும் மூன்று தானத்திலுமுள்ள ஓசையென்பாரும் தேவ வித்தியாதர கந்தருவமான திரிவித தந்திரமென்பாரும் உளர். இப்பாடந் தவிர மென்னரம்பினு முத்தர்மிடற்றினு மென்பதொரு பாடமுமுண்டு; அது விலக்கல்ல; மென்னரம்பு - மெல்லியநரம்பு. முத்தர் மிடறு - சாம வேத ஓசை; முத்தராவார் மகாதேவர்; " முத்தன்முத்தி வழங்கும்பிரான் " (127); இது **திருக்கோவை.** அவர் மிடறுபோலும் இசையைக் காட்ட வல்லதெனவுணர்க. கின்னரம் - கின்னரமிதுன பட்சிகள்; இவைபோலும் ஏமப்புள்.

இவை தாம்வல்ல சத்தியாலே எஃகுச்செவித்தேவர்களுடையநெஞ்சைக் கிழித்துக்கொன்றனவென்பது பொருள். இது கானவேட்டுவர் இசைபாடி மிருகங்களை அழைத்துக் கொன்றாற்போல்வதெனக்கொள்க; " கள்ளமுப்பி னந்தணன் கனிந்தகீத வீதியே, வள்ளிவென்ற நுண்ணிடை மலைழ மலர்த் தடங்கணார், புள்ளுவம்ம திம்மகன் புணர்ந்தவோசை மேற்புகன், றுள்ளம் வைத்த மாமயிற் குழாத்திடைடி யெய்தினர் " (2039) இதனையுணர்க; இது **சிந்தாமணி.** காட்டவீணையும் சரீரவீணையும் ஒக்கக்காட்டின சிலபட்சிகள். இதனாற் பாடவல்லாரும் மாகேசுவரர்; ஆடவல்லாரும் அவரேயென **உம்மைக்கண்** வந்தது.

**(வி - ரூ.)** மூ. முன்னரம்பினு முத்தர் மிடற்றினும்......நெஞ்சங் கிழிக் கவே: " யாழான் மிடற்றால் வளைக்குதும் யாமென்பார் " **(குறோத். உரை,** 216), " வீணைக் ககப்பட வேழ மிடற்றுக்கும், ஆணைப் பெருமாளகப்பட " **(இராசராச.** 269.) கின்னரம் இசையறிவுடைய தென்பதை, **தக்க.** 151-ஆம் தாழிசைக் குறிப்பினால் உணர்க. **உரை.** சத்தசுரம் - ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம்; " சரிகம பதநிப் பாடற் றண்டுதை வருசெங்கையோன் " **(வி. பா.** இந்திரப்பிரத்தச். 42.)

தமிழால் எழு நரம்பு: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். மூன்றுதானம்: " மூவகையியக்கம் " என்பர்; **சிலப்.** 8: 42. அவர் மிடறுபோலும் இசையைக் காட்டவல்லது: " கீதம்பாடியை" **(பெருந் தேவபாணி,** 13.)

மகாதேவர் மிடறு சாமவேத ஓசையை யுடையதென்பது, " சங்கணி குழையினர் சாமம் பாடுவர் " **(திருஞா. தே.),** " சாமம்போற்கண்டத் தானை ", "பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே யாடினார்", "சாமவேத கந்தருவம்

விரும்புமே", "பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்" (திருநா. தே.), "சங்கரா சாமவேத மோதீ" (சுந்தர. தே.), "சாமகண்டா வண்ட வாணா" (திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா, கோயில், 3), "மாமலர்த் தெரிய லான் மணிமிடற் றிடைக்கிடந்த சாமகீதம்" (சீவக. 2038), "தங்கண்ட, மீதுல ராத சாம வேதமார்ப் பவர்போல்" (திருவிளை. மாமனுகை. 23) என்ப வைகளாலும் அறியலாகும். ஏமப்புள் - பொன்னிறப்பறவை. எஃகுச் செவி மூவகைச்செவிகளுள் முதன்மையான செவியென்பர்; மூவகைச் செவிகளாவன: தோற்செவி, மரச்செவி, எஃகுச்செவி யென்பன; "எஃகு நுண் செவிகள் வீழ்ச், செம்மையிற் கனிந்த காமத் தூதுவிட்டு" (சீவக.2718) என்பதையும் அதனுரையையும் பார்க்க.

கானவேட்டுவர் இசைபாடி மிருகங்களை அழைத்துக் கொல்லுதலுண் டென்பது, "அசுணங் கொல்பவர் கைபோ னன்றும், இன்பமுந் துன்பமு முடைத்தே" (நற். 304 : 8 - 9) என்பதனாலும் நன்கு புலனும்; அசுணமா - இசையறிவதொரு விலங்கு.

காட்டவீணை - மரத்தாற்செய்தவீணை.

சரீரவீணையென்பது பாடுவோருடைய சரீரமே. இதன் இயல்பை "யாழுங் குழலுஞ் சீரு மிடறும்" (சிலப். 3 : 26) என்பதில், மிடறுமென்ப தற்கு உரையாசிரியர்கள் எழுதிய விசேடவுரைகளால் உணர்க.

காட்ட வீணையும் சரீர வீணையும் ஒக்கக்காட்டின - வீணையிசையும் மிடற்றுப் பாடலும் ஒத்து நிற்கப்பாடின என்றபடி; "நரம்பின் முரலு நயம்வரு முரற்சி" (மதுரைக். 217), "யாழ்......இன்குரல் விறலியர்" (மலைபடு. 534 - 6), "இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ, நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்" (சீவக. 658), "அங்கையு மிடறுங் கூட்டி நரம்பளைந் தமுத மூறும், மங்கையர் பாடல்" (கம்ப. வரைக்காட்சி. 39), "யார்க்கும், நசைதரு நரம்பு கண்ட மொற்றுமை நயங்கொண் டார்ப்ப" (திருவிளை. விறகுவிற்ற. 28.)

(பி - ம்) 1 'மென்னரம்பினு மொய்த்த' (கூசுசு)

611. சக்ர மாய்ச்சென்று சக்ரவா கங்களே
விக்ர மாயுத [1]வெள்ளத்தை வெட்டவே.

**ஏ - து** சக்கரவாகப்பட்சி ஆணும்பெண்ணும் தம்மிற்பிரியாவாதலால் வாயலகுகோத்து உடம்புதழுவிச் சக்கரம்போல் வினைசெய்யவற்றாயிருத்த லால் சக்கரமாகி விஷ்ணுவின் ஆயுதங்களின் பரப்பு அடையப் போம்படி வெட்டித் துரந்தன எ - று.

விக்கிரமன் - திரிவிக்கிரமன்; விஷ்ணுக்களின் திருநாமம். விக்கிரமன் ஆயுதம்: இதன்முடிபு அறிக. இதனை விக்கிரமாயுதமெனத் தமிழாலேயும் முடிக்கலாம். விஷ்ணுக்கள் ஏவலே உயர்ந்து நின்றதென்றவாறு. இங்குப் பிணமொத்துநிற்றல் தசப்பிரமர்கள் படைத்த படைப்பெருமை யென வுணர்க.

(வி - கு.) மூ. வெள்ளம் - மிகுதி; "ஆளமர் வெள்ளம் பெருகின்" (பு. வெ. 32.) உரை. அலகு - பறவைகளின் மூக்கு; "துணையன்றில் வாயலகு வாங்கித், தணக்க" (குலோத். உலா.)

(பி - ம்) 1 'யூதங்கள்' (கூசுஎ)

612. திருட னிந்திர னுய்ந்து [1]திரியுமோ
கருட னுயிரங் கண்ணுங் கவரவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மு. இந்திரனைத் திருடனென்றது அகலிகைபாற் களவிற் சென்றமையும் தக்கன் யாகத்திற் குயிலாக மறைந்து சென்றமையும் பிறவு மாகிய களவுடைமையால்.

(பி - ம்.) 1 'திரியவே' (௬௬அ)

## பத்திரகாளி வாளியேவுதல் முதலியன

613. ஆளி யேறி யகிலாண்ட நாயகி
வாளி [1]யேவி யுலகை [2]வளைப்பவே.

[இதுமுதல் 617-ஆம்தாழிசை வரையில் பத்திரகாளி, தன் வாளியை யேவி எல்லாவற்றையும் அழித்தல் சொல்லப்படும்.]

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மு. வாளி - அம்பு. (பி - ம்) 1 'யேறி' 2 'வளையவே'
(௬௬௯)

614. எக்க வந்தமு மெப்பிண மூங்கிரி
ஒக்க வந்தொரு வாளிக் குதவவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மு. உதவ - வாய்ப்பட. (௬௭0)

615. பூமிவட்டமும் [1]போரெரி வட்டமு
நேமி வட்டமு [2]நேரொத்து நிற்கவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மு. பூமிவட்டம் - பூசக்ரம்; "நிலநேமி" (தக்க. 2), "விடாது விழுங்குவெண் டிங்களை யெங்களை வெண்ணிலவாற், சுடாது விடில்விடுந் தொல்புவி வட்டமுஞ் சூழ்கடலும், வடாதுந் தெறுதும் வலம்புரித் தாருமை தோய்வரையும், குடாதுங் குறைது முடையான் கொடிமிசைக் கோளரவே" (**துரியோதனன் கலம்பகம்**.) எரிவட்டம் - அக்கினிமண்டலம். நேமிவட்டம் - கடல். (பி - ம்) 1 'போராழி' 2 'நேரத்துள்ளேறவே' (௬௭௧)

616. [1]கொன்ற தன்றிமை யோர்பிணங் கூளிகள்
[2]தின்ற சீர்தந் திருவுள்ளஞ் சேர்த்தியே.

எ - து இப்பிரபஞ்சத்தைப் பத்துப்பிரமர்கள் ஒருவர்க்கு ஒன்பதுகோடி யாகப் படைக்கப்படைக்க மாயாதேவி அவையிற்றைக்கொன்ற படிக்கல்ல தாம் பூஷித்தது; இப்பிரமர் படைப்பெல்லாம் படப்படப்பட்டபிணங்களை அற்பமும் தோற்றுதபடி பிசாசகணங்கள் அடங்கத்தின்றபடிக்கே திருவுள் ளஞ் செய்து எ - று.

சீர் - அழகு. சீரமென்று பாடஞ்சொல்லிற் பேயின்பசியடங்கியதில் திருத்திக்கொள்கை யென்க. தன்றிருவுள்ளமெனின், தேவியின் திருவுள்ள மெனக்கொள்க.

(வி - கு.) மூ. கொன்றது - கொன்ற சீரை. உரை. பத்துப்பிரமர்களும் படைத்தமை 591-ஆம்தாழிசையிற் கூறப்பட்டது. மாயாதேவி - தேவியின் படைத்தலைவி ; பத்திரகாளி : 618-ஆம் தாழிசையைப் பார்க்க. பூஷித்தது - புகழ்ந்தது. சீரம் - சீர்ணமென்பதன் சிதைவு. திருத்தி - திருப்தி.

(பி - ம்) 1 'கொன்றுமின் றிமையோர்' 2 'தின்றதென்னத் திருவுளஞ் செய்யவே' (கஎஉ)

## வேறு

617. புங்கவாளி [1]யொன்றி னுற் புரத்ரயஞ் சகத்ரயம்
சிங்கவாளி யொன்றி ஞ லிருவருஞ் சிதைப்பவே.

புங்கமாவது அம்பின் கடைக் கவைத்தலைக்கண். இதனையுடைய வாளியான அம்பொன்றினாலே திரிபுரதகனம்பண்ணினார் மகாதேவர்; சிங்கவாளியொன்றேவிச் சகத்திரயங்களை விநாசஞ்செய்தருளினாள் தேவி; திரிபுரங்களோ சகத்திரயங்களோ பெரியன? தெரியாவெனவுணர்க. சிங்கவாளியொன்றென்றதனால் சிங்கமும் ஆளியுமொன்றென்னவுமாம். அன்றியே சிங்கத்திலேறிவந்த ஆளியொன்றினாலே சகத்திரய விநாசம்பண்ணியருளினாளென்றுமாம். இப்பாட்டில் வாளியொன்றினாலென்பதே பொருள். புங்கவாளி : வாளி - அம்பு ; சிங்கவாளி : ஆளி - ஊர்தி. இருவருமென்றது தாயுந்தகப்பனுமென்றவாறு. இதற்குக் கடாப்புகுதின் விடை : " உறுபசி யொன் றின்றியே யுலகடைய வுண்டனையே" (சிலப். 17 : 'அறுபொருள்') என்பதும், " பாரெல்லா முண்டநம் பாம்பணையான் வாராஞல் " (திருவாய் மொழி, 5. 4 : 1) என்பதும். தாயுந் தந்தையும் மக்களைக்கொல்வாரோ வெனின், " ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச், சான்றோர் முகத்துக் களி " (குறள், 923) என்பதுவிடை.

(வி - கு.) மூ. புரத்ரயம் : " பொங்குபுரத்ரயம் " (குலோத். பிள்ளைத்.)
உரை. கடாப்புகுதின் - வினவெழுந்தால்.

(பி - ம்) 1 'யொன்றின்முன்' (கஎக)

## வீரபத்திரதேவர் அருளிச்செய்தல்

## வேறு

618. இப்படிப் பட்ட பின்னு மிமையவர் படைகண் டையர்
அப்படை யின்ன நின்ற தென்கொலென் றருளிச் செய்ய.

அருளிச்செய்தவர் வீரபத்திரதேவர். பொருதவள் துர்க்காபரமேசுவரி யல்லள் ; மாயாதேவி. பொருதுவென்றபடையும் பொய்ப்படையென்பது, இதுவே இதுகாறும் சொல்லிப்போந்ததெனவுணர்க.

இந்திரஞாலங்காட்டின சிலபூதம்.

(வி - கு.) இவ்வாறு பத்திரகாளி கணங்களும் அவளம்பும் தேவர்களையெல்லாம் அழிக்கவும் பின்னும் தேவர் படை இருப்பதைக் கண்ட வீரபத்திரதேவர் அவ்வாறு நிற்பதற்குக் காரணம் என்னென்று வினவியருளினாரென்பது கருத்து.

மூ. ஐயர் - வீரபத்திரதேவர் ; " ஐயன்...ரவிபோ லெழுந்தருளும் ", " ஐயர் கைத்தொடி ", " ஐயர் விடுபெற்றமே " (தக்க. 434, 645, 648.)

**உரை.** பொருதவள் மாயாதேவி : 616 - ஆம் தாழிசை யுரையில், " மாயாதேவி அவையிற்றைக் கொன்றபடி " என்றார். இந்திரஞாலம் - இந்திர சாலம். (கஎச)

## கணநாதர் விண்ணப்பஞ் செய்தல்

619. படப்பட வயனு மக்கள் பதின்
மரும் படையா நின்றார்
[1]விடப்பட வணியோ யென்று
விண்ணப்பஞ் [2]செய்யக் கேட்டே.

[இதில், பூதகணங்கள் வீரபத்திர தேவருக்குத் தேவர் படை பின்னும் இருத்தற்குக் காரணங்கூறுதல் சொல்லப்படுகிறது.]

**(வி - கு.)** அயன் - பிரமா. மக்கள் பதின்மர் - தசப்பிரமாக்கள். விடப் படவணியோய் - விடத்தையுடைய பணியையே அணியாக உடையோய்.

**(பி - ம்)** 1 'விடப்பணிப்பணியோய்' 2 'செய்யலுற்றே' (கஎரு)

## வீரபத்திரதேவர் செயல்

620. சீறிய சினத்தீ யுண்ணத் திரிபுர மெரித்த நாளில்
ஏறின திருத்தேர் நின்று மிழிந்தன னெங்கள் வீரன்.

[இதுமுதல் 634-ஆம் தாழிசையிறுதியாக வீரபத்திரர்சினந்து போர்க் கோலம் கொள்ளுதல் சொல்லப்படும்.]

**(வி - கு.)** எங்கள்வீரனென்றது படைத்துணைபோன பேய் தேவிக்கு விண்ணப்பஞ் செய்கிறபடி ; வீரன் - வீரபத்திரதேவர். (கஎசு)

## வேறு

621. [1]மாணெனெண்மரு நான்முகத்தன மூகைசூழ வமைந்ததோர்
ஞாணென் மஞ்சன மென்கொல்காரண நாரணுதிக ணசமே.

எண்மர் - அட்டகணநாதர். நான் முகத்தன - ரத கச துரக பதாதியான படைகள். மூகை - படைக்கூட்டம்.

**(வி - கு.)** மூ. ஞாண் - போர், போர்க்களம்; இதனடியாகப் பிறந்தது ஞாட்பென்பது.

**(பி - ம்)** 1 'மாணெனெண்ணிரு நான்முகத்தவர்முன்கைசூழ்வர வந்த தோர், நாணென்' (கஎஎ)

622. காடுபோகு சடாமுடிக்கபி டேகமண்ட கபாலமே
ஊடுபோக [1]வநந்தகோடி சகத்ரதாரை யொழுக்கவே.

அண்டகபாலத்தை அண்டகபாடமென்னலுமாம்.

**(வி - கு.)** மூ. காடுபோகுசடாமுடி : 61 - ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க. அபிடேகம் - முடி ; " அபிடேகச் சொக்கன் " (திருவால. 11 : 4.)

**உரை.** அண்டகபாடம் : " அண்டகபாடக்கூழ் " (தக்க. 770.)

**(பி - ம்.)** 1 'அநேககோடி' (கஎஅ)

623. [1]செய்யகைத்திரு நாணணிந்தருள் செய்கெனத்திரு மங்கலம்
துய்யதும்புரு நாரதாதிகள் வேதவீணை தொடங்கவே.

திருநாண் - திருமங்கலநாண். வீரப்பெண்ணைத் திருக்கலியாணம் பண்ணுகை அன்றல்ல; வென்றி கொண்டநாளைச்சுட்டிற்று. தும்புருநாரதர் களம்பாடு பொருநர்; "வேதாநாம்ஸாமவேதோऽஸ்மி" (பகவத்கீதை, 10 : 22) ஸ்ரீ கீதை.

(வி - கு.) மூ. வேதவீணை யென்பது பிரமவீணை, உருத்திரவீணை, சுந்தர வீணை, பிருகதீ, கலாவதீ, மகதீ, கச்சபீ யென்பன போன்றதொரு வீணை விசேடம். உரை. வீரப்பெண்ணைத் திருக்கலியாணம் பண்ணுகை: வேடர்களை வென்ற சீவகனது செயலைக் கூறுகையில், 'வீரமகளைச் சேர்ந்தமை கூறிற்று' (சீவக. கோவிந்தையாரிலம்பகம் - உரை, இறுதி) என்று நச்சி னார்க்கினியர் வரைந்திருப்பதும், "போர்ச்சயப் பாவையும்......தன் பெருந் தேவிய ராகி யின்புற" (பரகேசரி ராசேந்திர சோழதேவன் மெய்க்கீர்த்தி), "போர்த்தனிப் பூவையும் வதுவையிற் புணர்ந்து" (ஆதிராஜேந்திரதேவன் மெய்க்கீர்த்தி), "விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்து......புதுமணம் புணர்ந்து" (முதற்குலோத்துங்க சோழதேவன் மெய்க்கீர்த்தி), "புயவரை மீது சயமகள் புணர" (அரிகேசரிதேவன் பராக்கிரம பாண்டியன் மெய்க்கீர்த்தி) எனப்பழைய முடியரசர்களுடைய மெய்க்கீர்த்திகளிற் காணப்படும் பகுதி களும் இங்கே அறியத்தக்கன. களம்பாடு பொருநர் - போர்க்களம்பாடு பொருநர்; பொருநர்களுள் இவர்கள் ஒருவகையினர்; தொல். புறத். சூ. 36, ந. உரை.

(பி - ம்) 1 'செய்யகத்திரு மங்கலத்திருநாணணிந்தருள் செய்கெனத் துய்ய' (கஎக)

## வீரபத்திரதேவர் போர்க்கோலம் கொள்ளுதல்

624. [1]பொதியில்வாழ்முனி புங்கவன்றிரு
வாய்மலர்ந்தபுராண நூல்
விதியினல்வரு தும்பைமாலை
விசும்புதூர மிலைச்சியே.

தும்பைமாலை சூடினர் வீரபத்திரதேவர்.

[இத்தாழிசையில், 'அகத்திய முனிவரருளிச்செய்த பழைய நூலின் விதிப்படி ஸ்ரீ வீரபத்திரதேவர் அதிரப்பொருதற்குத் தும்பைமாலையை அணிந்தருளினர்' என்னுமுகத்தால் தமிழ்மொழிக்கு அகத்திய முனிவர் பரமாசாரியரென்பதை இந்நூலாசிரியர் விளக்கியிருத்தல்போற்றத்தக்கது.]

(வி - கு.) மூ. புராணநூல் - பழையநூல்; இங்கே அகத்தியம். அகத் திய சூத்திரம் இக்காலத்து அகப்படாமையால் அதன் சார்புநூல் விதியே இங்குக் காட்டலாயிற்று. விதியாவது, "செங்களத்து மறங்கருதிப், பைந் தும்பை தலைமலைந்தன்று" (பு. வெ. 127) என்பது; "சூடவென்று வருத்த தும்பை" (தக்க. 639) என்பர் பின்னும்; (பி - ம்) 1 'பொதியின் மாமுனி' (கஅ0)

625. கச்சியிற்சுர சூதசீதள
பல்லவங்கன லிற்கலித்
துச்சியிற்பனி வீசுகண்ணியின்
வெண்ணிலாவை யொதுக்கவே.

கச்சி - காஞ்சீபுரம். சுரசூதம் - தேவலோகத்தின் மா. கலித்தல்-ஒலித்தல். உச்சி - திருமுடி. பனிவீசுகண்ணி - பாலசந்திரன்.

(வி - கு.) மு. கச்சியிற் சுரசூதமென்றது ஸ்ரீ காஞ்சீபுரத்திற் சிவபெருமானுக்கு நீழல் செய்யும் தெய்வீகமான மாமரத்தை. "சூடாத், தளிராத சூதம்" (குலோத். உலா, 124 - 5) என்றதனால் மாந்தளிரை யணிதல் பண்டைய வழக்கமென்பது அறியப்படுகின்றது. சீதளபல்லவம் - தண்ணிய தளிர். சூதசீதள பல்லவங் கனலிற் கலித்து : "அவரோ வாரார் தான்வந் தன்றே, பொரிகான் மாஞ்சினை புதைய, எரிகா லிளந்தளிரீனும் பொழுதே" (ஐங். 349), "சீதப் புனலுண் டெரியைக் காலும், சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே" (சுந்தர. தே.), "வளரிளஞ் சோலை மாந்தளிர்செம், தீயினே ரரும்பு பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம்பலமே" (கருவூர்த் தேவர் திருவிசைப்பா), "கிடங்தெரி வடவையிற் றளிர்முக மீன்று......நின்ற மேற் பகைமா" (கல். முருகக்கடவுள் துதி), "பைந்தடந் தாளான் முன்னம் பருகிய புனலை மீளச், செந்தழ லாக்கி யந்தண் சினைதொறுங் காட்டுஞ் சீரான், முந்திய வசோகு சூத முதலிய தருக்க ளெல்லாம், இந்திர சாலம் வல்லோ ரியற்கையி னியற்றுமாலோ" (வி. பா. சம்பவச். 93), "தென்னன் றமிழி னுடன்பிறந்த சிறுகா லரும்பத் தீயரும்பும், தேமா" (மீனாட்சியம்மை பிள்ளைத். தாலப். 1.) உச்சியிற்பனிவீசுகண்ணி : திங்களைக் கண்ணியாகக் கூறுமரபு 332-ஆம்தாழிசையின் உரையாலும் அதன் விசேடக் குறிப்பாலும் விளங்கும்; "பெருகிய புனல்விரவிய பிறைக்கண்ணியர்", "செஞ்சடை மதியக் கண்ணியான்", "கூனற் றிங்கட் குறுங்கண்ணி" (திருஞா. தே.) "பிறை யிளங் கண்ணியி னானை", "வெண்மதியக் கண்ணி விகிர்தா போற்றி" (திருநா. தே.); "புனிற்றிளவான் பிறைக்கண்ணிப் புனித ரீந்தார்", "கோட்டிளந்தண் பிறைக்கண்ணிப் புனிதனார்" (பாசவதைப். 229, 231.) (கூஅக)

626. மாறில்பேரொளி வட்டமிட்டு
வரம்பிலா [1]மறை மாநிறுத்
தீறில் காலமு ஞாலமுங்கொடு
செய்ததேர்மிசை யேறியே.

மாறில்பேரொளி - சந்திராதித்தர். வட்டம் - தேருருளை. மா-குதிரை. ஈறில்காலம் - காலந்தான். ஞாலம் - பூமி.

ஈசுவரனுக்குத் தேர் இது.

(வி - கு.) மு. வட்டம் - உருளை. 'ஈறில் காலம்' என்றது கொண்டே, 'தான் அழியாமை நிற்றல் கொள்க ; அது காலமென்கிற பொருள்' என்று முன் (தக்க. 337 - உரை) உரையிட்டனர்போலும்.

(பி - ம்) 1 'வரைமானிலத்' (கூஅஉ)

627. கால்பிடித்து நிவந்ததேர்தம
காணியுாய்வழி வந்துமுட்

கோல்பிடித்து வலஞ்செய்தேறி
விரிஞ்சனேகுசை கொள்ளவே.

கால் பிடித்தலாவது தேர்க்கால்பிடித்தல் ; சந்திராதித்தர் இருவரையும் இரண்டு உருளையாகப் பிடித்தல். நிவத்தல் - பரத்தல்.

எ - து தேர்க்குப்பாகனுகிக் குசைக்கயிறும் முட்கோலும் பிடித்துப் பாருசெலுத்துகை பிரமாக்களது காணியாதலின் ஒருபிரமா வந்து புகுந்து திருத்தேரைப் பிரதட்சணமும் நமக்காரமுஞ்செய்து முட்கோலும் வடிகயி றும் கைக்கொண்டேறினன் எ - று.

இப்படி ஒருபிரமா தன்பதமிழக்குங் காலத்திலே, ஸ்ரீகயிலாசத்தே யிருந்து பிரமபதம் வேண்டியிருப்பார் பலருளரன்றே, அவர்களிலே ஒரு வன் பிரமாவாகக்கடவன். அவன் வந்து இப்படிச்செய்வான். இக்கதை வேதத்திலும் மகாபாரதத்திலுங் கண்டுகொள்க. விரிஞ்சன் - பிரமா.

(வி - கு.) மூ. காணி - உரிமை. முட்கோல் - தாற்றுக்கோல் ; இது கூர்முள்ளென்றும் வழங்கும். வலஞ்செய்தேறி : ஊர்தியின் மேலேறுபவர் அதனைத் தொழுதலும் வலஞ் செய்தலும் மரபு : “ குஞ்சரந் தொழுதுவேய் முத்தற் றாசங்கொண் டேறினன் ” (சீவக. 1602), ‘ யானை யேறுவாரும் தொழு தல் இயல்பு ’ (ஷை. ஷ. உரை), “ சோதி முத்தின் சிவிகை சூழ் வந்துபார், மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின், றுதியாரரு ளாதலி னஞ்செழுத், தோதி யேறினா ருய்ய வுலகெலாம் ”, “ ஏற்ற தொண்டரை யண்டர் வெள் ளானையி னெதிர்வலங் கொண்டேற்றி ” (பெரிய. திருஞா. 216, வெள்ளானை. 34.) உரை. வடிகயிறு - பயிற்றிச் செலுத்தும் கயிறு.

பாரதத்திற் கர்ணபருவத்தில் திரிபுர சங்காரம் கூறப்பட்டுள்ளது.
(கஅக)

628. மாகமேவரு [1]மூரிறக்க விளைந்தநாளில் வளைந்ததோர்
நாகமேகொல் பிளைகமேகொ லிடத்திருக்கையி னண்ணவே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. மாகமேவரும் ஊர் - ஆகாயத்திற் பறந்து திரியும் திரிபுரங் கள். வளைந்ததோர் நாகம் - மேருமலை.

(பி - ம்) 1 ‘ மூரிறங்க ’ (கஅச)

629. புரங்கொலம்புகொல் வந்துவந்திடை
போனபோன புராணர்பொற்
சிரங்கொ லம்புகொ [1]லென்கொலொன்று
வலத்திருக்கை [2]திரிக்கவே.

எ - து விஷ்ணுக்கள் அம்புக்கோலாகவும் அக்கினிதேவன் அம்பின் இரும்பாகவும் மகாவாதராசன் இறகாகவும் ஞானிகள் கோபம் இரும்பிற் கூர்மையாகவுங்கொண்டு திரிபுரதகனம் பண்ணின அம்புகொல் இஃது எனவும் அன்றியே பிறந்துபிறந்து மரித்துப்போன பழையோர் பலருள ரன்றே, அவர்களுடைய தலைகளைக்கொல்லும் அம்புகொலெனவும் வேறியா தெனவும் ஆராயும்படி வலத்திருக்கையில் ஓரம்பு வந்துநின்றது ; அதனை அத்திருக்கை திரித்தருள எ - று.

இராசாக்கள் தாம் மதித்தவீரராயவர்க்குப் படை வழக்கத்துறை ஈது ; இதனை, “ மொய்த்தபூண் மறவேந்தன், ஒத்தவர்க்குப் படைவழங்கின்று ”

(பு. வெ. 64, பி - ம்) என்பதனாலறிக. மகாதேவர்க்கு வீரபத்திரதேவர் மதிப்புடைய சாமந்தர். ஒத்தவர்க்கென்பதன் பொருளுணர்க. "அடையார் முனையகத் தமர்மேம் படுநற்குப், படைவழங் குவதோர் பண்புண் டாகலின், உருவி லாள னொருபெருங் கருப்புவில், இருகரும் புருவ மாக வீக்க" (2 : 42 - 5); இது **சிலப்பதிகாரம்**; "ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றுலிப்ப, வையிலை யெஃக மலைபலவு - மொய்யிடை, ஆட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான், வாட்குடி வன்க ணவர்க்கு" (64); இது **வெண்பாமாலை**. இதில் வீரபத்திரதேவர் இப்படை இப்படிப்பட்ட பின்னும் (618) உண்டான காரணமென்னென்று கேட்டதனால், தாழ்வு இங்குப் புகுந்ததெல்லா முணர்ந்தருளி அம்புவரக்காட்டினார் மகாதேவர், சருவக்கினராகையின் ; பிறவுமுணர்க.

(வி - கு.) மூ. புரங்கொல் அம்பு - திரிபுரத்தைக் கொன்ற அம்பு.

**உரை.** இங்கே கூறப்பட்ட அம்பின் உறுப்புக்கள், "கல்லானிழற்கீழா யிடர் காவாயென வானோர், எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப, வல்லாரெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல், வில்லா லெயி லெய்தானிடம் வீழிம்மிழ லையே", "மைம்மருவு மேருவிலு மாசுணநா ணரி யெரிகால் வாளியாக, மும்மதிலு நொடியளவிற் பொடிசெய்த முதல்வனிட முதுகுன்றமே" (**திருஞா. தே.**), "மாருதமா லெரிமூன்றும் வாயம்பீர்க்காகு சரத்தானை" (**திருஞா. தே.**) என்பவற்றிலும் கூறப்படுதல் அறியற்பாலது. சாமந்தர் - சேனைத்தலைவர் ; "சேனை யோட்டு**சாமந்தரா**கி" (**திருவால. 59** : 16), "எண்ணில் **சாமந்தரை** வென்றடு தூசி" (**வீரராஜேந்திரதேவன் மெய்க்கீர்த்தி.**) வெண்பாமாலை - புறப்பொருள் வெண்பாமாலை. (**பி - ம்**) 1 'லென் கொலென்று' 2 'திரித்ததே' (கூஅ௫)

630\. ஏனமெய்தன சிங்கமெய்தன கற்கியெய்தன வெண்ணிலா
மீனமெய்தன வாமையெய்தன வாவநாழிகை விம்மவே.

ஏனமெய்கையாவது : பூமிதேவி பண்டு பாதாளத்திலே வீழ விஷ்ணு பகவான் அநந்தசயனம்விட்டு ஸ்ரீவராக ரூபங்கொண்டு பூமியை எடுத்தருளி இரணியாட்சனை அசுரனைக்கொன்றருளி மிக்க ஆங்காரத்துடனே சங்கார காரியமும் தானே செய்யவேணுமென்று நினைப்ப, மகாதேவர் கிராதவேடங் கொண்டு அப்பன்றியையெய்து கொன்றருளி அதன் கொம்பைச் செவ்வகத் திப்பூவாகச் சாத்தியருளின கதை.

சிங்கமெய்தனவென்றது : இரணியவதை பண்ணினகாலத்தில் வீர கெறுவமிக்கு ஸ்ரீ நாரசிங்கரூபம் அட்டகாசம்பண்ணித் தனது சிங்கநாதமும் பண்ண மகாதேவர் சிம்புளாக இருஞ்சி எடுத்தருளினரென்னுங்கதையுடன் மாறுபடாதோவெனின், மாறுபடாது ; சிம்புளாவது பிராணவதம் பண்ணுவ தொரு பட்சியாதலால் அவ்வடிவுகொண்டுவந்து வதைசெய்தலரிது ; இதற்கு, "பறந்து சிம்புள் பையென வைத்தலும், கயலேர் கண்ணி துயிலேற் றெழவே, உயிர்பிரிந் துருமையி னுறுபுட் போக" என்பது மேற்கோள் ; இஃது **உதயணன் கதை**. பின்னையும், அந்தச்சிங்கம் மகாமேருவின் முழையி னின்றும் புறப்பட்டு மீண்டும் ஆங்கார ஆரவாரஞ்செய்யத் திருவேடுவ ராய்க் கொன்றாரென்பது ; இதனை ஸ்ரீ **வாதுளமென்**னும் ஆகமத்திற் கண்டு கொள்க.

கற்கியென்றது கலியுகாந்தத்தில் வருவதொரு குதிரையலன்றோவெனின், இழவைபோல யுகங்களும் வருவன போவன வெனவுணர்க.

எண்ணிலா மீனமென்றது பலமீனையல்ல; ஒருமீனே நீளத்தாலும் பெருமையாலும் எண்ணிலாததெனவுணர்க. அதுதானும் உகந்தோறும் வருவதுண்டு. அன்றியே எண்ணிலாவென்றதனை எல்லாவற்றினும் ஒக்கக் கூட்டிக்கொள்கை உத்தமம்.

ஆமை பண்டு கடல்கடைகிறகாலத்து மந்தர பருவதத்தைத் தாங்க முதுகுகொடுத்துக் கடல்புக்கு உறங்கினதன்றி விஷமஞ்செய்ததில்லையன்றே; அதனைக்கொன்றவாறு எப்படியென்னின், அமுதத்தை அசுரர் உண்ணுதபடி வஞ்சிப்பப் பிறர்மாட்டார்; இவ்வாமையான மாயனே வேணுமெனநினைத்து மோகினிவடிவங்கொள்கவெனக் கொள்ளாது உறங்கியே யோகஞ்செய்ய அசுரரைவஞ்சிப்பான்பொருட்டு அதனைக் கொன்றருளியதெனவுணர்க. அவ்வாமையின் ஓடுபோலும் திருமுடியிலுள்ளது.

இவையெல்லாம் அம்புகள்; எய்தனவென்னும் தொழிலாற்பெற்ற பொருட்பெயர்.

இவ்வம்பெல்லாம் முதுகில் ஆவநாழிகையில் வந்துபுகுந்து நிரம்பின வென்றவாறு.

இனிப் பத்துப்பிறவியில் ஐந்துபிறவியைக்கழித்து ஐந்து பிறவியைவிடு வானேனெனின், அவைதாம் 'வாமன பரசுராம ஸ்ரீராம பலபத்திர தேவ ஸ்ரீ கிருஷ்ண' என்பனவன்றே; இப்படி மனுஷ்யப்பிறவியாத லால் அறிவுண்டாய்க் கெறுவமின்றியே இருத்தலாற் கொன்றிலரென வுணர்க.

(வி - ரு.) மூ. எய்தன - எய்த அம்புகள். உரை. செய்ய வேணும்: வேணும்: 291 - ஆம்தாழிசைக் குறிப்பைப் பார்க்க. கிராதவேடம் - வேட்டுவ உருவம். அப்பன்றியை......கதை: "புகழாவாகைப் பூவி னன்ன, வளைமருப்பேனம்" (பெரும்பாண். 109 - 10) என்பதில் பன்றிக்கொம்பிற்கு அகத்திப்பூவை ஆன்றோர் உவமை கூறியிருத் தல் இங்கே அறியற்பாலது. அட்டகாசம் - பெருஞ்சிரிப்பு. சிங்கநாதம்-சிங்க கர்ச்சனை; 474-ஆம்தாழிசை உரைக்குறிப்பைப் பார்க்க. சிம்புள்-சரபம். கிழமைபோல யுகங்களும் வருவனபோவன: "கழிந்துவளர் கிழமையி னொழிந்தன வூழி" (மாடலம், பக். 12ப); "ஊழியோர் பகலாயோதும் யாண்டெலாம்" (கம்ப. உருக்காட்டுப். 72.)

(பி - ம்) 'எய்தனர்' (கூஅகூ)

631. பிடித்த வில்லி னெறிந்த நாணொலி
யண்ட பித்தி பிளந்துபோய்
வெடித்த வோசையி லப்பு றத்வனி
போல மேலெழ விம்மவே.

எ - து பண்டே படைவழக்கத்தாலே வந்துபுகுதப் பிடித்த வில்லின் நாணை ஜயகோஷம் பண்ணி ஏற்றியவோசை அண்டங்களின் அடுப்பமும் அடுக்கும் பிளந்து பிளந்த ஓசையின் பிரதித்துவனிபோலே அப்புறத்திலே செல்ல விம்மியது எ - று.

"ப்ரதித்வனி" என்றே பாடமிடலுமாம்.

(வி - ரு.) உரை. படைவழக்கம் - படை வழங்குதல். ஜயகோஷம் - வெற்றி முழக்கம். அடுப்பம் - கனம். பிரதித்வனி - எதிரொலி. (கூஅஎ)

632. சூல மோபுவ னங்க ளுக்கு
முகுந்த ளுதி சுரர்க்குமாய்
[1]கால மோவென வந்த தந்தில்
கணிச்சி யுங்கனல் காலவே.

எ - து சூலமோ? அது சூலமல்ல. லோகத்துக்கும் விஷ்ணுவாதியாக வுள்ள தேவர்கட்கும் மாயக்கடவ காலமென்று சொல்ல வந்தது, பண்டே யுள்ள பரசுவான சூலம் நெருப்பைக் கக்கி எ - று.

மாய்காலம் - மாயுங்காலம், மாய்க்குங்காலம்; 'மாய்காலமானது' என்பது வழக்கு. அந்தில்: அசைநிலை. கணிச்சி கனல் கக்குதற்குக் காரணம் துணைபெற்றேனென்பது.

(வி - கு.) மூ. கணிச்சி - மழு.

(பி - ம்.) 1 'காலமேயென வென்றுநின்று கணிச்சியுங்கடைகாயவே' (கஅஅ)

633. புனைந்து வந்த மதிக்கு முன்பு
பயந்த வேலை பொறுமையால்
நினைந்து வந்தமு தஞ்சொ ரிந்தென
மாலை வெண்குடை நிற்பவே.

புனைதல் - ஒப்பித்தல். பொறுமை - பிரிதற்குப்பொறுமை. தாய் வந்த வரவுபோன்றது இது. மாலைவெண்குடைக்கு உவமை பாற்கடலன்று; இஃது அபூதவுவமை. எனவே பாலசந்திரன்பிறந்தது லவணசமுத்திரத் தெனவுணர்க.

(வி - கு.) மூ. முன்பு பயந்த வேலை யென்றது உவர்க்கடலை.

உரை. ஒப்பித்தல் - அலங்கரித்தல். பால சந்திரன் பிறந்தது லவண சமுத்திரத்தென வுணர்க: அமுதங்கடைந்தது லவண சமுத்திரத்திலென்பது தம்முடைய கருத்தாதலின், அமுது கடையுங்காற் பிறந்த சந்திரனையும் உவர்க்கடலிற் பிறந்தவனென உரையாசிரியர் இங்கே எழுதினர்; 284-ஆம் தாழிசை உரை விசேடக்குறிப்பு முதலியவற்றைப் பார்க்க. (கஅக)

634. அமைய நிற்கு மலங்க லேறு
பிறங்க வெண்கொடி யாடுமால்
இமைய வெற்பு மதன்க ணின்று
மெடுத்த கங்கையு மென்னவே.

அமையநிற்றலாவது லோகத்துக்குப் பொருந்தநிற்றல்; இது தர்மரூபமாய் விகாரவேறுபாடின்றியே வலிதாயிருத்தல். அலங்கலாவது வாகன சுசிருஷை பண்ணும் உபகாரப் பிரதானமான மாலை. பிறங்க - பெருக்க. வெண்கொடியென்றது, தர்மரூபம் வெளுத்திருத்தலால். மாலென்றும் ஆலென்றும் இரண்டுமாம்; மாலென்னிற் பெரியவென்றும் ஆலென்னில் இடைச்சொல்லென்றும் ஆகும்.

பகீரதனென்னும் ராசேந்திரன் தன் வங்கிசத்தரான சகரர் அறுபதினாயிரவரைச் சுவர்க்கமேற்றுதற்குத் தவஞ்செய்து ஆகாசகங்கையை இழிச்ச அஃது இமவான்மேல் வீழ அம்மலைப்பரப்பும் அழகுங்கண்டு அது கீழே

விழாதொழிய மீண்டும் அவன் தவஞ்செய்து ஆகாசத்தேபோக எடுத்துவிட அக்கங்கை இமவானினின்றும் ஆகாசத்தேபோவது போன்றது ரிஷபத்துவச வர்ணம்.

இதில் பண்புவமை முதலாயின வெல்லாங்கொள்க. அதன்கணென்றது சுட்டுச்சொல்லிற் சாரியையும் வேற்றுமையுருபும் வந்தன.

(வி - கு.) மூ. கொடிக்குக் கங்கை உவமை : தக்க. 257-ஆம் தாழிசை, அதன் குறிப்புக்கள் முதலியவற்றைப் பார்க்க; "மணியிற்பொலி மாக நெடுங்கொடி மாலை யேய்ப்ப, வினையிற்றிரள் வெள்ளருவித்திர டுங்கி வீழ" (கம்ப. கடறுவு. 50.) இமயவெற்பு கொடியையெடுத்ததோளுக்கு உவமை.

உரை. விடை தர்மரூபமென்பது, 453 - ஆம் தாழிசைக் குறிப்பால் விளங்கும். வெண்கொடி......வெளுத்திருத்தலால் விடையே வெண்ணிற மென்பது இங்கே கொள்ளத்தக்கது; "வெள்ளைவிடை" (தக்க. 778.) இழிச்ச - இறங்கச்செய்ய. எடுத்துவிட - எழச்செய்ய. (௬௩௦)

## தேவர்கள் வலியழிதல்

635. வாச வன்[1] றச நூறு கண்ணு
மறைந்து பேரிருண் மண்டவே
கேச வன்[2] றகை மௌலி போயிருள்
கெட்ட கேடு கிடக்கவே.

[இதுமுதல் 668-ஆம் தாழிசைமுடியத் தேவர்களுக்கும் ஸ்ரீ பூதகணங்களுக்கும் பின்னும் போர்மூண்டதில் தேவர்கள் அழிந்தமை கூறப்படும்.]

வாசவன் - தேவேந்திரன். தசநூறு - பத்துநூறு; ஆவது ஆயிரம்.

எ - து தேவேந்திரனுடைய சகசிர சட்சுவும் வெறியோடிக் குருடானன. அன்றியே மகாவிஷ்ணுவினுடைய திருமுடியில் ரத்தினங்கள் இருண்ட கெட்டகேடு கிடக்க எ - று.

தசநூறு : இது கிரந்தமுந் தமிழுங்கூடியவாறு; "தசநான் கெய்திய பணைமரு ணோன்றாள்" (115); இது நெடுநல்வாடை.

(வி - கு.) மூ. இருள் கேடு : வினைத்தொகை.

உரை. சகசிர சட்சு - ஆயிரம் கண்கள். கிரந்தம்-வடமொழி.

(பி - ம்.) 1 'பதினூறு' 2 'பகைமௌலிபோனிலைகெட்ட' (௬௩௧)

636. சடைகொல் வெம்மழு வாய்கொ ளுண்டு
புனற்பெ ருந்தகை சாயவே
[1]கடைகொ றீகொள் கரங்கொல் வவ்வி
[2]யிருந்த வத்தி கரிந்தவே.

முன்னிற்பாட்டில் இன்னதனால் இன்னது கெட்டதென்று உணர்தலாகாததை இப்பாட்டிற் கண்டுகொள்க, தொடர்நடைச் செய்யுளாதலின்.

எ - து சடைகொல்லோ மழுவின்வாய்கொல்லோ வாரியுண்ண வருணராசன் சாய்ந்துபோயினான்? திருக்கண் மலரோ திருக்கையோ வெளவிக் கொள்ள வருணராசன் இருந்த அத்தியான எழுகடலும் கரிந்தன? எ - று.

கடையென்றதற்குத் திருக்கண் மலர்க்கடையைச் சொல்லலுமாம்; உகாந்த காலக்கடையென்னலுமாம். சடைபுனல்கண்டுழி வவ்வும். திருக் கையில் நெருப்பும் அப்படியே. "கொல்லே ஐயம்." (தொல். இடை. 20.)

(வி - கு.) உரை. சடை புனல்கண்டுழி வவ்வும்: "மேக வெள்ளநதி வெள்ள நூறுகெனவும் பர் நாயகன் விளம்பினன், மாக வெள்ளநதி கொண்டதோர்சடை வளைந்து கொண்டதவை வற்றவே" (தக்க. 652.) தொடர்நடைச் செய்யுள் - காவியம்; இது தொடர்நிலைச்செய்யுளெனவும் வழங்கும்; தண்டி. சூ. 5.

(பி - ம்.) 1 'கடைகொல் கண்கொல்' 2 'யெரிந்தவங்கி கரிந்ததே'(கூகூ௨)

637. திங்கண் மண்டில மேற லெந்து
களங்க மல்லது தீயவே
வெங்கண் மண்டிலம் ராகு முற்ற
விழுங்கி யொத்து மழுங்கவே.

எ - து முன்னிற்பாட்டிற்கூறிய திருச்சடையின் சிவப்பாலும் திருக் கையின் நெருப்பிற்சோதியாலும் சந்திரமண்டிலத்தில் வெண்மையற்றுக் களங்கம் பிரச்சுவலித்தது. பின்னை ஆதித்திய மண்டிலத்திற் சோதி ஆதித் தனை ராகு முற்றவிழுங்கிச் சருவக்கிரகணம் பண்ணியதுபோற் கறுத்தது எ - று.

ராகுவென்ன மேகமறைவிற் சோதி மிகக் கெடாதெனவுணர்க. வெங் கண் மண்டிலம் - ஆதித்தியன்; குணப்பெயர்.

(வி - கு.) மூ. வெங்கண் மண்டிலம் - வெம்மையாகிய இடத்தையுடைய மண்டிலம். (கூகூங)

638. கொட்ட வூத வெடுத்த [1]பல்லிய
மைந்தும் வந்திறை கொள்ளவே
இட்ட வெண்குடை வீசு சாமரை
யாவும் யாரு மிழக்கவே.

இறை - கூட்டமும் பெருமையும். யாவும்யாருமிழக்கவென்னவே எல்லாராசபரிச்சின்னங்களையும் எல்லாரும் இழந்தாரெனவுணர்க.

(வி - கு.) மூ. இயம் ஐந்து: தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி யென்னும் கருவிகள் ஐந்து. இறைகொள்ள - தங்குதல் செய்ய.

உரை. ராசபரிச்சின்னங்கள் - அரசர்க்குரிய அடையாளங்கள்.

(பி - ம்.) 1 'பல்லியம்வந்து வந்திசைகொள்ளவே' (கூகூச)

639. சூடவென்று வகுத்த தும்பை
புராரி சேவடி தோயவே
வீட வென்று வகுத்த தும்பை
சுரேசர் மௌலி மிலைச்சவே,

புராரி - ஈசுவரன். மிலேச்சுதல் - சூடுதல். இவன்படையொடு தாம் பொருதி பிழைக்கவொண்ணுதென்று நினைத்து மரணமேவெற்றியாக எண்ணி அதிரப்பொரு தும்பை சூடினுர் தேவர்களென்றவாறு.

(வி - ரு.) மூ. இதன்கருத்து வெற்றியைக்கருதிய பூதகணங்கள் தும்பை மிலேச்சி வீரபத்திரதேவரைவணங்க, தேவர்களும் தும்பைசூடித் தருக்கினின் ருர்களென்றபடி.

உரை. "வெட்சி நிரைகவர்தன் மீட்டல் கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் - உட்கா, தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி, அதுவளைத்த வாகு முழிஞை - அதிரப் பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர், செருவென் றதுவாகை யாம்" (பழைய செய்யுள்.) (கூகரு)

640. விட்ட வூர்தி யனைத்து மும்பரை
வீசி வந்தன விம்மவே
தொட்ட வாயுத முற்று மற்றவர்
கைது றந்தடி சூழவே.

ஊர்தி - வாகனம். விட்டவூர்தி - பூசனுக்கு எதிர்பொரவிட்ட வாகனம். தொட்ட - தீண்டின. ஆயுதமெல்லாம் ஈசுவரன் படையிலேவந்து கூடு தற்குக்காரணம் மாயையினுடைய சத்தியெனவுணர்க. அடி - ஈசுவரனது ஸ்ரீ பாதம்.

(வி - ரு.) மூ. விட்ட......வந்தன - தேவர்கள் பொரவிட்ட வாகனங்க ளெல்லாம் அவர்களையே அழித்துவிட்டு வந்தன; இக்கருத்து 682-689-ம் தாழிசை முடிய உள்ள இந்நூற் பகுதியில் விளங்குவதைக் காணலாம். தொட்ட......சூழ - தேவர்கள் தொட்ட ஆயுதங்களெல்லாம் அவர்களுடைய கைகளினின்றும் நீங்கி வீரபத்திரர் திருவடியில் வந்து சேர. (கூகசு)

641. போகை யேயென வைன தேயனு
மன்ன முங்குடி போகவே
கூகை யேமிடை காக மேயவர்
[1]கொடி மிசைக்குடி கொள்ளவே.

போகையேயென - புறப்பட்டுச்செல்லுவதே காரியமென்று.

எ - து விஷ்ணுக்களின் துவசமும் பிரமாவின் துவசமுமான பட்சிகள் பறந்துபோயின. பின்னைக்கொடிக்கோல்களின்மேற் கூகையுங்காக்கையு மாகிய உற்பாதபட்சியான மூதேவிகள் வலமும் இடமும் சென்றும் மேய்ந் தும் குடிகொண்டன எ - று.

"கனவே போலவு நனவே போலவும், உன்னிய தன்றியென் னுள்ளக நடுக்குறக், கருநிறக் காக்கையும் வெண்ணிறக் கூகையும், இருவகை யுயர் திணைக் கேந்திய கொடியொடும், வெருவந்த தோற்றத்தா லுருவின பல கூளிக், கணங்கள் குருதி மண்டைசுமந் தாடவும், பறையன்ன விழித்தகண் ணுள் பிறையன்ன பேரெயிற்றுள், கூடன்ன பெருமுலையா ளிடைகரந்த பெருமோட்டாள், இடியன்ன பெருங்குரலா டடிவாயாற் றசைப்புறத்தாள், கடலன்ன பெருமேனியாள் காண்மின்னுக் கமழ்கோதையாள், சிலையன்ன புருவத்தாள் சென்றேந்திய வகலல்குலாள், மழையுமஞ்சும் வளியும் போலும், செலவினு ளொருபெண்டாட்டி, தலைவிரித்துத்தடக்கைநாற்றி, மற

னெதிர்ந்து மாறுகொண்டறியா வறிவுக் கிம்மூறை நானிவ் வளவன்றே, பூவிரல் காட்டி நீறுபொங்கத்தன், கைகளா னிலனடித் தூரையிடஞ்செய்து, காடு புகுதக் கண்டே னென்னும், கவலை நேசமோ டவல நீந்தினள், அன் றது மன்றவ் வதிகமான் ருய்க்கு." இது தகடூர் யாத்திரை.

(வி - கு.) சூ. வைனதேயன் - வினதையின் மகன்; கருடன். குடி போக - குடியிருத்தலை நீங்கிப்போக. கூகை - கோட்டான். காகமேயவர் கொடிமிசைக் குடிகொள்ளவே: "கருது வீரநின் கொடிமிசைக் காக்கை யின் கணங்கள், பொருது வீழ்வன புலம்புவ நிலம்படப் புரள்வ" (கம்ப. கரன்வதைப். 70.)

உரை. உற்பாதம் - பின்வருந் தீங்கைத் தெரிவிக்குங் குறி.

மேற்கோட் செய்யுள்: இருவகையும் உயர் திணை - மக்கள், தேவர். பறையன்ன விழித்த கண்: "பறைபோல் விழிகட்பேய்", "பறைக்கட் செறுபல் கணப்பேய்" (திருஞா. தே.), "பறைக்காட்டும் குழிவிழிகட் பல் பேய்" (திருநா. தே.), "பறைக்கணெடும் பேய்க்கணம் பாடல் செய்ய" (சுந்தர. தே.), "பறைபோல் விழிகட்பேய்" (காரைக். கோயின்மூத்த. 1.) கூடு - நெற்கூடு. பெருமோட்டாள் - பெரிய வயிற்றையுடையவள்; "கறைப்பற் பெருமோட்டுக் காடுகிழாள்" (தனிப்.) பெண்டாட்டி - பெண்.

(பி - ம்) 1 'கொடியின்மீமிசை கொள்ளவே' (கூகள)

## இந்திரன் போர்தொடங்கல்

642. பின்வ ருஞ்சுட ராழி யானடு
வாக மீதுப்ர தானராய்
[1]முன்வ ருஞ்சுர ரோடு மிந்திரன்
வந்து தோமர முட்டவே.

எ - து மகாவிஷ்ணுக்கள் மத்தியத்துநிற்ப மேன்மேலே பிரதானராகி வருகின்ற படைக்கெல்லாம் முன்னேவருகின்ற தேவர்கள் சேனையோடே கூடத் தேவேந்திரனும் கொடிப்படை முதற்றூசிக்குக் கர்த்தாவாகிவந்து தோமரப்போர் செய்யத்தொடங்கினன் எ - று.

(வி - கு.) உரை. தூசி - முன்படை; "தொண்டர் காடூசி செல்லீர்" (திருவா. படையெழுச்சி.) (பி - ம்) 1 'முன்வருஞ்சுட' (கூகஅ)

## வேறு

643. புரண்டு மின்னுநெடு நாணு டங்குவன
[1]மேக ராசிபொழி யப்புறத்
திரண்டு வில்லுமென விந்த்ர சாபமுடன்
யந்த்ர சாபமு மிறங்கவே.

எ - து நெடுநாள் புரண்டு புரண்டு நுடங்கி விடாதனவாகிய மின் னுடனே மேகராசிகள் மழைபொழிய வானத்து இரண்டுவில்லும் பிரச்சுவ லிப்பதுபோலத் தேவேந்திரன் வில்லும் வீரபத்திரதேவர் திருக்கைக்கொற்ற வில்லும் ஒக்கவளைந்தன எ - று.

யந்திரசாபமென்றது மகாமேருவை; இதன்பயன் பின்னும் நெடுநாள் நின்று தொழிற்படுகை.

(வி - கு.) மூ. நெடுநாள் நடக்குவன. புறத்திரண்டுவில்: "எழிலியுந் தனிதனித்திரு தனுவெடுத்தன", "வானில்வந் திட்டவிற்க ளிரண்டு" (தக்க. 159, 160) என்பவற்றால் வானவில் இரண்டென்பது பெறப்படும்; 159-ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க. உரை. கொற்றவில் - அரச உரிமைக்குரிய வில். (பி - ம்) 1 'காமர்சாமரை புயற்புறத்' (கசுகூ)

## திருமாலின் போர்

644. சேய கண்கனன் முராரி தங்கள்கடல்
செல்க வென்னவது சென்றதால்
நாய கன்பரசு பாணி வேணியொரு
நாக நாவினை நனைத்ததால்.

[இதுமுதல் 650-ஆம் தாழிசைமுடியத் திருமால் வீரபத்திரரோடு தன் படைகளை விட்டுப் பொருதலும் அவற்றை வீரபத்திரதேவர் படைகள் அழித்தலும் சொல்லப்படும்.]

சேயகண் - சிவந்தகண்; நீளியகண்ணுமாம். முராரி - விஷ்ணுக்கள். தங்கள் கடலென்றது பாற்கடலை. அதற்கடையாளம் ஒன்றுதலால் அது வென்னும் பெயரும் சென்றதென்னும் வினையும் ஒன்றுயின. ஆல்; இடைச்சொல். நாயகன் - ஈசுவரன். பரசுபாணி - பரசுவென்னும் ஆயுதத்தைக் கையிலேயுடையவன்; இஃது அன்மொழித்தொகை. வேணி - சடை. நாகம் - பாம்பு.

பாம்பின் நாக்களவும் பாற்கடலின் அளவும் ஒக்கும்; ஆழத்தின் அளவு நாக்கின் அடுப்பத்தின் அளவு.

(வி - கு.) மூ. சேய்மை-நீட்சி. கனன் முராரி - கனன்றமுராரி; வினைத்தொகை. நனைத்ததால் - நனைப்பதற்கு மாத்திரம் போதியதாயிற்று பாற்கடல். இத்தாழிசையின் கருத்தோடு 659 - ஆம் தாழிசையை ஒப்பு நோக்குக. உரை. அடுப்பம் - கனம்; தக்க. 631 - உரை. (சு00)

645. படப்ப டப்பெரும் பரவை யாயிரம்
பள்ளி மாலெதிர் பரப்பினான்
விடக்க ருங்கணின தையர் கைத்தொடி
விழித்த தன்றவையும் வேவவே.

எ - து முன்புவிட்ட திருப்பாற்கடலை ஒருபாம்பு தன் நாக்கை நனைத்து ஒழிக்க விஷ்ணுபகவான் அதற்கு லச்சித்துக் கோபித்து ஈசுவரனையும் படையையும் அகப்படப்பிடிக்க ஆயிரம் பாற்கடலைப் படைத்துவிட அவையும் ஈசுவரனது திருக்கையிலுள்ள திட்டிவிஷமாகிய ஒரு மகாநாகமானது தன் கண்ணாலே நோக்க அப்போதே வெந்தன எ - று.

பள்ளிமாலென்றது உறங்கும் மயக்கினனென்றவாறு; அன்றியே உறக்கும் பெரியோனென்றுமாம். ஐயர் - மகாதேவர்; அழகினையுடையரென்றுமாம்.

கைத்தொடியென்றது முன்கைக்கடக வளையலாக விட்டபாம்பையென உணர்க; "பொன்னெடு மலையைப் பன்னிரு வடங்கொடு, புணரியைக் கடைந்தநாட் புணர்த்த பன்னக, அரசன்வாய் நெரித்தவனணிவா ளுய்த்

திடப், பற்றி வளையெயிற் றுனொடு முன்கையிற், கடக மாயினுற் சங்கரன் றன்னை, அங்கொடு மாலே யடியினை காண்பான், அன்னமே முடிதொடு மன்னம்." இதனையுணர்க. இதிற் பாம்பின்வாலும் தலையும் முடிந்திட நீளம் போதாமையின் வாயைநெரித்து வாலைப்புகவிட அது வாலைக் கடித்துக் கொண்டு கங்கணமானது. ஆதலால் ஈசுவரன் ஆக்கினையை அஞ்சி வாய் விடமாட்டாது கண்ணிட்டுப்பார்த்தே ஆயிரம் பாற்கடல்களையும் வற்றுவித்த தெனவுணர்க.

(வி - கு.) உரை. திட்டிவிஷமென்னும் பாம்பினது இயல்பை, இந்நூல், 554-ஆம் தாழிசையின் குறிப்பாலுணர்க. (சO௧)

646. வைய முண்டுதனி துஞ்சு [1]மாலைவர
மாய ஞர்விலக நாயஞர்
ஐய முண்டுதரு மம்ப ணித்தருளு
மாதி யால்பொரு [2]தழித்ததால்.

வையம் - உலகம். ஆல் - பள்ளிகொண்டருளிய ஆலவிருட்சம்; ஐ: இரண்டாம் வேற்றுமை. மாயன் - விஷ்ணுக்கள்; ஆர்: இடைச்சொல். விலக - எறிய. நாயஞர் - மகாதேவர். ஐயம் - பிச்சை. ஆதியால்-முதல் ஆல்; இது ஈசுவர சாங்கியத்திற்கண்ட பொருள்; மூலப்பிரகிருதியான பிரதானப் பொருள்.

(வி - கு) மூ. வையமுண்டு தனிதுஞ்சுமால்: தக்க. 148. வையமுண்டு தனிதுஞ்சும்: "உலகையுண்டுறங்குவான்" (தனிப். 'நாவுண்டு'), "உண்டானுறங்க" (சகலகலாவல்லிமாலை) துஞ்சும் ஆல் - யோக நித்திரைசெய்வதற்கிடமாகிய ஆல மரம். மாயஞர் ஆலே வர விலகவென இயைக்க. நாயஞர்: இப்பெயர் சிவபெருமானுக்குத் தனித்து வழங்குவதன்றியும் தலங்களின் பெயர்களோடும் சேர்த்துச் சிலாசாஸனங்களில் வழங்கப்படுகின்றது; "சிராப்பள்ளி மேவிய, நாயனெனெ நம்வினை நாசமே" (திருஞா.தே.), 'ஸுசீந்திரமுடைய நாயனுர்க்கு' (சுசீந்திரம் சாஸனம், Travancore Archaeological Series, Vol II, Part I, p. 18), 'திருக்குற்றாலமுடைய நாயனுர் தேவதானமும்', 'விக்ரம பாண்டீசுவரமுடைய நாயனுர் தேவதானமும்' (தென்காசிச் சாஸனம், Ibid. Vol. I, p. 91) 'நாயனுர் அழகிய திருவானைக்காவுடைய நாயனுர்' (Ibid. p. 103.) தருமம் பணித்தருளு மாதியால்: "அரனமைவிருந்த நீழலது" (தக்க. 146); கல்லால மரத்தின் நீழலிவிருந்து சனகாதியர் நால்வருக்கும் அறம்பகர்ந்தனர் சிவபெருமான்; இச்செய்தியே தேவாரம் முதலியவற்றிற் காணப்படுகின்றது; "பொழின்மிகு திருவாலின், நல்லறமுரைத்து", "ஆலநிழற் கீழிருந் தறஞ்சொன்ன வழகனே" (திருஞா. தே.); "மடற்பெரிய வாலின்கீ ழறநால்வர்க் கன்றுரைத்தானென்கின் றுளால்", "ஆலமர நீழலிருந் தறஞ்சொன் னுரும்" (திருஞா. தே.), "கோல வானிழற் கீழறம் பகர", "அன்றாலி னிழற்கீ ழறநால்வர்க் கருள்புரிந்து" (சுந்தர. தே.); "அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ" (திருவா.) (பி - ம்.) 1 'மாலதனைமாயனுர் விடநாயஞர்' 2 'தமிழ்த்துமே' (சOஉ)

647. ஆழி மாயன்விட வாதி வானவன்மு
ஞெட கச்சிறகி னருகுபுக்
கூழி மாருத மிரண்டு பாடும்வர
வூடு சென்றதவ னுவணமே.

ஆழிமாயன் - விஷ்ணுக்கள்; ஆழியை மாயன் விடவென்றதல்ல; ஆழி மாயன் உவணத்தை விடவென்றவாறு. ஆதிவானவன் - வீரபத்திரதேவர். ஆடகம் - பொன். ஊடு - நடுவு. அவனென்றது ஆழிமாயனை; இயற் பெயர்ப்பின்னர்ச் சுட்டுப்பெயர் வந்தது. உவணம் - கருடன்.

வீரபத்திரதேவர்முன் யுகாந்தகாலத்து மகாவாதம் இரண்டுபாலும் கருடன் இரண்டுசிறகிலும் புக்கு வீசினதென்றவாறு. இது மகாவாதம் புக்கதென்றதல்ல; சிறகின் விசைக்கால் ஊழிக்காலை ஒத்ததென்பது பொருள்.

(வி - கு.) மூ. ஆதிவானவன்: "அடிப்பெருங் கடவுள்" (தக்க. 656) என்பர்பின். ஊழிமாருத மிரண்டு பாடும்வர வூடு சென்றதவ னுவணமே: "இமையாத், திசையானை கண்கண் மூகிழா வொடுங்க நிறைகால் வழங்கு சிறையான்" (கம்ப. நாகபாசப். 244.) உரை. இயற்பெயர்ப் பின்னர்ச் சுட் டுப்பெயர் வந்தது: தொல். கிளவி. சூ. 38. (சOஙு)

648. இறகு தீயவுயிர் தீய வீயுமதன்
வெற்று டப்புலகி னெல்லையின்
பிறகு தீயென [1]வெழுந்து வீழ்ந்திட
வுயிர்த்த தையர்விடு பெற்றமே.

எ - து மகாவிஷ்ணுக்களால் விடப்பட்ட கருடபகவானுடைய இறக்கும் பிராணனும் ஒக்கத்தீய மிருதித்த அவனுடையகளேபரம் உயிரின்றிச் சக்கர வாளவெற்பின் அப்புறத்து ஒரு நெருப்புப்பிண்டமென்ன விழும்படி ஐயர் விட்ட பெற்றம் நிசுவாசத்தை விட்டது எ - று.

எனவே முன்னிற்பாட்டிற் (646) கூறிய பிச்சையின்பெருமை இது வெனவுணர்க.

(வி - கு.) உரை. மிருதித்த - இறந்த. களேபரம் - உடம்பு; "களே பரத்தின் பொதியாவது" (திருவிடை - மும்மணி. 6.) நிசுவாசம் - வெளிவிடும் மூச்சு. (பி - ம்) 1 'விழுந்துபோய்விழ' (சOச)

649. சக்க ரப்படை முகுந்த னேவவது
தானு மெங்களிறை தானெனு
நக்க ரப்படை சடாட விப்புடையி
லுண்ட றுத்ததொரு நாகமே.

முகுந்தன் - விஷ்ணுக்கள்.
அச்சக்கரத்தைச் சடையிலிருக்கும் ஒருபாம்பு விழுங்கிற்று.
இது பாம்புக்கு இரும்பு இரையாகை; மண்ணுணியென்னும் பெயரா லுணர்க; இரும்பு மண்ணின்காரியமே. இரும்பு பிருதுவியல்லவென்று கொள்வாரும் விஷ்ணுக்கள் சக்கரமாவது வாயுசத்தியென்பாரும் பிறகூறு வாரும் உளர். நக்கர் - மகாதேவர். அப்பு - நீர். அடை சடாடவி-அடை யுஞ்சடாடவி; வினைத்தொகை.

(வி - கு.) மூ. நக்கர் அப்பு அடை சடாடவி. உரை. மண்ணுணியென் பது மண்ணையுண்டு மண்ணிற்குள் வாழும் ஒருவகைப் பாம்பு. வாயுசக்தி: பாம்பு வாயுவை ஆகாரமாகக்கொள்ளும் என்பது இங்கே உணரத்தக்கது. (சOரு)

650. ஆல மொன்றுமமு தென்று பண்டமுது
செய்யு மையர்பணி யன்றியே
சூல மொன்றுதனி சென்று மற்றவன்
மணித்து ழாய்முடி துணித்ததே.

ஆலம் - நஞ்சு.

எ - து நஞ்சொன்றையுமே அமுதமாக அமுது செய்தருளும் மகா தேவர் அருளிச்செய்யாமலிருக்கச் சூலமொன்று திருத்துழாய்த்திருமுடியைச்சிதைத்துக்கொண்டுபோயிற்று எ - று.

தலையொடுபோகக் கடவது ஈசுவரன் திருவுளமன்றாகையின் தானே போய்ச் செய்தது.

(வி - ரு.) மூ. ஆலமொன்று மமுதென்று பண்டமுது செய்யுமையர்: "ஆலத்தி னலமிர் தாக்கிய கோன்" (திருச்சிற். 27.) பணி - கட்டளை. முடி - கிரீடம். உரை. தலையொடுபோகக்கடவது ஈசுவரன்திருவுளமன்று என்பதை 726-ஆம்தாழிசை உரை நன்கு அறிவுறுத்தும். (கூ0சு)

## இந்திரன் படையை ஏவுதலும் அவை அழிதலும்

651. வளையு மாழியு மருங்கு [1]பற்றியதொ
ரிந்த்ர நீலகிரி மறிவதொத்
திளைய வாசவன் விசும்பி னின்றும்விழ
வெரிசி னந்திருகி யிந்த்ரனே.

[இதுமுதல் 662-ஆம்தாழிசைவரை இந்திரன் சினம் மூண்டு வீரபத்திரர்மேல் தன் படைகளை ஏவுதலும் அவையெல்லாவற்றையும் வீரபத்திர தேவர் படைகள் அவித்தலும் கூறப்படும்.]

வளை - சங்கு. ஆழி - சக்கரம். மருங்கு - இருபக்கம். இந்திரநீலகிரி உபேந்திரனென்னும் இளைய இந்திரனுக்கு ஒப்பு.

அவன்றானும் விஷ்ணு சக்தியாதலால் ஆகாசத்தினின்றும் வீழ்ந்தான்; விஷ்ணுக்களது திருமுடியறவே அவன் சக்தியற்றதென்பது இதன் கருத்து.

இனி இந்திரன் கோபித்துச்செய்தது.

(வி - ரு.) உரை. திருமுடி யறவே அவன் சக்தியற்றது: முடியற்றால் முடியற்றவன் தன் வலியை இழப்பானென்பது இராவணன் முடியைச் சுக்கிரீவன் தகர்த்ததால் இராவணன் செயலற்றதாலும், உக்கிரகுமாரபாண்டியன்வளையெறிய இந்திரன் முடியிழந்து வலியற்றதாலும் உணரப்படும்.

(பி - ம்) 1 'பற்றியதொர் வாளும்நீலகிரி' (சு0எ)

652. மேக [1]வெள்ளநதி வெள்ள நூறுகென
வும்பர் நாயகன் விளம்பினன்
மாக வெள்ளநதி கொண்ட தோர்சடை
வளைந்து கொண்டதவை வற்றவே.

உம்பர்நாயகன் - தேவேந்திரன்.

எ - து தம்பிபட்டதற்குக் கோபித்த இந்திரன், மேகவெள்ளத்தில் ஆறுகளான வெள்ளங்களெல்லாம் சென்று ஈசுவரனைவளைந்துகொள்கவென்ன, திருச்சடைதான் பண்டே ஆகாசகங்கையை வெளவியதாதலால் ஆகாசத்தினின்றும் வந்தவெள்ளங்களை வற்ற வெளவியது எ - று.

(வி - ரு.) மூ. மேக வெள்ள நதி : " ஆறு தூக்குமம் மேகம் " (தக்க. 583.) மாக வெள்ளநதி கொண்டதோர் சடை : " கதமாக் கங்கை பாயவொர் வார்சடையை, நீட்டிநின் றுன்றிரு நின்றநெய்த் தானத் திருந்தவனே " (திருநா. தே.) (பி - ம்) 1 'வெள்ளநெடு' (சா௦௨)

653. மெத்து வேலைகளை வச்ர பாணிவர
விட்ட போதரி விரிஞ்சரைக்
குத்தும் வேல்கொறலை வெட்டும் வாள்கொலெயி
லெய்யு மம்புகொல் குடித்ததே.

மெத்துதல் - நிரம்புதல். வேலைகள்-கடல்கள். வச்சிரபாணி-தேவேந்திரன்.

எ - து முன்புவிட்டமேகங்களைத் திருச்சடை வெளவக்கண்டு மிகக் கோபித்து உலகத்துள்ள சமுத்திரங்களையெல்லாம் ஈசுவரன்மேல் ஏவப்பண்டு விஷ்ணுக்களைக்குத்தின வேலோ பிரமாவின் தலையைவெட்டின வாளோ திரிபுரதகனம் பண்ணின அம்போ அக்கடல்களெல்லாவற்றையும் வற்றக்குடித்தது ? எ - று.

இதன் கருத்து : மூன்றாயுதங்களும் பண்ணினகாலத்திலுங்கூட நீர் தோய்க்கப் பெற்றனவில்லை தெய்வீகமாதலால் ; அன்றியேயும் எல்லாக் கடல்களும் வேணும் நீர்தோய்க்குமிடத்து.

கொல்லென்னும் ஐயத்தாற் கடல்கள் வற்றினவாறு தெரிந்ததில்லையெனவுணர்க.

(வி - ரு.) உரை. மூன்றாயுதங்களும்.........இல்லை : உலையிற்காய்ச்சிய ஆயுதங்களை நீரிற்றோய்த்தெடுத்தல் வழக்கமென்பது இங்கே அறியற்பாலது; " காய்த்தி ரும்பைக் கருமகக் கம்மியன், தோய்த்த தண்புன லொத்ததத் தோயமே " (கம்ப. பம்பை. 37), " சுனைய கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்பு சூழ் கிடப்ப, நனைய விழ்ந்தசெங் காந்தண்மே ஞகிளவேங்கைச், சினைய விழ்ந்தவீ கிடப்பபொன் றோய்கலத் தெண்ணீர், அனைய பொன்சுடு நெருப்பொடு கரியிருந் தனைய " (திருவிளை. நாட்டுச். 45.) வேணும் : 291 - ஆம் தாழிசை உரைக்குறிப்பைப் பார்க்க. (சா௦௧)

654. வளைந்து வந்தன புரந்த ரன்குல
விலங்க லைப்பணி மதாணியோன்
விளைந்து வந்தன வெறும்பொ டிந்தனது
கைப்பொ டிச்சிறிது வீசவே.

பணிமதாணியோனென்றது பாம்பான பேரணிகலஆரங்களையுடையானென்றவாறு.

இந்திரன் விட்டபருவதங்கள் ஈசுவரன் விட்டதிருநீற்றால் வெறும்பொடியாயின வென்றவாறு.

வெறும்பொடியென்றது ஸ்ரீ மந்திரஸம்ஸ்கார மில்லாதபொடியை. எனவே ஸம்ஸ்காரப்பட்டபொடி எளிதிற் சத்துருசயம் பண்ணுமென்ற வாறு.

இதன்கருத்து: பருவதங்களும் பரமாணுவின் திரட்சியேயென் அறிந்த அறிவினது சக்தி எறிந்தவாறு; இஃது ஆருகதருக்கும் ஒக்கும்; இது மணிமந்திர ஔஷதம்.

(வி - கு.) மூ. வீரவென்பதனைக் குலவிலங்கலை வீசவென முன்னும் கூட்டுக. வெறும்பொடி: "வெறும் பொடியால் விடுவித்தனன்" (தக்க. 197.) (௬௫௦)

655 காடு கொண்டபடை கொண்டு [1]வந்தசுர
ரீசன் விட்டதொரு கற்பகக்
கோடு கொண்டதனை யும்ப டைப்பையு
மடக்கி நின்றதவர் கொன்றையே.

காடுகொண்டபடை - விருட்சக்கூறுகள்; வல்லி சசியாதிகளெல்லா மெனவுணர்க.

இவையெல்லாம் வேதாகமஞ்சொன்னபடி அமைத்தது விஷ்ணுசக்தி; இவையிற்றைக்கொண்டுவந்த தேவேந்திரன் இவையிற்றுக்கு ராசாவான கற்பகவிருட்சத்தையும் காட்டையுங்கொண்டுவந்து தந்திரமாக ஈசுவரன் மேலே விட இவையெல்லாவற்றையும் அவருடைய திருக்கொன்றை தன் னிழற்கீழே அடக்கிக்கொண்டு நின்றது.

சுரரீசன்: தமிழ்முடிவு.

(வி - கு.) மூ. படைப்பு - படைத்த காடு. உரை. வல்லி - கொடி. சசியம் - பயிர். சுரரீசன்: தமிழ்முடிவு; சுரேசன் என்பது வடமொழி முடிவு; குணசந்தி.

(பி - ம்.) 1 'வந்துசுரரேசன்' (௬௫௧)

656. இடிப்பெரும்படை யெரிந்து மண்டிவர
விண்ட லத்தரச னேவினுன்
அடிப்பெருங்கடவு ளூழி யீறுதொறு
மாடு மஞ்சன மவித்ததால்.

மண்டுதல் - மிக்கு மேற்சேறல். விண்டலத்தரசன்-இந்திரன். அடிப் பெருங்கடவுள் - மகாதேவர்.

அவர் உகாந்தகாலத்தில் ஆடியருளும் திருமஞ்சனமான யுகாந்தாக்கினி நீர் அவையிற்றை அவித்ததென்றவாறு. மகாதேவர்க்குநீர் மற்றையவர்க்கு நெருப்பு.

(வி - கு.) மூ. அடிப்பெருங் கடவுளூழிதொறு மாடு மஞ்சனம்: 330-ஆம் தாழிசைக்குறிப்பைப் பார்க்க. (௬௫௨)

657. வச்சி ரப்படையு மிந்தி ரன் [1]படையில்
வந்த தாலதனை [2]வல்லவன்
முச்சி ரப்படையும் வேறு செய்திலது
நீறு [3]செய்ததெதிர் முட்டியே.

வச்சிராயுதத்தைத் திரிசூலம் எதிரே முட்டிப் பொடியாக்கிற்றென்ற வாறு.

வல்லவன் - மகாதேவர்; இதற்குத் தேவவல்லவனென்றும் எல்லாரினும் வலியனென்றும் எல்லார்க்கும் பிராணவல்லபனென்றும் சுவாமியென்றும் பொருள். உம்மை சிறப்பு; வச்சிராயுதத்தையும் நீருக்கித்தென்ற வாறு.

(வி - கு.) உரை. நீருக்கித்து - நீருக்கிற்றென்பதன் மரூஉ; "திரும்பித் தனையினு நெய்பா லமுதினுஞ் சிந்தனையே" (திருவரங்கக். 43.)

(பி - ம்) 1 'பணியில்' 2 'வல்லபன்' 3 'செய்ததெரி' (சுகங)

## வேறு

658. நிலத்தை யேவ நிசிந்தனு மோரடித்
தலத்தை யேவினன் முற்றுந் தகரவே.

[இதுமுதல் 662-ஆம்தாழிசைவரை இந்திரன் பஞ்சபூதங்களையும் ஏவ அவை அழிதல் சொல்லப்படும்.]

எ - து தேவேந்திரன் பூமியெல்லாவற்றையும் தந்திரமாக மகாதேவரெதிரே ஏவினன். அதற்கு மகாதேவர் தம்முடைய ஸ்ரீபாதத்தொன்றை ஏவியருளினர் எ - று.

நிலத்தை யேவியதற்குக் காரணம் தேவர்கள்கால் நிலந்தோயாமையும் அதனாற் காரியமில்லாமையு மெனவுணர்க. நிலத்தையேவுகையாவது பிருதிவியங்கிசத்தை யெல்லாம் ஏவுகை. ஓரடித்தலத்தை யேவியது மண்ணாங்கட்டிக்கு உள்ளங்காலே ஏவினதொத்தது. முற்றுந்தகர - நிலமுழுதுங் கெட.

(வி - கு.) மூ. நிசிந்தன் - சிவபெருமான்: "புனலன் மேனியி னிசிந்தன் விடுமம்படையவும்" (தக்க. 710.) உரை. தேவர்கள் கால் நிலந்தோயாமை: 'ஸ்ரீபாதங்கள் தரையில் தோயாமையால் பூத பசாசுகளையும் தெய்வ சாதியெனக்கொள்க' என்றார் முன்னும்; தக்க. 426 - உரை. அங்கிசம் - கூறு. (சுகச)

659. ஓத மேவ வொருகுறும் பூதத்தை
நாத னேவின னுவை நனைக்கவே.

எ - து பின்னைத் தேவேந்திரன் சலாங்கிச மெல்லாவற்றையும் ஏவ ஈசுவரன் தன்னுடைய நாவினை நீர்கொண்டு நனையென்று ஒருகுறும் பூதத்தை ஏவியருளினர். அதுவும் அப்படிச் செய்தது எ - று.

(வி - கு.) மூ. நனைக்க - நனைக்கத் தான் போதியதாயிருந்தது ஓதம். (சுகரு)

660. தீயை யேவச் [1]சிரித்தொரு கொள்ளிவாய்ப்
பேயை யேவின னெங்கள் பிரானுமே.

சிரித்தென்றது நிலத்தினும் நீரினும் பெரிதோ நெருப்பென்றவாறு. எனவே நெருப்பு ஸ்ரீ மாயையின்றியே எரியாது; உஷ்ணமேயுள்ளது. எங்கள் பிரானென்றது வேண்டாவினைக் கேடுசெய்தார் எங்கள் நாயகனுரென்றவாறு; வெறும்பேயானும் விலக்கலாவதற்குக் கொள்ளிவாய்ப் பேயை ஏவினரென்றபடி. உம்மை, தாமும் அப்படிச் செய்தா ரென்பது.

(வி - கு.) உரை. 'நிலத்தினும் நீரினும் பெரிதோ நெருப்பு' என்றது 658, 659-ஆம் தாழிசைகளை நோக்கி. எனவே, நிலமும் நீரும் பெரியன என்பது பெறப்படும்; "நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று, நீரினு மாரள வின்றே" (குறுந். 3), "தெரிவரும் பெருமையும்......மருவிய நன்னில மாண்பா கும்மே" (நன். சூ. 27); "ஞாலத்தின் மாணப்பெரிது", "நன்மை கடலிற் பெரிது" (குறள். 102, 103) என்பவை இங்கே கருதற்பாலன. வினைக்கேடு: "வினைக்கேடு பலபேசி வேண்டிய வா திரிவீர்" (சுந்தர. தே.) (பி - ம்) 1 'சினத்தொடு' (சகசு)

661. காற்றை யேவ வுயிர்ப்பதொர் கட்செவிக்
கூற்றை [1]யேவின னைய குறளனே.

கட்செவி - பாம்பு. கூற்றென்பது கூற்றைப்போல்வதற்குப் பெயர். ஒருமாத்திரையாவது ஓருகம் இப்பாம்புக்கு; இவ்வுயிர்ப்பின்பெயர் உகாந்தாக்கினிச்சுவாசம். ஐயகுறளன் - அழகியகுறளன்; இது வீரபத்திரதேவர் பெயர். ஐயர்குறளனென்னும் ரகரவீற்று வேறுபாடத்துக்குப் பொருள்: ஐயர் - மகாதேவருடைய, குறளன் - வீரபத்திரதேவரென்பது; குறளென்றது குறுமையையன்று. 'ஐயர் குறளன்' என்றதில் ரகரங்கெடவும் இலக்கணமுண்டு.

(வி - கு.) மூ. காற்று பாம்புக்கு ஆகாரம்; அதனாற் பாம்பிற்கு வாதாசனமென்பதொரு பெயருண்டு; "வாதா சனச்சயனரா ராம வெற்பிறைவர்" (அழகர்கலம்.), "வாயு வான பஞ்சடைத்து மாயோன் துயிலு மலரணையே" (செவ்வந்திப். திருமலைச்.), "அரியுண்ணும்" (தனிப். 'பெரிய விடமே'), "மணியுடைநும் பூணுணவு மாற்றும் விரத, நணியனகொ றென்ற னடுக்கும்" (திருவிடைமருதூருலா, 316.)

உரை. 'குறளன்' என்றது இங்கே வீரபத்திரதேவரைக்குறித்து நின்றமையின், 'குறளென்றது குறுமையையன்று' என்றார்.

(பி - ம்) 1 'யேவினன்செய்ய', 'யேவினனையர்' (சகஎ)

662. வானை யேவ வயப்புய மாம்பெரும்
சேனை யேவின னெங்கணுஞ் செம்மவே.

எ - து இந்திரன் ஈசுவரன்மேலே ஆகாசத்தையேவ அதடங்கிஅழிய ஈசுவரன்தன் திருத்தோள்களையேவியருளினன் எ - று.

எனவே வெளியடங்கியது. ஆகாசத்துக்கு வெளியே வலி; "மாநிலஞ் சேவடி யாகத்தூநீர் வளைநரல் பௌவமுடுக்கையாக விசும்புமெய்யாகத் திசைகை யாகப், பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக, இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய, வேத முதல்வ னென்ப, தீதறவிளங்கிய திகிரி யோனே" (நற்றிணை, கடவுள்.)

(வி - கு.) மூ. செம்ம - அடைக்க; தக்க. 135- ஆம்தாழிசைக்குறிப்பைப் பார்க்க; "கைம்ம லர்க்கொடே கடிதிற் றன்செவி, செம்மி" (கந்த. இந்திராணி மறுதலை. 2.) (சகஅ)

## தேவர்களும் பிறரும் அழிதல்

663. அண்டர் யாவரு மாழி கடைந்துபண்
டுண்ட வாரமு தோடு மொருங்கவே.

[இதுமுதல் 668-ஆம்தாழிசை வரையில் தேவர் யாவரும் அழிதல் கூறப்படும்.]

அண்டர்கள் - தேவர்கள். ஆழிகடைந்து பண்டுண்டவாரமுதென்றது மகாமேருவை மத்தாக்கி வாசுகியைக் கடைகயிறுக்கிச் சந்திரனைத் தூணாக்கி விஷ்ணுக்களை மத்துக்குஅடைகல்லான ஆமையாக்கித் தேவர்களும்அசுரர்களும்கூடிப் பலகாலும்வருந்திப் பிரயத்தனம் பண்ணிப்பெற்ற அமுதென்றவாறு.

(வி - கு.) உவர. மகாமேருவை மத்தாக்கி : 30-ஆம் தாழிசை உரையின் விசேடக்குறிப்பைப் பார்க்க. சந்திரனைத் தூணாக்கி : "அமுதத் தம்பமமைந்துடம்பு சலியாது நின்ற தனிமன்னன்" (தக்க. 441), "தம்ப மானது மன்றியத் தழல்விடந் தணிய" (வி. பா. குருகுலச். 4.) (சுகக)

664. அமுதில் வந்த வயிரா பதமவர்
குமுத வாயுமிழ் நஞ்சிற் குளிப்பவே.

அவரென்றது பூதகணங்களை. குமுதவாய் : உவமைத்தொகை ; குமுதம் ஆரவாரமென்னலுமாம். நஞ்சென்றது அவர் வாயிற்புறப்பட்ட பருஷவாக்கியங்களை. அபருஷவாக்கியம் அமிழ்து.

(வி - கு.) மூ. அமுதில் வந்த அயிராபதம் : "அமிர்தோடு மமிர்துண்டெழுங்கரி" (தக்க. 558.) அயிராபதம் : ஐராவதம் என்ற வடமொழிச் சிதைவு (தக்க. 259, 453, 575) ; "பாழி யயிரா பதப்பகடு", "பரிக்குமயிரா பதமே", "அயிரா பதமேசீ யன்றே" (விக்கிரம. உலா) ; "அயிர்க்கு மிருகோட் டயிரா பதத்தை" (குலோத். உலா); "அயிரா பதமத வானை", "கண்ட னயிராபதம்", "அயிரா பதத்திருந்த தானைப்பெருமாள்" (இராசராச.) ; "அயிரா, பதக்க மலங்கரித் தூர்வோன்" (திருவரங்கத். 47) உரை. பருஷவாக்கியங்கள்-கடுமையான வார்த்தைகள்; 189-உரை. (சுஉ0)

665. பாற்க டற்படு பாய்மாப் [1]படுபுனற்
காற்க டற்சுழி யுள்ளே கரப்பவே.

பாற்கடலிற் பட்ட பாய்மாவாவன : பண்டு ஒரு ரிஷி அசுவங்கள் மேய்வனகண்டு தன்கையைத்தட்டித்துரத்த அவற்றுட் சிலகுதிரை கடலைக்கடந்து போயின. அவையிற்றை யாவனமென்பாரும் தெற்சியென்பாருமுளர். அவையிற்றிற்சில பாற்கடலிலே விழுந்தன. அவையிற்றை நாராயண பகவான் புறப்படவிடுத்தான். அவை சுவேதாசுவங்கள். அவையிற்றின் வழியின அர்ச்சுனன் தேர்பூண்ட குதிரைகளென்பர். இதனைச் சாலிகோத்திரத்திற் கண்டுகொள்க. அன்றியே இந்திரன் குதிரைகளும் அவையிற்றிற் பிறந்தனவென்று சொல்வாருமுளர். காற்கடல் - காற்றுக் கடல்.

(வி - கு.) உரை. யாவனம் - யவனதேசத்துக்குதிரை. சுவேதாசுவம் - வெள்ளைக்குதிரை. சாலிகோத்திரம் - சாலிகோத்திர முனிவரால் செய்யப்பட்ட ஒருநூல் ; இது குதிரைகளின் இலக்கணங்களைக் கூறுவதென்றும், இம்முனிவர் குதிரைகளின் உள்ளத்தையறிந்து செலுத்துதலில் வல்லவரென்றும் கூறுவர் ; 'கூந்தன் மாவுள மறிதலிற் சாலிகோத்திரனே" (நைடதம், கலிநீங்கு. 10.) (பி - ம்) 1 'படுபுலாற்' (சுஉக)

666. அங்க ணாயகி யங்கியி லுள்ளன
தங்கள் [1]காறங்கை தாங்கண்ட வண்ணமே.

அங்கண் - அவ்விடம்; இது வேற்றுமைச் சொல்லல்ல; வேற்றுமை யிடப்பொருள்; அவ்விடத்துக் கண்ணென்பது; அத்துச்சாரியையும் ஏழா முருபும் தொக்கன; அவ்விடத்து ஓரிடத்தோரிடத் தெனப்பொருளாக்குக. நாயகியாவாள் மகாகாளி. அவளுடைய அங்கியாவன நவகுண்டப் பிரயோகாக்கினி. அவை காமரூபம், மலயசம், கோலகிரி, களாட்டகம், சேர்காரம், சியேனம், சாலாதரம், பூரணகிரி, பராபரபீடம்; அவை யிற்றின் அதிவேகமாகிற நவாக்கினியாற் பரிவிருதமான மண்டலம். அவ் வக்கினியின் பூதகண நாதர் தாங்களே காலாலும் கையாலும் பாய்ந்து பிசைந்து கண்டபடி பொடியாக்கினு ரென்றவாறு. இவ்வக்கினி வேதத்தில் யாமளாக்கினி.

இப்பாட்டிற்கு வேறொரு பொருள் உரைப்பர். அது: தேவர்கள் கால்களையுங் கைகளையும் தறித்துத் தேவியுடைய அக்கினி குண்டத்திட்டா ரென்பாருமுளர். அதுபோலும் மாங்கிச யாகம். இரண்டிலும் நல்ல துணர்க.

(வி - கு.) மூ. அங்கண் = அ + கண்; அ - அவ்விடம்.

(பி - ம்) 1 'கால்களைத்' (௬௬௨)

667. வேற்றுக் கோட்டிப் பதினொரு விண்ணவர்
ஏற்றுக் கோட்டி னுயிர்க்கழு [1]வேற்றவே.

வேற்றுக்கோட்டி யென்றது ராசாவில்லாத தன்னரசுநாட்டிற் கோட்டி போலக் கர்த்தாவில்லாத கன்மவாதக் கோட்டி யுடையராகித்தாமும் ருத்திர மூர்த்திகளாகி வேறுபட்ட ஆத்தானம் உடைய ரென்பது. ஏற்றுக் கோட்டி னுயிர்க் கழுவேற்றவே யென்றது அவர்தாம் உடைய ரிஷபங்களின் கொம்புகளே கழுவாக உயிர்க்கழுவேற்றினார் பதினொருவரையுமென்ற வாறு. எனவே மகேசுவரதேவர் கீர்த்திகளாயும் ருத்திரவாகனங்களாயும் உள்ள கோவை வதைபண்ணிற்றிலர்.

(வி - கு.) மூ. கோட்டி = கோஷ்டி - கூட்டம். உயிர்க்கழு: 'உயிர்க் கழு முதலான கழுக்கள்', 'உயிர்க்கழு வேறுகை' (தக்க. 97, 170 - உரை), "உயிர்க்கழு வினவா முன்னம்" (திருவால. 38 : 27), "கலக மிட்டுடலுயிர்க் கழுவினுச் சியினின்வைத் திடுவோனே" (திருப்.)

உரை. ஆத்தானம் = ஆஸ்தானம் - திருவோலக்கம்.

(பி - ம்) 1 'வேறவே' (௬௬௩)

668. உக்கு நின்றன ரும்ப ருடம்புதாம்
புக்கு நின்ற நிலைவிடப் போகவே.

உகுதல் - கெடுதல். புக்குநின்ற நிலையாவது ஆன்மாச் சென்று பிறந்த தேவசரீரம்.

(வி - கு.) உம்பர் தாம் புக்குநின்றநிலை விடப்போக உக்குநின்றனர்.

(௬௬௪)

## பின்னும் பிரமன் சேனையை வருத்தல்

669. உய்ய லாமென வும்பர் பிதாமகன்
மய்ய லாற்பின்னுஞ் சேனை வகுக்கவே.

[இதுமுதல் 692 - ஆம் தாழிசையிறுதியாகக் கூறப்படுபவை பிரமா நான்காமுறை தேவர்களைப் படைத்தலும், மீள யுத்தம் தொடங்கலும், திருமாலொழிய ஏனைய தேவர்களும் அவர்கள் படைகளும் மரித்தலுமாம்.] (சஉரு)

உம்பர் - தேவர்கள். பிதாமகன் - பிரமா.

உம்பர்சேனையைப் பின்னும்படைத்தான் பிரமாவென்றவாறு.

## மீள அமர் தொடங்கல்

670. வகுத்துச் சேனையை வானவர் கோமகன்
தொகுத்து விட்டவர் மீளத் தொடங்கவே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. வானவர் கோமகன் - இந்திரன். (சஉசு)

## இந்திரன்விட்ட படைகள் அஞ்சியோடல்

671. தேர்த்தட் டாயன் [1]றுடைந்தது தேர்ந்துகொல்
[2]பார்ப்புத் தேள்பயத் தோடு பறந்ததே.

ஏ - து தேவேந்திரன் தனக்குப்படையான பிருதுவியை முன்னே ஏவ அது பண்டு திரிபுரதகனத்துத் திருத்தேர்த்தட்டாகி ஈசுவரனைத் தாங்கமாட்டாது உடைந்ததை நினைந்தோ, பயப்பட்டு முன்பு நிற்கமாட்டாது பறந்தது? எ - று.

பார்ப்புத்தேள் - நிலத்தெய்வம்.

(வி - கு.) மூ. பார்ப்புத்தேள் - பூமியாகிய தெய்வம்.

(பி - ம்.) 1 'றொடிந்தது' 2 'பார்த்துத்தான் பயத்தோடு' (சஉஎ)

672. பண்டு [1]மாண்மகன் றன்செயல் பார்த்தவோ
மண்டு மாழிக ளென்கொன் [2]மறிந்தவே.

மாண்மகன் - பிராமணப்பிள்ளை.

ஏ - து அவனழ அவனுக்கு அவன் முற்றத்திலே பாற்கடலையழைத்துக்கொடுத்தருளின பழங்கதையை நினைத்தோ, இந்திரன் வரவிட்ட கடலேழும் பயப்பட்டு மீள மறித்துப்போயின? எ - று.

முன்பு பிருதுவியையும் அதன்பின்னர் அப்புவையும் படையாக விடுத்தான் இந்திரன்.

(வி - கு.) உரை. பிராமணப்பிள்ளையென்றது உபமன்னியமுனிவரை; அவருக்குப் பாற்கடலளித்தமை, "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடலீந்தபிரான்" (திருப்பல்லாண்டு, 9), "அத்தர் தந்த வருட்பாற் கடலுண்டு, சித்த மார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்" (பெரிய. திருமலை. 15) என்பவற்றாலறியலாகும்.

(பி - ம்) 1 'மாறன்மகன்செயல்' 2 'மறைத்தவே' (சஉஅ)

673. ஊழித் தீயுவந் தாடுவ [1]தோர்ந்ததோ
பாழித் தீநடு வென்கொல் பனிப்பதே.

ஊழித்தீ - யுகாந்தகாலத்துத்தீ. பாழி - பெருமை. பனித்தல் - நடுங்குதல்.

இந்திரன் அக்கினியையும் ஏவினன்.

(வி - ரு.) மூ. ஊழித்தீயுவந்தாடுவது : 330-ஆம் தாழிசைக் குறிப்பைப் பார்க்க. (பி - ம்) 1 'பார்க்கவோ' (சுஉகூ)

674. உயிர்ப்ப வர்க்குநா [1]மென்பதை யுள்ளியோ
செயிர்ப்பு மாருதம் [2]பேர்ந்து திரிந்ததே.

எ - து இந்திரன் விட்டகாற்றுக் கோபம் நீங்கி மீண்டது, ஈசுவரனது உச்சுவாச நிசுவாசமல்லமோ யானென்றுநினைத்தோ ? எ - று.

(வி - ரு.) மூ. உயிர்ப்பவர்க்கு நாம் : " பவன முயிர்ப்பு " (பொன்வண்ணத். 19.) (பி - ம்.) 1 'யுன்னியோர்' 2 'தீர்ந்துதெரியவே' (சுகூ0)

675. தம்மை மாய்க்குந் தழற்பிழம் பென்பதோ
வெம்மை மாறி [1]விசும்பின்மின் மீண்டவே.

மாய்த்தல் - மின்னுடையசோதியைப் பிரகாசியாமல் அடக்குதல். அது பஞ்சமகாசத்தத்தில் நொடியடக்கம்போல வெனவுணர்க. தழற்பிழம்பு - மகாதேவர் ; ஆகுபெயர்.

இந்திரன் ஆகாசத்து மின்களையெல்லாம் படையாக ஏவினனென்பது.

(வி - ரு.) மூ. தழற்பிழம்பு : இறைவனது திருமேனி தழலுருவென்பர் ; " அனலன் " (தக்க. 710), " தீத்தானுன், மெய்யெலாம் புள்ளிருக்குவேளூரா " (தனிப்.) (பி - ம்) 1 'விசும்பின மண்டவே' (சுகூக)

676. ஐயர் வேணி யரவமங் காப்பவோ
வெய்ய நாயிறுந் திங்களு மீண்டவே.

எ - து படையாக ஆதித்திய சந்திரர்களை ஏவினன். அவை ஈசுவரன் திருமுடியிற்பாம்பு வாய்அங்காக்கப் பயப்பட்டு மீண்டன எ - று.

அங்காத்தல் : ஒருசொல். (சுகூஉ)

677. உழைக்கும் பண்டை யுதைநினைந் துட்கியோ
இழைக்குங் கூற்ற [1]மெதிரா திரிவதே.

இழைத்தல் - இந்திரன் படையாகச்செய்தல். இரிவது - இரிந்தோடல்.

(வி - ரு.) மூ. பண்டை உதை - மார்க்கண்டேயருக்காகக் கூற்றுவனைச் சிவபெருமான் உதைத்தது. உட்கி - அஞ்சி. எதிராது - எதிரில் வாராமல். (பி - ம்) 1 'மெதிராய்வருவதே' (சுகூக)

678. வெம்பு தானவர் மூவெயில் வேவித்த
அம்பு தானுள தென்றோ வகன்றதே.

தானவர்அகன்றது அம்பு உளதென்றோ வென்க. (சுகூச)

679. அரிய வீழ்ந்த வருஞ்சிறை யுள்ளியோ
திரிய வீழ்ந்தன வெல்லாச் சிலம்புமே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. அரிய வீழ்ந்த அருஞ்சிறை : இந்திரன் குயிலானபொழுது அதன் சிறையை அரிந்தமையைக் குறிப்பித்தபடி. (சுகூரு)

680. அருந்து மாழியி லாலமுண் டாரென்றோ
பொருந்து மேகங்கள் போர்விடப் போவதே.

எ - து மேகங்கள் தாம் உண்ணுங்கடலில் நஞ்சுண்டாரென்று கொண்டோ, பொருந்தியபோரைவிட்டுப் போவது? எ - று.

இவையும் இந்திரன்விட்ட மேகங்கள்.

எனவே இந்திரன் கடல்கடைந்து நஞ்சுண்டாக்க ஈசுவரன் அதனை அடக்கினனென்பது. (சுகூசு)

681. எட்ட நிற்கி னுரிப்பரென் றெண்ணியோ
விட்ட மாதிர வேழங்கண் மீண்டவே.

விட்டமாதிரவேழங்கள் - இந்திரன்விட்ட திக்கசங்கள்.

(வி - கு.) மூ. எட்ட - எட்டும்படி. (சுகூஎ)

## இந்திரன் முதலியவர்கள் படல்

682. கூறு மேகக் குலிசா யுதன் [1]பட
[2]ஏறு மேகத் துருமே றெறியவே.

[இது முதல் 689 - ஆம் தாழிசைகாறும் தேவர் தம்முடைய வாகனங்களாலேயே உயிர்துறத்தல் சொல்லப்படும் ; தக்க. 640-குறிப்பைப் பார்க்க.]

ஏகன் குலிசம் ஆயுதனெனப் பிரித்துக்கொள்க. எனவே ஒருவனை வச்சிராயுதனென்பது பொருள்.

இந்திரன் தானேறப்பட்ட மேகத்தின் உருமேற்றாலே படவென்ற வாறு.

(வி - கு.) மூ. மேகத்துக்கு உருமேறு. (பி - ம்) 1 'படை' 2 'வேறு' (சுகூஅ)

683. [1]காய்ந்தி ரண்டு கதுப்பினுந் தன்கடாய்
பாய்ந்து பாவகப் பாவி பதைக்கவே.

கடாய் - கிடாய். பாவகன் - அக்கினிதேவன்.

(வி - கு.) மூ. கதுப்பு - கன்னம். கடாய் - ஆட்டுக்கிடாய் ; "நிலைக் கோட்டு வெள்ளை நால்செவிக் கடாஅய்" (அகநா. 156 : 16), 'யாத்தவென் பதனாற் கடாயென்பதும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க' (தொல். மரபு. சூ. 2, பேர். உரை.)

(பி - ம்) 1 * 'சாய்ந்திரண்டு' (சுகூகூ)

684. சட்டத் தென்னவன் றன்கடா வேந்தனை
வெட்டிக் கூறிரண் டாய்விழ வீழ்த்தவே.

சட்ட - கடுக ; திசைக் கொடுந்தமிழ்ச்சொல். தென்னவன் - தருமராசன்.

(வி - கு) மூ. சட்ட : " சட்டகலை யெட்டுமரு வெட்டும்வளர் தத்தை பயில் சண்பை நகரே " (திருஞா. தே.), " நான் சட்ட நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே ", " சட்ட விக்கத வந்திறப் பிம்மினே " (திருநா. தே.) தென்னவன் : " அன்னவன் மகிட மான வாற்றினை லஞ்சிக் காலத், தென்னவன் மகிட மேறுன் " (அருணசல. பாகம்பெற்ற. 4.) கடா - எருமைக்கடா.

உரை. தென்னவன் என்பது இராவணனுக்கும் கூற்றுவனுக்கும் பாண்டியனுக்கும் பெயர் ; இது " தென்னவற் பெரிய " (மதுரை. 40) என்பதன் விசேட வுரையாலும் அறியலாகும். (சஅ0)

685. குருதி யூற்றிக் [1]குடித்திடு கூளியால்
நிருதி யூற்ற மிழந்துயிர் நீங்கவே.

இ - ள் தன்ரத்தத்தை ஊற்றியுண்ட தன்வாகனமான பேயாலே நிருதி வலியிழந்து மரணமெய்த எ - று.

(வி - கு.) மூ. குருதியூற்றிக் குடித்திடு கூளி : இரத்தத்தை நிலத்தில் ஊற்றிப் பின் அதனைக் குடித்தல் ; இது புலி முதலிய கொடிய விலங்குகளின் இயல்பு : இதனை, " ஒண்செங் குருதி யுவற்றியுண் டருந்துபு, புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை " (அகநா. 3 : 8 - 9) என்பதனாலும், " எருத்து வவ்விய புலிபோன்றன " (புறநா. 4 : 9) என்பதற்கு, ' கழுத்தைக் கவ்வி உதிரம் உவற்றியுண்ட புலியையொத்தன ' என்றெழுதிய அதன் உரையினாலும் அறியலாகும்.

(பி - ம்) 1 'குளித்தனர்கூளிவாய்' (சஅக)

686. முகர வாயன் வருணன் முதியவன்
மகர [1]போசன மாயுடன் மாயவே.

முகரம் - ஆரவாரம். எனவே திரையவியினும் மீன்பாய்ந்து ஒலிஅடங்காக்கடலென்பது. முதிய வன்மகரமென்றது மகரவாகனத்தின் பழமையைக் கூறியவாறு. போசனம் - உணவு.

(வி - கு.) மூ. மகரபோசனம் - மகரத்திற்கு உணவு.

(பி - ம்) 1 'மோசன' (சஅஉ)

687. மலைம ருப்பெறி மாருத மார்புதன்
கலைம ருப்பிற் கழியக் கிழியவே.

மலைமருப்பு - மலைக்கொடுமுடி. மாருதம் - காற்று. கலை அவன் வாகனம்.

(வி - கு.) மூ. மலைமருப்பு : " அந்தமிலா மலைமருப்பின் " (இரணிய வதைப். 617) ; மருப்பு, கோடு, சிருங்கமென்பன மலைச்சிகரத்தின் பரியாயப் பெயர்கள். வாயுபகவானுக்குக் கலைமான் வாகனமென்பது, " அருங்கலை யயலுற வதிர்ந்து வீசினன், பொருங்கலை யெனுமிகற் புரவி வீரனே " (வி. பா. குருகுலச். 57), " கானேறு நீர்க்கரசைக் கந்தச் சமீரணனை, மீனேறு மானேறு மேற்கொள்ள " (திருக்காளத்திநாதருலா, 175) என்பவற்றாற் பெறப்படும். (சஅங)

688. [1]பாழி வாய்மதி தன்னைப் பரிப்பதோர்
ஆழி யீரப் பிறையிரண் டாகவே.

பாழி - பெருமையும் வட்டமும் யுத்தமும்; "பாழி யற்றுச் சாரியை யோட்டி" எனவும், "பரந்த பாழி மற்றவன் காட்ட" எனவும் வருவன **உதயணன் கதை**; "பாழித் தோண்மனி சற்குப் பணியுமே" (**சூளா.** சீய வதை. 64.) பரிப்பதோராழியென்றது ஆதித்தசக்கரத்தையல்ல; சந்திரனுக்குச் சக்கரம் இல்லை; விலைச்சக்கரம் சந்திரனை எறியாது; அஃது ஈசசக்கரமெனவுணர்க.

எனவே முன்னிற்பாட்டில் வாகனங்களே பகையானதுபோல இதிலும் பரிக்கிறசக்கரமே சந்திரனை இரண்டுபிறையாக்கியதென்றவாறு.

(**வி - கு.**) மூ. பரிப்பது - பாதுகாப்பது.

**உரை.** ஈச சக்கரமென்பது காலசக்கரத்தை; **தக்க.** 707 - ஆம் தாழிசையைப் பார்க்க; சங்கார சக்கரமென்றலும் ஆம்; 714-ஆம் தாழிசை உரையைப் பார்க்க.

(**பி - ம்**) 1 'பாழிவாழ்மதி', 'பாழின்வாழ்மதி' (சுசச)

689. மாறு கூர்வட கீழ்த்திசை வானவன்
ஏறு மார்பந் திறப்ப விறப்பவே.

மாறு கூர்தல் - மகாதேவருடைய சிவநாமத்துக்கு மாச்சரியம்போல ஈசானனென்னும் பெயரைக்கொண்டு ஸ்ரீகைலாசத்துக்குமாறாக வடகீழ் மூலையைக் கைக்கொண்டு தருமரூப ரிஷபவாகனத்துக்கு மாறாகப் பாபரூப ரிஷபவாகனமான காரெருதைக் கைக்கொண்டு நிற்றல்.

இவன் ஏறின ரிஷபமே இவன்மார்பைக் குத்தித் திறந்தது.

(**வி - கு.**) **உரை.** மாச்சரியம் - பொறாமை. தருமரூப ரிஷப வாகனம்: **தக்க.** 453 - உரை. (சுசரு)

## வேறு

690. அங்கிகண் மூவருநே ரட்ட வசுக்களுநேர்
[1]எங்குள தேவருநேர் கின்னரர் யாவருநேர்.

அங்கிகள் மூவராவார்: தட்சிணாக்கினி, காருகபத்தியம், ஆகவநீயம்; வாருணாக்கினி......அக்கினி யென்பாருமுளர். நேரென்றது தேய்ந்துபோனா ரென்றவாறு.

(**வி - கு.**) மூ. நேர்: 110-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க.

(**பி - ம்.**) 1 'அங்குளநாகருநேர்' (சுசசு)

691. இந்த்ர முராரிகணேர் யமவரு ணாதிகணேர்
சந்த்ர திவாகரர்நேர் [1]தாரகை யாவையுநேர்.

இதன் பொருளுணர்க.

(**பி - ம்.**) 1 'தனிமதயானையுநேர்' (சுசஎ)

692. மண்டல மடியிடநேர் தோளிட மாதிரநேர்
விண்டல முடியிடநேர் விண்ணவ ரேயினிநேர்.

மண்டலம் ; அல்வழி ; பெயர்கொளவந்தது. மாதிரம் - திக்கு. விண்டலம் : அல்வழியும் வேற்றுமையுமாம். விண்ணவரே இனிநேரென்றது விண்டலம் நேரானபடி கண்டால் தேவர்கள் சமானராவார் ஸ்ரீ பூதகணநாதர்க்கென்றவாறு ; இது குறிப்பு.

(வி - கு.) மூ. தோளிட மாதிரநேர் : " அருக்ககனப் பரப்படையப் புயத்துறவிட் டடைத்தே " (தக்க. 474.) (சசஅ)

## திருமால் பொர வருதல்

## வேறு

693. பொக்கந் தவிர்வியாழன் [1]சுக்ரன் போல்வீழப்
பூகண் டகர்கோவோ டாகண் [2]டலன்மாயத்
தக்கன் றலையானோர் பக்கம் [3]படைபோதச்
சதுரா னனவெள்ளஞ் சூழத் [4]தான்வந்தே.

பொக்கம் - செறிவு. சுக்கிரன் - வெள்ளி. பூகண்டகர்கோ - அசுரேந்திரன் ; பூ - பூமி. கண்டகம் - முள் ; முட்போல்வார் அசுரர். ஆகண்டலன்-தேவேந்திரன். மாய்தல் - இறத்தல். தக்கன் - தட்சன். தலையானோர் - இவன்முதலாயினோரெல்லாரும். பக்கம் படைபோதவென்றது பிரமாக்கள் பலரும் தந்திரமாகிவரவென்றவாறு. சதுரானனனைவான் பிரமா; சதுரம் ஆனனன். வெள்ளமென்றது பிரமாக்களின் பெருமை. தானென்றது விஷ்ணுக்களை ; பரந்தாமப்பொருள்.

தேவாசுர மந்திரிகளும் தேவாசுர ராசாக்களும் மாய்ந்தபின்னைப் பிரமவர்க்கத்தொடக்கத்துடன் விஷ்ணுக்கள் வந்தாரென்றவாறு.

பொக்கந்தவிர்கையாவது மேதையாயும் ஈசுவரனுடன் செறிவு தவிர்ந்தானென்பது.

தட்சனும் வேண்டினபடி படைக்கவல்லார் சிலரும் உடனே போதப் பிரமாக்களும் போத விஷ்ணுக்களும் போந்தாரென்றவாறு.

சுக்கிரன்போல வியாழனும் வீழ்கையாவது மேதையாயும் கண்ணிரண்டும் உடையனுயும் மகேசுவரச்செறிவு தவிர்கைக் குற்றமுளதாயிற்று.

(வி - கு.) மூ. பொக்கம் என்பது செறிவென்னும் பொருள்படுவது ; " துடியிடையா டுணைமுலைக்குச் சேர்வ தாகும், **பொக்கன்** காண் " (**திருநா. தே.**), " எயிலார் **பொக்க மெ**ரித்த " (**சுந்தர. தே.**) என்றவிடத்தும் அமைதல் காண்க.

**உரை.** மேதை - அறிவுள்ளவன். 'மேதையாயும் கண்ணிரண்டும் உடையனுயும்' என்றது சுக்கிரன் அறிவில்லாதவனென்பதையும் ஒற்றைக் கண்ணுடையவனென்பதையும் குறிப்பிக்கின்றது.

(பி - ம்) 1 'சுக்கிரன்போய்வீழ' 2 'டலன்மானத்' 3 'புடைபோதச்' 4 'தாமாய்ந்தே' (சசகூ)

694. காரிற் றுளியாலோ ரசனிக் கதழேறுங்
கடலிற் றிரையாலோர் வடவைக் கனன்மாவும்
பாரிற் றுகளாலோர் படநா கமுமாகப்
பரமன் பூரிக்கப் பிரமன் பாரித்தே.

துளியாலோரசனியாவது உருமேற்றின் கணக்கிறந்தமை. கத்ழ்-வலி. வடவைக்கனன்மாவென்றது குதிரைமுக உவமை. பாரிற்றுகளாலொரு பட்நாகமுமாதல் கணக்கில்லாத பாம்பாகை. இங்குப் பரமனுவான் விஷ்ணு மூர்த்தி. பிரமன் - பிரமா.

மாயனுதலால் இந்திரஞாலங்காட்டுவதைப்போலத் திருமால் படைக்கப் பிரமா படைலயவகுத்துப் பரப்பினனெனவுணர்க.

(வி - கு.) மூ. பூரிக்க - படைக்க. பாரித்து - பரப்பி. (சுகூ0)

695. சதுரா னனவெள்ளஞ் சூழத் தான்முற்றுந்
தந்த்ரங் களுமெல்லா யந்த்ரங் களுமுட்கொண்
டெதிரா யவியக்கண் டீரை வரையுங்கொண்
டிறையோ னெதிர்சென்றான் மறையோ ரிறையோனே.

ஏ - து பிரமாவெள்ளஞ்சூழ விஷ்ணுக்கள்தாமே எல்லாத்தந்திரங்களும் எல்லா யந்திரங்களும் உட்கொண்டு எதிராய் அவிந்துபோகத் தசப்பிரமாக் களையுங்கொண்டு ஈசுவரனெதிரே பின்னையுஞ்சென்றான் எ - று.

(வி - கு.) மூ. யந்த்ரங்கள் - ஆயுதங்கள். மறையோரிறையோன்-திருமால். (சுகூக)

696. சாதித் தழலாமுத் தொகையு முக்குடுமிச்
சத்திப் பிழையாமே குத்தித் தனிநெற்றிச்
சோதித் தழலிற்பண் டெரிமுப் புரமொப்பச்
சுட்டுக் ககனத்தே விட்டுத் துகள்செய்தே.

ஏ - து விஷ்ணுக்களாற் சாதிக்கப்பட்ட அசனி உருமேற்றுத்தழலும் வடவாமுகாக்கினியும் படநாக விஷாக்கினியுமான மூன்றுதொகையும் ஈசுவரன் தனது திருக்கையிற்றிருச்சூலத்தின் மூன்று தலையாலும் குத்திப் பண்டு திரிபுரத்தைத் திருநெற்றித் தனித்திருநயனத்தாலே எரித்தாற்போலச் சுட்டு ஆகாசத்திலே தூளிபோம்படி செய்தருளி எ - று.

சாதித்தழல் - சாதித்தஅழல் ; விகாரம். (சுகூஉ)

## பிரமர்கள் அழிதல்

697. பத்துத் தலையோடும் பதின்மர்க் குந்தத்தம்
பறியா வுயிர்போகப் பதுமத் திறைவற்கும்
கொத்துத் தலைநாலுங் கலனு கியமுன்னைக்
குறளைத் தலையாகக் கொளைவிற் குனிவித்தே.

ஏ - து தசப்பிரமாக்கள் தலைகளுடனே அவர்கள் உயிர்போம்படிபறித்துப் பிரமாவினுடைய தலைநாலும் ஒருக்காலேபோம்படி ஒருதொடையில் ஓரம்பால் அறுத்தருளி எ - று.

கலனுகிய முன்னைக் குறளைத்தலையென்றது தேவாசுரயுத்தத்தில் அமராபதியிற் புகுந்தகாரியம் ; அசுரர் படைவீடான சோணிதபுரத்திற் சென்று குறளைச் சொன்னதலையை அறுத்துப் பாத்திரமாக்கொண்டு பிச்சைசக்கருளினகதை ; இது மகாப்பிரதமாகேசுவரம்.

(வி - கு.) மூ. கொத்துத்தலை - கொத்தாகிய தலை. குறளை - கோள். குறளைத்தலை : " அத்தகத்த, வானவர்க டாங்கூடி மந்திரித்த மந்திரத்தை, மேனவிலவோடி விதிர்விதிர்த்துத்—தானவருக், கொட்டிக் குறளை புரைத்த வயன்சிரத்தை, வெட்டிச் சிரித்த விறல்போற்றி " (நக்கீரதேவநாயனார் போற்றிக் கலிவெண்பா.) கொளை - நரம்புக்கட்டு.

உரை. படைவீடென்பது நகரத்தின் பெயராகவும் இருவகை வழக்குக்களிலும் காணப்படுகிறது. (சுருக)

## திருமால் வீரபத்திரதேவரெதிர் செல்லுதல்

698. செந்தா மரையோனைக் கிளையோ டுயிர்வவ்வித்
திருமால் [1]வருகென்றெம் பெருமா னறைகூவத்
தந்தா மரையுந்திப் புதல்வன் கொலையுண்ணத்
தரியா ரிவரென்னக் [2]கரியா ரெதிர்சென்றே.

எ - து பிரமாவை மக்கள் பதின்மருடன் கொன்றருளி இனி விஷ்ணுவே வருகவென எங்கள் ஈசுவரன் அறைகூவியருள, மகனை இழந்த விஷ்ணுக்கள் இனித்தரிப்பரோ வென்ன ஈசுவரனெதிரே தனியேசென்றார் எ - று.

இப்பாட்டில், ' எம்பெருமான் ' என்றது பேயின் கூற்றென்றறிக.

(வி - கு.) மூ. கிளை - தசப்பிரமர். அறைகூவ - பொர அழைக்க.

(பா - ம்) 1 'வருகென்றே' 2 ' கிரியானெதிர்சென்றே' (சுருச)

## வேறு

699. பொருதரங்கம் வீங்குசி [1]லம்படை சேவடிப்
புரையடங்க வூன்றவி ழுந்தது மேதினி
இருவிசும்பு தூர்ந்தற வுந்திய மோலியி
னிடைகழிந்து கூம்பின தண்டக பாலமே.

எ - து விஷ்ணுக்களுடைய சிலம்படை சேவடியான ஸ்ரீ பாதத்தைப் பொருதுநிற்கும் தரங்கமானவை ரேகைக்கீற்றுப்புரையில் அடங்க உச்சாகித்து யுத்தத்திற்கு ஊன்றப் பூமியெல்லாம் விழுந்துபோயிற்று. திருமுடிக்கு ஆகாசம் வெளி தூர்ந்தற அண்டகபாலம் இடையின்றிக்கூம்பியது எ - று.

எனவே திருவடிக்குப்பூமியும் திருமுடிக்கு அண்டகபாலமும் அளவு சுருங்கின வென்றவாறு.

(வி - கு.) உரை. ரேகைக் கீற்றுப்புரை - ரேகைக் கீற்றுகிய புரை. உச்சாகித்து - ஊக்கங்கொண்டு. (பா - ம்) 1 'லம்பணி' (சுருரு)

## வேறு

700. தம்பொன் மகுட மண்ட கோளகை
சங்கு திகிரி சந்த்ர சூரியர்
செம்பொ னறுவை குன்ற வேதிகை
சென்ற [1]திரும னின்ற கோலமே.

எ - து விஷ்ணுக்களுடைய திருமுடிக்குப் பொன்முடி அண்டகோளகை. திருக்கைக்குச் சங்குசக்கரம் சந்திராதித்தர். திருவரைக்குப் பீதாம்பரம் சக்கரவாளபருவதம். இப்படியே ஈசுவரனெதிரே சென்ற திருமால் நின்ற கோலம் எ - று.

(வி - கு.) மூ. சங்குதிகிரி சந்த்ர சூரியர் : " திங்களும் பருதியுஞ் சங்கமுந் திகிரியும் " (திருவரங்கக். 32); சந்திர சூரியர்களை இவ்விரண்டிற்கும் உவமையாகவும் கூறுதல் மரபு ; " விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி, .........பகையணங் காழியும் பால்வெண் சங்கமும், தகைபெறு தாமரைக் கையினேந்தி " (சிலப். 11. 143 - 8); " இருசுட ரிருபுறத் தேந்தி......வருவ போற் கலுழன்மேல் வந்து தோன்றினான் " (கம்ப. திருவவதாரப். 13) ; " அழகொடு திருக்கைவளை திகிரிகளி னொப்புடைய வழல்கதி ரிரட்டை " (குலோத். பிள்ளைத்.) ' செம்பொனாறுவை குன்ற வேதிகை ' என்றதனால், சக்கரவாள பருவதம் பொன்னிறமென்பது பெறப்படும் ; " பொலனேமி " (தக்க. 2) என்பதனாலும் அதன் உரை, குறிப்பு முதலியவற்றாலும், " பொன்னேமி யளவுந் தன்னேமி நடப்ப " (முதற் குலோத்துங்க சோழன்மெய்க்கீர்த்தி) என்பதனாலும் இது விளங்கும். திருமன் - திருமகளின் தலைவன்.

(பி - ம்) 1 'திருமானின்ற', 'கருமானின்ற' (சஙுசு)

701\. எங்கு முலகு [1]நுங்கு தீயென
வின்று [2]கனல நின்ற நீரொரு
பங்கு பெறுக விங்கு தானிது
பண்டு மறையி லுண்டு பார்மினே.

இது முடிவில் விஷ்ணுக்கள் ஈசுவரன் ஸ்ரீ பாதத்துக்குள்ளே புகுகையைப்புலப்படுத்தியது ; இது வேதப்பொருள்.

(வி - கு.) மூ. நுங்குதல் - விழுங்குதல் ; " நுங்குவ லுலகையோர் நொடியிலென்றனர் " (கம்ப. திருவவதாரப். 19.) இன்று யாம் கனல நின்ற நீரில் ஒரு பங்கைப்பெறுக, அவ்வாறாயின் எம்முள் அடங்கலாமென்பது கருத்து.

(பி - ம்) 1 'தங்கு' 2 'கனல் புனலங்குநீரொடு' (சஙுஎ)

## திருமாலுக்கும் வீரபத்திரதேவருக்கும் யுத்தம்

### வேறு

702\. [1]என்று போதுமொரு புட்கொடி யெடுத்துமொருபே
ரிடப நற்கொடி யெடுத்துமிரு வர்க்குமிருதேர்
குன்று போல்வன விசும்புகெட மேல்வருபெருங்
கொண்டல் போல்வன புகுந்தன கொடிப்படையொடே.

புட்கொடியென்றது கருடத்துவசத்தை. அது பஞ்சவன்னமாயிருத்தலால் ஐவணக்கொடியெனப் பாடஞ்சொல்வாருமுளர்.

குன்றென்ற உவமை திண்மைனலுக்கு ; மேகவுவமை செலவுக்கு.

(வி - ரு.) உரை. மேகம் செலவுக்கு உவமை: "காரெனக் கடிது சென்றான்" (கம்ப. குகப். 39.)

(பி - ம்.) 1 'என்ற போழ்திலொரு' (சுரு௮)

வேறு

703. தண்டுழாய் மார்பர்சங் கொன்றுமே [1]யூதவுந்
தமனியக் கொன்றையார் தந்திருத் தேர்மிசைப்
பண்டுமால் வரவரக் கொண்டநா ளிடுமிடும்
படைவிடா வலகில்சங் கிடைவிடா தூதவே.

தமனியம் - பொன். மால்வரவரவென்றது விஷ்ணுக்கள் பலராதலால். படைவிடா - பூசல்விடாத.

(வி - ரு.) மூ. தமனியக் கொன்றை - பொன் போன்ற கொன்றை; "பொன்னென மலர்ந்த கொன்றை", "நெடும்பொறை மிசைய குறுங் காற் கொன்றை, அடர்பொன் னென்னச் சுடரிதழ் பகரும்' (ஐங். 420,430), "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள். 1.) பண்டு மால்......ஊதவே : தக்க. 342.

(பி - ம்) 1 'யூதநந்' (சருக)

வேறு

704. நின்ற வில்லிகொடி யிற்கருட னார்த்தபொழுதே
நிமிர்சி றைக்கருட லோகமுட னார்த்தெழுவே
குன்ற வில்லிகொடி மேலிடப [1]மொன்றுகுமுறக்
கோவு லோகமக [2]லோகமடை யக்குமுறவே.

நின்றவில்லி : வீரபத்திரதேவர்க்கு எதிரே பொருதற்குநின்ற வில்லி யென்பது வேண்டப்பாடு. குன்றவில்லி - மகாதேவர். கோவுலோகம் - பசு லோகம். மகலோகமென்றது யக்ஞக்ஷேத்திரத்தை. குமுற - பிரதித்துவனி எழ.

(வி - ரு.) மூ. கோவுலோகம் : தக்க. 104-ஆம் தாழிசையைப் பார்க்க. மகலோகம் : மகம் - யாகம். (பி - ம்) *1 'வேறுகுமுறக்' 2 'லோக முருவக்' (சகூ0)

705. நேமி யங்கிரி நெரிந்தது முரிந்ததிடையே
நின்ற மேருகிரி யெக்கிரியு மெக்கடலுநேர்
பூமி [1]கம்பமு மெதிர்ந்தன வுதிர்ந்தனவுடுப்
பொருபுராரியு முராரியு முடன்றபொழுதே.

நேமியங்கிரி - சக்கரவாளபருவதம். எக்கடலு நேரென்றது எல்லாக் கடலும் நேராயினவென்றவாறு. எதிர்கையாவது பிரதித்துவனி உண்டாகுகை. உடு - நக்ஷத்திரம். புராரி - மகாதேவர். முராரி - விஷ்ணுக்கள். உடலுதல் - பொருதல்.

(வி - ரு.) மூ. முரிந்தது - வளைந்தது. கம்பம் - அதிர்தல்.

(பி - ம்) 1 'தம்பமு நிரந்தன' (சகூக)

706. [1]சந்தி ராதிகளொன் பதின்மரிரு பத்தெட்டுநா
டார காகணித ராசிசோ திச்சக்ரமென்
[2]றிந்தி ராதிகள் விமானமொரு முப்பத்துநா
லிருவர் தேரினு மடிந்தனகொ லெங்குமிலவே.

ஒன்பதின்மர்க்கு ராகுகேதுக்கள். நாள் இருபத்தெட்டுக்கு அபிசித்து. தாரகாகணிதம் - தாரக அகணிதம்; கணக்கில்லாதன. ராசி பன்னிரண்டு. சோதிச்சக்கரம் - துருவசக்கரம். இந்திராதிகள் விமானமொருமுப்பத்து நான்கு : யசமானவிமானமுங் கூட்டுக.

(வி - கு.) மூ. சோதிச்சக்கரம் - கோள்கள் முதலியவற்றை யடக்கி நின்ற துருவசக்கரம் : "குருமணி மோலித் துருவன் பிணித்த கொழுங் கயிற்றின், ஒருவுதல் கோளுக்கிலை" (பஞ்சாக்கர தேசிகரந்தாதி, 62.)

உரை. அபிசித்து - ஓர் உபநட்சத்திரம்; சோதிட நூல்களிற் காண்க.

(பி - ம்) 1 'சந்திராதிபர்கள்' 2 'றிந்திராதிபர்கள் சந்திராதிகளொ ரொன்பதின்மர்' (சசுஉ)

707. ஞால நேமிதிரை நேமிவரை நேமியிவையே
நடை சுழன்றிடை சுழன்றன சுழன்றிலதுதம்
கால நேமிரத நேமியிரு [1]காலுமுடுகக்
கடவுள் வீதியில் [2]விசும்பிடை படக்கடுகியே.

ஞாலம் - பூமி. திரை - கடல். வரை - மலை. தம் காலநேமியென்றது ஈசுவரன் ஆக்கினையாகிய காலசக்கரமான சோதிச்சக்கரத்தையென வுணர்க. இரதநேமி - சந்திராதித்தியசக்கரம்; நேமியாகிய கால். கடவுள் வீதி - தேவலோக வீதி.

(வி - கு.) மூ. ஞாலநேமி திரைநேமி வரைநேமி : "கடலாழி வரை யாழி தரையாழி" (தக்க. 6.) இடை - இடைக்கட்டு.

(பி - ம்) 1 'பாலுமுருகக்' 2 'விசும்படி யெழக்கடுகவே' (சசுங)

708. வேற நேகவித தாரகை யநேகமிடையே
வீசு மாருத மநேகமினன் மேககுலமே
[1]ஆற நேகமிர தங்களு மநேகமவர்தா
மார்ப தங்களெதிர் நீறுபட வேறுபடவே.

தாரகை - நட்சத்திரம். மாருதம் - காற்று. மினல் - மின்னு. ஆறு - வழியுங் கங்கையும். இரதம் - தேர். பதம் - வழி.

(வி - கு.) மூ. ஆர்பதங்கள் - நிறைந்த வழிகள்.

(பி - ம்.) 1 'ஆறனேகமுலகங்களு மனேகமவர்தா மாறுபங்களெதிர் நீறுபட' (சசுச)

709. [1]எம்ம் பாய்புரவி யிற்றெமது தேருமிறுமே
லிடப மாய்வர [2]வெழுந்துசும வீரெங்களுக்
கம்ம் பாய்வருகி லீர்[3]சிலை புகுந்துபிடியீ
ரஃதுபோலுமினி [4]யெம்மொடுறு மும்மதுறவே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. இது திருமாலைக்கண்டு வீரபத்திரதேவர் கூறிய குறிப்பு மொழி; 'எம்முடைய வாகனங்களெல்லாம் நீங்கிவிடின் நீர் பழையபடி ரிஷபவாகனமாக வந்து தாங்கமாட்டீர்; முன்போல் அம்பாகி வரமாட்டீர்; எம்முடைய வில்லைப் பிடிக்கமாட்டீர்; இதுபோலும் இனி எம்பால் நீர் வைக்கும் உறவு' என்பது இத்தாழிசையின் பொருள்,

திருமால் இடபமாய்ச் சுமந்தது, "இடபமதாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ" (திருவா.) என்பதனால் விளங்கும். சிலைபுகுந்து பிடித்தலாவது, திருமால் ஈசுவரனது வாமபாகத்திருப்பதனால் விற்பிடிக்குங்கை இடக்கையாதலின் அக்கை திருமால்கை என்பதைக் குறிப்பித்தபடி. திருமால் தேவியாதலின் இடப்பாகத்தே உறைவாரெனலும் ஆம். இங்கே கூறப்பட்ட மூன்று செய்திகளையும், "விடைசக்கமல வோடையாவர் புரத்தைமுனி பாண மாவர் விரித்தகொடி யாவ ரீதலால், இரக்குமனை தோறு மேறு நடத்துமொரு தாவர் மேவி யிடத்திலுறை தேவியாவரே" (அருணைக்கலம். 42) என்பதிற் காணலாம்.

(பி - ம்) 1 'எம்பாய்பரியற்றெமது' 2 'விழுந்துசுமவீர்' 3 'விற்புகுந்து' 4 'நடுவும்மொடினியெம்மொ டமரே' (சசரு)

710. புனலன் மேனியி னிசிந்தன்விடு மம்படையவும்
புரைய டங்குமினி யப்பரசு பாணி புரைதீர்
அனலன் மேனியின் முகுந்தன்விடு மம்படையவே
மாத லாலவர் வலந்தெரிவ தம்மவரிதே.

புனலன் - விஷ்ணுக்கள். நிசிந்தன் - ஈசுவரன்; ஆராயவரியனென்றவாறு; இப்பொருள்: யோகி போகியென்பன முதலாயினகொள்க. புரையடங்குகை - புரையுள்ளே செறிகை. பரசுபாணி புரைதீரனலன் - சிவன். முகுந்தன் - விஷ்ணுக்கள். வலம் - வெற்றி. "அம்மகேட்பிக்கும்" (தொல். இடை. 28.)

(வி - ரு.) மூ. புனலன் - நாராயணன்; "மாயனுதகத் திருவுடம்புபுக" (தக்க. 711) என்று கூறுவதும் இங்கே கருதத்தக்கது. அனலன்: "தழற்பிழம்பு", "தீயென வின்று கனல", "செய்யவெரி" (தக்க. 675, 701, 711) என ஆசிரியர் கூறிவருதல் அறியற்பாலது.

உரை. ஆராயவரியன்; "தன்மை பிறராலறியாத தலைவா", "பெற்றி பிறர்க்கரிய பெம்மான்" (திருவா.); "அளவிலா யார்க்கு மறிவரியோன்"[1] (திருச்சிற். 10.) (சசசு)

711. மாயோன் விடும்விடும் பகழி செய்யவெரிமேல்
வந்து வந்தடைய வெந்துபொடி யாய்மடியவே
சேயோன் விடும்விடும் பகழி மாயனுதகத்
திருவு டம்புபுக மூழ்கியுரு வச்செருகவே.

மாயோன் - திருமால்; கரியோனென்றது. சேயோன் - ஈசுவரன். மாயோன் - மாயன், சேயோன் - சேயனென்றுமாம். உதகம் - சலம்.

(வி - கு.) மூ. செய்யவெரியென்றது சிவபெருமானை ; "தழற்பிழம்பு" என்றார் முன்னும்; தக்க. 675. சேயோன் - சிவந்த நிறமுடையவன் ; "பவளம்போல் மேனி" (திருநா. தே.)

உரை. மாயோன்என்றதற்குக்கரியோன் எனப் பொருளெழுதினர் பரிமேலழகரும் (பரி. 3 : 1.) (சசுள)

712. அறும றும்பிரமர் நாரணர்க பாலநிரைபே
ராரமார்புடைய வீரர்திரு மேனியருகே
உறுமு றும்பகழி வெந்துபொடி யானபடிகண்
டுள்ள பஞ்சவா யுதங்களையு மொக்கவிடவே.

நிரையாரமென்றது வினைத்தொகை ; நிரைத்த நிரைக்கும் நிரையா நின்றவென மூன்றுகாலமுங் கொள்க.

(வி - கு.) மூ. பஞ்ச வாயுதங்கள் : தமிழ்முடிபு ; பஞ்சாயுதமென்பது ஆரிய முடிபு ; "பஞ்ச வாயுதமும்" (தக்க. 713.) (சசுஅ)

## வீரபத்திரதேவர் அருளிச்செய்தல்

713. தண்டு தோள்வளை கழுத்துநுதல் சாபம் விழிவாள்
சக்ர மானன மெனத்தேவர் தானவர்களைப்
பண்டு நீரமு தருத்துமுரு வத்திலிவையே
பஞ்ச வாயுதமு மல்லதிவை யென்னபடையே.

[இத்தாழிசையில், திருமாலை வீரபத்திரதேவர் புகழ்வதுபோலப் பழித்தல் கூறப்பட்டது.]

வளை - சங்கு. நுதல் - நெற்றி. சாபம் - வில்லு. ஆனனம் - முகம். தானவர் - அசுரர். அருத்துதல் - ஊட்டுதல்.

(வி - கு.) மூ. தண்டு - கதாயுதம். பண்டு நீரமுதருத்துமுருவமென்றது, அமுது கடைந்த காலத்தில் தேவாசுரர்களுக்கு அமுதத்தைப் பகிர்ந்தருளத் திருமால் கொண்டருளிய மோகினிவடிவத்தை. (சசுகூ)

714. சங்க மெங்கள்குழை வில்லெமது சக்ரமெமதே
தண்ட மெங்கள்யம தண்டமழு வின்சாதிவாள்
பொங்கு கண்ணவிவை யைம்படையு மெங்களுடனே
போது மெங்ஙன மினிப்பொருவ தென்றபொழுதே.

குழை - காதிலிடும் சங்கத்தோடு ; இதுவுமன்றியே இயலிசை நாடகச் சங்கம் இருப்பது எங்கள் குழையிலென்றுமாம் ; குழையையுடையது செவி. வில் - சோதி, மகாமேருவென இரண்டிலுங்கொள்க. சக்கரம் : அவர் சக்கரம் சங்காரச்சக்கரம், ஈசுவராக்கினை ; இவையன்றியே சக்கரம் கொடுத்தருளினன் ஈசுவரனென்னும் கதையையுணர்க. எங்கள் யமதண்டமென்றது எம்மால் எளிவரவுபட்டவன் யமராசனென்னும் கருத்து. மழுவின்சாதி வாளென்றது இருப்புச்சாதி யென்றவாறு. மழு வேதயாகத்திற் பிறந்தது.

(வி - கு.) மூ. சங்கமென்றது சிலேடை. எங்களுடனே போதும் : எங்களுடன் வந்துவிடும். உரை. 'இயலிசை நாடகச் சங்கம் இருப்பது எங்கள் குழையில்' என்றதனால் முத்தமிழ்ச்சங்கச் செய்யுட்களையும் சிவபெருமான் திருச்செவி சாத்தியருளுவரென்பதும், இம்மூன்று தமிழிற்கும் தனித்தனியே சங்கங்கள் இருந்தனவென்பதும், இயலிசை நாடகமென்பன மூன்றும் ஒரு கொத்தாய் வழங்கப்படுமென்பதும் உய்த்துணரப்படுகின்றன. சக்கரங் கொடுத்தருளினான் ஈசுவரனென்னுங் கதை: "பங்கய மாயிரம் பூவினி லோர் பூக்குறையத், தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே, சங்கரனெம்பிரான் **சக்கரமாற் கருளியவா,** றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ" (**திருவா.**), "மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன்" (**சேந்தனார் திருப்பல்லாண்டு.** 9.) மழு வேதயாகத்திற் பிறந்தது: 'மழுவான ஆயுதமும் இவையிற்றில் ஒன்றல்ல, ஓம மந்திரத்தாற் பிராமணர் விடுவித்த பகைப் படை' என்றார் முன்னும்; **தக்க.** 453, உரை; "அவ்வவ ராயிசார முயன்மிதித் தாடி.........**கூர் மழுவுந்** தீயும், நவ்வியுந் துடியு மேந்தி" (**திருக்குற். தக்கன்வேள்விச்.** 91.) (௪௭0)

## திருமால் அருளிச் செய்தல்

### வேறு

715. பொருமம்பு சிலைகொள்வ [1]தில்லையிவ் வுலகையும்
பொருபிறை கத்தையு மொருபெரும் பன்றியாய்
இருகொம்பி னொருகொம்பி னுதியினான் மறியவிட்
டிறமிதிப் பனின்மதிப் பொழிகவென் றிகலவே.

விஷ்ணுக்கள் அருளிச்செய்தது.

மதிப்பு - அவமதிப்பு; குறிப்புச்சொல்.

(வி - கு.) மூ. நின்மதிப்பு - உம்மை நீரே மதித்தல் என்றலுமாம்.

(பி - ம்) 1 'திலைமூ' (௪௭௧)

## யுத்தம்

### வேறு

716. கொம்பி ரண்டுமுக மொன்றுநடை நாலுமுதுகுங்
கூறி ரண்டுபட வீழ்புடவி நீறுபடவோர்
அம்பி ரண்டெயிறு மின்றிவெறு மோரெயிறுகொண்
டடைய வெட்டுதலு மாதியுரு [1]வெய்தியரியே.

எ - து இரண்டுகொம்பும் முகமும் காலும் முதுகும் ஒரோவொன்று இவ்விரண்டு கூறுபடவே பதினலுகூறுபட்டுப் பாதிவிழவும் வீழ்கிறபொழுது அவற்றின் பெருமையாற் பூமி பொடியாய்ப்போகவும் ஓரம்பும் இரண்டெயிறுமின்றியே ஒரெயிறான கோணமொன்றைக்கொண்டு வெட்ட விஷ்ணுக்கள் பின்னைத் தம் பண்டைவடிவைக்கொண்டார் எ - று.

இன்றி ஆதியுருவெய்தியென்க.

(வி - கு.) மூ. தடை - கால். ஓரெயிறென்றது திருமார்பிலுள்ள பன்றிக்கொம்பைப்போலும்; தக்க. 630 பார்க்க.

உரை. கோணம்-தோட்டி; "கோணந் தின்ற வடுவாழ் முகத்த" (மதுரை. 592) (பி - ம்) 1 'வாகியரியே' (எளஉ)

717. மண்ணு நீபுனலு நீயனலு மாருதமுநீ
மதியு நீரவியு நீயவை யனைத்தும் [1]வழிபோம்
விண்ணு நீயென வகண்டமும் விழுங்க வரிவாய்
விட்ட விட்டவவ னைம்படையு மீளவிட்டவே.

மாருதம் - காற்று. அனைத்தும் வழிபோம் விண்ணென்றது வத்துக்களுக்கு இடங்கொடுக்கும் ஆகாசமென்றவாறு. மகாபூதங்களைந்தும் பஞ்சாயுதம். விட்டவிட்ட ஐம்படையாவன விஷ்ணுக்களால் விடப்பட்ட படைகளிற் பண்டுவிட்டவை (விழுந்தன), இப்போது மாயை காட்டினவென்றவாறு.

(வி - கு.) மூ. அனைத்தும் வழிபோம் விண்: 'தன்னையொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயம்' (பெரும்பாண். 1, உரை.) (பி - ம்) 1 'உடன்வாழ்' (எளங)

718. நின்று நின்றுபடை யைந்துமவை யைந்தின்வழியே
நெடிய மாயன்விட நாயகன் விலக்கிவிடலும்
சென்று சென்றுபதி னுலக மும்புகவிழச்
செய்ய வாயுமிட றும்புரை யறச்செருகவே.

இதன் பொருளறிக. (வி - கு.) மூ. புரை - துவாரம். (எளச)

வேறு

719. சிங்கமுங் கற்கியும் பன்றியுஞ் செற்றவன்
றிரியநீர் செல்கெனச் சென்றுமால் சினவெரிச்
சங்கமுஞ் [1]சக்ரமுந் தண்டமுங் கட்கமுஞ்
சாபமும் பொடிபடத் தகனமே ககனமே.

கற்கி - குதிரை. செற்றவனென்றது ஈசுவரனை. கட்கம்-வாள். சாபம்-வில். தகனம் - பொடி; அணுவுக்கும் பெயர்.

(வி - கு.) மூ. திரிய - மீள; "ஐயதிரி யத்தருதுமே" (தக்க. 724.)

(பி - ம்) 1 'தண்டமுஞ்சாபமுந் தாரைவாள் சக்ரமும் பொடிபடத்' (எளரு)

720. பாரெழுந் நதியெழும் மலையெழும் மலைவயிற்
படுவெழுந் நடுவெழுங் கடலெழும் பகுவிதக்
காரெழும் மினலெழும் மௌவருங் கனலெழக்
கண்டுமே ருவரையிற் கடவுள்கங் கைவிடவே.

பாரெழும்......எனவரும் கனல் : பாரெழும் - பூமிகெட்டுப்போம் ; நதி முதலியவற்றோடும் இங்ஙனமே கூட்டிமுடிக்க. படுவெழுகையாவது சுனை யும் ஆறுகளும் வற்றுகை. கடலெழுகையாவது கடலும் வேகை. பகு விதம் - ஏழுவிதம்.

(வி - கு.) மூ. படு - மடு ; "பனிநீர்ப் படுவில்" (சிறுபாண். 153); "பூவற் படுவிற் கூவல்", "தெண்ணீர்ப்படு" (புறநா. 319 : 1, 331 : 7.) பகுவிதம் - பலவகை. (௭௱௬)

721. மேல்விசும் புடையவுங் கீணிலங் கரையவு
மிடைவிலங் கலிறவுங் குலவிலங் கலெலைவயும்
கால்பறிந் திளகவுங் கடல்கரந் தொழுகவுங்
கடவுள்யா றுபதிற லுலகமுங் கவ்வவே.

விசும்புடைய - ஆகாசம் கட்டுக்குலைய. விலங்கலிற - விலங்குதல் இன்றியொழிய. குலவிலங்கல் - சத்தகுலபருவதங்கள். கடவுள் யாறு - கங்கை. கவ்வ - கதுவ.

(வி - கு.) மூ. கீணிலம் = கீழ்நிலம். (௭௱௭)

## வேறு

722. அப்பெரும்புனலி லவ்வரி வராகவுருவிட்
டாமை யாயுல களந்தவடி வாயதுவும்விட்
டொப்பரும்பழைய சேல்வடிவு கொள்ள விறையோ
னொருசுருவடிவு கொண்டெதி ருடன்றுகளவே.

அப்பெரும்புனல் - கங்கை.

(வி - கு.) மூ. உலகளந்த வடிவு - திரிவிக்ரமாவதாரம். திருமால் அவ தாரங்களில் மச்சாவதாரம் முந்தியதாகலின், "பழைய சேல்வடிவு" என் றார். இதனாற் சேலினும் சுறுவானது பெரிதென்று தெரிகிறது. (௭௱௮)

723. பூத மைந்துமிரு கோளும்யய மானனுமெனப்
புகலு மெங்களை விழுங்குக புகுந்துனதுடற்
பேத மைந்தமளி யுந்தெளியு மோதமுமுடன்
பின்னு மன்னுயிரு [1]முண்டுயி ருயப்பெறுதுமே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. பூதமைந்தும்......யயமானனு மெனப்புகலுமெங்களை : இவை அட்ட மூர்த்தங்களாம் ; சிவபெருமான் அட்ட மூர்த்தங்களையும் தம் திருவுருவமாக உடையாரென்பதை இத்தொடர் புலப்படுத்தும் ; 141-ஆம் தாழிசையின் குறிப்பு முதலியவற்றைப் பார்க்க.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" (திருவா. திருத்தோணோக்கம், 5.) உடற்பேதமைந்து - ஐவகை வடிவம் ; அவை முறையே பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சையென்பனவாம் ; "வடிவைந்தில் வாழு

மிடம், வைகுந்தம் பாற்கடன் மாநீ ரயோத்திவண் பூந்துவரை, வைகுந்த மன்பர் மனஞ்சீ ரரங்கம் வடமலையே" (திருவரங்கத்தந். 62.) அமளி - படுக்கையான ஆதிசேடன்.

(பி - ம்) 1 * 'உண்டுபெயரப்பெறுதுமே' (௬௭௩)

724. கொண்டு வாபொர விறப்பன பிறப்பினிவிடாய்
கொய்த [1]கொய்தநின் முடிப்பழைய கோவை குறியாய்
தண்டு வாள்வளை தனுத்திகிரி யென்னுமொருநிற்
றவிரு மைம்படையு மையதிரி யத்தருதுமே.

பஞ்சாயுதங்களையும் திரியத்தருகின்றேம். அவையிற்றைக்கொண்டு பொரவாவென்றவாறு.

இறப்பன பிறப்பினிவிடாயென்றது சாகக்கடவனவான பிறப்புக்களை இன்னம் விடாயென்றவாறு. கொய்தகொய்த நின்முடிப்பழைய கோவை குறியாயென்றது எங்கள் தோண்மாலை முதலாயினவற்றைக் காணுயென்றவாறு. ஒரு நிற்றவிருமைம் படையுமென்றது நீ தனியாகத் தாம் தவிர்ந்த பஞ்சாயுதங்களையு மென்றவாறு. (பி - ம்) 1 'கொய்தநீண்முடியினிற் பழைய,' 'கொய்த மொய்தனிமுடி' (௬௭௦)

725. என்று மேருதர னைம்படையு மீயநெடியோ
னெறிய வூதைவிழ [1]மோதிவர வெய்யமழுவாள்
ஒன்று மேயவை யனைத்தையு மொருக்கநெடியோ
[2]னுள்ள ழிந்துதலை யைச்சிலையில் வைத்துளையவே.

மேருதரன் - ஈசுவரன். நெடியோன் - விஷ்ணுக்கள். ஊதை - காற்று. விழ - தாழ; மகாவாதம் தாழவென்றவாறு. உளைதல் - ஒதுங்குதல்.

(வி - ரு.) மூ. ஒருக்க - அழிக்க; "புரங்கண் மூன்றும், ஒள்ளழலான் மூட்டி யொருக்கி நின்று" (திருநா. தே.), "இன்றொருக்கினே னித்தனை வீரரை" (கம்ப. பிரமாத்திரப். 195.)

(பி - ம்) 1 'மோதவர' 2 'னுற்றெழுந்து தலையைச் சிலையில்வைத் தணையவே' (௬௭௧)

726. விதைக்கு மப்பகழி விற்பொருநன் வைத்தமுடியான்
மிகவ ளைந்துகுதை போய்நெகிழ விண்ணுறநிமிர்ந்
துதைக்கு மத்தலை யெழுந்துகுதை [1]கவ்வியதுவா
னுற்ற சந்த்ரனையும் ராகுவையு மொக்குமெனவே.

குதை - நாணி.

நாணி ராகுவையொத்தது. விஷ்ணுக்கள் திருமுகம் சந்திரனையொத்தது.

எனவே விஷ்ணுக்களை ஒருநாளும் திருக்கையாற் கொல்லார். பண்டும் கொன்றார் கணநாதரே. இப்போது திரியென்று சொல்லுதலாற் கணநாதரும் கொன்றிலரெனவுணர்க.

(வி - ரு.) மூ. விளைக்கும் - பிரயோகம் செய்யும். உரை. திரி - ஸ்திரீ யென்பதன் திரிபு; "உருக்காய்த் திரிமயக்காலுயர்காயத் திரிமறந்தான்" (திருக்குற். மந்தமாருதப். 19.)

(பி - ம்) 1 'கவ்வியதுவாயுற்ற' (௭௨௨)

727. இன்ன வாறமரர் யாகபல முண்டபடியென்
றிறைவி யைத்தொழு [1]திருந்தழுத பேய்க்கிதனை நீ
சொன்ன வாறழகி தென்றருளி வென்றருளுமத்
தொல்லை நாயகனை நாயகி நினைந்து தொழுதே.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. வென்றருளுமத் தொல்லை நாயகன் - வீரபத்திரதேவர்.

(பி - ம்) 1 'திருந்தகழுதுக்கிதனை நீ' (௭௨௩)

அ. காளிக்குக் கூளி கூறியது முற்றிற்று.

---

## கூ. கூழடுதலும் இடுதலும்

### மகாகாளி களங்காண்டல்

728. எண்ணு தற்கரிய கூளிபுடை [1]சூழவிடையோன்
யாக சாலைபுக வான்மிசை யெழுந்தருளியெம்
கண்ணு தற்கடவுள் வென்றகள மென்றுமுடியக்
கட்டு ரைப்பதென நின்றிறைவி கண்டருளியே.

[இப் பகுதியில், கூளிகள் புடைசூழ மகாகாளி களத்திற்குச் சென்று கூழடக் கட்டளையிட்டருளலும், அவ்வாறே பேய்க்கணங்கள் களத்திலுள்ள வற்றைக்கொண்டு கூழ் அடுதலும், அட்டகூழைக் காளிக்குப் படைத்த லும், பின் எல்லாப் பேய்களுக்கும் கூழ் வார்த்தலும், பேய்கள் கூழை உண்டு சோழ அரசர்களை வாழ்த்தலும் கூறப்படும்.]

கூளி - பேய். வான் - ஆகாசம். இறைவி - மகாகாளி.

(வி - ரு.) மூ. போர்க்களம் வென்றருக்கு உரியதாதலின், 'விடையோன் யாகசாலை' என்றார்; "களங்கொளக் கழல்பறைந்தன", "களங்கொள் யானைக் கடுமான் பொறைய" (புறநா. 4 : 3, 53 : 5), "அமர்க்கள மரசன தாகத் துறந்து" (சிலப். 28 : 104), "தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" (சீவக. 279), 'இத்துணையும் இவன் வெற்றியாதலின், இவன் களமென்றார்' (சீவக.279, ந. உரை), "ஏந்துவாட் டானை யிரியவுறைகழித் துப், போந்துவாண் மின்னும் பொருசமத்து-வேந்தர், இருங்களியானை யின மிரிந்தோடக், கருங்கழலான் கொண்டான் களம்", "ஒன்றிலிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு. வெ. 180, 225); இவ்வாறு களத்தைத் தமதாக்கிக்கொள்ளலை, 'பேராண்முல்லை' என்னும் புறத்துறையுள் அடக்குவர்; பு. வெ. 180. முடிய - முற்ற. கட் டுரைப்பது - கட்டுரைக்க; வியங்கோள் மாத்திரையாய் நின்றது; "நீ

கழுவிற் புகுவிப்பது" (தக்க. 203) என்பதும் "மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" (திருச்சிற். 87) என்றவிடத்து, 'மறப்பதென்பது வியங்கோள்' என எழுதிய உரையும் ஈண்டுக்கோடற்குரியன. (பி - ம்.) 1 'குழுவினுடையே' (க)

729. சுமக்கு நாகநம தாதலி னதற்கினிமுதற்
சுரர்பி ணத்தொகை சுமப்பதரி தாகுமவைகொண்
டெமக்கு நீர்கடிது கூழடுமி [1]னென்றலுமகிழ்ந்
தியாளி யூர்திமுது கூளிக ளெனைப்பலவுமே.

யாளியூர்தி - துர்க்காபரமேசுவரி; ஆகுபெயர். முது கூளிகளென்றது பண்டு கூழ்சமைத்த பேய்களை யெனவுணர்க.

(வி - கு.) மூ. சுமக்குநாகம் - ஆதிசேடன். 'சுரர்பிணத்தொகை...... கூழடுமின்' என்ற பணிப்பிற்கேற்பக் கூளிகள் கூழட்டமை, "இமையவர் பிணங்கொண் டண்டக், குன்றுகொண் டட்டகூழ்" (தக்க. 759) என்பதிற் கூறப்படும். யாளியூர்தி: 76-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க.

(பி - ம்) 1 'னென்றுடன்மகிழ்ந்' (உ)

## கூழடுதல்

### வேறு

730. மலைகளுண் மறுவே றுண்ட
மலைகளும் வான யானைத்
தலைகளு மடுப்புக் கொள்ளீர்
கடுப்பிலத் தாழி யேற்றீர்.

மலைகளுள், ஸ்ரீ கைலாசம் மகாமேரு முதலாயின தவிரவென்பது; மறுவேறுண்டமலைகள் - சிவத்துரோகப்பட்டமலைகள். வானயானைத்தலை - அயிராபதமுதலான திக்கசங்களின் தலைகள். அத்தாழி - யானையின் வயிறுகள்.

(வி - கு.) மூ. மறுவேறுண்ட - குற்றப்பட்ட. யானைத்தலைகளை அடுப்பாகக் கொள்ளல்: "அழிமதத்த மத்தகங்க ளடுப்பாகக் கடுப்பாக்கொண் டடுமி னம்மா" (கலிங். 504.) கடுப்பில் - விரைவில்.

உரை. அத்தாழியென்பதற்கு இங்கே உரையெழுதியவாறே, 739-ஆம் தாழிசையில், "அம்மிடாக்கள்" என்பதற்கு, 'திக்கசங்களின் வயிறுகள்' என்றெழுதுவர். (ங)

731. அழிந்தன கற்பந் தோறுந்
தொடுத்தன நகுசி ரத்திற்
கழிந்தன கபால மாலை
குருதியிற் கழுவிக் கொள்ளீர்.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. நகுசிரம் - நகும்தலை. (ச)

732. இரவிகள் பல்லுந் தத்த
மீரறு [1]தேரிலவ்வேழ்
புரவிகள் பல்லுங் குத்தித்
துகளறப் புடைத்துக் கொள்வீர்.

இதன் முடிவுணர்க.

(வி - கு.) மூ. ஏழ்புரவிகள் : சூரியனுக்குக் குதிரைகள் ஏழென்பது 495-ஆம் தாழிசைக்குறிப்பால் உணரப்படும்.

இறந்தவர்கள் பற்களை அரிசியாகக் கொண்டாரென்று பாடுதல் பரணி பாடுவார் மரபு; "வானவர் பல்லும்...அரிசியா" (தக்க. 733), "ஆய்ந்த வெண்பல்லரிசி", "கலிங்கர்தம், பல்லைத் தகர்த்துப் பழவரிசி யாகப் பண்ணிக் கொள்ளீரே" (கலிங்க 133, 511), "நீளெயி றுதிர்செய்தரிசி புடைத்திடித்து", "மிடையிரு வினைகள் பற்கள் மேவரு மறியார் பற்கள், அடையவு மிடித்தீ ராகி னடங்கலு முலையுட் பெய்மீர்" (அஞ்ஞவதைப். 439, 450), "பயந்த மாயையின் மக்களின் பற்களைப் பரம ரைருன் பாடி யிடித்துமே", "மோகர்தம் பல்லெலா முறியக் குத்தியே" (மோகவதைப். 764, 795), "உலகரெயி றெனுமரிசி யூழ்முறைகுற் றினிச்சமைக்க வொருங்கு வாரீர்" (பாசவதைப். 681), "பல்லு குத்தனபழவரிசி யாக்கியே" (இரணியவதைப். 642.) (பி - ம்) 1 'தேரினேறு' (௫)

733. வானவர் பல்லும் வானோர்
மன்னவர் பல்லு மெல்லாத்
தானவர் பல்லுந் [1]தீட்டி
யரிசியாச் சமைத்துக் கொள்வீர்.

எல்லாத்தானவரென்றது அசுரேந்திரரும் தயித்தியரும் பிறருமெனக் கொள்க.

(பி - ம்.) 1 'கூட்டி, யரிசியாய்ச் சமைக்கவாரீர்' (௬)

734. [1]செருமுடி சுரேச ரோடு
த்ரிவிக்ரமன் வீழ வீழ்ந்த
பெருமுடி யுரல்க ளாகப்
பிறங்கிய வரிசி பெய்மீர்.

செருமுடி - செருவைமுடித்த, செருவொடு முடிந்த, செருவால் முடிந்த, செருக்கண்முடிந்த. சுரேசர் - இந்திரர்கள். திரிவிக்கிரமன் - மகாவிஷ்ணு பகவான்.

(வி - கு.) மூ. திரிவிக்கிரமன் முடியாதலின் 'பெருமுடி' என்றார்.

(பி - ம்) 1 'செருமுடிச்சுரேசரோடு' (எ)

735 அசலமே யனைய திக்கி
லானைக்கோ டனைத்தும் பொற்பூண்
முசலமே யாக முப்பத்
திரண்டையு முறித்துக் குத்தீர்.

அசலம் - மலை. பொற்பூண் - கிம்புரிகள். முசலம் - உலக்கை.

(வி - ரூ.) மூ. யானைக்கோட்டினை உலக்கையாகக் கோடலை, "வயக் களிற்றுக் கோடுலக்கை யாக", "கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்" (கலி. 41 : 1 - 2 ; 42 : 7) ; "யானை வெண்மருப்புலக்கை" (சீவக. 1562), "வஞ்சிமகளிர் குறுவரே வான்கோட்டால்" (சிலப். 29 : 'சந்துரற்பெய்து'), "பைங்கண் வேழத்துப் பணைமருப் புலக்கையின்" (பெருங். 2. 14 : 49), "பைம்பொன் னறைமேல்...மருப்போச்சி" (சூளா. சுயம். 106), "போதகக் கோட்டுநீ டுலக்கை பட்டு", "கொல்யானைத், தந்த வுலக்கை தனையோச்சி" (கலிங். 133, 513), "உயர்ந்த வாரணக் கொம்பே யுலக்கையா" (மோகவதைப். 764), "உலக்கையும் யானையி னுயர் மருப்" (இரணியவதைப். 644) என்பவற்றாலுணர்க. முப்பத்திரண்டு : திக்குயானை பையே" ஒன்றுக்கு நான்காக எட்டுயானைகளுக்கு உள்ளவை முப்பத் திரண்டு கொம்புகள். (அ)

736. எத்திசை யானை யிரெண்
செவிகளுஞ் சுளகா யீண்டக்
குத்திய வரிசி யெல்லா
முரியறக் கொழிக்க வாரீர்.

இதன் பொருளுணர்க.

(வி - ரூ.) மூ. சுளகு - கொழித்தற்குரிய ஒருவகை முறம். யானைச் செவிகள் சுளகு : "பணியாத வழுதியர்தம் பாய்களிற்றின் செவிச்சுளகு பலவுந் தூக்கி" (கலிங். 93), "யானைச் செவிமுறத்தால், ஒன்றொன்று தெள்ளியமா" (இரணியவதைப். 661.) முரியற - முரிந்த அரிசி போக. (கூ)

737. இற்றைநா ளமரர் சோரி
திணுங்கிய தின்னம்பெய்ய
அற்றைநாட் குருதி பெய்த
முகில்களை யழைத்துக் கொள்ளீர்.

குருதிபெய்த முகில்கள் - இந்திரன் ரத்தவருஷம் பெய்வித்த மேகங் கள்.

(வி - ரூ.) மூ. திணுங்கியது - நெருங்கியது ; இங்கே உறைந்ததென்று பொருள்கொள்க ; "திணுங்கல்......நெருங்கல்" (சூடாமணி. 8 : 14.) அற்றைநாள் - இந்திரன் போர்செய்த நாள். (கo)

738. தனித்தனி வயிறு வீங்கக்
குடித்துட றடித்தீர் நீரும்
இனித்தனித் திங்கு மெங்கும்
பிணமலை யருவி பெய்யீர்.

இதன் பொருளுணர்க. (கக)

739. தாங்குகைக் குரிய வானைத்
தடவரை யருவிச் [1]சோரி

*வாங்குகைத் துருத்தி கொண்டம்*
*மிடாக்களிற் சொரிய வாரீர்.*

தாங்குகைக்குரியவானை - உலகத்தைத் தாங்குகைக்குரிய திக்கசங்கள். தடவரையருவிச்சோரி : உவமைத்தொகை. அம்மிடாக்கள் - திக்கசங்களின் வயிறுகள்.

(வி - ரு.) மூ. துருத்தி - நீர்வீசு கருவிகளுள் ஒன்று; இது பெருந் துருத்தி, மட்டத் துருத்தியென இருவகைத்து; சூடா. 7 : 61 - பார்க்க. 'வாளில் வெட்டி வாரணக்கை தோளி லிட்ட மைந்தர் தாம், தோளிலிட்டு நீர்விடுந் துருத்தி யாள ரொப்பரே" (கலிங். 422), "செம்பொன் செய் துருத்தி தூம்பு...மாறியாட" (திருவிளை. 11 : 24.)

(பி - ம்) 1 'சென்னீர்' (௧௨)

740. *துளிபடு கடாயா னைக்கைத்*
*துணிபடு சோரி வாரி*
*மூளிபடு முடம்பின் முன்னைப்*
*பொரிவற மூழ்கி யேறீர்.*

சோரிவாரி - உதிரக்கடல். மூளிதல் - உலர்தல்.

(வி - ரு.) மூ. துளி - மதநீர்த்துளி; பொரிவு - பொரிந்திருக்கும் பகுதி, குருதியில் மூழ்கல் : "குருதியாடி", "குருதிமடுப் பாய்ந்து நீந்தி யாடீரே", "ஆழ்ந்த குருதி மடுநீந்தி" (கலிங். 490, 494, 496); "திரைமண்டு செஞ் சோரி நீரிற் குளித்து." (இரணியவதைப். 628.) (௧௩)

741. *தேனிண ரலங்கன் மௌலித்*
*தேவர்தா னவரு டம்பின்*
*தூநிண வெள்ளைக் [1]கோவை*
*யெடுத்தெடுத் தரையிற் சுற்றீர்.*

மௌலி - முடி.

(வி - ரு.) மூ. நிணவெள்ளைக்கோவை - நிணமாகிய வெள்ளிய ஆடை. நிணம் உடையாகக் கொள்ளப்படுதலை, "நிண மீக்கொள் தானை" (சீவக. 1080), "சுற்ற நிணத்துகில் பெற்றனம்", "வீழ்ந்த கலிங்கர் நிணக்கலிங் கம் விரித்து விரித்துப் புனையீரே", "நிணத்துகிலால்" (கலிங். 157, 496, 553), "நிணத்துகில் விரித்துச் சாத்தி" (இரணியவதைப். 635) என்பவற்றி லுங் காணலாம்.

(பி - ம்) 1 'கொள்ளை' (௧௪)

742. *சுருதியுந் தவிர யாகந்*
*தொடங்கிய சுரேசர் தங்கள்*
*குருதியின் குழம்பு கொண்டு*
*குங்குமச் செச்சை கொட்டீர்.*

சுருதி - வேதம். உம்மையால் அப்படிச் செய்யாராயினும் வேதப்படி செய்யவேண்டுமென்றவாறு. செச்சை - மெய்ப்பூச்சு.

(வி - கு.) மூ. குருதியின்குழம்பு...குங்குமச் செச்சை : " ஒன்றிய வுதிரச் செச்சை " (சீவக. 1080.) (கரு)

743. குடர்முடி செறியக் கட்டிக்
[1]கோவையாச் சேர்த்துத் தேவர்
சுடர்முடி கடக சூத்ர
முடம்பெலாந் தொடக்கிக் கொள்ளீர்.

குடர்முடி செறியக்கட்டியென்றது மூன்றும்வேற்றுமைத்தொகை ; சுடர்முடி : வினைத்தொகை. முடிகடக சூத்திரம் - முடியும் கடகவளையும் கட்டிய சூட்டுப்பணிகளும்.

குடராலேமுடிந்து செறியக்கட்டியது, தேவர்களுடைய திருமுடிச் சூட்டையெனவுணர்க.

(வி - கு.) உரை. சூட்டுப்பணிகள்-சூட்டாகிய ஆபரணங்கள்; "தாமரை மொட்டிற் செய்த தனிப்பெருஞ் சூட்டு " என்பரின் ; தக்க. 744.

(பி - ம்) 1 'கோவையாக்கோத்துத்' (கசு)

744. யாமினி யுண்ணுங் கூழிற்
கீரலை யிட்டு வைத்துத்
தாமரை மொட்டிற் செய்த
தனிப்பெருஞ் சூட்டுக் கட்டீர்.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. தாமரைமொட்டு - இங்கே இருதய கமலம். (கஎ)

745. அரசுள வநந்த கோடி
யசோகுள வமர ரிட்ட
முரசுள முகுந்தன் மூங்கிற்
சார்ங்கமுண் [1]டவற்றின் மூட்டீர்.

அனந்தகோடியென்னுஞ் சொல்லை அரசிலும் அசோகிலும் முரசிலும் மூங்கிலிலும் கொள்க.

இனி நெருப்பெங்குத்தென்று கேட்கச் சிலபேய்சொல்லுவன.

(வி - கு.) மூ. அரசு - புத்ததேவனுக்கிடமாகிய அரசமரம். அசோகு - சினதேவனுக்கு இடமான அசோகமரம். தோற்றவர் தம்முரசுகளைப்போர்க்களத்திற் போகட்டுவிட்டுச் செல்லுதல் மரபாதலின், ' அமரரிட்ட முரசு ' என்றார் ; " உதியர், இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியி லிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர் " (இராசராச. 87), " உரைசால் சிறப்பின் முரை சொழிந்தனவே ", " விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம், பொறுக்குந ரின்மையி னிருந்துவிளிந் தனவே ", " மலைந்தோர், விசிபிணி முரசமொடு மண் பல தந்த, திருவீழ் நுண்பூட் பாண்டியன் " (புறநா. 62 : 9, 63 : 7 - 8,

179 - 3 - 5.) **உரை.** எங்குத்து - எவ்விடம், எங்குள்ளது; இச்சொல் எங்குத்தையெனவும் வழங்கும்; "இங்கிட்டுச் சுட்டமி னெங்குத்தைக்குச் செலுமிது" (திருநா. திருவேகாதசமாலை, 5.)

(பி - ம்) 1 'டதனைமுட்டீர்' (கஅ)

746. எள்ளிவாய் மடங்கிக் கைக
    ளிழுந்தெரி கரிந்து போன
கொள்ளிவாய்ப் பேயை மாட்டி
    யவற்றிலே கொளுத்திக் கொள்ளீர்.

எள்ளி - இகழ்ந்து; இகழ்ந்தது ஈசுவரனை. வாய்மடங்குகை - இட்டதெல்லாம் தகைக்குந்தொழில் மடங்குகை. எரி - அக்கினிதேவன். கரிதல் - ஈசுவராக்கினையான அக்கினியாலே கரிந்துபோகை. கொள்ளிவாய்ப்பேயை மாட்டுகையாவது விறகொடுகூட்டியென்றவாறு; அடுப்பிலேமாட்டாது அழலிலே மாட்டாயென்னும் வழக்குணர்க. (கக)

747. இருந்தலை யுலைக ளெல்லாம்
    பொங்கின துங்க யானைப்
பெருந்தலை வாரி வைத்த
    வரிசிகள் [1]பெய்ய வாரீர்.

இதன் பொருளுணர்க.

(பி - ம்) 1 'உலையிற்பெய்யீர்' (உ௦)

748. எருவையும் பருந்து மோச்சித்
    தக்கனா் யாக சாலைச்
சுருவையுந் தோளுங் கொண்டு
    துடுப்பெனத் துழாவிக் கொள்ளிர்.

"தொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவன்" (34 - 6); **மதுரைக் காஞ்சி.**

(வி - கு.) மூ. எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகுமாம்; **புறநா.** 64, உரை. எருவையும் பருந்தும் ஊனுணவை விரும்பி வரும். சுருவை - யாகாக்கினியில் நெய்யை முகந்து சொரியும் ஒருவகை அகப்பை; "சுருவையான் முகந்த நெய்யைச் சுருதியா லோமஞ் செய்தான்", "சுருவையி னறுநெய் வார்த்து" (**வி. பா.** இராசசூய. 106, நச்சுப். 14.) (உக)

749. மாறின மடுத்த செந்தீ
    மலைச்சிற கடுத்துப் பற்றி
ஏறின மிடாக்கள் வெந்து
    சமைந்தன விழியப் பற்றீர்.

மலைச்சிறகு கைபிடிசீலை.

(வி - கு.) மூ. துணியைப் பிடித்துக்கொண்டு உலைவைத்த பாத்திரங்களை அடுப்பினின்று இறக்குதல் வழக்கம்; "எடுத்துக் கையிற் கவிழாமே யிவு

ளித் துணியிட் டிருமருங்கு, மடுத்துப் பிடித்து மெத்தெனவே யடுப்பினின்று மிழிச்சீரே" (கலிங். 539.) (உ௨)

750. சேத்தன தூர்தி கொண்டான்
திருநெற்றிக் கண்ணில் வெந்து
பூத்தன மலைகள் வாங்கிப்
புண்டரம் புடையிற் றீட்டீர்.

சே - ரிஷபம். அதனை ஊர்தியாகக் கொண்டோன் ஈசுவரன். புண்டர மிடுகையாவது சோறு சமைந்த மிடாக்களுக்குப் பிவாயமிடுகை.

(வி - ரு.) மூ. பூத்தன - நீறுயின. நீறு பூத்த நெருப்பென்பது மரபு; "ஆறுமே லாறியபி னன்றித்தங் கைக்கொள்ளார், நீறுமேற் பூத்த நெருப்பு" (பு. வெ. 166.) சோறு சமைத்த பாத்திரங்களில் திருநீற்றுக் குறியிடுதல் மரபு; சைவசமயநெறி, பொது, 370 - ஆம் திருக்குறளின் விசேடவுரையைப் பார்க்க. (உ௩)

## பேய்கள் காளிக்குக் கூழ் படைத்தல்

751. எரிகல னிமைக்குங் கோலத்
திறைமக ளமுது செய்யப்
பரிகலம் பண்டை யண்ட
கபாலமாம் பற்றி வாரீர்.

பண்டையண்டகபாலமாவது பிரமாண்ட கபாலம்; அன்றி ஈசுவ ராண்டமான அண்டகபாலமுமாம்; அதுவே அழிவுபடாததுவும் அமலமா யிருப்பதுவுமாமெனவுணர்க.

(வி - ரு.) மூ. பரிகலம் - உணவுப்பாத்திரம்; "பரிகலம் பேரப் பற் றீர்" (தக்க. 754.) வாரீர் - வருவீராக. (உ௪)

752. பிரமனைப் பண்டு பெற்ற
பெருந்திரு வமுது செய்யப்
பரமனைப் பாடிப் பாடிப்
போனகம் படைக்க வாரீர்.

இதன் பொருளுணர்க.

விஷ்ணுவே மகாகாளியெனவுணர்க. பரமன் - ஈசுவரன். (உ௫)

753. சாகினி கணமு முள்ள
சம்பினி கணமு மெல்லாம்
யோகினி கணமும் பக்கத்
துண்பன வூட்ட வாரீர்.

இதன் பொருளுணர்க.

(வி - ரு.) மூ. பக்கத்து - தேவியின் பக்கத்து. (உ௬)

754. கொடுத்தத னமுதந் தானுங்
கொண்டன ளிறைவி யீண்டுப்

படுத்த பாவாடை யோடும்
பரிகலம் பேரப் பற்றீர்.

கொண்டனளிறைவியென்றது திருவுள்ளத்திற் கொண்டருளினள் தேவி யென்றவாறு.

(வி - கு.) மூ. பாவாடை : "பதம்பெற்றார்க்குப் பகல்விளக்கும் பாவாடையுமாக் கொள்ளீரே." (கலிங்க. 548.) (உஎ)

755. கமலத்தோன் கையில் வீழ்ந்த
கமண்டல நிறைந்த தண்ணீர்
அமலைக்குத் தூய தெண்ணீ
ராரமு [1]தாக்கி வாரீர்.

வீழ்ந்தகமண்டலமென்றது பிரமா வீழ்கிறபொழுது சோர்ந்துவிழுந்த குண்டிகையென்றவாறு. அமலை - மலமில்லாதவள்.

(வி - கு.) மூ. தெண்ணீராரமுது - தெளிந்த நீராகிய அரிய உணவு; "துப்பாய தூஉ மழை" (குறள். 12.)

(பி - ம்) 1 'தாகமாற்றீர்' (உஅ)

756. கதக்களி றெட்டும் பட்ட
களந்தொறுங் கும்பஞ் சாய்த்த
மதப்புதுத் தயிலந் [1]தோய்ந்த
மணிமுத்துப் பிளவுங் கொள்ளீர்.

எட்டுமென்ற உம்மையால் திக்கசங்களெல்லாமெனக்கொள்க. கும்பம்- யானை மத்தகம்; சினைமுதற்கிளவி.

மத்தகத்தின் முத்தே பிளவு.

(வி - கு.) மூ. யானையின் மத்தகத்தில் முத்துண்டாதல், "வெங்கைக் களிற்றுயய கும்பத்து முத்துதிர" (குலோத். பிள்ளைத்.), "வெங்கயத்தின் மத்தகத்தின் வீழுமுத்து", "புனைபோ தகமத் தகமுத்தும்" (கலிங்க. 416, 501) என்பவற்றாலும் அறியப்படும். பிளவு - பாக்குத் துண்டு; முழுப்பாக்கிற்கும் வழங்கும்; "பரட்டின் பிளவும்" (கலிங்க. 570), "வெற்றிலையின் முன்னே வெறும்பிளவை வாயிலிட, நற்றிருவா மங்கை நடப்பளே" (தேரையர் வெண்பா), "பிறகு பிளவு கிடைத்த தென்று ஹலாருகப் பிளந்து கொள்ள" (தனிப்.)

(பி - ம்) 1 'தேடி' (உகூ)

757. உந்தியின் முகுந்தன் முன்னு
[1]ளுயிர்த்ததா மரையு மீரைந்
திந்திர தருவுந் தந்த
விலைச்சுரு ளெடுத்துக் கட்டீர்.

உயிர்த்தல் - புறப்பட விடுதல். ஈரைந்திந்திரதருவாவன பத்துக்கற்பகதருக்கள்; அவை பண்டே உண்டாக்கப்பட்டன.

(வி - கு.) மூ. ஈரைந்திந்திரதரு : " பத்துவகைப்பாதவம் " (சூளா. துறவு. 185.) இலைச்சுருள் - சுருட்டிய வெற்றிலை ; " இலைச்சுருளைப் பிளவோடே சூதட்டிய " (திருப்.) உரை. பத்துக் கற்பகதருக்களாவன : (1) மத்தியாங்கம், (2) தூரியாங்கம், (3) பூஷணங்கம், (4) மாலியாங்கம், (5) தீபாங்கம், (6) கிருகாங்கம், (7) சோதிராங்கம், (8) போசனங்கம், (9) பாசனங்கம், (10) வஸ்திராங்கமென்பனவாம் ; இவை முறையே திவ்யஸாரமாகிய நானுவித பானங்களையும், நானுவிதவாத்தியங்களையும், அநேகவித ஆபரணங்களையும், அநேகவித மாலைகளையும், அநேகவித இரத்தின தீபங்களையும், பிராஸாத மண்டபாதிகளையும், சந்திராதித்தருடைய ஒளிகளையடக்கும் ஒளியினையும், நானுவகைரஸத்தனவாகிய நான்குவகை உணவுகளையும், வேண்டிய கலங் களையும், விசித்திர வஸ்திரங்களையும் கொடுக்குமென்பர் ; இது ஸ்ரீ புராணத் திற் கண்டது. (பி - ம்) 1 ' உற்றதாமரையுமோரைந்திந்திர ' (௧0)

758. மாயவன் சங்கு சுட்டு
வடித்தநீ றடைக்கா யோடு
நாயகி யமுது செய்ய
நாமினிப் படைக்க வாரீர்.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. நீறு - சுண்ணம்பு. அடைக்காய் - வெற்றிலையோடு கூடிய பாக்கு ; " விஞ்சிய வடைக்கா யுண்டி " (அருணாசல. திருமலைவலம். 26.) (௧௧)

759. என்றுகொண் டலகை யெல்லா
மிமையவர் பிணங்கொண் டுண்டக்
குன்றுகொண் டட்ட [1]கூழ்நங்
குடிமுறை பகுக்க வாரீர்.

குன்று - தேவர்கள் பிணக்குன்று.

(வி - கு.) மூ. ஈண்ட - விரைய ; " ஈண்டு செலற்கொண்மூ " (புறநா. 161 : 2.) (பி - ம்.) 1 'கூழைக்' (௧௨)

## கூழிடுதல்

### வேறு

760. அண்டர் பொன்னெயில் வட்டமுட்ட
நெருங்கு பேய்பெற வட்டகூழ்
குண்டர் பொன்னெயில் வட்டமுட்ட
முகந்த ளந்து கொடுக்கவே.

அண்டர் - தேவர். பொன்னெயில் வட்டம் - சுவர்க்கம். தேவர்கள் இறந்து பேய்களானார்கள்.

எ - து சுவர்க்கத்திலுள்ள தேவர்களாகிய பேய்களுக்கு அரு கருடைய பொன்னெயில் வட்டமாகிற வட்டிலில் முகந்து கூழ் வாரும் எ - று.

ஒருபேய்க்கு ஒருவட்டில் கூழ்வார்க்கினும் போதாது. இஃது ஒருபேயி னுடைய வயிற்றின்பெருமையும் பசியின் பெருமையுமெனக்கொள்க. ஆரு கதருடைய பொன்னெயில்வட்டந்தனக்கு அளவு அஞ்சுநூறு யோசனை நீள மும் அகலமுமெனக்கொள்க.

முற்றுமுணர்க.

(வி - கு.) உரை. வட்டில் - ஒருவகைப்பாத்திரம், பெருங்கிண்ணம் ; " ஈச்சோப்பி வட்டில் " (திருஞா. தே.), " நாளதிறைலே கொடுத்த பொன்னின் வட்டில் ஒன்று " (தஞ்சைச்சிலாசாஸனம் ; S. I. I. Vol. II p. 15.) பொன் னெயில்......கொள்க ; 372, உரை. (கூக)

761. [1]மைந்து கூர்நில நீர்நெ ருப்பு
[2]வழங்கு மாருத மாகமென்
[3]றைந்து பூதமு முண்ண வுண்ண
வடுங்க ளோடு மிடுங்களே.

மைந்து - வலி. கூர்தல் - மிகுதல்.

மண் நீர் கனல் காற்று ஆகாசமென்னப்பட்ட ஐந்து மகாபூதமும் உண்ண மதுவுடனேகூடக் கூழ்வாருங்கோளென்றவாறு.

பிருதிவி பிரமா ; அப்பு விஷ்ணு ; அக்கினி ருத்திரன்; வாயு ஈசுவரன்; ஆகாசம் சதாசிவன். எனவே பஞ்சமுகூர்த்தங்களும் தேவிக்குத்திருவாசல் காக்கும் ஐந்துபேய்கள் ; இதனைப் பிரமயாமள முதலிய நவயாமளங்களிலும் கண்டுகொள்க. எனவே பூதங்களின் கர்த்தாக்களான ஐவரும் தேவிக்கு அஞ்சுபேயெனவுணர்க.

(வி - கு.) மூ. நிலம் திண்மையதாகலின், ' மைந்து கூர் நிலம் ' என் றார் ; " மண்கடினமாய்த்தரிக்கும் " (உண்மை விளக்கம், 10.) சலனம் காற் றின் தன்மையாதலின், ' வழங்குமாருதம் ' என்றார் ; " வண்கால் பரந்து சலித்துத் திரட்டும் " (உண்மை விளக்கம், 10.) அடுங்களோடும்-காய்ச்சிய கள் ளோடும். அடுங்களோடுமெடுங்களே : "மதுவொடு மண்ட கடத்தடா மடுக்க வெடுக்க வெடுக்கவே " (தக்க. 769.)

உரை. பூதங்களின் கர்த்தாக்களான ஐவர் : " பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்கள், ஆரா ரயனாதி தேவராம் " (உண்மை விளக்கம், 8.) " வானுமிறைவன் சதாசிவனு மீசனுமியங்குமாருதமும் வாளெரியு மும்பஞ மரனும் வார்புனலும்வெங்கணைகணையி, னுனுநிலனும் பிதாமகனுமாகவரு மைந்துபூதம் " (மோகவதை. 105.) பஞ்ச...பேய்கள் : 113.

(பி - ம்) 1 ' மஞ்சு ' 2 ' மழுங்கு ' 3 ' அஞ்சு ' (கூச)

762. நீல முண்ட முகிற்கு மூரமென
நின்ற பேயிது நிற்பதோர்
ஞால முண்ட வயிற்றி ரைப்பை
யடக்கு மின்க ணடக்கவே.

இது விஷ்ணுதத்துவமான பிரதான பிசாசெனவுணர்க.

(வி - கு.) மூ. இரைப்பு : தக்க. 129-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க. (கூரு)

763. நின்ற லைப்பன நான்மு கத்தொரு
பேய் மடுப்ப நிணம்பெய்கூழ்
தன்ற லைப்[1]பொலி மண்டை யிற்சத
கோடி சாடிகள் சாய்மினே.

பிரமாவினுடைய மண்டைதானே அவனுக்குப் பரிகலமெனவுணர்க.

(வி - கு.) மூ. தன்னென்றது பிரமாவை.

(பி - ம்) 1 * 'பொலன்' (கசு)

764. பேயி ரங்க விரந்து [1]வந்த
திருந்த கூழது பெய்ம்மினோ
ஆயி ரங்க ணிழந்தபேயை
யருத்தி தீர [2]விருத்தியே.

பேயிரங்க : பேயுமிரங்கவென உம்மைதொக்கது. அருத்தி - ஆசை.

(வி - கு.) மூ. வந்தது : முற்று.

இதிற் கூறப்பட்டவன் இந்திரன்.

(பி - ம்) 1 'வந்துடல் காய்ந்த கூழிது' 2 'வருத்தியே' (கஎ)

765. எயிறி ழந்து நிலாவி ழந்தும்
விலாவி ழந்து மமர்ந்தபேய்
வயிறி ழந்தில வின்ன மின்ன
மருந்து கூழ்புக வார்மினோ.

இவர் சூரியசந்திரர்.

(வி - கு.) மூ. எயிறிழந்தவன் சூரியன். நிலாவையும் விலாவையும் இழந்தவன் சந்திரன். பூதகணங்களால் நிலத்திற்றேய்க்கப்பட்டமையால் சந்திரன் விலாவையிழந்தான். (கஅ)

766. இழந்த [1]வாள்விழி போன பின்னை
யிறந்து வந்து பிறந்தபேய்
அழுந்த வாயி லநந்த கோடி
மடாவெ டுத்து மடுக்கவே.

இவன் ஆதித்தருட் பகன். (பி - ம்.) 1 'வாணகை' (கக)

767. நெய்யி ழந்தது பாலி ழந்தது
[1]நீள்பெரும்பசி தீருமோ
கையி ழந்து பிறந்த பேயிது
கோடி சாடி கவிழ்க்கவே.

இவன் அக்கினிதேவன்.

(வி - கு.) மூ. நெய் பாலென்பவை ஆகுதிகள்.

(பி - ம்) 1 'சோறிழந்தது நிற்குமோர்' (௨0)

768. மாய்கு டிக்கு நிமித்த மாக
மகட்பெ றுந்திரு மாமடிப்
பேய்கு டிக்க வநேக கோடி
மடாவெ டுத்தவை பெய்ம்மினே.

இவன் தட்சன்.

(வி - கு.) மு. 'மாய்குடிக்கு நிமித்தமாக மகட்பெறும்' என்பதனோடு, "தாதை யாகஞ் சகத்திற் பிளந்திடப், பேதை யாய்நின் றவனவன் பிள்ளையே" என்ற **கஞ்சவதைப்பரணிச்**செய்யுள் ஒப்பிடற்பாலது. (சுக)

## வேறு

769. இதுபகு வாய்த்து வயிற்றிணி
லிப்பே ருலகு விழுங்குபேய்
மதுவொடு மண்ட கடத்தடா
மடுக்க வெடுக்க வெடுக்கவே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) அண்டகடத்தடா : கடாகமென்பது கடமென வந்தது, தடாகம் தடமென வந்தாற்போல. தடா : "தடாப்பலவும்" (**தக்க.** 230), "தலைகளைத் தடாக்க ளாக்கீர்" (**மோகவதைப்**. 799.) (சுஉ)

## வேறு

770. அடிக்க [1]வடிக்கவெழு மருகப் பேய்கட்கும்
புத்தப் பேய்கட்கு மண்ட [2]கபாடக்கூழ்
பிடிக்கப் [3]பிடிக்கவுறும் வயிறு பழம்படியே
பெருகுக பெருகுகவாய் பருகுக பருகுகவே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மு. 'அடிக்க வடிக்கவெழு மருகப்பேய்' என்றது வெல்ல வெல்ல ஒழியாமல், சமயவாதஞ் செய்ய அவர் வருதலைக் குறிப்பித்தபடி. பிடிக்க - நிறைய. (பி - ம்) 1 'அடிக்கவிழு' 2 'கடாகக்கூழ்' 3 'பிடிக்கப்புகாவயிறு' (சுங)

## வேறு

771. இப்படிக் கழுத்தே கிட்ட
விரைத்தபுத் தப்பேய் மண்டை
கைப்பிடி பெறும்பே யோடு
கலந்தொரு கலத்தி லுண்டே.

ஒருகலத்தில் உண்கை நிதானம்.

(வி - கு.) மு. மண்டை : **தக்க.** 393-உரைக்குறிப்பைப்பார்க்க; "உண்டுடுக்கை விட்டார்களு முயார்கஞ்சி மண்டை கொடேரும்" (**திருஞா. தே.** பிரமபுரம்.) (சுச)

## பேய்கள் கூழ்குடித்து வாழ்த்தல்

### வேறு

772. தாராக வண்டந் தொடுத்தணிந்தார்
தமக்கிடம் போதத் தமனியத்தாற்
[1]சீராச ராசீச் சரஞ்சமைத்த
தெய்வப் பெருமாளை வாழ்த்தினவே.

இதன் பொருளுணர்க.

[இத்தாழிசையிலும் அடுத்த தாழிசையிலும், இப்பரணிபாடுவித்தோனாகிய **இரண்டாம் இராசராசசோழனுடைய** முன்னோர்களை வாழ்த்தலும், 774-ஆம் தாழிசைமுதல் 777-ஆம் தாழிசைமுடிய அவனை வாழ்த்தலும் கூறப்படும்.]

(வி - ரு.) சீராசராசீச்சரம்-தஞ்சைப்பெருவுடையார்கோயில். தஞ்சை இராசராசேசுவரத்து எழுந்தருளிய பெருவுடையார் திருமேனியின் பருமையை நினைந்து, "தாராக வண்டந் தொடுத்தணிந்தார்" என்றார் போலும். 'தாராகவண்டந் தொடுத்தணிந்தார்' என இங்கே சிவபெருமானைக் கூறியவாறே தேவியை, "அண்டபகி ரண்டமெலாம்......கொண்டபடி கோத்தணியும் கோவையோ குறித்திலனால்" (188) என்றார் **பாசவதைப்பரணியுடையார்.** முதல் இராசராச சோழதேவர் தஞ்சை இராசராசேசுவரம் சமைத்தாரென்பது, "உடையார் **ஸ்ரீ ராஜராஜதேவர்** தஞ்சாவூர்க் கோயிலினுள்ளால் இருமடி சோழனின் கீழைத் திருமஞ்சனசாலைதானஞ் செய்தருளாவிருந்து பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் **தஞ்சாவூர்** நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி **ஸ்ரீராஜராஜீச்வரமுடையார்க்கு**" (S. I. I. Vol. II. p. 2) என்ற அக்கோயிற் சாஸனத்தாலும் பிறவற்றாலும் அறியப்படும். தெய்வப்பெருமாள் - முதல் இராசராச சோழர்.

(பி - ம்) 1 'சீராசராச புரஞ்சமைக்க' (சுரு)

773. நீடிய வெண்டிசை நீழல்வாய்ப்ப
நேரிய தெக்கிண மேருவென்னப்
பீடிகை தில்லை வனத்தமைத்த
பெரிய [1]பெருமாளை வாழ்த்தினவே.

நீடிய பீடிகையெனக்கூட்டுக; நீடியதில்லையென்னில் திருச்சிற்றம்பலத்தின் பழமை தோன்றுது.

இவன் **ஸ்ரீபீடங்கண்ட பெரிய பெருமா**ளெனவறிக.

(வி - ரு.) மு. இரண்டாங் குலோத்துங்கசோழன் தில்லையம்பலத்தைப் பொன் வேய்ந்தான். திருத்தில்லையில் இவன் பின்னும் செய்த திருப்பணிகளைப்பற்றி இந்நூல், 777,804,806,808,809,810-ஆம் தாழிசைகள் கூறும்; "கோலத்தாற் கோயிற் பணிகுயிற்றிச்-சூலத்தா, னுடுந் திருப்பெரும்பெரம்பலமுங் கோபுரமு, மாடம் பரந்தோங்கு மாளிகையும் - கூடிப், பொலங்கோட்டு மாமேருப் பூதரமும் போய, வலங்கோட் டிகிரியு மான" (**குலோத். உலா.**), "மாளிகையும் பீடிகையும்......தூயசெம், பொன்னிற் குயிற்றி...... சூழ்குயிற்றிய, சென்னி" (**இராசராச.**) என்ற இந்நூலாசிரியர் வாக்காலும், "சென்னியபயன் குலோத்துங்க சோழன் றில்லைத் திருவெல்லை, பொன்

னின் மயமாக் கியவளவர் போரே றென்றும் புவிகாக்கும், மன்னர் பெருமா னநபாயன்" (பெரிய. சண்டேசுர. 8), "ஒன்றியசீ ரிரவிகுல முவந்தருளி யுலகுய்யத், துன்றுபுகழ்த் திருநீற்றுச் சோழனென முடிசூடி, மன்றினடந் தொழுதெல்லே வளர்கனக மயமாக்கி, வென்றிபுனை யநபாயன் விளங்கிய பூங் கழல்போற்றி" (கோயிற்புராணம், பாயிரம், 12), "பருதிகுலந் தனி லுதித்துப் பரசமய விருளகற்றிப் பரம னாடும், பொருவருபே ரம்பலமுங் கோபுரமு மாலயமும் பொன்வேய்ந் தண்மைச், சுருதியுடன் சைவநெறி தழைத்தோங்கத் திருநீற்றுச் சோழ னென்று, குருமணிமா முடிபுனைந்த குலோத்துங்க வளவனருள் குறித்துவாழ்வாம்" (சிதம்பர புராணம், பாயிரம், 11) என்பவற்றாலும் குலோத்துங்க சோழன் திருச்சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்தமை அறியப்படும். பெரியபெருமாள் - 2-ஆம் குலோத்துங்க சோழன்; "பெரியபெருமாள் பெரும்பவனி" (குலோத். உலா.)

(பி - ம்) 1 'பெருமானை' (௪௬)

774. பிரட்டனை யேபட்டங் கட்டழித்துப்
பேரே ழரையிலக் கம்புரக்க
இரட்டனை யேபட்டங் கட்டிவிட்ட
விராசகம் பீரனை வாழ்த்தினவே.

பிரட்டனையே: ஏகாரம் இடைச் சொல்லாக்கிக் களைக. இரட்டன் - வல்லான்.

(வி - கு.) மூ. கட்டழித்து: "கட்டாணங் கட்டழித்து" (விக்கிரம.) இரட்டன். ராஷ்டிரக்கூடத்தரசன். இங்கே ஏழரையிலக்கமென்றது இரட்டபாடியை; சோழவரசர்களின் மெய்க்கீர்த்திகளிலும் சாஸனங்கள் முதலியவற்றிலும் பயின்றுவரும் "இரட்டபாடி யேழரை யிலக்கம்" என்பது இதனை வலியுறுத்தும்.

இங்கே இராசகம்பீரனென்றது இப்பரணி பாட்டுண்டாரான இரண் டாம் இராசராச சோழதேவரை. இவர் காலத்துச் சாசனங்களிலும் பிற்காலத் தார் சாஸனங்கள் முதலியவற்றிலும் காணப்படும் இராஜ கம்பீரவளநாடு, இராஜகம்பீரநல்லூர், இராஜகம்பீரசதுர்வேதிமங்கலம், இராஜகம்பீரன் மலை, இராஜகம்பீரன் திருவீதி, இராஜகம்பீரன் மண்டபம், இராஜகம்பீரச் சம்புவராயன், இராஜகம்பீரச்சேதிராயன், இராஜகம்பீரமாராயனென் னும் பெயர்களே இதற்குத் தக்க சான்றுகளாகும். (௪௭)

775. அழிவந்த வேதத் தழிவுமாற்றி
யவனி திருமகட் [1]காகமன்னர்
வழிவந்த சுங்கந் தவிர்த்தபிரான்
மகன்மகன் மைந்தனை வாழ்த்தினவே.

அவனிதிருமகட்காக - பூமிதேவி ஸ்ரீ தேவிகளுக்காக. மன்னர் வழிவந்த சுங்கந்தவிர்த்த - ஸ்ரீ பராழ்வான் முதலாக வந்த சுங்கந்தவிர்த்த.

(வி - கு.) மு. பூமிக்காகவும் பொருளுக்காகவும் வாங்கிவந்த சுங்கமாத லின் 'அவனி திருமகட்காக' என்றார். சுங்கந்தவிர்த்தபிரான் - முதற் குலோத் துங்க சோழதேவர். இது, "தொல்லை, மறக்கலிபுஞ் சுங்கமு மாற்றி - அறத் திகிரி, வாரிப் புவனம் வலமாக வந்தளிக்கும் ஆழிப் பொலிதோ ளபயற்கு" (விக்கிரம சோழனுலா), "புவிராச ராசர் மனுமுதலோர் நாளிற், றவிராத

**சுங்கந் தவிர்த்தோன்** " (குலோத்துங்கசோழனுலா), '...சுங்கந் தவிர்த்தோன் - **சுங்கந்தவிர்த்த பெருமான் குலோத்துங்க சோழதேவர்**' (ஷை உலா, உரை), "கலக முஞ் **சுங்கமுங்** காய்கலியு **மாற்றி**, உலகைமுன் காத்த வுரவோன்" (**இராசராச சோழனுலா**), என்பவற்றாலும் "**சுங்கந்தவிர்த்த குலோத்துங்க சோழதேவர்**' என்று சாஸனங்களில் இவர் பெயர்க்குமுன் அமைந்துள்ள விசேடணத்தாலும் அறியலாகும். இவர் மகனார் **விக்கிரம சோழதேவர்**. அவர் மகனார் **இரண்டாங் குலோத்துங்க சோழதேவர்**. அவர் மைந்தர் **இரண்டாம் இராசராச சோழதேவர்**. (பி - ம்) 1 'காகமண்மேல்' (சஅ)

776. செருத்தந் தரித்துக் கலிங்கரோடத்
தென்றமிழ்த் தெய்வப் பரணிகொண்டு
வருத்தந் [1]தவிர்த்துல காண்டபிரான்
மைந்தற்கு மைந்தனை வாழ்த்தினவே.

இப்பரணி பாடினார் **ஒட்டக்கூத்தரான கவிச்சக்கரவர்த்திகள்**. இப்பரணி பாட்டுண்டார் **விக்கிரமசோழதேவர்**.

(**வி - கு**.) **மூ**. செரு தந்து அரித்து - யுத்தத்தை உண்டாக்கிக் கெடுத்து. **உரை**. பாட்டுண்டார் - பாடப்பட்டார். இவ் வுரையால் **விக்கிரம** சோழதேவர்மீது ஒட்டக்கூத்தர் கலிங்கப் போர் வெற்றியைக் குறித்து ஒரு பரணி பாடியிருத்தல் கூடுமென்று தெரிகிறது; இதனுடன், "விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் **கலிங்கப், பெரும்பரணி** கொண்ட பெருமாள் - தரும்புதல்வன், கொற்றக் **குலோத்துங்க சோழன்**" (**குலோத்துங்க சோழனுலா**), "தரணி யொருகவிகை தங்கக் **கலிங்கப், பரணி** புனைந்த பரிதி - முரணிப், புரந்தர னேமி பொருவ வகில, துரந்தரன் **விக்கிரம சோழன்**" (**இராசராச சோழனுலா**) என்ற பகுதிகளும் ஒப்புநோக்கி யாராயற் பாலன. (பி - ம்) 1 'தணிந்துல' (சக)

777. முன்றிற் கிடந்த [1]தடங்கடல்போய்
முன்னைக் கடல்புகப் பின்னைத்தில்லை
மன்றிற் [2]கிடங்கண்ட [3]கொண்டன்மைந்தன்
மரகத மேருவை வாழ்த்தினவே.

**எ - து** விஷ்ணுக்கள் கடலிலே யோகநித்திரை கொண்டருளும் வரைச் சூரபன்மாவைச்சுட்டித் தேவசேனாபதிப்பிள்ளையார் கடலைக்கலக்கிப் புறப்படவிடக் கடலிற் சிலுகற்றது; இன்னம் அக்கடலை எனக்கே தரவேண்டு மென்று திருச்சிற்றம்பலத் திருமுற்றத்திலே வரங்கிடக்க மீண்டும் அக்கடல் பெற வரங்கொடுத்தருளினன்போலத் திருச்சிற்றம்பலத்திலே கிடந்து இடங் கெடாமே வரமும்பெற்றதாக இடமும் விரிந்ததாகப் பின்னையும் அக்கடலிலே போகவிட்ட **குலோத்துங்க சோழதேவர்** மைந்தராகிய **சொக்கப்பெருமானான ராசராச தேவரை** வாழ்த்தின எ - று.

கடல்போல்வானைக் கடலென்றது. மரகதமேருவைப் போல்வானை மரகத மேருவென்றது.

(**வி - கு**.) **மூ**. இத்தாழிசையிற் கூறப்பட்ட செய்தி, "தில்லைத்திருமன்றின்முன்றிற் சிறுதெய்வத், தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து...கோயிற் பணிகுயிற்றி" (**குலோத்துங்க சோழனுலா**), "பொன்னிற் குயிற்றிப் புறம்பிற் குறும்பனைத்து, முன்னார்க் கடலகழின் மூழ்குவித்த - சென்னி" (**இராசராச**.)

என்பவற்றிலும் குறிப்பிக்கப்பட்டிருக்கிறது. 'முன்னைக் கடல்புக' என்ற தொடரும், 'முன்னர்க்கடலகழின் மூழ்குவித்த என்ற தொடரும் பொருளால் ஒத்திருத்தல் காண்க. இரண்டாங்குலோத்துங்கன் நீலநிறமுடையவன் ஆதலின், 'கொண்டல்' என்றார்; இது. "கொற்றக் குலோத்துங்க சோழன் குவலயங்கள், முற்றப் புரக்கு முகில்வண்ணன்", "தடமுகி, லஞ்சன சைல மபிடேகஞ் செய்ததென, மஞ்சனமாடி", "கிளைக்குஞ் சுடரிந்த்ர நீலக்கிரியை, வளைக்கு மிளமிலா மானத் - திளைக்கு, முருவுடையாடை தரித்து", "திருமார்பிற், கார்க்கடன்மீதே கதிர்முத்தத் தாமங்கள், பாற்கடல் சேர்ந்த தெனப்பரப்ப", "கார்க்கடலில், வந்த வனச மதிபோல மற்றது, தந்த கடவுண் மணிதயங்க", "மைம்முகில் வண்ணத்து வானவன்" (குலோத். உலா.); "தீராத பச்சைமுகில் செங்கீரை யாடியருளே", "ஒளிபெற வருமுகில் கொட்டுக சப்பாணி", "மரகத நிறத்தபய மனுசரித சக்ரதர மதலையிதழ் முத்தமருளே" (குலோத். பிள்ளைத்.) என்பவற்றாலும் தெளியப்படும். மரகதமேரு என்றமையின் இரண்டாம் இராசராச சோழனும் நீலநிறமுடையானென்பது பெறப்படும்; இதனை, "மஞ்சாய கோல மணாளன்" (இராசராச.), "கருமாமுகிற் றிருநிறத்துக் கனகளப ராஜராஜன்" (இரண்டாம் ராஜராஜன் மெய்க்கீர்த்தி) என்பனவும் வலியுறுத்தும்.

உரை. சிலுகு - சண்டை; "கலைகற்ற பேய்களொடு சிலுகிட் டுலாவுவன" (அஞ்ஞவதைப்.), "செறிவற்றி யாவினையு மளவிட்ட தாகமிகு சிலுகிட் டுலாவுவன கோடியே", "சிலுகிட் டேவிழ மோதுவ" (பாசவதைப். 97, 99), "மதனன்சிலு கறியாதவண் மயலெப்படி யானுள்" (தனிப்.)

(பி - ம்) 1 'கருங்கடல்போய்' 2 'இடங்கொண்ட' 3 *'கொண்டல் பெற்ற' (௬o)

சா.—கூழடுதலும் இடுதலும் முற்றிற்று

---

## கo. களங்காட்டல்

### இறைவன் எழுந்தருளல்

778. ஒருமருங்குடைய மூலநாயகியொ
டொற்றை வெள்ளைவிடை யூர்திமேல்
இருமருங்குமறை தொழவெழுந்தருளி
யிராசராசபுரி யீசரே.

மூலநாயகியென்றது மூலப்பிரகிருதியான மாயாசத்தியை.

[இதில், சிவபெருமான் தேவியோடு இடபவாகனத்தில் எழுந்தருளிப் பேய்களாகிய தேவர்களைத் தேவிக்குக் காட்டுதலும், தேவிமுனிவாறி, பொறுத்தருள வேண்டுமென்று வேண்டலும், அவர் தக்கனுக்கு மோத்தைத்தலையையும் ஏனைய தேவர்கட்கு அவரவர்களுடைய உடம்பு முதலியவற்றையும் பதவிகளையும் அளித்தலும், அவற்றைப்பெற்ற தேவர்கள் வீரபத்திர தேவனை வணங்கி விடைபெற்று வாழ்த்திப்போதலும் கூறப்படும்.]

(வி - ு.) மு. ஒரு மருங்குடைய மூலநாயகி: "ஒரு பக்கமாய பரம்பரன் தேவி" (தக்க. 245.) வெள்ளைவிடை: "வெள்ளையே றேறும் விகிர்தா

போற்றி" (திருநா. தே.), "ஆனல்வெள் ளேற்று வாரு ரப்பனே யஞ்சி னேனே" (சுந்தர. தே.), "விண்ணிடை நின்ற வெள்ளை விடையவர்", "செங்கண் வெள் ளேற்றின் பாகன்" (பெரிய. இயற்பகை. 33, குங்கிலியக். 23.) இராசராசபுரியீசர் : தமிழ் முடிபு.

உரை. மூலப்பிரகிருதியான மாயாசத்தி : 'மூலப்பிரகிருதி' என்பது லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 397-ஆம் திருநாமமாகக் காணப்படுகின்றது. (க)

779. யாக நாயகரொ டேனை வானவ
ரிறந்து பேயொடு பிறந்தவா
றூக நாயகி [1]தனக்குணர்த்திவர
வன்னை முன்னை முனி வாறியே.

யாகநாயகராவார் பிரமாமுதலாயின ரிஷிகள்.

(வி - ரு.) மூ. இராசராசபுரியீசர் (778) உணர்த்திவரவெனக் கூட்டுக. முன்னை முனிவு : 294 - ஆம் தாழிசையிற்பார்க்க.

(பி - ம்) 1 'தனக்குரைத்தனரெம் மன்னை' (உ)

## சிவபெருமான் தேவிக்குப் பேய்களைக்காட்டல்

### வேறு

780. நெடுநில மளந்து கொள்ள
வளர்ந்துதா ணீட்டு நாளில்
இடுநிழல் போல நின்ற
விப்பெரும் பேயைப் பாராய்.

இவர் திருமால்.

நிழலென்றது......: அன்றியும் ராசாக்கிளைக்குப் பெயராம்.

(வி - ரு.) மூ. பேய்க்கு நிழலைக்கூறுவது, "சாயையே போல நின்ற தொருகரும் பேயைப் பாராய்" (தக்க. 785) என்பதிலும் காணலாம்; "நிழல்போ னுடங்கிப் பேயாட" (சீவக 309) என்பதும் இக்கருத்தை உணர்த்துகின்றது. (ங)

781. பொன்முக மொன்று பண்டு
போனது புகுதப் பொன்றித்
தன்முக மைந்தும் பெற்ற
சதுமுகப் பேயைப் பாராய்.

இவன் பிரமா.

பஞ்சவத்திரனென்பது பிரமாவின் முதற்பெயர்.

(வி - ரு.) மூ. பொன்முகமொன்று பண்டு போனது : 697-ஆம் தாழிசையில், "கலங்கிய முன்னைக் குறளைத்தலை" என்பதன் உரையைப் பார்க்க. தன்முக மைந்தும் : "ஐம்முகத்தயன்" காஞ்சி. வயிரவீச. 5. (ச)

782. அங்குநின் றேவல் செய்பு
 [1]மமரரே யலகை யாக
இங்கு[2]நின் றரசு செய்யு
 மிந்திரப் பேயைப் பாராய்.

இவன் இந்திரன் ; பிசாசேந்திரன் ; பண்டு அமரேந்திரன்.

(வி - ரை.) மு. அங்கு - அமராவதியில்.

(பி - ம்) 1 'தேவரே' 2 'நின்றேவல்' (ரு)

783. விடுபுகை [1]யுயிரா தேங்கி
 வெங்கன லுயிர்ப்ப [2]வென்றும்
படுபுகை வடிவங் கொண்ட
 பாவகப் பேயைப் பாராய்.

இவன் அக்கினி.

புகையுயிராதேங்குகையாவது அக்கினியானதன்மைதவிர்தல் ; அக்கினியாகிற் புகையுயிர்க்கும்.

(பி - ம்) 1 * 'உயிராய்த்தாங்கி' 2 'இன்று' (சு)

784. விசும்பினு நிலத்து முள்ள
 வுயிர்பண்டு விழுங்கி யின்று
பசுந்தசை மிசையா நின்ற
 தென்றிசைப் பேயைப் பாராய்.

இவன் யமராசன். பண்டு உயிருண்கின்ற காலனே ஊன்தின்ன வேண்டியிருந்த தென்பது. (எ)

785. சாயைமேற் கொண்டு நின்ற
 சாயையே போல வின்று
பேயைமேற் கொண்டு நின்ற
 தொருகரும் பேயைப் பாராய்.

இவன் நிருதி.

(வி - ரை.) மு. நிருதிக்குப் பேய்வாகனமென்பது 498-ஆம் தாழிசைக் குறிப்பா லுணரப்படும். (அ)

786. தன்னகத் தங்கி யிங்கு
 வயிற்றுத்தீ யாகத் தாங்கும்
பன்னகப் பாசம் வீசுங்
 குடதிசைப் பேயைப் பாராய்.

இவன் வருணன்.

(வி - ரை.) மு. தன்னகத்தங்கியென்றது வடவைத்தீயை. வயிற்றுத்தீயென்றது பசித்தீயை ; தக்க. 557-ஆம் தாழிசைக் குறிப்பைப்பார்க்க. வருணன் பாசமுடையானென்பது 491-ஆம்தாழிசைக் குறிப்பினால் அறியப்படும். குடதிசை - மேற்றிசை. (க)

787. வாயுவே யாய பண்டை
வடிவற மாய்ந்து பெற்ற
ஆயுவே வடிவ மான
வழிபசிப் பேயைப் பாராய்.

இவன் வாயு.

(வி - கு.) மூ அழிபசி - மிக்கபசி; "அற்றா ரழிபசி தீர்த்தல்" (குறள். 226); குடிப்பிறப்பு முதலியவற்றை அழிக்கும் பசியென்னலுமாம்; "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயற்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப் போம் பறந்து" (நல்வழி), "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும், பிடித்த கல்விப் பெருட்புணை விடூஉம், நாணணி களையு மாணெழில் சிதைக்கும், பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும், பசிப்பிணி யென்னும் பாவி" (மணிமேகலை, 11 : 76 - 80) என்பன இக்கருத்தை வலியுறுத்தும். (கo)

788. வளரிளங் கொங்கை மங்கை
நங்கையர் வனப்புக் கேற்ற
இளரொளி வனப்புத் தீர்ந்த
கெடுமதிப் பேயைப் பாராய்.

இருபத்தேழு நட்சத்திரங்களும் தட்சன் மக்களெனவுணர்க. நெடுமதிப்பேயென்ற நிதானமுணர்க.

(வி - கு.) மூ. கெடுமதிப்பேய் - கெட்ட சந்திரனாகிய பேய்; கெட்ட புத்தியையுடைய பேய் என்றுமாம். உரை. 'இருபத்தேழு நட்சத்திரங்கள்' என்றது 'நங்கையர்' என்ற மூலத்தின் உரை. (கக)

789. கருத்துப்பே யேற வேறுங்
கழிபசி யுழப்ப தோர்முத்
தெருத்துப்பே யேறி நின்ற
விப்பெரும் பேயைப் பாராய்.

இவன் ஈசானன்.

(வி - கு.) மூ. கருத்துப்பேயேற - உள்ளத்தில் பேயேறினாற்போன்ற மயக்கம் உண்டாக. கழிபசி - மிக்கபசி. முத்தெருத்துப்பேய் : எருதும் பேயாயிற்றெனவுணர்க. (க௨)

790. விடைவல னேந்தி வந்து
வெண்பிறை மலைந்து சூலப்
படைவல னேந்தி மாய்ந்த
பதினொரு பேயைப் பாராய்.

இவர் ஏகாதச ருத்திரர்கள். (க௩)

791. ஓரிரு சுடரு மன்ன
யோகமே போகப் போகா
ஈரிரு மறையுந் தேடு
மெண்பெரும் பேயைப் பாராய்.

சந்திராதித்தரைப்போலும் யோகமாவது : இவர்களைப்போலே யிருக்கும் நாதவிந்துக்கள் ; அன்றியேயும் சாமயோகமென்பதொரு யோகமுண்டு. அஃது அட்டாங்கயோகம். அதனை யோகாஞ்ஞபதத்திலும் சாங்கியயோக சாத்திரத்திலும் கண்டுகொள்க. இவர் தேவயோகிகள். இது **மகாபாரதத்திலு**முண்டு. வேதந்தேடுகையாவது அட்டவசுக்களாய்ச் சைவயோகிகளென்றும் ஆதாரதேவரென்றும் அட்டமகா சித்திகர்த்தாக்களென்றும் வேதஞ் சொன்னபடி யுணர்க. எண்பெரும்பேய் - அட்டவசுக்கள். (கச)

792. ஆயுநூ லாயும் பண்டென்
றரும்பசி நோய்க்குத் தங்கள்
பேயுநூல் கேட்க நின்ற
மருத்துவப் பேயைப் பாராய்.

இவர்கள் அச்சுவினிகள்.

ஆயுநூல் - ஆயுர்வேதம். ஆய்தல் - ஆராய்தல். தங்கள்பேயுநூல் கேட்கநிற்றல் - தங்கள்பேயும் பசிநோய்க்கு மருந்து கேட்க நிற்றல்.

(வி - கு.) மூ. ஆயும் : முற்று. அரும்பசி - தீர்த்தற்கரிய பசி. (கரு)

793. அணங்குநீ வணங்கா யாக
வன்றிகழ்ந் ததற்குத் தானே
வணங்கியே நன்று நிற்கு
மாமடிப் பேயைப் பாராய்.

இவன் தக்கன்.

(வி - கு.) மூ. அணங்குநீ வணங்காயாக அன்றிகழ்ந்தது : 299 - ஆம் தாழிசை உரையைப்பார்க்க. (கசு)

## தேவி முனிவுதீர்ந்து அருளிச்செய்தல்

794. அவ்வகை யிறைவர் காட்ட
வமரர்மேன் முனிவு தீர்ந்து
மைவகை நெறிந்த கூந்தன்
மலைமக ளருளிச் செய்வாள்.

இதன் பொருளுணர்க. (கஎ)

795. நின்முத லாகத் தோன்றி
நெடியமான் முதலா வுள்ளோர்
என்முத லாக மாய்தற்
குறுவதெ னிறைவ வென்றே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மூ. முதல் - காரணம். உறுவதென் - நிமித்தம் யாது. (கஅ)

796. தணிந்தரு ளிறைவ யானுந்
தணிந்தன னென்று தாளிற்
பணிந்தன ளிறைவி நிற்கப்
பரனும்புன் முறுவல் செய்தே.

இதன் பொருளுணர்க. (கக)

## சிவபெருமான் தக்கனுக்கு மோத்தைத்தலையருளல்

797. மிக்கன [1]பேசித் தம்மை
வேள்வியி லிகழ்ச்சி செய்த
தக்கனை முதிய [2]மோத்தைத்
தலைபெற வருளிச் செய்தே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மு. மோத்தை : ஆட்டுக்கிடாய் ; தக்க. 47.

(பி - ம்) 1 'சொல்லித்' 2 'மேடத்' (உ0)

## தேவர்கட்கு உயிருமுடம்பும் அவர்கள் பதவிகளும் அருளல்

798. ஒழிந்தவா னவர்கட் கெல்லா
முயிருந்தம் முடம்பு நல்கி
அழிந்த[1]வா னுலகுந் தங்கள்
[2]பதங்களு மளிப்பக் கொண்டே.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மு. பதங்கள் - பதவிகள். (பி - ம்) 1 'வானகமுந்' 2 'கணங்களும்' (உக)

## தேவர்கள் வாழ்த்தி விடைபெற்றுச் செல்லுதல்

799. குலங்கொண்ட வமர ரெல்லாங்
குனிசிலை வீரன் றன்னை
வலங்கொண்டு விடையுங் கொண்டு
போயினர் வாழ்த்தி வாழ்த்தி.

இதன் பொருளுணர்க.

(வி - கு.) மு. குனிசிலைவீரனென்றது வீரபத்திரதேவரை. (உஉ)

க0.—களங்காட்டல் முற்றிற்று

# ௧௧. வாழ்த்து

800. இஞ்சியின் வல்லுரு மேறு [1]கிடந்த
வஞ்சியின் வாகை புனைந்தவன் வாழியே.

[இதில் நூலாசிரியர் தம்மையாதரித்து வந்த இராசராச சோழதேவரையும், மறையவரையும், திருமகள் கலைமகள் முதலியவர்களையும் வாழ்த்துகின்றார்.]

(வி - ரு.) இஞ்சி - மதில். வஞ்சி - சேரர்கள் இராசதானி. வாகை - வெற்றிமாலை.

இதனால் சோழன் வஞ்சியைத் தாக்கிச் சேரனை வென்று வாகைசூடினனென்பது பெறப்பட்டது. இந்த வெற்றிச்செயல், "உதியர்-இடப்புண்டபேரிஞ்சி வஞ்சியி லிட்ட, கடப்ப முதுமுரசங் காணீர்" (இராசராச.) என்றவிடத்தும் கூறப்படுதல் அறியற்பாலது.

(பி - ம்) 1 'கிடந்தென', 'கிடந்தோன்' (௧)

801. வில்லவன் வில்லர்ம கோதை விடாதவோர்
வல்லவன் [1]வல்ல பிரான்மகன் வாழியே.

(வி - ரு.) மூ. வில்லவன் - சேரன். வில்லர் - வில்வீரர்கள். மகோதை: சேரராசதானியாகிய கொடுங்கோளூரின் பரியாயநாமம்; பெரிய. சேரமான். 4. வல்லபிரானென்றது இரண்டாங்குலோத்துங்க சோழனை. இத்தாழிசையிற் கூறப்பட்ட செய்தி, "மறிப்ப மறிந்துரு மல்லர ணப்பொறி வில்லரணத்தினர்தாம் வஞ்சியை விட்டக லஞ்சிய கோதை மகோதை மதிற்கதவம், பறிப்ப......பெயரும்......மன்னவர் மன்னவனே" (குலோத். பிள்ளைத்.) என்பதிலும் கூறப்படுகிறது.

(பி - ம்) 1 'வல்லபன் மானதன் வாழியே' (௨)

802. குறுகு [1]முடுக்கு மிலங்கு பொலன்கொடி
மறுகு வகுத்த பிரான்மகன் வாழியே.

(வி - ரு.) குறுகுமுடுக்கு - குறுகிய சிறுதெரு; மூலைக்கண் உள்ள சிறுதெருவுமாம். மறுகு - பெருந்தெரு. மறுகுவகுத்தது தில்லையிற்போலும். இரண்டாங்குலோத்துங்கசோழன் தில்லையில் மறுகு வகுத்தானென்பது, "திருவீதி யீரிரண்டுந் தேவர்கோன் மூதூர்ப், பெருவீதி நாணப்பெருக்கி" (குலோத். உலா.), "சூளிகையு மெத்தெருவுந் தோரணமும்......குயிற்றி" (இராசராச.) என்பவற்றால் அறியப்படுகிறது. (பி - ம்.) 1 'மடக்கென விலகு பொலன்கொடி' (௩)

803. தென்னவர் [1]தென்மது ராபுரி சீறிய
மன்னவர் மன்னன் வரோதயன் வாழியே.

(வி - ரு.) தென்னவர் - பாண்டியர். வரோதயன் - வர உதயன்; வரத்தால் உதித்தவன்.

இதனால் சோழன் மதுரைமேற் படையெடுத்துப் பாண்டியரை வென்றானென்பதறியப்படும். 805 - ஆம் தாழிசையிலும் இது கூறப்படும்.

(பி - ம்) 1 'தம்மது' (௪)

804. தில்லை வனங்கட வுள்செறி கற்பக
வல்ல வனம்பெற வந்தவன் வாழியே.

(வி - கு.) மூ. சிதம்பரம் திருக்கோயிலிற் பொன்னாலாகிய கற்பகதருக் களை அமைத்தானென்பது கருத்து; இங்ஙனமே இராசராசனுடைய முன் னோரும் திருச்சிற்றம்பலத் திருக்கோயிற் பணிசெய்கையில் பொற்கற்பக தருக்களை அமைத்தனரென்று தெரியவருகின்றது: "பைம்பொற் குழித்த பரிகல முதலால், **செம்பொற் கற்பகத்** தொடுபரிச் சின்னமும், அளவில்லாதன வொளிபெற வமைத்து" (**விக்கிரமசோழதேவர் மெய்க்கீர்த்தி**), "அற்பக லாக வனந்த சதகோடி, **கற்பக சாதி** கதிர்கதுவ.........திகழ்வித்து" (**குலோத். உலா.**) (ரு)

805. [1]மீனவன் மீனவ ரேக விடுபடை
மானதன் மான பராயணன் வாழியே.

(வி - கு.) மீனவன் - பாண்டியன்; சோழன் பாண்டிய நாட்டை யும் உடையவனாகை இருந்ததுபற்றி, 'மீனவன்' என்றார். மானதன்: "**மான தன்** மூரிக் களிறு", "**மானதன்** மெல்லென் கவரி", "வயிரா கரமெறிந்த **மானதன்** கண்டன்" (**இராசராச.**) (**பி - ம்**) 1 'மீனதன்' (சா)

806. ஆனிரை [1]தந்ததி லைம்மடி மும்மத
மானிரை தந்த பிரான்மகன் வாழியே.

(வி - கு.) மூ. மும்மதமான் - யானை.

ஆனிரை தந்ததும் மும்மத மானிரை தந்ததும் சிதம்பரம் திருக்கோயிற் குப் போலும். (**பி - ம்**) 1 'தந்தலைம்மடி' (எ)

807. பார்தரு வார்பெற மாறில் பசும்பொற்
றேர்தரு [1]மாபர கேசரி வாழியே.

(வி - கு.) பரகேசரி: சோழவரசர்கள் கொள்ளும் வம்சப்பட்டம். ராஜகேசரி, பரகேசரி என்ற இரண்டு பெயர்களும் மாறிமாறிச் சோழர் களாற் கொள்ளப்படுவன. அம்முறையே, இப்பரணியைப் பாடுவித்தோ னாகிய இரண்டாம் இராசராசசோழன் பரகேசரி யென்னும் பட்டமுடை யான்; இதனை, "கோ **பரகேசரி** பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் **ஸ்ரீராஜராஜ** தேவர்க்கு" என்ற அவ்வரசன் **மெய்க்கீர்த்திப்** பகுதியாலும் அறியலாம்.

(**பி - ம்**) 1 'வானிருப தீபன் வாழியே', 'வார்நர கேசரி வாழியே' (அ)

808. கூட மெடுத்த குளத்தொடு கோபுர
மாட மெடுத்த பிரான்மகன் வாழியே.

(வி - கு.) இதிற் கூறப்பட்ட திருப்பணிகளெல்லாம் சிதம்பரத்திற் செய்யப்பட்டனவென்று, "திகரில், எரிபொற் படர்பாறை யென்னலா யெங்கும், விரிபொற் **றிருமுற்ற** மின்னச் - சொரிபொற், கடாரம் பனிநீர் கவினிக் கனபொற், றடாகங்க ளாகித் ததும்ப", "தலையின், மகரங்கொள் **கோபுரமும்** வான விமானச், சிகரங்க ளாகித் திகழ" (**குலோத். உலா.**), "மாளி கையும் பீடிகையு **மாடமுங் கோபுரமும்**......குயிற்றி" (**இராசராச.**) என்ப வற்றாலறியப்படும். (கூ)

809. கோயின்முன் னேழ்நிலை [1]கொண்டதோர் கோபுர
வாயில் [2]வகுத்த பிரான்மகன் வாழியே.

(வி - ரை.) கோயிலென்றது சிதம்பரம் கோயிலை. இத்தாழிசையிற் கூறப்பட்ட செய்தி, "நிலையேழு கோபுரங்க ணேரே நெருங்கு, மலையேழு மென்ன வகுத்து" (குலோத். உலா.) என்புழியும் கூறப்பட்டிருக்கின்றது.

(பி - ம்) 1 'கொண்டொரு' 2 'புகுந்த' (கo)

810. [1]எண்டரு திக்கினிற் றில்லையி னெல்லையின்
மண்டபம் வைத்த பிரான்மகன் வாழியே.

(வி - ரை.) இத்தாழிசையால் தில்லையின் எல்லையில் இரண்டாம்குலோத்துங்கன் மண்டபங்கள் கட்டினன் என்று தெரிகிறது.

எல்லையின் மண்டபம் - எல்லையினிடத்தே மண்டபம்; எல்லையில்லாத மண்டபமென்னலுமாம்; **இராசராச சோழனுலாவில்** இரண்டாம் குலோத்துங்கனைப் பற்றிக் கூறும்பகுதியில், "சிற்றம்பலமுந் திருப்பெரும்பே ரம்பலமும், **மற்றும் பலபல மண்டபமும்**......குயிற்றி" என்க் கூறப்பட்டிருப்பதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

(பி - ம்) 1 'எண்டிசை தொக்கனதில்லையின்', 'எண்டருகத்தினிற்றில்லையின்' (கக)

811. இறையவ னிராச புரந்தர [1]னேத்தும்
மறையவர் வாழி [2]மகத்தவர் வாழியே.

(வி - ரை.) மகத்தவர் - யாகம் புரிபவர்கள்.

(பி - ம்) 1 'னேழ்புவி' 2 'சுராசுரர்', 'சுராதியர்', 'மாமகத்தவர்' (கஉ)

## வேறு

812. வாழிய மண்டல மால்வரை
வாழி குடக்கோழி மாநகர்
வாழிய வற்றுத காவிரி
வாழி வரராச ராசனே.

(வி - ரை.) மண்டல மால்வரை - சக்கரவாளகிரி. குடக்கோழி - மேற்கேயுள்ள உறையூர்; உறையூர் சோழ அரசர்களின் இராசதானிகளில் ஒன்றாகையால் அதனை இங்கே வாழ்த்தினர்; "கோழிக்குங் கோமானே" (**விக்கிரமசோழன் உலா**), "கோழித் திருநகரக் கொற்றவற்கு வெற்றிப்போர், ஆழித் திருக்கை யபயற்கு" (**குலோத். உலா**), "உறந்தை பிரான்" (**குலோத். பிள்ளைத்.**) வற்றுத காவிரி: "பிழையாத பொன்னி" (**விக்கிரம.**); "**வற்றுத பொன்னிநதி**" (**குலோத். பிள்ளைத்.**), "வான்பொய்ப்பினுந் தான்**பொய்யா**, மலைத்தலைய கடற்**காவிரி**" (**பட்டினப்.** 5 - 6), "அலங்குகதிர்க்கனலி நால்வயிற் றோன்றினும், இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு, மந்தண் காவிரி வந்துகவர் பூட்ட" (**புறநா.** 35 : 6-8), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்......காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" (**சிலப்.** 10 : 102 - 8), "கோணிலை திரிந்து கோடை நீடினுந், தானிலை திரியாத் தண்டமிழ்ப்

பாவை ", " தவாநீர்க் காவிரிப் பாவை " (மணி. பதிகம், 24 - 5 ; 3 : 55), " காவிரி யென்னத் தப்பாக் கருணையான் " (வி. பா. அருச்சுனன்றவநிலை. 24.) வரராசராசன் : " வரராச ராசன் கை வாளென்ன வந்தே" (தக்க. 549.) (கக)

## வேறு

813. ஆக்கம் பெருக்கு மடந்தை வாழியே
ஆற்றங் கரைச்சொற் கிழத்தி வாழியே
கோக்குந் தமிழ்க்கொத் தனைத்தும் வாழியே
கூத்தன் கவிச்சக்ர வர்த்தி வாழியே.

(வி - ரை.) ஆக்கம்பெருக்குமடந்தை - திருமகள். ஆற்றங்கரைச் சொற்கிழத்தி - கூத்தனூரில் அரிசிலாற்றங்கரையில் கோயில்கொண்டிருக்கும் கலைமகள். இக்கூத்தனூர் சோழ அரசனால் ஒட்டக்கூத்தருக்கு முற்றூட்டாகக் கொடுக்கப்பட்டதென்பர். கூத்தன் - ஒட்டக்கூத்தர். (கச)

814. வாழி தமிழ்ச்சொற் [1]றெரிந்த நூற்றுறை
வாழி தமிழ்க்கொத் தனைத்து [2]மார்க்கமும்
வாழி திசைக்கப் புறத்து நாற்கவி
வாழி கவிச்சக் ரவர்த்தி கூத்தனே.

(வி - ரை.) தமிழ்க்கொத்து - தமிழ்நூற்றொகுதி ; " தமிழ்க் கொத்தினாலே, நிறைவுற நடத்துதற்கு ", " செழுந்தமிழ்க்கொத் தறிவிக்க வல்லாரில்லை " (திருவாத. கடவுள். 17, 18 : 7.) அனைத்து மார்க்கமும் - எல்லா நெறிகளும் ; கௌட நெறி முதலியன ; நாற்கவி - தமிழுக்குரிய நாற்கவிகளாகிய வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன ; ஆசுகவி முதலியனவுமாம்.

(பி - ம்) 1 'றெரிந்ததொன்னூற்றுறை', றெடுத்தநூற்றிசை' 2 'நூற்றுவர்' (கரு)

கக.—வாழ்த்து முற்றிற்று

தக்கயாகப்பரணி மூலமும் உரையும் முற்றுப்பெற்றன

---

உ

சீர்குரோ தனவருடம் புரட்டாசி முதற்றேதித்
திங்க டன்னிற்
காருலவுஞ் சீகாழிச் சிதம்பரநா தம்முனிவன்
கருணை யாலே
பார்புகழுந் தெட்சயா கப்பரணி தனைமுகித்திப்
பதியி னன்றாய்
ஏர்பெறுந்தா ழிசைகளையு முரைதனையும் பெரியதம்பி
யெழுதி னானே.

[இச்செய்யுள், தக்கயாகப்பரணி மூலமும் உரையும் உள்ள ஏட்டுச் சுவடியின் இறுதியில் எழுதப்பட்டிருந்தது.]

இதிற்குறிப்பிட்ட தேதிக்குச் சரியான இங்கிலீஷ் தேதி கி. பி. 1745-ஆம்ளு செப்டம்பர்மீ 2-ஆம் தேதி ஆகும்.

சிதம்பரநாத முனிவர்; இராமநாடகம் பாடிய சீகாழி அருணாசல கவிராய ருடன் கற்றவர்; இவர் மந்திரசித்தியும் சிறந்த தமிழ்ப்புலமையும் புகழும் வாய்ந்தவர். இவர்மீது பாடப்பட்ட சில அரிய செய்யுட்கள் சீகாழியிலும் அதைச்சார்ந்த இடங்களிலும் வழங்கப்பட்டு வருகின்றன.

---

உ

## மூலமட்டும் உள்ள ஏட்டுச்சுவடிகளில் அதிகமாகக் காணப்பட்ட தாழிசைகள்

1. அருண்ஞான குருபீட மடிவாழி யடியார்க
ளடிவாழியென்
இருளான பழிமாற விகலான வழிமாற
விசைவாழியே.

இது கடவுள் வாழ்த்தில் எட்டாந் தாழிசையின் பின்பு காணப் பட்டது.

2. எரிபுக் கனவே டிறைவன் சடையிற்
பிறையொத் தனவை கையிலிட் டனவும்
கிரிபுக் கனவக் கிரிசூ ழுருவி
கிழியாத [1]கடங்கள் கிழித்தறவே.

இது 211-ஆம் தாழிசையின்பின் காணப்பட்டது.

(கு - பு) கடங்கள் - மலைச்சார்புகள்.

(பி - ம்) 1 'ககங்கள்'

3. குடந்தையம் பதியிற் கோதிலாப் பெரிய
மடந்தனில் வாழ்வீர மயேச்சுரர் வாழியே.

இது வாழ்த்தில் 811-ஆம் தாழிசைக்குப் பின் காணப்பட்டது.

(கு - பு) பெரியமடம் - கும்பகோணத்தில் ஸ்ரீமகாமக தீர்த்தத்தின் வட கரையிலுள்ள வீரசைவமடம்.

4. மலையாழி கடந்த பெரும்புகழ்
[1]மகட்காயவன் வஞ்சியன் [2]மனுமுறை
தலையாழி கடந்த பெருந்தகை
தவிராத புரந்தரன் வாழியே.

இது வாழ்த்தின் இறுதியிற் காணப்பட்டது.

(கு - பு) மலையாழிகடந்த பெரும்புகழ் மகட்காயவன் - மலைகளையும் கடல்களையும் கடந்துபரவிய பெரிய புகழாகிய மங்கைக்கு ஏற்றவன்.

(பி - ம்) 1 'மகட்காவலன்' 2 'மனுநீதி'

---

திருச்சிற்றம்பலம்.

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பல ரேம்பலித் திருக்க
என்னெடுங் கோயி னெஞ்சுவீற் றிருந்த
வெளிமையை யென்றுநான் மறக்கேன்
மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல்செய் நாடக சாலை
யின்னடம் பயிலு மிஞ்சிசூழ் தஞ்சை
யிராசரா சேச்சரத் திவர்க்கே.

திருச்சிற்றம்பலம்.

(கருவூர்த் தேவர் திருவிசைப்பா; தஞ்சை இராசராசேச்சரம்.)

---

## வீரபத்திரதேவர் துதி

"ஆளு டைத்தனி யாதியை நீத்தொரு
வேள்வி முற்ற விரும்பிய தக்கனோர்
நீள்சி ரத்தை நிலத்திடை வீட்டிய
வாள்ப டைத்த மதலையைப் போற்றுவாம்."

(திருச்செந்தூர்ப் புராணம்.)

---

# செய்யுள் முதற்குறிப்பகராதி

## எண் - தாழிசை எண்

## விளங்கா மேற்கோளகராதி

(எண் - தாழிசை எண்)



---

உ

## அரும்பத முதலியவற்றினகராதி

(எண் - தாழிசை எண்)

# இலக்கண விசேடங்கள்

# பிழையும் திருத்தமும்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 12 | ' புயல் வழி ' 1 | ' புயல் வாழி ' 2 |
| 6 | 7 | ' நிரையாழி ' | 1 ' நிரையாழி ' |
| 9 | 1 | மு. | மூ. |
| ,, | 23 | போற்றது | போற்றுது |
| 53 | 4 | சிங்நாமணி | சிந்தாமணி |
| 59 | 16 | ஷீரம் | க்ஷீரம் |
| 60 | 11 | ஒளி | ஓளி |
| 67 | 19 | முகுகு | முருகு |
| 72 | 19 | சருக்சுத்திற் | சருக்கத்திற் |
| 75 | 16 | சுழ்வருவரே | சூழ்வருவரே |
| 76 | 31 | தட்சிணுமுர்த்தி | தட்சிணுமூர்த்தி |
| 77 | 16-17 | உகாங்கம் | உகாந்தம் |
| 82 | 1 | விநாகமும் | பிநாகமும் |
| 89 | 20 | போழல் | பேரழல் |
| 90 | 35 | குலச்சிதை " (நக்க | குலச்சிறை " (தக்க |
| 92 | 26 | உபமன்னீயு | உபமன்னியு |
| 93 | 22 | பொரிசுங் | பொரிசிங் |
| 95 | 15 | நாசிகாயுடத் | நாசிகாபுடத் |
| 108 | 37 | திகுவால | திருவால |
| 111 | 7 | (வி. சூ.) மூ. "தெவ்வுப் | " தெவ்வுப் |
| ,, | 9 | உரை | (வி.சூ.) உரை |
| 116 | 23 | முன்றுங் | மூன்றுங் |
| 117 | 3 | லிளங்கும் | விளங்கும் |
| 127 | 18 | செச்கர் | செக்கர் |
| 141 | 37 | நதிகீழ்வீழ | நதிகீழ் விழ |
| 148 | 35 | विचित्रकुणो | विचित्रकर्णो |
| 184 | 3 | சுாலன் | காலன் |
| ,, | 16 | நிகிசரர் | நிசிசரர் |
| 187 | 15 | திகுக்குற். | திருக்குற். |
| 188 | 34 | ஒட்டக்கூங்தர் | ஒட்டக்கூத்தர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 189 | 15 | யுநுத்தும் | யுறுத்தும் |
| ,, | 32 | யென்னாம் | யென்னும் |
| 190 | 9 | குறன் | குறள் |
| ,, | 33 | மூத்தெருத்துப் | முத்தெருத்துப் |
| 191 | 6 | முவா | மூவா |
| 203 | 36 | றெடுத்தே | கெடுத்தே |
| 204 | 17 | தடுத்தே | தடிந்தே |
| ,, | 34 | பரசுக்கனின் | பரசுக்களின் |
| 207 | 22 | மார்விற்றூற் | மார்விற்றூர் |
| 218 | 3 | வாசித்தலினும் | வாசித்தலிலும் |
| 235 | 18 | பீராணி | பிராணி |
| 241 | 34 | ஷட்ஜம் | ஸட்ஜம் |
| 253 | 10 | லெந்து | வெந்து |
| 261 | 7 | வீரவென்பதனை | வீசவென்பதனை |
| 263 | 6 | ருறள் | குறள் |
| ,, | 32 | யாகத்துநீர் | யாகத் தூநீர் |
| 264 | 8 | உவர | உரை |
| 265 | 8 | சேர்காரம் | சோகாரம் |
| ,, | 38 | உக்குகின்றனர் | உக்கு நின்றனர் |
| 266 | 12 | விட்டவர் | விட்டமர் |
| 268 | 26 | மேகத்துக்கு | மேகத்து |
| 274 | 34 | சொண்டல் | கொண்டல் |
| 283 | 3 | திழுக்குற். | திருக்குற். |
| 286 | 22 | இரணியனைதப் | இரணியவதைப் |
| 287 | 17 | பகுதி, | பகுதி. |

# பிரகடன பத்திரம்

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி
**டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுடைய**
**தமிழ்ப் பதிப்பு நூல்கள்**

## (சங்க நூல்கள்)

| | ரூ. | அ. |
|---|---|---|
| பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் உரை (3-ம்பதிப்பு '31) ... | 5 | 0 |
| பத்துப்பாட்டு மூலம் பொருட் சுருக்கத்துடன் ... | 1 | 0 |
| பத்துப்பாட்டு-5, முல்லைப்பாட்டு உரையுடன் ... | 0 | 5 |
| ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும் (3-ம்பதிப்பு '44) | 3 | 12 |
| பதிற்றுப்பத்தும் மூலமும் பழையவுரையும் (4-ம் பதிப்பு 1945) ... | 4 | 0 |
| பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும் (2-ம் பதிப்பு, '35) | 2 | 0 |
| புறநானூறு மூலமும் உரையும் (3-ம் பதிப்பு, 1935) ... | 5 | 0 |
| புறநானூறு மூலம் ... | 1 | 8 |
| குறுந்தொகை மூலமும் உரையும் ... | 7 | 8 |

## (பழைய காவியங்கள்)

| | | |
|---|---|---|
| சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரை (4-ம் பதிப்பு, '42)... | 15 | 0 |
| சீவகசிந்தாமணி 2, கோவிந்தையாரிலம்பகம் உரையுடன் ... | 0 | 10 |
| சிலப்பதிகாரம் உரைகளுடன் (4-ம் பதிப்பு, 1944) ... | 8 | 0 |
| மணிமேகலை மூலமும் அரும்பதவுரையும் (3-ம் பதிப்பு, '31) | 5 | 0 |
| பெருங்கதை மூலமும் குறிப்புரையும் (2-ம் பதிப்பு, (1935) | 7 | 0 |
| பெருங்கதை மூலம் ... | 3 | 0 |
| உதயணகுமார காவியம் குறிப்புரையுடன் ... | 0 | 6 |

## (புராணங்கள்)

| | | |
|---|---|---|
| திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் (2-ம் பதிப்பு, 1927) ... | 2 | 8 |
| திருவாரூர்த் தியாகராசலீலை உரையுடன் (2-ம் பதிப்பு '28) | 0 | 12 |
| ஆற்றூர்ப்புராணம் ... | 0 | 10 |
| மண்ணிப் படிக்கரைப் புராணம் ... | 0 | 8 |
| தணிகாசல புராணம் ... | 0 | 10 |
| வில்லைப்புராணம் ... | 1 | 0 |

## (இலக்கணங்கள்)

| | | |
|---|---|---|
| நன்னூல் சங்கர நமச்சிவாயருரை (3-ம் பதிப்பு, 1942) ... | 3 | 12 |
| தமிழ்நெறி விளக்கம் ... | 0 | 8 |
| புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும் (6-ம் பதிப்பு, 1946) ... | 2 | 8 |

ரூ. அ.

## (பலவகைப் பிரபந்தங்கள்)

| | | |
|---|---|---|
| கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள் ... | 2 | 8 |
| ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு (2-ம் பதிப்பு, 1926) ... | 5 | 10 |
| தக்கயாகப் பரணி மூலமும் உரையும் (2-ம் பதிப்பு, '45) ... | 6 | 0 |
| பாசவதைப் பரணி ... | 0 | 12 |
| திருமயிலைத் திரிபந்தாதி (2-ம் பதிப்பு, 1946) ... | 0 | 8 |
| திருமயிலை யமகவந்தாதி ... | 0 | 6 |
| திருக்காளத்திநாதருலா (2-ம் பதிப்பு, 1925) ... | 0 | 5 |
| திருப்பூவணநாதருலா (3-ம் பதிப்பு, 1944) ... | 0 | 10 |
| தேவையுலா (இராமேசுவர உலா) ... | 0 | 4 |
| மதுரைச் சொக்கநாதருலா ... | 0 | 6 |
| சங்கரலிங்க உலா (2-ம் பதிப்பு, 1944) ... | 0 | 10 |
| திருவிலஞ்சி முருகனுலா ... | 0 | 5 |
| திருக்கழுக்குன்றத்துலா ... | 0 | 8 |
| திருவாவடுதுறைக் கோவை (2-ம் பதிப்பு, 1926) ... | 0 | 10 |
| திருவாரூர்க் கோவை (2-ம் பதிப்பு, 1941) ... | 1 | 4 |
| பழமலைக் கோவை (2-ம் பதிப்பு, 1946) ... | 1 | 0 |
| திருக்கழுக்குன்றக் கோவை ... | 2 | 0 |
| வலிவலமும்மணிக் கோவை ... | 0 | 5 |
| கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது (2-ம் பதிப்பு, 1931) ... | 0 | 8 |
| மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடு தூது (3-ம் பதிப்பு, 1941) ... | 0 | 5 |
| பத்மகிரிநாதர் தென்றல்விடு தூது ... | 0 | 4 |
| மான்விடு தூது ... | 0 | 6 |
| அழகர் கிள்ளைவிடு தூது (3-ம் பதிப்பு, 1944) ... | 0 | 12 |
| புகையிலைவிடு தூது ... | 0 | 2 |
| திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் (3-ம் பதிப்பு, 1940) ... | 0 | 5 |
| சிவசிவ வெண்பா ... | 0 | 10 |
| திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா ... | 0 | 4 |
| திருக்குற்றாலச் சிலேடை வெண்பா ... | 0 | 5 |
| திருமலையாண்டவர் குறவஞ்சி ... | 0 | 6 |
| திருக்காளத்திநாதர் இட்டகாமிய மாலை ... | 0 | 2 |
| மகர நெடுங்குழைக்காதர் மாலை ... | 0 | 4 |
| இலந்தை நகர், தண்டபாணி விருத்தம் ... | 0 | 4 |
| கோபாலகிருஷ்ண பாரதி இயற்றிய திருநீலகண்ட நாயனார், இயற்பகை நாயனார் சரித்திரங்கள் ... | 1 | 0 |

